சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

---

# ஆத் ... தப் பிரசங்காமிர்தம்.



...த்திய ரூடம்.

---

இவை

சென்னைப் புரசைப்பாக்கத்தில்

அண்டகோடி பிரமாண்ட நாயகராகிய நடராஜப்பெருமானுக்கு

அன்புபூண்டு சிவயோகியா யெழுந்தருளியிருக்கிற

...மனஷன தாசில்தார்.

## ஸ்ரீமத்-அப்பாசாமி முதலியார் அவர்கள்

இயற்ற,

மதுரை தமிழ்ச்சங்கத்து வித்வானாகிய சித்தாந்தசரபம்

அஷ்டாவதானம் பூவை

## கலியாணசுந்தர முதலியார் அவர்களால்

பார்வையிடப்பட்டு,

ஸ்ரீ அப்பாசாமி முதலியார் அவர்கள் குமாரர்

## க. துரைசாமி முதலியார் அவர்களாலும்,

ஸ்ரீ அப்பாசாமி முதலியார் அவர்கள் பௌத்திரர்

## கிருஷ்ணசாமி முதலியார் அவர்களாலும்

சென்னை ... ஸ்ரீ ... தருமபாடசாலையின்

தருமபரிபாலகர்கள்

## நே. முனிசாமி முதலியார்
## நே. முருகேச முதலியார்

அவர்களால் தமது

“கணேச அச்சியந்திரசாலையிற்” பதிப்பிக்கப்பட்டது.

விசுவாவசு ௵ வைகாசி மீ

---

1905

துவமனத்துவீராசாமிகோமான்புண்ணியமேதுலங்கிற்றென்னப்
புவனமதிலவதரித்துப்புகழினுக்கிருப்பிடமாப்பொலிந்துநின்று.

ஆங்கிலஞ்செந்தமிழ்தெலுங்காதிமொழிதன்னிற்றேறியாருமெச்ச
வோங்கியசீதார்பிரபலதாசிலுத்தியோகத்திலுற்றுநீதி
தாங்கியறமொருசிறிதுங்கோணாதுமானவரைத்தனிப்புரந்து
பாங்குபெறவேதாழ்ந்தும்பற்பலசாத்திரங்களினற்பழக்கத்தாலே.

நீறுகண்டிகைபூண்டமாதவத்தருடனுக்கோசங்கொண்டு
வேறுபொருளிற்சிறிதுமாசையின்மையாதுவெறுப்படைந்து
கூறுமநேகமுகபாவனையினொருநேயமிருந்துகுறிப்பிற்றோன்றும்
பேறுதனக்குரியபெரும்பொருளாகவனுபவிக்கும்பெருமைசேர்ந்து

தாமரையினீர்போலுந்தனிப்புளியம்பழம்போலுஞ்சார்ந்தழுந்திவை
கேமமதிலுமுதலவை [illegible] மலைவிலனானாய
சேமமதுவேசுகித்தஞானமுடையவச்செல்வநிலையடைந்து
சேயமுறுவாழ்க்குவருமப்பாசாமிகோபாலனுசீமானருமே.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சாற்றுக்கவி.

உரையாசிரியர் மஹாவித்வான்

காஞ்சீபுரம் - சபாபதிமுதலியாரவர்கள் குமாரர்

கா. பாலசுப்பிரமணியமுதலியாரவர்களியற்றியது.

திருஞான சம்பந்த ஸ்வாமிமுதல் மூவர்கள்
திருவாய் மலர்ந்ததிரு முறைகளும்
அருமைபெற்றிடுமெற்ற முறைகளு மாலவாய்
அரன்செய்விளை யாடலும் வள்ளலார்
பெருமைபெறு சாஸ்த்ரமும் ஞானவா சிட்டமும்
ப்ரபுலிங்க லீலைகை வல்யமு
முருமையாஞ் சித்தாந்த நூல்களும் முபதேச
வுண்மையுட னுபதேச காண்டமும். 1

செப்பிடும் வைராக்கிய சதகமுந் தீபமுஞ்
சேர்ந்திடுஞ் சசிவன்ன போதமுந்
தப்பிலாப் பசுபதி பாசமும் விஞ்ஞான
சாரமும் மாத்மநற் போதமு
மொப்பிலா நிஷ்டானு பூதியும் போதரிய
வுயர்சூத சங்கிதை ஸ்காந்தமு
மிப்புவியி லின்னுமுள பற்பல நூல்களா
மினியதிரை யாழிகரை கண்டவன் 2

கனகசபை தன்னிலிரு வர்க்காக நடனமிடு
காருண்ய நடராஜ பதியையு
முபரவுள்ளங் கிருபைபுரியுஞ் சிவகாமித் தாயையு
முள்ளமிழு தெனவுருக வேத்தியே

திணமுமன் னவர்கடம் மடியிணைக் கேயிக்கு
சீர்சார்ந்திடுங் தோத்ர மான்மியமுங்
கனமாகவே கத்திய ரூபமாய்ச் செய்தவன்
காருண்யன் பலவறஞ் செய்தவன். 3

முக்குணமும் மாதியா மைந்தையு மடக்கியே
மூலமா நிலமதனி லூற்றிடும்
முக்காலி காற்கொண்டு மூட்டியே வாதார
முன்னியே தரிசித்து மதியமுதஞ்
சிக்கெனச் சிந்தியே நாவதினி லூறிடச்
சிதாகாச மாநற் றலந்தனிற்
றக்கதாய் நடனமிடு மன்னவன் பதமலர்த்
தரிசனங் கண்டுகளி கூர்ந்தவன். 4

தானதரு மங்கள்பல செய்திடும் புண்ணியன்
சாற்றுகவி வாணருக்கே யருள்வன்
ஞானனு பவச்செல்வ னைகன்னி புத்தூர்
நங்களப் பாசாமி ஞானியா
ரானவிப் புவியிலுறு மன்னுயிர்கள் மாயையை
யகற்றுவான் மனதி லெண்ணி
யூனமில் லாத்மபோ தப்பிரசங் காமிர்த
மோதினன் வசனனன் னயமாகவே. 5

இன்னவன் பெருமையைக் கூறிடற் கரியதாய்
யெழிலாதி சேடனும் நாவெடித்தே
சொன்னவிப் பாதலந் தன்னிலே வின்னமும்
சோபமுடனே மறைந்தே யொளித்தான்
மன்னிடும் பொறுமையைக் கண்டுபூ தேவியும்
மண்ணின்மய பாயிருந் தாள்
அன்னதா லிவன்புகழை யாவரே கூறுவர்
அரிதரி தியம்ப மாதோ. 6



சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

மகாவித்துவான் காஞ்சிபுரம்

# இராமசாமி நாயுடு அவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீரிருக்கு மறைமுதலா கமங்களொடு பலவாகிச் செறிந்து நா ளும், பாரிருக்கும் பலகலையும் பல்பொருளும் பல்லுயிரும் பகரற் கொணணுப், பேரிருக்கு மடிமுடியின் பெரும்பொருளா யருளுரு வாய்ப் பிறங்கி நீங்கா, நேரிருக்கு மடியர்மனத் திருக்கோயில் குடி யிருக்கு நிமலை வாய்மை. (1)

உரங்கிடந்த வுளத்திருத்தி மும்மலமோ டைம்புலனு முயங்க மாறுந், தரங்கிடந்த வறுகுணனுந் தத்துவமுந் தொழிலுரையுந் தகைத்து மாய்வில, வரங்கிடந்த மனமிறக்கு மரியசுக யோகநிலை மன்னி யாங்குந், திரங்கிடந்த வருள்வெளியிற் கண்டபெருஞ் சீர னைத்துஞ் சிறப்பக் காட்டு (2)

எண்ணரிய பிறவியுளு மானிடமே சிறந்ததென விசைப்ப ரந்த, நண்ணரிய பிறவிகிடைத் தும்பெரிய முத்திநிலை நாடா தூழ, லெண்ணரிய பவச்சலதி யமிழ்ந்துகரை யறியகிலா தழுங்கு வார்க் குப், பண்ணரிய பெருந்தவமே யொருகலனுய்ப் பலித்ததெனும் பான்மைத் தாக (3)

பண்காட்டு மறைமுதலா கமபுராணங்கண்முதற் பண்பி லுற்ற, மண்காட்டுப் பலகலையும் வழுத்துநெறிக் கணுவெனினு மாறுறுதவ், விண்காட்டுந் தேவரொடு முனிவரெலா மறிவினுக் கோர் விளக்க மீதென், றெண்காட்டுஞ் சிரந்துளக்கி மிகமகிழ்ந்து நனிபுகழ்ந்திட் டோதி நிற்ப (4)

வானிருந்த தெள்ளமுதுங் கற்கண்டுஞ் சருக்கரையு மணமிக் கூர்ந்த, தேனிருந்த முக்கனியும் பாலினொடு சேர்ந்திருந்த திறமை

போதுங், கோனிருந்த செந்தமிழின் றுறைமுழுது மணமுற்றெலாங் கூடி யொன்றாய்க், தானிருந்த வாக்கதுபோ றப்பிரயோகங்கண்மிக நூல் சமைத்துத் தந்தான். 5

அன்னவரும் பெருந்தவத்தின் சிவயோகி யாவனெனி னறைவல் கேண்மோ, பன்னவரும் பலன்படைத்துப் புகழ்படைந்த கன்னிபுத்தூர் பரிந்து வாழ்ந்து, மன்னவரு மகிழ்ந்தேத்தத் தாகதர்பலர் பணிந்துநிற்ப பாநிலத்தி, லின்னவரு நிதிநெறி கோடாமல் தாசிலுத்தி யோகஞ் செய்தோன். (6)

அறிவருக்குஞ் செந்தமிழோ டாங்கிலமுந் தெலுங்காதி யாமதூய, குறிவருக்கும பாடைபல விலக்கியநல் லிலக்கணநற் குறிப்பினோடு, நெறிவருக்கும படிசிறிது நீக்காறக் கற்றுணர்ந்த நிபுணன்மேலுஞ், செறிவருக்கு நாற்கவியுஞ் செப்புகிற்குந் திறத்தனொரு சிங்கமன்னன். (7)

ஒருநாளும் பிறந்திறந்திங் குழலாத பரம்பொருளை யுலவாஞானந், தருவானைத் தத்துவனைக் கணியபாய மயிலையென்றுந் தணவாதானை, யிருஞாலம் படைத்தளித்துத் துடைக்குமுழு முதல்வனையெம் மீசன் றன்னைத், திருவாரு நடராஜப் பெருமானை யெப்பொழுதுஞ் சிந்தை செய்வோன். (8)

வான்பொழியுங் கருமுகிலு மிருநிதியு மைந்தருவும் வறிதென்றோதத், தான்பொழியு மிருகரத்தான் முங்கரிய பெருவரத்தான் றண்மை மாறாத், தேன்பொழியு மலர்த்தொடையான் செய்யதிருவருட்டொடையான் றிறத்த வாய்மைக், கான்பொழியுங் கரிக்கரியான் கணிப்பருபுன் கருத்தரியான் கலைகொ ளுவான். (9)

போற்றரிய புகழ்படைத்த வீராசா மிக்கோபான் பூவிலென்று, மாற்றரிய தயமனைத்து மொருங்குதிரண் டொருவடிவாயமைந்த தென்ன, மாற்றரிய பிறப்பினொடு வந்துபல புலவர்திருவாக்கி லோங்கிச், சாற்றரிய தகைகொளுமப் பாசாமிப பெயர்ப்புனைந்த தக்கோன் மாதோ. (10)

முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆத்மபோதப்பிரசங்காமிர்தம்.

## விநாயகர்துதி.

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

சீரோங்கு திருத்தில்லை யம்பலத்து ளனவரதஞ் சிருட்டி யாதி, பேரோங்கு மைந்தொழிலு முறைநடக்க வாணுபரும் பிறங்கன் மன்ன, ஞரோங்கு மகள்காண நடஞ்செய்யு நம்பனருள் பெறச்செய் யிந்நூல், ஏரோங்கி யினிதுமுடி வதற்குப்பல் முகவனடி யிணைகள் போற்றி.

### பரமசிவம்.

அண்டமா யந்த வண்டத் தாருயிர் கோடி யாகிப்
பண்டைய மறைக ளாகிப பகர்மறைப் பொருளு மாகிக்
கெண்டையங் தடங்கட செவ்வாய் கிளிமொழி யிமயப் பாவை
தண்டலி னுதனுய சம்புவி னடிகள் போற்றி. (க)

### உமாதேவி.

அலகிலா வுலக மீன்ற வன்னையா யமைத்த லாதி
யிலகுமைந் தொழின டாத்த விரண்டுடன் மூன்ற தாகுந்
தலைமைய சத்தி பேதத் தன்மையாய் முழுது மானேன்
நிலையிடப் பாக மார்ந்த நிமலையி னடிகள் போற்றி. (உ)

### நடேசர்.

பூமலிமென் கடுக்கையணி யெயபெணியும் [illegible]
புனலுங் தோளி, லேமமுடி யினில்வழு வொரு [illegible]
காட விமையோர் போற்றத், துமழுகள் [illegible].

தலை வைத்திடத்தைத் தொழிலுந் தோன்றக், காமருபொன் மன்றி லனை வரதநட னவில்வானைக் கருத்துள் வைப்பாம். (௩)

### சிவகாமசுந்தரி.

#### எழுசீரடியாசிரிய விருத்தம்.

அளிமூரற் குழலுங் கயலிணை விழியு மாம்பலம் போதுநேர் வாயுக், மொளிமதி முகமும் வெதிர்புரை தோளு முலகெலாஞ் சைவமே வாழக், குளிர்பொழிற் காழி மைந்தனுக் கமுதங் கொடுத் தருடிருத்தன முங்கொண், டளிவளர் மன்றி னடமகிழ் சிவகா மசுந் தரி யடியிணை போற்றி. (௪)

### விநாயகர்.

#### அறுசீரடியாசிரிய விருத்தம்.

மூன்றுமதம் பொழியானை முகவசுரன் கிளையுடனே முடிந்து தேவ,ரான்றவரு கற்பகநா டடைந்துய்ய வோர்மருப்பை யகைத்தெ றிந்து, சான்றவொரு கரத்தினிற்கொண் டடியார்க டொழத் தில்லை சார்ந்து வைகும், நான்றதிரு வாயைந்து கரமாறு முடியனடி நளினம் போற்றி. (௫)

### சுப்பிரமணியர்.

அலைபுனற் கடல்க ளேழு மனலெழ வவுண கோடி
மலைதலை யுருண்டு வீழ வடியயில் தொடுத்து வானோர்
பலரையுஞ் சிறைதவிர்த்துப் பாவைய ரிருவர் கொங்கை
நலமுற வழுந்துந் தோளா னளினபா தங்கள் போற்றி. (௬)

### திருநந்திதேவர்.

காரணனாதி தேவர் நகைமணி முடியிற் றுக்குஞ்
சீரணி கனாக மேந்தித் திருமலை கயிலை காத்தங்
கேரணி யாகமங்க ளெந்தைபாற் றெளிந்து மேலாம்
பூரணத் தவரு தற்குப் புகனந்தி பாதம் போற்றி. (௭)

### சமயகுரவர்.

அருகரை வாதில் வென்ற அந்தணன் பாதம் போற்றி
உரகத்தால் மாண்ட மைந்தற் குயிர்தந்தோ னடிகள் போற்றி

*பரவைசங் கிலிசேர் ஞான பண்டிதன் பாதம் போற்றி*
*திருமலி வாத வூரர் திருவடி போற்றி போற்றி.* (அ)

அவையடக்கம்.

*பாலிமா வேலை யடைந்தொரு பூனை முற்றவும் பருகுவே னென்ன, வாலிய மொழியா லுரைத்ததை யடைந்த வண்மைபோன் மனத்தினு மெட்டாச், சூலிமா தேவன் புகழினைப பேசத் துணிந்த தாளு சிறியனேன் குறைகள், சாலவு முளதா யினுமதை மேலோர் சாற்றிலர் பொருளைநோக் குவரே.* (௯)

இதுவுமது.

*கிளிகளும்புன் பூவைகளுங் கிளக்குமொழி கேட்பார்க*
*டெளிவுவரத் தவறினசொற் றெருட்டுவரோ மருட்டுவரோ*
*ஒளிவுடைய பேரறிவா லுயாந்தபெரி யோர்களெலா*
*மெளியதமி யேனுரைலை யௌளுவரோ கொள்ளுவரோ.* (௧0)

*குழந்தைகுழ றும்மொழிக்குக் கொண்டாடு மனைபோல*
*இழந்தவுயா ஞானிகளு மெனனுரைகேட் டுண்மகிழ்வார்.* (௧௧)

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆத்மபோதப்பிரசங்காமிர்தம்.

## முதற்பிரகரணம்.

## சிவஸ்தோத்திரரத்நாவளி.

### நடேசர்துதி.

கலிநிலைத்துறை.

*திங்க ளார்சடைத் தேவனைத் தேவருக் கெட்டாச்*
*சங்க வார்குழைப் பகவனைச் சதுர்மறை யவனைப்*
*பொங்கு மாமணி யழுத்திய கனகமாம் பொதுவில்*
*எங்க டாய்மகிழ் நடமிடு மிறைவனைப் பணிவாம்.*

தாவருஞ் சித்தியினு மேவரு ஞானத்தினுந் தேவரினு முனிவர் யர்வரினு மேம்பட்டு உலகமெல்லாந் தொழுதேத்த நிற்குந் தெய்வப் பெற்றியாளரும், அமிழ்தினு மினிய தமிழ் மொழிக்கு இலக்கண முதனூல் செய்தருளிய பேராசிரியருமாகிய அகத்திய முனிவருக் காச்சிரமமாகியும், அருமறை முழங்கோதை அருவியினோதையினு மிக்கொலிப்பதாயும், சந்தன சூத பாடல வகுள சம்பீர கதளி நாளிகேர மாதவி முதலிய விருக்ஷசாலங்கள் நிறைந்து ஆகாயத்தினை யளவெடுக்கும் சோலைசூழ்ந்த பொதியமாமலைக் கருகிலுள்ள ஓர் சிங்காரவனத்தில் சிவநேசர்கள் முனிவர்கள் சித்தர்கள் யோகிகள் ஞானிகள் சேர்ந்து அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராய், மங்கைபாகராய், கங்கைவேணியராய், சங்கரசிவனையிராநின்ற ஸ்ரீசாம்

பவ நடேசப் பெருமானை மிகவும்பக்தியோடு நாள்தோறும் பிரசங்க வாயிலாகத் தோத்திரஞ்செய்யும் ஞானசபை யொன்றுண்டு. அந்தச் சபையில் மேற்கூறிய சிவநேசராதி குழாங்களி லெவ்வொருவர் ஓர் தினஞ்செய்த தோத்திரத்தைக் கூறுவோம்.



## க - வது சிவநேசர்களிலொருவர்செய்யுந்தோத்திரம்.



அரகர சிவசிவ மாதேவா அடியனைக்காத்திட வாவாவா
சரணம் சரணம சாமீ சரணம தண்ணருள் தில்லைச் சாமீ சரணம்.

### திருவிளையாடற்புராணம்.

சரண மங்கையோர பங்குறை சங்கர சரணம்
சரண மங்கல மாகிய தனிமுதல் சரணம்
சரண மந்திர வடிவமாஞ் சதாசிவ சரணம்
சரண மும்மலர்க ளுயக பசுபதி சரணம். (க)

### சூதசங்கிதை.

ஆறு டுறுசெஞ் சடையாய் சரண மழலா டுகுடங் கையாய் சரணம்
பாறு டுறுசூற் படையாய் சரணம் பணமாடரவப் படையாய் சரணம்
நீறு டுறுமே னியனே சரண நிதியார் வரைவெஞ் சிலையாய் சரணம்
ஏறு டுறுநீள் கொடியாய் சரண மெழிலார் கயிலைக் கிரியாய் சரணம்.

### பெரியபுராணம்.

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புற நடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி. (௨)

### வேறு கவிகள்.

அருவமாயுருவ மாகி யகண்டமா யசலமாகி [றி
யொருபரம் பொருளாய் வண்ண மொப்புட னுயர்வு மின்

## ஆத்மபோதப்பிரசங்காமிர்தம்.

நிருமல ஞகி யெங்கு நிறைந்துநீங் காது நிற்கும்
கருதரு ஞா ன னந்தக் கருணையங் கடலே போற்றி. (ச)

வாத வூரடி யாரொடு மூவர்க்குச்
சீத வார்செங் கமலத் திருவடிப்
போதி னய்யப் பொருந்த வளித்தமா
நாத னுமவ னன்றெழுந் தெய்வமே. (ரு)

தத்தித் தித்தித் தரிகிடத் தோமெனத்
தித்தித் திலலையி லாடுந் திருவடி
வைத்து முத்தன் முதுகின்மே லாடுமென்
னத்த னுமவ னன்றெழுந் தெய்வமே. (சா)

அப்பர் சுந்தரர் மாணிக்கர் தம்மையாண்
டொப்பி லாப்பதம் வைத்தடி யேனையும்
அப்படி யிசைந் தாட்கொள வெண்ணுமென்
னப்ப னுமவன் நான்றெழுந் தெய்வமே. (எ)

சித்தர் முதகர் சிவசிவ வென்னவே
சத்தி மாது சபாசென்று மெச்சவே
மெத்த மெத்த முடுகிக்கூத் தாடுமென்
னத்த னுமவ னன்றெழுந் தெய்வமே. (அ)

### திருமந்திரமாலை.

கரியட்ட கையன கபாலங்கை யேந்தி
யெரியு மிளம்பிறை சூடுமெம் மானை
யரியன் பெரியனென் றூட்டட்ட தலலார
கரியன்கொல் சேயன்கொல் காண்கின் றிலேனே. (கூ)

### திருவேற்காட்டுப் புராணம்.

வானவர் தலைவா போற்றி மாலவிடை யூர்தி போற்றி
போனக மாகநஞ்சை யருந்திய புனித போற்றி
தானவர் புரமூன் றட்ட சதுரனே போற்றி நாவில்
ஞானநா யகனே போற்றி நாதனே போற்றி போற்றி.(கO)

அகோசர நிரதிசயானந்த பூரணானந்தமாகச்சகளீகரித்து நடேசரென்கிற நாமத்தைத் தரித்துச் சர்வாங்க ரத்தினாபரணபூஷணராய், மாணிக்க மகுடதாரியாய், நவரத்தின மணிகொண்டிழைத்திட்ட கனகசபையின்கண் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்ற எம்பிறைவராய் உட்புலனைந்தினையும் வென்று உண்மையை யுணர்ந்த தொண்டர்களினுள்ளந்தோறுஞ் சென்று பேரின்பமாகிய அமுதமாரியைச் சொரிகின்றவராய, கல்லால விருக்ஷத்தடியில் வீற்றிருந்து சனக சனந்தன சனாத சனற்குமாரரென்னு நான்கு முனிவர்களுக்கு வேதங்களால விளக்குதற்கரிய பொருளாகிய சாயுஜ்ஜியபத நிலையைத் தக்ஷணாமுக குருமூர்த்தமா யெழுந்தருளிச் சொல்லியருளிய பகவானுமாகிய நடேசப்பெருமானது திருமறைச் சிலம்பணிந்த சரோருகமான சதானந்த பாதாயபுஜங்களுக்கு வந்தனம்.

அரகரசிவ சமபோ சஙகர சச்சிதாநந்த சதாசிவ மகாதேவா! ஏகதத்துவ நிதநிப அநாதியாய, சர்வாந்தரியாமியாய் விளங்கும் பரமமே! மாயாசததியாகிய கருவியைக்கொண்டு எண்ணரிய ஜீவபேதங்களுக்குதத நுகரண புவனபோகங்களைப் படைத்த பரமனே! அமைச்சராதியரைக்கொண்டு அரசனானவன் தனததிகாரதசைதச் செலுத்துவதைப்போல், அமைததலாதி பஞ்சகிருத்தியங்களை அயனாதிய பஞ்சமூர்த்திகளைக்கொண்டு நடத்தும் பரப்பிரம்மமே! சிறிதுந்தன்னுண்மையினை யறியாது பகிர்முகவியாபாரத்திலேயே பிரவிருத்தியையுடைய அறிவிற்கட்டுபபட்டுக் கிடக்கின்ற ஜீவர்களறியப்படாத காரணகாரிய கற்பனைகளிறந்து தானாய்விளங்கும் பரமார்த்தமாயும், தானே சுயம்பிரகாசமாயும், பிரகாசிக்கின்ற துரியமாயும், எல்லா வஸ்துகட்குமூல வஸ்துவாயும், நிச்சலமாயிருக்கின்ற அலையில்லாத சமுத்திரமபோல ஞானசொரூபமாகிய துரியசம்பூரண மௌனானந்த பெருமபொருளாயும் விளங்கும் நடேசமூர்த்தியே! அன்றியும் துவாதசாந்தப் பரஞ்சுடருருவாய்த் துலங்குஞ்சோதியனே! ஆதியந்தமில்லாத பேரொளியாயிருப்பவனே! சோதிநாயகனே!

அநித்தியமும் துக்கமுமாகி அழியும் பித்தவுலகவாழ்வை அஞ்ஞானகுணத்தால் நிலையென்று நம்பி மோகமயமான பாசத்தால் அனுத்ம சம்பந்தமான விஷயபோகமெனு மாயையினைவற்புக்

தத்தினு லுண்டாகும் பெருங்காட்டில் ஆசையின்பின் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் மாயாமனத்தின் விருத்திகளைநீக்கிப் பதிப்பொருள் செய்யாநின்ற பஞ்சகிருத்திய விலக்கணத்தையும் அப்பஞ்சகிருத்தியங்களைநடாத்துங் கடவுளர்களினது சலக்ஷணங்களையும், ஆங்காங்கு நடக்கும் ஞானப்பிரசங்கத்தையும், சிவகதைகளையுங்கேட்டுத் தேவரகசியம் வேதரகசியம் வேதங்கட்குச் சிரங்களாகிய வுபநிடதங்களுடைய சாரமான அருத்தத்தையும், முத்திநெறி முதலியவைகளின் வரலாற்றையுந் தெரிந்துகொண்டு; ஆத்மஞான சாட்சாத்காரமான ரூபத்தை நிருபாதிகநிட்டையினுலுஞ் சோபாதிகநிட்டையினுலும் விலட்சணமாகவும் சலட்சணமாகவும் உபாசனைசெய்துவரும் மகான்களுக்குத் தன்னைக்கண்டு தரிசிக்கச்செய்து அழிவில்லாத முத்தியின் பத்திற் சேர்ப்பிக்கும் எம்பெருமானே! ஆதிமத்தியாந்த ரகிதமான வள்ளலே! சங்கற்பமாத்திரத்தில அண்டரண்ட பகிரண்டங்களையும் மாயாசகத்திலாச கல்பிதமாகப் பரிணமிக்கச் செய்யும் பரனே! சர்வவியாபக நிராகுல கோலாகலனுகிய அய்யனே! சாமபசதாசிவனே! சர்வமங்கள தோஜோபயசிவபெருமானே! வீணையையுடைய பாணபத்திரருக்குத் தானடிமையென்று தனது திருமுடியின்மேல் விறகு சுமை சுமந்த சிவபிரானே! பிரமாமுதல் பிபீலிகாந்தபரியந்தம் ஒரே பிரகாசமான வேகவஸ்துவாய் விளங்கும் சிவபிரானே! அடியேன் இவ்வுடம்போடுகூடிய வாழ்க்கையை வெறுத்து உன்திருவடியையடைய ஆவல்கொண்டிருந்தாலும் தக்கசாதன சதுட்டய சம்பத்தில்லாதவனும், ஈஷணாத்திரயங்களையுடைய அஞ்ஞானத்தைக்கைப்பற்றினவனுயும், நான்குவேதங்கள் முதலானவற்றையுணர்ந்த பெரியாரைத்துணைகொள்ளாமலும், அவர்களுக்குப் போதுமானவரையில் தொண்டுசெய்யாமலு மிருந்தாலும் என்பேரில் உன்கிருபாநோக்கத்தைக்கடாக்ஷித்து ஆண்டருளுமய்யனே! அகிலலோக சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியகாரணனுகிய சிவபிரானே! அற்புதகுணசீலராகிய பரஞ்சுடரே! தீனதயாபரமூர்த்தியே! பக்தர்கள்பணியும்பதாம்புயனே! அளவிறந்த விளையாட்டையுடையஅத்தனே! சிற்சொரூபவஸ்துவாகிய தேவாதிதேவனே! சந்திரஜடாமண்டலதாரியாகிய சதாசிவனே! புண்டரீகாக்ஷனுகிய திருமால்மகிழ் சகோதரியாகிய உமையவள்நேசனே! நின்மலசொரூபமாய் எங்கும்நிறைந்திருக்கின்ற பிரமவஸ்துவே.

அடியார்கள் வழிபட்டுய்யும்பொருட்டுச் சகளத் திருமேனி கொண்ட அய்யனே! சர்வமங்கள தேஜோமயமாகிய சிவபெருமானே! நித்திய கல்யாண சுந்தரனே! கடம்பவன சுந்தரனே! ஆலால சுந்தரனே! அபிராம சுந்தரனே! ஸ்ரீசுந்தரேசப்பெருமானே! அரிய வேதாகம சாஸ்திரபுராண கலைஞானங்களை யெல்லா மறிந்த அடியார்களுக்கு உண்டாகும் இடுக்கண்களைக்களைந்து இஷ்டசித்திகளை அருளுமய்யனே! நீலகண்டமும், மான்மழுவும், வரதாபயகரங்களும், சதுர்ப்புஜமும், நெற்றிக்கண்ணும், நிலவணிசடையும், பார்வதி பாகமுமுடைய அய்யனே! சாந்தராகியும், சர்வகர்த்தாவாகியும், சர்வக்ஞராகியும், ஸ்வபாவப்பிரகாசராகியும், மஹாராஜாகியும், சிற்கனராகியும், வியாபியாகியும், முக்தப்பிரியராகியும், பராசத்தியுடன் கூடியுமுள்ள சதாசிவமூர்த்தியாகியும், பரிபூரணமாகியும், நிஷ்களசோதியாகியும் விளங்கும் வஸ்துவே!

ஸ்ரீகயிலாசகிரியாகிய வெள்ளிமலையி னுச்சியிற் கோடிசூரியோதய பானுப்போன் றொளிவீசும் நவரத்நமயமான ஆயிரக்கால் மண்டபத்தில் பக்தா நுக்கிரஹ காரணமாக அரிபிரமாதி தேவர்களும் மற்றவர்களுங் கரங்களைச் சிரமேற்கூப்பி ஹரஹர சிவசிவ கங்காதர மகாதேவ சம்போ வென்று துதித்து நமஸ்கரிக்கக் காட்சிகொடுக்கும் அய்யனே! செம்பொன் மயமானவனே! சுடருஞான வானந்த சொரூபனே! புராண காரண புராந்தகனே! ஒருத்தனே! எங்கள் மன்னவனே! ஆசைக்கடலி லமிழ்கின்ற சோரனாயேனாகிய என்னைக் காப்பவனே! மகாதேவனே! அம்பிகாபதியே! மாதேவனே! அரனே! இடபவாகனனே! அருட்பெருங் கடலாகிய எமது சிவபிரானே! ஆநந்தவெள்ளமே! மகாதேவனே! சமஸ்தலோக காரணபூதராகிய பரமேஸ்வரனே! சர்வலோக காரணராகிய சிவபெருமானே! பஞ்சகிருத்திய காரணமாக ஆநந்தத் தாண்டவம்புரியும் எம்பெருமானே! பரமபதியே! கருணாநிதியே! உபநிடதங்களிற் கூறும் அந்தரங்கமான பிரஞ்ஞானம் பிரமமென்னு மிருக்குவேத மகாவாக்கியார்த்தமாக விளங்கு மத்துவித ஸ்வரூபமாகிய தன்னை விலட்சணமாகவும், சலட்சணமாகவும், ஆகமாந்தத்தில் சொரூபவிலக்கணநிஷ்களமாகவும், தடத்த விலக்கணசகளமாகவும், இவற்றையுங்கடந்தபிராம்பியபாவனை

மாகவும், துதிப்பவர்களிடத்திலன்புடையவனாகவுமிருக்குமய்யனே! பிரபஞ்ச முதல்வனாகிய பசுபதியே! திவ்வியமங்கள ஸ்வரூபியாகிய சிவபிரானே! அடியார்களின் மாயையைக் கெடுக்கு மய்யனே! உலகமாதாவாகிய உமாதேவியாருக்கு இறைவனே! பரமபதியே! சர்வபரிபூரணராகிய சிவபெருமானே! சர்வஜகத்சுதந்தரமுற்ற சம்புவே!.

தமது அருட்சத்தியாகிய பார்வதிதேவியோடு தில்லையில் வீற்றிருக்கும் பசுபதியே! அகோசரபானுகோடி தேஜசையுடைய சிவபிரானே! காமகோரத்தால் பசுக்களைப்பிடித்துக்கர்மபாசத்தாற் கட்டி ஆள்பவனே! சம்புசிவசங்கரனே! ஆதியு மந்தமு மானந்தமயமாய் விளங்கும் சோதியனே! சாம்பசதாசிவனே! கடாசலவுரிபோர்வையைப்போர்த்தவனே! எல்லாநாமென்று ஏகாந்தமாகிநிற்பவனே! வேதாகமவழியிலேநடக்கும் மெய்யடியார்களினுள்ளத்தின்கண் குடிகொண்டிருக்கும் தவளமேனி வடிவத்தையுடைய சரசுவதி தேவியினது செம்பதங்களின் துணையைக்கொண்டு உன்பெருமையை யெடுத்துரைக்கும் நூலையெழுதும் அடியாகளுடைய பொய்சேர்ந்த தீவினைகளை நாசமுறச்செய்து அவர்களுக்கு ஞானராச்சிய பட்டாபிஷேகஞ் செய்தருளுந் தாண்டவ மூர்த்தியே!

ஆதியாய், அந்தமாய், நடுவாய், சோதியாய், மின்னலாய், மின்னல் நடுவாய், வேதாந்தமுஞ் சித்தாந்தமுங்கடந்த அமிர்தபஞ்சாட்சரதுரியநடுவாய், சம்பூரண மௌனானந்த பரம்பொருளாய் விளங்கும் வஸ்துவாய், வானையும் வையகத்தையும் விளக்குவிக்கும் மார்த்தாண்டனாகிய பானுவி னொளியால் வாழும் பல்லுயிர்களையும் படைத்துத்தாங்கி பொழுங்கொடு நடத்திக் காக்கு முடிவில்லாத கிருபா மூர்த்தியாய், நீடிய சாந்தமு மிகுந்த கிருபையுமுள்ளவனாய், உயிர்களுக்குத் தோன்றாத் துணைவனாய், உள்ளன் புடையவர்கட்குத் தோன்றுந் துணைவனாய், சம்சாரக்கடலைக் கடக்க மரக்கலம் போன்றவனாய், அநாதி நித்திய யதார்த்த சுபாவ பிரம்மமாகிய நடேசபெருமானாய், ஜக ஜட சிவபர சர்வ தத்துவாதீத தன்மாத்திர அகம்பிரம்மாகாரமாகிய சொரூபமாய்விளங்கும் நின்மலனாகியசிவனாய், ஓங்காரபிரணவக் ஞானாகார சர்வதத்துவ சொரூபனாய் விளங்குபவனாயுமுள்ள தற்பரானந்த பரனாகிய அம்பலவாணனே!

துரியனாய், துரியமுங்காணாத அதீதனாய், தத்பதமகா வாக்கியத்தின் பொருளாகிய சிவமாய், மறைமுடிவதனில் விளங்கிடு மொளியாய், கனித்த சுவானுபவாதீத பிரமமாய, எவ்விடத்திலும் வியாபகமாய விளங்காநின்றபரமபொருளாய, அகண்டபரிபூரணனாய், நாத வடிவாகிய மகாமந்திர ரூபனாய், ஞானநாயகனாய, மெய்ஞ்ஞான மின்னதென் றறியாமல காமக்குரோத முதலிய துக்கபேதங்களினத்தினுக்கு நடுங்கி அளவற்ற சனனமெனனும பள்ளத்தில விழுந்து துக்கமென்னும் கனத்த சுமையைச் சுமந்துகொண்டு தடுமாறும் அடியேனுடைய ஆன்மபோதத்தின் கண்ணதாகிய வாணவவிருளைக் கிழித்தெறிந்து ஆண்டருளுபவனாய், தற்பரனாய, அற்புதனாய், சொற்பதங் கடந்த சோதியனாய், கருது மெய்யடியார்களின் கன்ம வினையைப் போக்குபவனாய், ஆதியந்தமில்லா வரும்பெரும் பொருளாய, பொங்கித ததும்பும பேரானந்த வாரியில் ஞானானந்தமாக விளங்கும் பொருளாய, பாரதவிட மெங்கும பரம்பொருளாகத் தோற்றுபவனாயுமுள்ள சிவபெருமானே!

அங்கிங் கெனாதபடி யெங்குஞ் சுயஞ் சோதியா யிருப்பவனாய், பரமானந்த சொரூபனாய, ஓமபரபபிரம மங்களகரனாய், தத்துவாதீதனாய், தனிபபரம பொருளானவனாய, எண்ணிலா வடிவனாய், அந்தராத்மாவாக விளங்குந் தன்மையினால எல்லாவுயிருந் தானாயிருப்பவனாய், சாவவியாபியாக விருந்து யாவற்றையு மசைவிக்குந் தன்மையால் அண்டபிண்ட சராசராத்மக அகண்ட அறிவானந்த மேனியனாய, ஜெக சீவ பரங்கட்கு அன்னியனாகையால் எங்கணு மெய்ச்சாக்ஷியனாய, இன்ப சுகானந்த ஞானவாரியில் ததும்பியெழு மமுதப் பிழம்பனாய், ஸ்வய ஸ்வபாவ அநாதிநித்தியானந்தனாய், விளங்கும் நிமலபரிபூரண விமலனுமாகிய சிவபெருமானே!

தகராலயமாகிய திருச்சிற்றம்பலத்தின்கண் அனவரத நித்தியானந்தத் திருத்தாண்டவஞ் செய்கின்ற தம்பிரானாய், வேதாகம சொரூபனாய, அவைகளின் அர்த்தபாவனாய், சர்வேஸ்வரத்வத்தை யுடையவனாய், சிவாகார பிரணவ ரூபனாய், சிறந்து விளங்குஞ் சத்தியமாகிய பராபர வஸ்துவானவனாய், இருவினையொப்பு மலபரிபாகமமைந்த சத்தினிபாத வுத்தமர்கட்குக் குருவாய் விளங்கும் பர

னாய், ஸ்தூல சூக்ஷும காரண மகாகாரண மகாத்மனாயும் விளங்கு மஹாதேவனே!

வேதாந்தோபநிஷ தாதிகளை அறிந்த அறிவுடையோர்களால் அனவரதமும் ஏத்திப் போற்றும் கோதிலாத குணக்குன்றனாய், சத்திய ஞானானந்தப் பரம்பொருளானவனாய், முத்திக்கு வித்தாய், முழுமுதலாய், மூதறிவோர்கள் போற்று மூலகாரணனாய், அருவம்-உருவம்-அருவுருவங் கடந்த அநாதியனாய், அநாதி மலமுத்தனாய், உலகமே திருமேனியனாய், தனது திருவருளையே பராசத்தியாகக் கொண்டவனாய், முக்குணரகிதனாய், மும்மலங்கடந்தவனாய, அரிப்பிரமேந்திராதியர்கள் காணாத அரும்பொருளானவனாய், அரியமறைமுடிவா மரதனபீடத் தமர்ந்த ஞானநாயகனாய் விளங்கும் விமலபரஞ்சோதியே! சத்துச்சித்தானந்த தற்பரஸ்வரூபனாய், அகாராதி க்ஷகாராந்தமாகிய ஐம்பத்தோ ரக்ஷர சோதிஸ்வரூபனாய், அத்துவிதானந்த பேரின்ப சாகரமாகிய வஸ்துவாய், அவனவளது வெனச்சுட்டியறியப்படாத பரம்பொருளாய், வேதாந்த மென்னும் விருக்ஷத்தினுச்சியிற் பழுத்த சைவசித்தாந்த மென்னுங் கனியினிரசமாகிய பரமாய், தற்போதங் கடந்தவர்களாற் காணப்படுங் கண்ணுதலாயும் விளங்கும் சதாசிவனாகியபரனே!

ஆன்மாக்களின் அநாதிமல விருளை நீக்கும் ஞான சூரியனாய், வைகரி - மத்திமை - பைசந்தி- சூக்குமையென்னு நாலுவாக்குகளையுங் காரியப்படுத்துபவனாய், ஞாதுரு-ஞானம்-ஞேயமென்னுந் திரிபுடிரகிதனாய், மலகன்மங்களைக் கடந்த நித்தியானந்த சொரூபனாய், தீவிரதரசத்தினி பாதம் வாய்ந்து தெளிந்த சிந்தையர்க்குத் தெவிட்டாத ஞானவாரியை வழங்கும் பிரபுத்வ சாமர்த்திய குணத்தையுடைய சிவபெருமானே! அதுவிதுவென் றிடவில்லா வகண்ட பரிபூரணமாயும், பிரமானந்த ஸ்வரூபமாயும், மஹா வாக்கியங்களுக்கு லக்ஷியார்த்தமாயும், முக்குணங்களு மில்லாததாயு மிராநின்ற சகளவடிவான நடேசப் பெருமானே!

ஜகமியாவற்றிலும் சங்கம தாவர ரூபமாய்க் காணப்படும் வஸ்துவாயும், நாசமில்லாததாயும், மேலான ஆனந்தசொரூபமாகி விளங்

கும் பரமசிவமாகியும், அநாதியாயுள்ள வகண்ட ஆணவமலமாகிய அந்தகாரம் ஆன்மாக்களினின்று நீங்கியோட கோடி சூரியர்களைப் போல அடியவர் இதயதாமரையிற்றங்கி திருவருளென்னும் ஒளியை வீசுகின்ற நெற்றிக்கண்ணனாகியும் விளங்கும் சிவபெருமானே! தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் அடியவர்களுக்கும் அமுதம் போன்ற திருவருட்சுவையைத் தருபவனே! பொன்னாரணி மணிமாளிகைசூழ்ந்த புலியூரில் வாழு மய்யனே!

காரணகாரிய கற்பனைகளிறந்து தானாய்விளங்கும் பரமாத்மாவாயும், சுயம்பிரகாசமாகப பிரகாசிக்கின்ற துரியமாயும், நிறைந்த வஸ்துவாயுமுள்ளவனே! நிச்சலமாய், அலையில்லாத சமுத்திரம்போல் ஞானசொரூபமாய், துரியசம்பூரண மௌனானந்த பெரும்பொருளாய் விளங்கும் சிற்றம்பலவனே! யோக ஞான சொரூபமாய், பிரமானந்தப் பெருக்காய், பேரானந்த வெள்ளமாயுமிருக்கு நடேசப்பெருமானே! வாசா கைங்கரியமாக அகம்பிரமமென்பவர்களுடையநாக்கை யறுப்பவனே! வானோங்கிய கோபுரங்களையுடைய அழகிய தில்லையில் நவரத்தினங்களிழைத்த சிற்சபையில் ஆனந்தத் தாண்டவமாடு மையனே! என்னப்பனே! மகாவுன்னத பதவியாகிய பேரின்ப வீட்டையடைய வேண்டுமென்கின்ற ஆவல்கொண்ட அடியேனுடையவஞ்சகமும்பலவகைக் கோரணிச்சேட்டைகளுமுள்ளமனம் விடயங்களிற்சென்று பலவித கொடுமைகளைச் செய்யாமலும், சங்கற்ப மனைத்தும் என்னைத் தொடராமலும், பஞ்சேந்திரிய மயக்கம் என்னிடத்தில் குடியிராமலும், வீரகண்டா மணியணிந்த உனது தாமரை மலர்போன்ற திருவடிகளை அடியேன் தியானித்துத் தொழும்படி அநுக்கிரகம் செய்யுமையா உமாதேவிக்கு நாயகனாகிய தில்லை நடராஜபதியே! கருணை வெள்ளமாய் துப்பனாய் விளங்கும் பராபர வஸ்துவே! ஞானப்ரகாசமாயும், சகலமுமேகமாயும், பிரமப் பிரகாசமாய் விளங்கும் வஸ்துவாயும், நித்தியசுயபிர்மானந்தசொரூபமாயும் அடியவருளத்துவீற்றிருக்கும் தெய்வமே! துர்க்கந்தமாகிய மலமூத்திர முதலிய நிறைந்த ஊத்தையுடலை மெய்யென நம்பி கியான சூனியத்தால் ஆசாபாசத்திலழுந்தி இவனிவனிதுவெனக் குலாவிமகிழ்ந்துகொண்டிருக்கும் அற்ப வறிவையுடைய அடியேனை இம்மாயா காரியபிரபஞ்சத்தில் ஐம்பொ

றிகளாகியவேடர்களால் வளர்க்கப்பட்டு அஞ்ஞானத்தன்மை யுடைந்திருப்பதால் உன்பெருமையையறியாது மயங்கிப்பிரபஞ்ச வாழ்க்கையில் தடுமாறுவதினாலே அதிலிருந்து விலக்கி ஆனந்தத் தாண்டவம் புரியும் உன் திருவடிநீழ லடையும்படி கிருபைபுரிந் தருளுமையா கர்த்தனே! தேவர்களு மிருடிகளு நெருங்கி நின்று வணங்கத் தனத் தனத்தன தனதன வென்னும் தாளத்துக் கேற்ப ஆனந்த ஞான நிருத்தத்தைச் செய்யுஞ் சிவபிரானே!

பரமசாந்தத்தோடும் எங்கும் ஔபச் சிலேடிகமாக நிறைந்த சம்பூரண பிரம்மஞான சொரூபமாய் விளங்கும் நடேசப் பெருமானே! சுத்ததன்மய பரஸ்வயப் பிரய்மஞான ஸ்வரூப ஸாக்ஷாத்கார முத்தியனுக்கிரகஞ்செய்யும் ஞானசாரியனாகிய சபாபதியே! ஜீவ காருண்ய தயாமூல ஞானமூர்த்தியாகி அம்பலத்தாடு மையனே! சூக்கும வொளியிருளாயும், ஒளியிருளற்றதாயும், நாதநாதாந்த முடிவற்றதாயும், சுயம் சொரூபமாய்விளங்கும் பரவஸ்துவுமாகிய திருத்தில்லை நாயகனே! ஒன்று மிரண்டு மொன்றிரண் டற்றதும், உள்ளும் புறம்பு முட்புறம்பற்றதும், உருவு மருவு முருவருவ மற்றதும், தனக்கென வொன்று மில்லாததுமாய்விளங்கும் பிரமசொரூபமே! காளகண்ட திரிநேத்திர ஞானவொளியாயும், ஞானமூர்த்தியுமாகிய நடேசப்பெருமானே! நித்யானந்தத்தேனிறைந்திருக்கும் ஐந்துமுகத்தையுடைய கற்பகமே! அழியாத தில்லையி லெழுந்தருளி யிருக்கின்ற ஐயனே! அநித்தியமாகிய உடம்பை நித்தியமென் றெண்ணி அதைப் போஷித்து அதனால் மிகத் துன்பத்தை யடைந்து வாழ்கின்ற வஞ்சக நெஞ்சகத்தையுடைய அடியேனைச் சேற்றிலழுந்திய யானையைக் கரையிலெடுத்து விடுவதைப்போல அஞ்ஞானத்தினின்றும் ஞானமாங் கரையேற்றி ஜீவகரணமறச்செய்து சத்தினிபாதத்தன்மை யடையச்செய்தருளுமையா ஞானசொரூபியாகிய சிவபிரானே! அடைக்கலமென வடைந்து தேவரீரது திருவடியை யடைய முயற்சிசெய்யு நாயினேனுடைய வஞ்சம்பொருந்திய நெஞ்சத்தை இங்குமங்கும் ஓடவிட்டு அதின் சேஷ்டையால் துன்பமடைதற் கேதுவான ஐம்புலன்களின் கொட்ட மடக்கிச் சென்மாந்திரங்களி லுண்டாயிருக்கும் கன்மசேகரமாகிய சஞ்சிதத்தை நீக்கி அநுக்

கிரஹம் செய்யுமய்யா நடேசப் பெருமானே! வேதாந்தத் துச்சியில்
விளையாடுந் தெய்வமே! ஆறுசாஸ்திரங்களையும், நான்கு வேதங்களை
யும், இருபத்தெட் டாகமங்களையும், அறுபத்துநான்கு கலைஞானங்க
ளையுங் கற்றுணர்ந்த சனகாதி முனிவர்களுக்கு வேதத்தின் முடிவா
கிய உண்மைப் பொருளை உபதேசித் தருளிய இறைவனே! நிட்க
ளப்பொருளாய், அகண்டபரம்பொருளாய், ஆனந்தத்தாண்டவமாடும்
பொருளாய் விளங்கும் நடேச மூர்த்தியே! உதையாத்தமன மின்றி
யெக்காலத்து மோரியல்பாய் நிற்கும் ஞானசூரியனே! சர்வஜீவ
தயாபரனே! விஷ்ணு பிரமர்களால் முறையே அடியையு முடியை
யுங்காணக் கூடாதபடி நின்றவனே! பிரணவ சொரூபமாக விளங்கும்
கொன்றை மாலையைத்தரித்த சடாபாரத்தை யுடையவனே! சிதாகா
யத்தில் ஞானநடனஞ் செய்கின்ற மாணிக்கமலையே! பூதாகாயத்தி
லான நடனஞ் செய்கின்ற உண்மைப் பொருளே! அஷ்ட புஜங்களை
யுடையவனும், மேருமலையாகிய வில்லை யுடையவனும், அடியார்களு
டைய மோகமயக்கத்தைப் போக்கிச் சங்கற்ப வடிவமான மன
தைக் கெடுத்துச் சீவபாவத்தை நீக்கி, ஆத்மஞானமாக விளங்கச்
செய்து சனனமரணங்களை ஒழிப்பவனுமாகிய நடேசப்பெருமானே!
கர்மத்தினையே கர்த்தாவாகக் கொண்ட கர்மபிரம வாதிகளாகிய தாரு
காவனத் திருடிகளின் பத்தினிமாரிட்ட பிச்சையைக் கொண்ட பெ
ருமானே! கண்ணப்ப னெச்சிலை யுகந்து தின்ற காளத்தியப்பனே!
ஆயிரம் பிறையினைக் கண்ட மதுரை வாணிச்சிப் பிட்டை வாங்கித்
தின்ற கூலியாளனே! சேந்தநாயனார் படைத்த களியை யமுது
கொண்ட அய்யனே! அச்சேந்தனார்க்கு முத்தியளிக்கும்படி கொற்ற
வங்குடி முதலியாருக்குத் திருமுகங் கொடுத்தனுப்பிய திருவாள
னே! பிரமனுடைய தலையைக் கையிலேந்திய கபாலீசனே, திரிபுரத்
தை யெரித்தவனே! அடியார்களுடைய ஆணவாதி மும்மலங்களை
யுமொழிக்கத் திருக்கரத்தில் மூவிலைச் சூலமேந்திய நீலகண்டத்தை
யுடைய என்தெய்வமே! ஆனந்தையென்னும் பெயருடையதாசி தரிப்
பதற்காக அழகிய இரத்ன கடகத்தை அருளிய சிவபிரானே!
சன்மார்க்க நெறியை யனுசரிக்காமல் விடயங்களைச் சிந்திக்கும்
வஞ்சகத்தையுடைய எனது நெஞ்சகத்தை யுனது பாததாமரையிற்
சேரும்படி யநுக்ரகஞ் செய்யுமய்யா ஞானபரனே! மூலமலத்

தால் விளைந்த பிராரத்துவம் - சஞ்சிதம் - ஆகாமியமென்னும் பெரும் பூதமாகிய வினைகளின் மிக்கவலிமைவக்குறைக்கு மார்க்கத்தைத் தேடாமல் அவைகள் மேலு மேலும் வளரும்படியாக இழிதொழிலைச் செய்து அதனாற் பாபியாய் உனக்கு அடிமையாளனாகாமற் போகும்படியாகிய என்னை அவ்வழியே விடாமல் உயிரச் சார்பு பொருட் சார்பாயுள்ள சகல பந்தங்களை நீக்கிக் காத்திரக்ஷித்தருளுமையா சச்சிதானந்த சுயம்பிரகாசமாய் விளங்கும் நடேசப் பெருமானே! அகம்பாவத்திற் கட்டுப்பட்டு மயங்கும்அடியேன் ஆபாசமிகுந்த பொய்க் குரம்பையாகிய சரீரத்தை வெறுக்கவாவது, கொடிய பிறவியிற் செறிந்த வெவ்விய குடும்பதொல்லையைத் தொலைக்கவாவது, உனது திருவடிக் குரிமைபூண்ட மெய்யடியார்களுக்குத் தொண்டு செய்யவாவது, உன்னை அன்புடன் சார்வதா சிரவணம் பண்ணவாவது, அல்லது தவவேடம்பூண்டு நியமப்படி தவத்தைச் செய்யவாவது, மூர்த்தி -தலம்-தீர்த்தம் இவைகளை முறையேதரிசித்து வாழ்ந்து மூழ்கவாவது, அறியாத எனதுபிழையை மன்னித்து என்னை ஆண்டருளுமையா சிவபெருமானே! பிராரத்துவ வனுபவத்திற்கேற்றபலவகைச் சரீரத்தைத்தரும் பிரமனால இனிப்பிறவியை எடுத்தற்கேதுவை விளைவித்துக்கொள்ளாத சீவன்முத்தர்கள் நிறைந்துவிளங்குந் தில்லையில் வாழும் அய்யனே! ரஜோகுண சம்பந்த அவித்யா சஹிதனாகித் தூலதேகத்தைத்தானாக மருவிய ஜீவனாகிய அடியேனுடைய பசுகரணங்களைச் சிவகரணங்களாகச் செய்து அதனால் சீவபோதம் சிவபோதமாக அச்சிவ போதத்தால் சிவஞானம் வெளியாகும்படிச்செய்து அடியேனைக் காத்திரக்ஷித் தருளுமையா நடேசப் பெருமானே! ஊன்மருவிய பிறவியெனும்பெருங்கடலிலழுந்திப் பிராந்திவடிவமான உலக வாழ்க்கையென்கிற மாயா பந்தத்தினால் துன்பப்பட்டு வாடுகின்ற இந்தப் பாவியான அடியேனாகிய நாயேன் கோடிஜன்மாந்தர காலங்களிற் செய்த பாழ்வினையைப்போக்கி, விடயசுகத்தை நீக்கிப் பிரம சுகத்தை அடைய அனுக்கிரகம் செய்து ஆண்டிரக்ஷித் தருளுமையா நடேசப் பெருமானே! தில்லைநாயகனே! திங்களணிந்தவனே! சுத்தவச்சிர மாணிக்கச் சுடர் பொதிந்தென்னத் தோற்றும் ஞானசொரூபியே! பல்லுயிர்க்குந் தனுகரண புவனபோகங்களை மாயையினின்றும் படைத்தளித்தழிக்கவல்ல பரனே!

வெண்ணிலாக் கொழுந்தினைத்திகழத்தாங்கிய பெண்ணொருபாகனே! பகிர்முக நோக்கத்தினையுடைய மனிதர்களின் ஆக்கை மனம் வாக்கு இவைகளினு லறியொணுப் பரம்பொருளே! அந்தர்முக நோக்கினையுடைய வறிஞர்கள் மனவாக்குக்காயங்களா லறிந்து அனுபவிக்கவின்பத்தைத்தருமப்பனே! ஞானவீட்டினுக்கு நாயகனே! ஆனந்தசொரூபமாய் விளங்குமய்யனே! மேலவானவர்கள் போற்று மெய்ப்பரஞ்சுடரே! முடிவிலா வின்பமான முதல்வனே! உன்னுடைய திருத்தொண்டர்களிடத்தில் அநுசரணை யில்லாதவனும், உன்னை அன்போடு தொழாத கல்லைப்போன்ற மனத்தினை யுடையவனும், வஞ்சகனும், கொடும்பாவியாகியுமிருக்கின்ற அடியேனைக்காத்திடு மய்யனே! அறிவாகாரமாய் விளங்குகின்ற பரனே!

அங்கிங்கெனு தெங்குமாகித் தானேயாய், தங்குமண்ணில் விண்ணில் தழைக்கு மௌனுதீதமாகிய வஸ்துவாய், தனிப்பிரம்மானந்தசொரூபமாய்விளங்கும் நடேசப்பெருமானே! அஞ்ஞானபோதமடைந்திருக்கும் அடியேனை உலகமென்னுங்காட்டில் துன்புற்றுச் சுழலும்படி அலைக்கின்ற கொடிய மனதைத் திருத்தி ஆண்டருளுமையா பொன்னம்பலத்தரசே! பெரியபொருளைவைக்கு முதற்பெரும்பொருளாயும், அரியதவச்சிரேஷ்டர்களா லறியப்படுவதாகியும், சொல்லுதற்கரிய மகான்கள் துரியபதத்தி லிரண்டறக்கலந்து அநுபவிக்கத்தக்கதாகியும், சர்வவியாபகப் பொருளாகியும், பழமையாகியும், பரமாகியும், பசுக்களுக்குத் தலைவனுகியும், தேவர்களிடத்து வைத்த காருண்ணியத்தால் திருநீலகண்டத்தையுடைய தேஜோமயனும், பஞ்சாட்சரப் பொருளாயும், மாயாகாரியமாகிய அன்னமயகோசம்-பிராணமயகோசம்-மனோமயகோசம்- விஞ்ஞானமயகோசம்-ஆனந்தமய கோசமாகிய இந்தப்பஞ்சகோசங்களையுங் கடந்து நின்ற விடத்தில் நிற்பவனுயுமுள்ள பிரமமாகிய நடேசப் பெருமானே! சோமசூரியாக்கினிகளாகிய திரிநேத்திரங்களை யுடைய சுயம்புமூர்த்தியே! கொடிய முதலையுண்ட பிராமணச் சிறுவனை அம்முதலைவாயினின்றும் வெளியே வரும்படி திருப்பாசுரம் ஓதியருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் பொருட்டுப் பரவைநாச்சியாரிடம் அர்த்தராத்திரியில் தூதுசென்ற சிவபெருமானே! சிறந்த இரத்தினங்களிழை

எங்கும் புடைபரந்துள்ள திருத்தில்லையில் செம்பொன்னம்பல மயமாகிய சிற்சபையின்கண் சுகவாரியாய்நின்று நடனஞ்செய்கின்ற ஸ்ரீநடேசப் பெருமானே! அடியேன் ஈடணாத்திரயங்களாகிய கானவர்வலையிலகப்பட்டுக்கொண் டிருக்கும் மாயாமலமாகிய விடயங்களை அநுபவித்துக்கொண் டிருப்பதால் என்னை விடாமல் வருத்துகின்ற ஆக்கையினிடத்து அடியேன் வைத்திருக்கும் அபிமானத்தை நீக்கி என் உள்ளமுருகி யுரோமஞ் சிலிர்த்துச் சரீரம்நடுங்கி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து வாய்விட்டழுது உன்பாதத்தை அனவரதமும் தொழும்படி செய்யுமையா என்னையனே! உனது திருவடிகளை என்மனதினுற் றியானித்து எக்காலமும் உன்னைத்தொழுது உனக்கடிமையாகும்படி அடியேன்பேரில் கிருபாநோக்கம் வையுமையா எனதய்யனே! பிணியாதிகளால் வருத்துகின்ற பிறவிக் கேதுவாகிய அஞ்ஞானமாகிய காட்டைத் தாண்டுவித்துச் சம்சாரபந்தத்தி லுண்டான தாபத்திரயங்களினின்று நீங்கி என்பாசத்தளைகளையறுத்து எனது சனனத்தை நீக்கத்தக்க ஓர்குறிப்பை அல்லது,ஒருதந்திரத்தைக்காட்டி என்னை அடிமையாகச்செய்துகொண்டு விதிநிஷேதரகிதமாகிய சாமவேதமகாவாக்கியத்தை யநுக்கிரகம்செய்து அஸ்தமஸ்தகசையோகஞ்செய்து தனது திருவடித் தாமரையில் சேர்த்துக் கொள்ளுமையா உலகமெங்கும் விளங்குஞ் சிற்றம்பலவனே! வடமொழி வேதத்தைக் கோவணமாகத் தரித்தவனே! தென்மொழித் திருமுறையினைத் திருமாலையாகப் பூண்டவனே! பொன்னு மணியும் பவளமும் போன்று பொலிந்திலங்கி மின்னுஞ் சடையோனுய்ப் புலியூரில் வாழும் நாயகனே! குணங்குறி கடந்த சிவபெருமானே! ஐயனே! அடியேனுடைய கொடிய பிழைகள் யாவையு மன்னித்து, யானையைச்சிங்கம் கொல்லுவது போல என் ஆன்ம போதத்தை மறைத்திருக்கும் அஞ்ஞானத்தைக் கொன்று என்னைக் காத்தருளும் பரனே! மெய்ஞ்ஞான தீபமாயும், அகண்ட பரிபூரணமாயு மிருக்கின்ற சிவபெருமானே!வாதமுஞ்சமயபேதமுங் கடந்த மனோலயவின்ப சாகரனே!

அசைவற்ற நிட்களப் பொருளாய், அகண்ட பரம்பொருளாய், ஆனந்தத் தாண்டவமாடும் பொருளாய், அத்தாண்டவத்தாற் பஞ்சகிர்த்தியம் புரிந்தருளும் பொருளாய்விளங்கும் சிவபெருமானே!

அனுபசுஷத்துள்ள பிரமன் திருமாலென்னு மிருவரும்,சிவராஜயோகச்செல்வராகிய திருமூலநாயனாரும்,உபயசம்புவாகிய திருநந்திதேவரும், பக்தசிரோமணிகளாகிய வியாக்கிரபாதரும், பதஞ்சலியாரும், பலகாலுந் துதிக்குஞ் சிறறம்பலவனே! நடனமாடுகின்ற நாதாந்தத்தில் விளங்கும் மெய்ஞ்ஞானப்பொருளாகிய நடேசப்பெருமானே! தத்துவங்களெவற்றினு மேறபட்ட நாதகதத்துவதனைபுங்கடந்து நின்று ஞானானந்தத் தாண்டவம்புரியும் ஐயனே!.

ஏகமாய்நின்ற வேதநாயகராகியசிவபிரானே! சிருட்டிக்கையில் பிரமனாகவும், திதிக்கையில் திருமாலாகவும், சங்கரிக்கையில் உருத்திரனாகவும், திரோபவிக்கையில மகேச்சுரனாகவும், அனுக்கிரகிக்கையில் சதாசிவனாகவும் விளங்குகின்ற அம்பலவாணனே! தத்பதம் தொம்பதம் அசிபதம் எனமூன்று பதங்களாய் விளங்கும் பராபரவஸ்துவே! அகங்காரமுதல ஸ்தூலதேகபரியந்தமான காரியகாரணசங்கவாதத்துக்கெல்லா மதிஷ்டானமாகவிருந்து சுத்ததத்துவங்களைக்கொண்டு காரியப்படுத்தும் பிரத்தியேகாத்ம சைதன்னியபிரமமாயும் விளங்கும் நடேசப்பெருமானே! சச்சிதாநந்த அத்வைத சொருபியாகியபரனே! அகண்டசமரசசுக சொருபமானபரனே! கருணாகரனே! ஆதாரநிராதாரசிவமே! மாயபாசத்தழுந்தி வாடி மனதினாலும் வாக்கினாலு மட்டில்லாமற்செய்தபாவத்தின் கொடுமையாற்றுன்பப்படும் பசுவாகிய அடியேனுடையதீயமனத்தின் விகற்பங்களை மாற்றி சுத்தமனமாக்கி உன்பாதத்தைச் சந்தித்துநாடித் தினம்தினம் பாடித்துதிக்கவிரும்பும்படிசெய்து அடியேனுக்குஞானக்கண்விளக்கி உன்னைத்தெரிசிப்பித்து உன்செங்கமலத்திருவடியைத்தந்து ஆண்டருளுமய்யா சாம்பசிவசங்கரனே! அய்யா நடேசப்பெருமானே! அழியும் உலகவாழ்வைமதித்து மோகக்கடலில் விழுந்துமயங்கிச் சிந்தைதடுமாறித் தீவினைகட்குள்ளாகியலைந்து துன்பப்படுமடியேனையு மொருபொருட்டாயெண்ணித் தோத்தரிக்கும்படி பிரேரேபித்தபிரபுவே! எங்கும்விளங்கிநிறைந்த பராபரவஸ்துவாயும், திங்கள்சேர் செஞ்சடைத்தேவனாயும், சகலவுயிருக்குயிராகி வயங்கு மகில காரணனாய் நின்ற முதல்வனாயும், நித்தியநிராமய நிமலனாயும், சத்தியஞானாநந்தத்தற்பர சொரூபனாயும், காலகற்பனை கடந்த காரணப்பொருளாயும்,

பதிஞானத்தாற் காணப்பட்ட விறைவனையும், சகளநிட்கள சதாசிவ மூர்த்தியாயும், நித்தியானந்த மயமாயுள்ள பரம்பொருளாயும், மறை முடிக்குமெட்டாத மலரடியோனையும், கற்றார் விரும்பு மாமணியாயு மிராநின்ற சிவபிரானாகிய உன்னைத் தொழாமலும், உன்னுடைய அடியார்களாகிய பெரியோரைக்கண்டு வணங்காமலும், கெர்விதிருக்கும் பேதையர்கூட்டத்தில் பேயனேன் சேராமலிருக்கும்படியாயு முன்னிடத்தில் சதா அன்புள்ளவனா யிருக்கும்படியாயு மனுக்கிரகம் செய்யுமய்யா தில்லைக்கதிபதியே! நிலவுசேர் சடைத்தம்பிரானே! அடியேன் அளவில்லாயோனிகளிற் பிறந்துழலாமல் காத்துக்கொள்ளுமய்யா நடேசபெருமானே! பூரணனாய், புனிதபுண்ணியனாய், புராந்தகனாய, ஆதிமத்தியாந்தமில்லா வருமபொருளாய, சுத்தவைதிகமாய், நித்தியானந்த சொரூபமாயும் விளங்கும சதாசிவ மூர்த்தியே!

பத்தியில்விளையும பரம்பொருளென்றும் பசுபதியாகியபரனே! முன்னவனே! கொன்றைசூடுமுதல்வனே! மனதைச் சங்கற்பமார்க்கத்தில் விடசசெய்வதற்கும செகபாவனையில நிற்கச்செய்வதற்கும் காரணமா யிருக்கும் ஒழியாமாயாகாரிய சரீரதொந்தத்தால் அநாதியாய கன்மத்துக்கிடாகப் போகத்தைப புசித்துவாதைப்படும் அடியேனை ஆண்டருளுமய்யனே! கனியினிரசமபோன்ற தமிழ்மறையினைத் தோத்திரஞ்செய்கின்ற வடியார்களுக்குச் சகாயமானவாண்டவனே! மண்டலம் விண்டல மடஙகளும்போற்று மகத்துவத்தையுடைய அய்யனே! அன்பரடையுமா கருணைவாருதியான அபூர்வபரம பொருளே! உன்னிடத்தில் பத்தி விசுவாசம் நயபிக்கை இல்லாத அஞ்ஞானிகளுக்குத் தோற்றப்படாதவனே!

சர்வதத்துவவிசாரணை-ஆத்மசுத்தி-தத்துவசுத்தி-ஈஸ்வர உபாசனைபக்தி-குரு உபாசனைபக்தி-யோகம்-அப்பியாஸானுபவம்-ஆலயதரிசனம்-சிவஸ்துதி-நிஷ்டை வேதாகமாதி நூல்களை முற்றுமுணர்தல், சாதனங்களில்முயன்றுநிற்கும்பெரியோர்தெரிசனம்செய்தல், இவை முதலியவை இல்லாத அஞ்ஞானஅந்தகனாகிய அடியேன் உன்திருவடியையெப்படிஅடையப்போகிறேன் அய்யனே! அறிவினர்களுக்குக்

கிட்டாததில்லையில் எழுந்தருளியிருக்கின்றநித்தியானந்த பரமாத்து
மாவாகிய நடேசப்பெருமானே! அகோசரமான சைதன்யபாவனை
யாற் சித்துஞ்சகத்துமாய் விளங்கும் சிவபிரானே.

வரிசைவரிசையாக கமுகாதி தென்னஞ்சோலைகள் சூழ்ந்து
அலங்காரமாயிருக்கும் தில்லையி லெழுந்தருளி யிருக்கின்ற
அய்யனே! எனது கருங்கல்போன்ற மனத்தை நாளடைவில்
நீராய்ப் பெருகவுருக்கி ஆணவமலப்பிணியைத்தீர்த்து என்னை
ஆண்டருளுமய்யா இமாசலராஜபுத்திரியாகிய உமாதேவியாரின் நாயக
ரான நடேசப்பெருமானே! கோடி சூரியர்கள் ஒருங்குகூடி உதய
மானாற்போன்று விசேஷித்த சோதிசொரூபரான சிவபிரானே! தில்
லையிலெழுந்தருளியிருக்கின்ற சபாநாயகனே! பெரியோனே! சுயம்
பிரகாசமாயுள்ள ஆன்மவறிவு தலையெடாதபடி சூனியஞ்செய்த கட்
டலனுக்குத் தோன்றாத அஞ்ஞானாவரணத்தையும், அவ்வஞ்
ஞானத்தாலுண்டான பஞ்சபூத சொரூபமான தேகத்தையும்,
அசரீர முடைமையால் சீறும் ஐம்புலப்பாம்பாலேறிய விடத்
தையும் ஒழிக்கும் மார்க்கத்தை அடியேனுக்கு அனுக்கிரகஞ்செய்து
என்னை ஞானவாழ்வில் வாழும்படி செய்யுமய்யா நடேசப்பெருமா
னே! பொய்யாகிய தேகத்தை நானென்றபிமானிக்கும் அகம்பாவங்
கொண்டு அப்பயனின்றிய தேகத்தை ரக்ஷித்துக்கொண்டு மனோதுக்க
முண்டாவதற்குக் காரணமாகிய தீயகன்மமுதலியவைகளைச்செய்து
ஆயுளைப் போக்கடிக்கின்ற கொடியேனாகிய யான் எவ்வகைத்தீமை
புரியினும் அவற்றைநோக்காது சித்தமிரங்கி அடிமைகொண்டு ஆண்
டருளுமய்யா நடேசப்பெருமானே! அடியேன் உன்னை அன்போடு
தொழுதுபக்குவப்படாத கடையான நாயாயிருந்தாலும் என்னைக்
கைவிடாதுபக்குவப்படுத்தியிரக்ஷியுமையா சிதாகாசரூபனே! ஒளிவடி
வானவனே! நான்குவேதங்களின் முடியில்விளங்கும் இரத்னமே!
ஆன்மாக்களுக்கு மாதேவனாகிய முதல்வனான சிவனே! கருணைநி
றைந்த அமிர்தமே! அடியேனிறந்து மீண்டும் பிறவாதவீட்டுநெறி
யையருளுமய்யா ஞானமன்னவனே, மெய்யடியார்களின் பேரில்
மேகத்தைப்போலுங் கருணைமழையைப் பொழிந்து பலகோடிசென்
மங்களிலும் அவர்களை ரக்ஷித்தருளும் அய்யனே! என்தந்தையாக

விளங்கும் சிவபெருமானே! ஆனந்தமே வடிவாகவிளங்கும் ஆண்டவனே! மெய்யடியார்களின் அஞ்ஞானவிருளையோட்டுவிக்கு மேலான பரமாசாரியனே! பால்போலும் வெள்ளியசந்திரனையணிந்த சடாமுடியையும் திருமால்வணங்குந் திருவடியையுமுடைய இறைவனாகிய சிவபெருமானே! மெய்ஞ்ஞானிகள் ஞானக்கண்ணாற் காணும்படி சிதாகாசவெளியில் ஒளியாய்விளங்குகின்ற பரமே!

ஆன்மாக்களின் கன்மத்திற் கீடாக அனுபவிக்கும்படி வேதங்களாற் பிரதிபாதிக்கப்படும் தெய்வவடிவங்களெல்லாந் தானாய்விளங்கும் பரனே! அநாதிநித்தியமாய்நிலைத்த சிவானந்தப்பொருளே! அஞ்ஞானத்தையொழித்த மெய்ஞ்ஞானிகள் அறிவில் விளங்கும் மாசிலாதவனே! விவேகபுத்தியோடு காலங்கழிக்காமல் காமக்கள்வனாய் சதாசங்கற்ப வடிவமுடையவனாய், மோகத்தையுண்டாக்கி வீணாக வருத்துகின்ற விச்சாவசமான மனதையுடையவனாய், சண்டாளத்தொழில்புரிந்துபொய்பேசல் - புறங்கூறல் - உண்மைக்குவிரோதமாய் நடத்தல்-துக்கங்களைச் சுகமென அனுபவித்தல்-இவைகளை மேற்கொண்டு ஈஸ்வரனாகிய உன்னிடத்தில் உண்மையானபக்தி-மரணபயம்-ஜெனனபயம் - சாஸ்திரவுண்மைகளின் உணர்ச்சி - யானெனதென்னும் பேதமொழிப்பு - பணிவிடை - மனோலயமனோநாசானுபவம் - நித்தியாநித்தியவஸ்து விவேகமாதிய இவைகளிலொன்றேனுமில்லாமல் மனம்போனபோக்கின்வழி நடப்பவனாய், சங்கல்ப எண்ணங்களை உடையவனாய், அதினால் பேராசைகொண்டு திரிபவனாய், விஷயவிச்சையில் சதாபிரீதியுள்ளமூதேவிதனத்தையடைந்து காமரோயால்வாடி ஸ்திரிபோகத்தை யுடையவனாய், வீண்விவகாரத்தில் வீண்பொழுதுபோக்குபவனாய், அநித்தியவஸ்துக்களை நித்தியமென்று எண்ணி அவைகளைக் கைப்பற்றிக்கொண்டு கன்மேந்திரிய ஞானேந்திரியமென்னும் தசேந்திரியங்களையேநாடிவாடி வாணாட்களை வீணாட்களாக்கிப்பிறவியென்னும் பெருந்துக்கசாகரத்தில் அழுந்திக் கிடப்பவனாய், சமுசாரசாகரத்தினைநீந்தத்தெரியாதுதடுமாறுபவனாய், தன்னை யின்னானென்றறியாதவனாய், புத்திநாட்டமில்லாதவனாய், கிஞ்சித்தும் சைவாசாரமில்லாதவனாய், உன்னுடைய திருவடிகளை அடையவேணுமென்கிற எண்ணமில்லாமல் தனதுபோகம் - தனது

கீர்த்தி-தனதுணவு-தனதாபரணம்-தனதுவாகனம் இவைகளில் உச்சாகப்பட்டுக்கொண்டு இறுமாப்படைந்து சகல ஆடம்பரத்துடன் திரியும் இடம்பபுருஷனைப்போல் பேதையாகிய வடியேனுமிராமல் உன்தொண்டர்களில் ஒருவனுயிருக்கும்படிச்செய்து என்னை ஆண்டருளுமையா நடேசப்பெருமானே!

அடியேனை ஞானசம்சாரியாகச் செய்து, சதாபிரமஞான நிஷ்டைகூடிச் சமாதியிலிருக்கும்படியான புருஷனுக்கி, உன்னருளால் மெய்ஞ்ஞானத்திலழுத்தி, சர்வதத்துவங்களையும் பாழாக்கி உன் திருவடியினீழலிலிருத்தி,நித்தியானந்த சுகானுபவ வின்பத்தினையனுபவித்தற்கு ஆளாக்கி ஆண்டருளுமையாபுலியூரானே! ஓங்காரப்பிரணவத்தின் இரகசியப்பொருளாகிய சிவபிரானே ! எங்கும் நிறைந்து ஞானப்பிரகாசமாய் விளங்கும்வஸ்துவே! நிராமய நிராகார நிர்க்குண அரூபாகார அறிவாய், எங்கும் சர்வசாக்ஷியாய் நின்று பார்க்கின்ற சர்வேஸ்வரனுய், உமைபாகனுயுமிராநின்ற நடேசப்பெருமானே ! அகண்டாகண்ட தன்மாத்திர சம்பூரண நிரஞ்சன நிராமய நிராகார நிஷ்களங்க ஆனந்தாகார வெட்டவெளியில் அனுதினித்திய சுபாவ அகம்பிர்மரஹித ஏகபிர்ம்மமாக விளங்கும் நடேசப்பெருமானே! அடியேனுக்குமீட்டும் பிறவாநெறியைத் தந்தருளவேண்டுமென்று இவ்வாறு தோத்திரஞ்செய்தனர்.பிறகு முனிவர்குழாங்களினெருவரெழுந்து தோத்திரஞ்செய்யலாயினர்.



## உ - முனிவர்களி னெருவர்செய்யுந் தோத்திரம்.



அரகரசம்போ சதாசிவ மஹாதேவ!

சங்கர சர்வேஸ சரணம்சரணம்
அத்தாசரணம் அமலாசரணம்
முத்தாச்சரணம் முதல்வாசரணம்
சித்தாசரணம் சிவனேசரணம்.

## தணிகைப்புராணம்.

அந்திப்பிறைசூ டியசெஞ்சடிலத் தழகா குழகா சரணஞ் சரணம்
சந்தப்புர மூன்று மொருங்கவியச் சமரா டமரா சரணஞ் சரணம்
பந்தப்படு மென்னை யெடுத்தருளும் பவனே சிவனே சரணஞ் சரணம்
கந்தப்பொழில்சூழ்ந் துவளங்க துவுங்கயிலைக் கிரியாய்சரணஞ்சரணம்.

## திருமந்திரம்.

அளவி றந்தது வருள்சிவ சிவசிவ
அகங் கறந்தது வடிவினை சிவசிவ
உளமி றந்துபி றுணர்வொடு பரமற
வொளி ரு நின்றது சிவசிவ சிவசிவ.

சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவார்
சிவசிவ வென்னச் சிவகதி தானே.

## (திருக்கழுக்குன்றப்புராணம்.)

அண்டம் யாவையு மகண்டபூ ரணத்தொளி யானாய்
பிண்டம் யாவையும் பெண்ணொடா ணலியெனப் பெயர்ந்தாய்
மண்ட லாதியிற் சராசர மனைத்தடத் தலரும்
புண்ட ரீகத்து ளிருந்திரா தகன்றுளாய் போற்றி.

வானு மாயிரு நிலனுமாய்ப் பல்லுயிர் வருக்கந்
தானு மாயதற் கயனுமாய்த் தத்துவத் தகலா
வூனு மாயிவைக் கைவகைச் செய்கையு மொழுக்குங்
கோனு மாய்நின்ற குணப்பெருங் குன்றமே போற்றி.

## (சிவராத்திரிப்புராணம்.)

ஓதியா யணுவா யெண்ணி லுயிர்க்குயி ராகி யென்றும்
பேதியாப் பரம தாகிப் பிறப்புட னிறப்பி லாமற்
சோதியா யெழுதாக் கேள்விச் சுருதியின் முடிவா யெங்கட்
காதியா யநாதி யாகு மடிகளின் னடிகள் போற்றி.

விடைக்கொடி யுயர்த்தாய் போற்றி விரிமலர்ச் செழும்பொற் கொன்றைத், தொடையடையா சலனே போற்றி துலங்குபொற் றோட்டிற் றாவும், படைக்கு நீங் கடைக்கட செவ்வாய்ப் பைந்தொடி பங்கா போற்றி, சடைப்பரம் பரனே போற்றி சங்கரா போற்றி போற்றி.

(திருத்தாண்டகம்.)

மண்ணாகி விண்ணாகி மலையுமாகி வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக், கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியுமாகிக் கலையாகிக் கலைஞானந் தானே யாகிப், பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணுமாகிப் பிரளயத்துக் கப்பாலோ ரண்டமாகி, எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்துமாகி யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்றவாறே.

தீயாகி நீராகித் திண்மையாகித் திசையாகி யத்திசைக்கோர் தெய்வமாகித், தாயாகித் தந்தையாய்ச் சார்வுமாகித் தாரகையு ஞாயிறுந் தண்மதியுமாகிக், காயாகிப் பழமாகிப் பழத்தினின்ற விரதங்க ளுகர்வானுந் தானே யாகி, நீயாகி நானாகி நேர்மையாகி நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிக ணின்றவாறே.

மாலாகி நான்முகனாய் மாபூதமாய் மருக்கமா யருக்கமாய் மகிழ்வுமாகிப், பாலாகி யெண்டிசைக்கு மெல்லையாகிப் பரப்பாகிப் பரலோகந் தானேயாகிப், பூலோக புவலோக சுவலோகமாய்ப் பூதங்களாகிப் புராணன் றானே யாகி, ஏலாதனவெலா மேல்விப்பானா யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்றவாறே.

ஸ்ரீ சச்சிதானந்த சதாசிவ அகண்ட பிரம்மாகார தேவாதிதேவ சாம்பசிவமூர்த்தியே! நடேசப்பெருமானே! அகங்கரித்த பிரமனைச் சிறையில்வைத்தும், அடைக்கலம்புகுந்த நக்கீரனைச் சிறையினின்று விடுவித்தும், மாயாசாலங்காட்டுங் கிரவுஞ்சகிரியுஞ் சூரபதுமனுங் கடல்போல ஒலிநிரம்பிய வசுரரென்னு மதயானைகளும் நிலத்திற் சாய்ந்து உதைத்துக்கொண்டு சாகும்படிக்கு வேலையெறிந்து சம்மாரஞ்செய்த சுப்பிரமணியக்கடவுளாகிய சிங்கத்தை யீன்றெடுத்த சோமாஸ்கந்த மூர்த்தியே! சத்தமுதலிய புலன்களின்வழியே செல்லும் சுரோத்திரமுதலிய வைம்பொறிகளையும் தனதுறுப்புக்களையடக்கும்

ஆமையைப்போலத் தனது வழிப்படுத்தித் தன்னுடன்போர்செய்யும் சாத்துவிகமுதலிய முக்குணங்களைவென்று இரேசகப்-பூரகம்-தாரகமென்னும் தொழிலைந்தபிராணாயாம நிலையிற்பழகி, அக்கொழிலிற் பயிலுதலொழிந்த சுழிமுனையின் வழியேசென்று, சோமசூரியாக்கினியென்னு மூன்றுமண்டலங்களுள் அக்கினிமண்டலத்தைக் கடந்து, கூட்டமாகிய ஆயிரம்படங்களையுடைய குண்டலிசத்தியென்னும் பாம்பின்முடிமேல் அசைவற்று நிற்கின்ற சிவயோகியர்களைப்போல் அடியேனும் அந்நிலையையடைந்து உன்றிருவடியைப்பெறவேணுமென்பதாக ஆவல்கொண்டிருப்பதால் பலர்க்குஞ் செந்தாமரைபோன்ற திருவடியைத் தந்து என்கோரிக்கை நிறைவேறும்படி முத்திராப்பிரார்த்தை அனுக்கிரகஞ்செய்து என்னை ஆண்டருளுமையா தில்லையில் ஆனந்தத்தாண்டவம்புரியும் எமது நடேசப்பெருமானே! அடியேன் சித்துசம்பந்தமான விருத்தியினின்று நீங்கிச் சடசம்பந்தமான மலமும் பிராப்பிரதவிகாரரூபமுமான வஞ்சகமனத்தையுடையவனாகி அவ்வஞ்சமனத்தால் பலவித பாவங்களைச் செய்யப்பட்ட பஞ்சமாபாபியென்று நீ கைவிட்டால் என்னையார்காப்பவர்கள்? ஜெகசென்மாதிவஸ்துகட்குக் காரணமாகவிளங்கும் சிவபிரானே! சச்சிதானந்தமே யுருவாக விளங்கும்பரனே! ஆதிமத்தியாந்தரகிதமாய் ஆகாயத்தைப்போல இடைவிடாதிருந்து சதோதயமாக விளங்குகின்ற ஞானவடிவமாயுள்ள சிவபிரானே!

ஏகமாகப் பிரகாசித்துநின்ற சைதன்னியப்பரம்பொருளே! பரிபூரணமாகநிறைந்திருக்கின்றபரமமே! பரமஞானிகள்கண்டு தரிசித்துச் சிவானந்தச் செல்வத்தினை யனுபவித்து உச்சீவிக்கும்படி துரியாதீதமெனப்பெயர்பெற்றுத் தடையின்றிவிளங்குஞ் சொப்பிரகாசவடிவாயுள்ள பரம்பொருளாக விளங்கும் சர்ப்பாபரணனாகிய சிற்றம்பலவாணனே, அஞ்ஞானிகளுக்குச் சிவசாட்சி மாத்திரமாயும், ஞானிகளுக்குப் பரசாக்ஷிமாத்திரமாயும், ஞானபூமி யேழினுமேலாகிய துரியாதீதத்திற் பரசாட்சி மாத்திரமாயும் விளங்கும் பரமமே! அனந்த ஞானசொரூபனே! கருணாகரனே! தேவதேவனே! உண்மையான பக்தர்களின் தோத்திரத்தில நேசம்வைக்குஞ் சதாசிவனே! பாவநாசனே! நின்னையேயணிவேன் என்னை நீ ஆண்டு அருளுமையா மிக

சுரனே! ஞானபரனே! மெய்ஞ்ஞானவாரியே! அகண்டாகாரப்பொருளாகிய ஒளியே! எங்குநிறைந்த இறைவனே! அன்பர்க்கின்பு செய்கின்ற நலனேசனே! வேதங்களாற் பிரதிபாதிக்கப்படும் பிரணவசொரூபம் தன்னையன்றி வேறல்லவென உணர்ந்தார்கட்குப் பிரத்தியட்சமாகத் தெரிவிக்கும்பொருட்டு அப்பிரணவ வடிவினையாய்த் யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளை ஈன்ற தந்தையே! கங்கையையும் இளஞ்சந்திரனையும் அணிந்த சடாபாரத்தை யுடையவனே! பிரணவத்தின் ரகசியப்பொருளை யுபதேசித்த சண்முகக்கடவுளைப் புத்திரனாக வுடையவனே! சிந்திக்கும் அடியவரிதயத்தாமரைமலரில் அமர்ந்தமணமே! அஞ்ஞான மயக்கவிருளற வொளிசெய்யும் ஞானதீபமாயுள்ளபரனே! நிரதிசயானந்த வாழ்வு விளங்கவொட்டாமல் மறைத்துக்கெடுக்கும் பசுசமவாச பாசமும், நானாவித செகத்தாகவு முளைத்த விசேஷபசுத்தி ஆணவாதி சத்திகளைப் பாகுபாக்கி ஜீவனை முத்திபெற கூட்டிவைக்கும் எம்பிரானே!

சாட்சியாய் நின்றுள்ள கூடஸ்தபிரமமாகவிளங்காநின்ற சுயஞ்சைதன்னிய வஸ்துவாகிய சிவபிரானே! பிரமன்முதல் பிபீலிகா பரியந்தமாயுள்ள ஆன்மகோடிகளையும் அவ்வான்மகோடிகளனுபவிப்பதற் கேதுவாயுள்ள தனுகரண புவனபோகங்களையு முறையே கூட்டி முடிப்பித்துக் காத்துச் சங்கரித்துத் திரோபவித்து அனுக்கிரகித்து வருதற்கு முதல்வனாய் விளங்கும் ஆதிகாரணனே! வேதமுதல்வனே! எல்லையிலாப் பொருள் யாவும படைத்த இறைவனே! அற்புத பரஞ்சோதியாகிய சிவபிரானே! ஆதியாய் அநாதியாய் ஏகனாய் அரூபியாய்ச் சொரூபியாய் நித்தனாய் நீதிநாய நேர்மையாய் நீடிழி ஆள் சுயாதிபதியாய் விளங்குபவனே! நீ யென்றும் நானென்றுங் கூறப்படும் பேதமிரண்டின்றி யெங்கணும் பரிபூரணமாக வியாபித்து நிற்கும் பரனே! தானே தானாக விளங்கும் நடேசப்பெருமானே! கானலின் ஜலம்போலவும், கிளிஞ்சலில் வெள்ளிபோலவும், கந்தர்வ நகரம்போலவும், சொப்பன பிரபஞ்சம் போலவும், பழுதையிற் பாம்புபோலவும், மலடிபுத்திரன் போலவும், முயற்கொம்பு போலவும், பருத்தகட்டையிற் கள்ளன்போலவும் தோற்றமாத்திரமாகிய பிரபஞ்சமானது மாயா காரியத்தாற் பொய்யாயிருக்க அதை

மெய்யென்று விகற்பபுத்தியால் நம்பி பாழ்வாழ்வெனு மாயையாகிய பாம்பின்வாயில் தேரைபோ லகப்பட்டுத்துன்பமடைந்து பாழாய்ப் போன நான் ஏன்பிறந்தேன். சண்டாள பாண்டமாகிய இந்தவுடலை ஏனெடுத்தேன். ஏன் பிழைத்திருக்கிறேன். ஏன் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறே னையனே! எமதுகர்த்தனே! பிறவியாகிய கொடிய வனத்தின்கண் மூடிய மோகமென்னுமிருளை உனதருளாகிய ஞானோபதேசமென்னுஞ் சூரிய வொளியாற் போக்கி அடியேனை ஆண்டருள்பவராகிய நடேசப்பெருமானே!

வேதமுதலாகிய எலலாச் சாத்திரங்களையும் பலலாயிர அண்டங்களையு மீன்றருளிய அன்ன பூரணியாகிய பார்வதி தேவியின் பாகனே! சரஸ்வதி தும்புரு நாரதர் இவர்கள் வீணையினால நல்ல இசைப் பாடலைப் பாடவும், திருமாலானவர் அப்பாடலுக்கொத்த தனக்குரிய மத்தளத்தினை முழக்கவும், பிரமன் தனக்குரிய தாளங்கொட்டவும், சூரியனுஞ் சந்திரனும் வாயிற்காக்கவும், ஆதிசேடன் வேய்ங்குழ லிசைக்கவும், சிவகாமசுந்தரி கண்டுகளிக்கவும், காளியுடன் வாதாடிய ஊர்த்ததாண்டவமூர்த்தியான பரமசிவமாகிய சிவபிரானே! பார்வதா தேவியாருக்கு இடப்பாக மருளிச்செய்தவரும், கொல்லும் புலித்தோலாடை யணிந்தவருமாகிய சிவபெருமானே! அடியேன் உன்னைப்பக்தியோடு தியானித்துப்போற்றித்தொழாதவனுயும், சாயைபோலொத்த வாழ்வை மெய்யெனக்கொள்ளு மனசந்தோஷத்தை விடாதவனுயும், பிரபஞ்ச வியாபாரங்களிலுணடான மோகமயக்கத்தைவிட்டு நீங்காதவனுயும், சாத்திரங்களைக்கற்றசாதுசங்கப்பழக்க மில்லாதவனுயும், முத்தியில விருப்பமில்லாதவனுயும், விடயசம்பந்தம் நீங்கிச்சிவசம்பந்தமாகச்சஞ்சரித்துக்கொண்டிருக்கவேணுமென்பதற்கு வேண்டியசாதனங்களில நாளடைவிற் பழகிக்கொள்ளாது துன்பத்தை யுண்டாகருவதற் கேதுவாயுள்ள நிலையில்லாத சரீரத்தை விசாரியாததால் நிலையென்று கருதி உலக வியாபாரத்தில் துக்கத்தைக் கொடுக்கின்ற விஷயங்களில மனதைப் பவபந்தத்தைத்தருகின்ற சங்கற்பத்தின்வழியாகச்செலுத்திப் பிறப பிறப்புக் கேதுவாகிய காரியங்களைத் தன்னையறியாமலே செய்து கடைசியாக எமலோகத்தில் நரகவேதனைக் காளாகிறதனால் பெய்யடி

யார்கள் அடியேனைப் பார்த்து நகையார்களா ஐயனே! கங்கையைச்சிரசில் வைத்தவனே! திருநீற்றைத்திருமேனியில் பூசுபவனே! கல்லாலின் கீழிருப்பவனே! வராகவடிவாய்மாயவன்தேடவுங் காணுதற்கரிதாகிய பாதாரவிந்தங்களையுடையவனே! சுமங்கலையாகிய பதிவிரதை தன்கணவனுக்கேவல் செய்வதுபோல மோகமயமான சகசம்பந்தங்களுக்குப் பயந்து அதை நிவர்த்திசெய்யும்பொருட்டுச் சிவசின்னம்பூண்டு சிவபூசைசெய்து உபவாசமிருந்து உன் ஸ்ரீபாதங்களையடைய விருப்பத்தைக்கொண்டு தியானஞ்செய்யும் பத்திமான்களின் பக்குவத்தையறிந்து அவர்களுடைய சனனமரணங்கட் கேதுவாகிய குற்றத்தைப் போக்கும் பொருட்டு அவ்வவ் வமயங்கட் கேற்றபடி மானிடத் திருமேனிகொண்டு தேசிகோத்தமனு யெழுந்தருளிவந்து ஆணவ முதலிய மலங்களைத் தீட்சையால் நீக்கிப் பக்குவப்படுத்தி சிவானந்தானுபூதியை அனுபவிக்கும்பொருட்டு ஞான உபதேசஞ்செய்யுமையனே! உண்மையாகக்கருது மெய்யடியார்களின்றலைவனே! எனது நடலைவாழ்வினை நீக்குமையனே! சிவபூசையிற் சிறந்த அருச்சுனனுக்குக் கிருபைசெய்து பாசுபதங் கொடுத்த பெரியோனே! சிவனடியாரிடத்துப் பயப்படாதனுகிய காலனுயிரைக் கெடுத்த பாதத்தையுடையவனே! டற்பல்லை வைத்த பனைபோன்ற புழைக்கையையுடைய யானையை யுரித்த வலியை யுடையவனே!

அணுவுக்கணுவா யேகமாய் விளங்கித் தன்னை யன்றிச் சிறிதுங் காரியப்படுதற் கேலாத அண்டகோடிகளாகத் தோற்றும் பிரமமாகிய சிவபிரானே! சாமவேத மகா வாக்கியத்தின் முதற்பதமாகிய தற்பதத்தின் பொருளான ஈஸ்வரனே! உயிர்க்குயிராய் நின்று அவரவர்கள் கன்மத்தினுக் கேற்றபடி வினைப்பயன்களைட்டுவிக்கும் சிவபிரானே! சத்தாகிய சிவமாயிருப்பவனே! ஆன்மாக்களைப் பீடிக்கும் அசத்தாகிய பாசத்திற்கேற்ற மாயைகளைத் தோற்றுவிப்பவனே! நின்மல நித்திய ஞானசொரூபியே! ஞாதுரு ஞான ஞேயமாகிய திரிபுடி பகுப்பின்றி யத்துவிதமாய், அகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நின்ற முதல்வனுகிய நடேசப் பெருமானே! அடியேன் உன்னை உண்மையான பக்தியோடு போற்றித் தொழாமலும் - ஏகேந்திரிய அந்தக்கரண

விருத்திஞான மிவைகளை யெனக் கன்னியமென் றுணராமலு மிருப்பதால், என்னுடைய இந்திரிய வியாபார ஞானமும்-வாசக வாச்சிய ஞானமும் - மற்றுமுள்ள ஞானசாதகங்களும் உன்னுடைய பாதாம்புஜத்தை யடையச் சகாயம் செய்யமாட்டாதாகையால், இப்படிப்பட்ட பிரஷ்டனாகிய நான் ஞானவாழ்வை யெப்படி யடைவேன்? என்னண்ணலே! ஐயனே! வேதாகம ஞானவினோதனே! அடியேனைச் சரியான செந்நெறியிற் செல்லும் நிஷ்டைகூடி ஞானமார்க்கத்தினை யனுபவிக்கும்படி ஆண்டருளுமையா தில்லை நாயகனே!

இரண்டறக்கலந் தனுபவிக்கத்தருந்த அத்வைத முத்திப் பதமான பேரின்ப வாழ்வானது ஞான சாதகங்களைச் செய்யும் நற்றவமுதிர்ந்த மகான்களுக்கும் எளிதில் கிடைப்பதற்கு அருமை யாகியதென்றால்; உன்னிடத்துப் பக்தியில்லாமலும், உனக்கு நேயராகிய அடியாரது திருவடிகளை அருச்சித்துவணங்காமலும், பிறத்தல் முதலிய பஞ்சகோசத்தின் சடபாவ காரியமாகிய பெண்டுபிள்ளை பண்டு பதார்த்தமாகிய பிரபஞ்சகாரியங்களை விடாமலும், சனனமரணமாகிய கடலில் நின்றுங் கரையேறும்படியாக மும்மலங்களையுமொழிக்கச்சக்தியின்றி, உதிரம் தோல் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுக்கிலம் என்னும் சப்த தாதுக்களால் அமைந்து பலவித துர்க்கந்தமுள்ள இத்தேகத்தை நானென்று அபிமானித்து வெறிகொண்டு மயங்கித்திரியும் அஞ்ஞானமுதிர்ந்த பாமரர்களினது நிலையிலே யிருக்கும் அடியேனாகிய நாயினேனுக்கா பிரம்மானந்தமாகிய பேரின்பவாழ் வென்று பெரியோர்கள் பற்பல காலமும் பல நூல்களாலு மெடுத்துக் கூறுவதான அந்த அத்வைத முத்திப்பதங் கிடைக்கப்போகிறதையனே! என்னப்பனே! பொன்னம்பலவனே!

கீழ்ப்போன அனந்தசனனங்களில் செய்திராநின்ற தபோபலத்தினாலே தங்களை வளைத்துக்கொண்டிரா நின்ற எழுவகைப்பிறவிகளையும் நீக்கி அரியவீட்டினை அடையும்பொருட்டுச் சாதுசற்ஜன சாம்ப்ரதாயகுல சதாபத்தர்களாய், சலனமுப்பழிவும் ஆதியந்தமுமின்றி ஏகமாயும் சின்மாத்திரமாயு மிருக்கின்ற பிரம்மாநுசந்தானத்

தை யடைந்து உபசாந்தமாகிய மௌனநிலைவாய்ந்தவர்களாய் ஏகமே வாத்வைதமென்னும் வாக்கியத்தின் வாச்சியார்த்தலக்ஷணமாய்ச் சுக நிலையையடைந்த மகான்களைத் தவிர பஞ்சபூதகாரியமாகிய ஆபாசப் பொருளையுடலை நானென்றபிமானித்து இச்சகதாடம்பரத்தில் கூத்தாடிக்கொண் டிருப்பதால் சிவபுண்ணியங்களைச் செய்யாமல் உண்டுடுத்தலே போந்த சுகநெறியென்று நினைத்துக் காமாந்தகார மாகிய சம்சாரமென்னு மோகமயக்காட்டில் சஞ்சரித்துக்கொண்டு வாணாட்களை வீணாட்களாகக் கழித்துத் தீவினைச் செயல்களைச் செய்யும் அளவில்லாத பாபிகளைக் காலனாகிய இயமதருமராஜன் நரகிற்கிடத்தி நாசப்படுத்துவனாக நான்மறை யாகம சாஸ்திரங்கள் நவில்வதால், நாயினேன் பிற்போந்த நெறிவசத்தாகாது முற்போந்த நெறிநின்று புண்ணியங்களையுடைய அடியார்களினிடம் சேர்ந்து பத்திபண்ணி வழிபடும்பொருட்டுக் காயத்தால் அருச்சித்து வணங்கி வாக்கால் தோத்திரப்பண்ணி மனதினால் தியானித்து அதனால் தன்மய ஸ்பாவானந்தத்தையடைந்து வாழும்படியாக எனக்குப் பரகதி கொடுத்தருளுமையா கனகசபைக்கண் நடனம்புரியும் தம்பிரானே! அத்தனே! அகண்டாகார ஸ்வரூபமான பரம்பொருளே! பலபிறப்பில் துன்பங்களைத்தருகின்ற அஞ்ஞானமாகிய சத்துருவை வெல்லச் செய்து உலகவியாபாரத்தில்முந்தியமனதைக்கெடுத்துத் துன்பம் செய்கின்ற அகம்பாவத்தை நீக்கி நிராசையையுண்டாக்கி உன்னைச்சதாதியானித்து உன்திருவடியடைதற்காளாகும்படி யடியேனுக்குஅநுக்ரகஞ்செய்து ஆண்டருளுமையா அம்பலத்தாடுமையனே! நீலகண்டனே! பரனே! விமலனே! நிர்மலனே! பசுபதியே! செங்கண்மாயவன்மைத்துனனே! திரிநேத்திரனே! திகம்பரனே! கைலையங்கிரிவாசனாகியசிவனே! நெற்றிக்கண்விழித்துமன்மதனை யெரித்த கடவுளே! செருக்கே சொரூபமாக வாழ்ந்த தக்கன் வேள்வியைத் தகர்த்தவனே! அடியவரன்பை யாவருக்கு மறிவிக்க மீன்வலை வீசிய கானவனே! உண்மை யடியவராகிய அமர்நீதிநாயனாருடைய உறுதியை வெளிப்படுத்தக் கோவணங் களவுசெய்த கள்ளனே! மண்சுமந்து கூலிகொண்ட கடவுளே! தந்தையின் தாளறமுடித்த விசார சருமருக்குச் சண்டேசுர பதத்தை யநுக்கிரகித்ததயாபரனே! திருநீலநக்க நாயனாருடைய திருமனைவியி னுச்சிட்டத்தைத் திருமேனியில் நயந்து

கொண்ட தேவர்கோமானே! தன்மீது கல்லெறிந்த சாக்கிய நாயனாருக்குக் கைலாசத்தைக் காணியாகூழியாகத் தந்தவனே! பாண்பத்திரனுக்காக விறகைச் சுமந்த விமலனே! பாண்டியனுடைய சேனைகள்செய்த யுத்தவிடாய்க் கிரங்கி அவர்கள் குடிக்கத் தண்ணீர்ப்பந்தல் வைத்த தண்ணருள் மூர்த்தியே! கல்லானைக்குக் கரும்பருத்திய எல்லாம் வல்ல சித்தவடிவங்கொண்ட இறைவனே! நாரைக்கு முத்தியீந்த நல்லோனே! கரிக்குருவிக்குபதேசஞ்செய்த கருணாகரனே! நான்கு வேதங்களினது முடிக்கணிக்கு மெய்ப்பொருளாகிய சிவசங்கரனே! அண்ணாமலையானே! ஞானபூரணனாகிய சிவபிரானே! தன்செயலாலன்றிப் பிரபஞ்சத்திற்குச் சிறிதுஞ்செயலில்லையென்னு முண்மையினை உலகத்தார் பிரத்தியட்சமாக வறியும்பொருட்டு அப்பிரபஞ்சத்திற்கு அத்தியாவசியமாக விளங்கும் அஷ்டமூர்த்தவடிவமாயிருப்பவனே! உன் மெய்யடியார்களுக்கு அணுவளவாயினுங் குறைவுபடாத பரிபூரண நின்மலமாயுள்ள சிவஞானச்செல்வத்தை அனுக்கிரகஞ் செய்யும் பரனே! இந்திரியங்களால் தோன்றப்படாததாயும், நாசமில்லாததாயும், அநாதியாயும், மேலான ஆனந்த சொரூபமாயும் விளங்கும் பரமசிவமே! பிரபஞ்சாதீதமாயும், ஞானவடிவாயும், நிர்விகாரமாயும், மகாவாக்கியங்களுக்கு லக்ஷியார்த்தமாயும், எப்போதுஞ் சாக்ஷிமாத்திரமாயும், பாவனைகளுக்கப்பாற்பட்டதாயும், முக்குணங்களுமில்லாததாயுமிருக்கின்ற சிவபிரானே!

அகம்புறக்கற்பனைகளாகிய சீவேசுரசகத்து முற்றிலும் அழிந்துபோகத் தக்கதென்பதையும், நிலம் - நீர் - அக்கினி - காற்று - ஆகாயங்களென்கின்ற பஞ்சபூதங்களுடைய அந்நியோந்நிய புணர்ச்சியாலே யேற்படுத்தப்பட்ட இந்தக் காயமாகிய தேகமானது வந்தது எதனாலென்றும், நல்வினைதீவினையென்பது யாதென்றும், ஆகாமியம் - சஞ்சிதம் - பிராரத்துவமென்பது யாதென்றும், பாசங்கள் நீங்குகைக்குவகையாதென்றும், சிவபுண்ணியங்கள் எவையென்றும், தத்துவங்கள் இன்னதென்றும், மாயையின்னதென்றும், விடயங்களில் செல்லுகின்ற மனதைச்செல்லவொட்டாமல் நிறுத்துதற்குச் சாதகம் யாதென்றும், ஜீவாத்மாவுக்கு அவித்தியா சம்பந்தமெப்படி யுண்

டாயிற்றென்றும், நரர்களாகிய பசுக்களைப் பொய்யாகிய பிரபஞ்சவி யாபாரகோரமான கோலங்கொண்டு இறுமாப்பாகிய மருள்கொண்டு அலையச்செய்வது யாதென்றும், தேகேந்திரிய அந்தக்கரணங்களாகிய சுடுமூஞ்சிக் கலகக்காரப்பேய்ப் பயல்களை இன்னாரென்றும் தெரிந்துகொண்டு; அவர்கள் வாயிலொருசேர்மண்போட்டு அவர்கள் தலையெடாதபடி நாசப்படுத்தி ஞானதேசிகர்களிடத்தில் உபதேசம் பெற்றுக்கொண்டு பசுமலத்தை நீக்கிக்கொள்ளவகையறியாமலு மிருப்பவர்கள் யாரோ அப்படிப்பட்டவர்கள் மகாவாக்கியார்த்தத்தின் முடிவான தத்துவமசி யென்னு முப்பதத்துச்சியில்விளங்குந் தன்னியனான பரமாத்துமாவைத் தரிசிக்கும்படியாக நேரிடாதென்பதாகவும்,யான் இப்பொதியமலைச் சாரலில் சிலமாதகாலம் வாசமாயிருந்தபோது என்னிடம் வந்திருந்த மகாத்துமாவாகிய அதிதியானவொருவர் இந்தஞான விஷயங்களை யெடுத்து எனக்குரைக்க அவைகளையெல்லாம் செவ்வையாய்த் தெரிந்துகொண்டு அஞ்ஞானகாரியமனைத்தும் விட்டு நீக்கி, அற்பமான ஆகாமிய பிராரத்த கன்மங்களுக்கேதுவாகிய சஞ்சிதவினையை நீக்கப் பிரமத்தியான சாதனங்களை அப்பியாசஞ் செய்துவந்தால், காலபாசநிவர்த்தியாகு மென்று மனப்பூர்வகமா யெண்ணி அடியேன் சாதகம் செய்துவந்தும் எனக்கொன்றும் கைகூடி வராமையால் இனியாவது அடியேன்பேரில் உன்கிருபாநோக்கத்தைவைத்து என்னை ஆண்டருளுமையா நடேசமூர்த்தியே! தமது திருவுளமேயல்லாமல் எனக்குத் திக்குவேறில்லையையனே!

தானாயிருக்கும் தலைமைப் பரம்பொருளே! சச்சிதாநந்த தற்பரப்பொருளே! தித்தித்திகுவெனத் தில்லை யம்பலத்தே திருநடம்புரியுந் தேவனே! சிவகாமசுந்தரி தன்னைக்காட்டிலும் வேறல்லவென்னு முண்மையினைக்காட்டற்கே அச்சத்திக்கொருபாகங் கொடுத்து மெய்யடியார்களின்பிறப்பையகற்றும் பின்னகனே! ஸ்ரீ அகண்டாகார சச்சிதாநந்த பரிபூரண சுயம்பிரகாசப்பொருளாக விளங்கும் ஸ்ரீ நடேசப்பெருமானே! முதற்பொருளே!, மெய்யடியார்கள் சிவசாயுச்சிய முத்தியடையும் வழியைக்காட்டும் நாதனே! உரோமசர்-அகத்தியர்-வைசம்பாயனர்-வியாக்கிரபாதர்-பதஞ்

சலியார்-வாமதேவர் - சனகர்-சனந்தனர்-சனாதனர்-சனற்குமாரர்-வியாசர்-மதங்கர்முதலிய முனிவர்கள் போற்றித்தொழுது அருச்சனைசெய்கின்ற நடனம்பொருந்திய திருவடியையும், சந்திரஜடாமண்டலத்தையுமுடைய மூர்த்தியாகிய பரமசிவனே! சண்டாளத்துவமாகிய ஆணவமலமென்கிற மாயாமோகக்கொடி மூடிக்கொண்டிருக்கும் அடியேன் உண்மையான பக்தியில்லாதவனாயும், தானம்-தருமம் - தவம்-என்கின்ற இவைகளிலொன்றுஞ்செய்யத்தெரியாத சண்டாளனாயுமிருப்பதால், என்னை ஆதரித்து என்பவரோக நிவர்த்திசெய்து நித்தியானந்தபதத்தை யடையும்படி அடியேன்கேட்டுக்கொள்வதற்காக என்பேரில்கோபித்துக்கொள்ளவேண்டாம். நான்குவேதமானவரே! தேவர்களுக்குத் தேவனாகிய பரமசிவனே! மகாவிஷ்ணு சதுர்முகபிரமன் தேவேந்திரன் முதலியோர் மனத்தினாலும்-வேதங்களினாலும்-அளவிடுதற்கரிதாகி, அகண்டாகாரஸ்வரூபமாகி, நிலைபெற்றநிஷ்களப்பொருளுமாகிய பரமசிவமே! என்பேரில் கோபங்கொள்ளவேண்டாம். உமக்குக்கோபம்வந்தால் நான் எப்படிப் பிழைப்பேன், தீவினையையுடையவனாகிய நான் எவ்வளவு உனக்கு ஒருபொருளா? கோபஞ் செய்யவேண்டாம்.

படுகுழியிற்பட்ட யானையைப்போல் மாயாபாசத்திலகப்பட்டுக்கொண்டு சிறுமையடையும் அடியேன் அனந்தகுற்றங்களைச் செய்தாலும் குழந்தைபுழுதியிற் புரண்ட காலையில் மாதாவானவள் கிருபையுற்றுக் குளிப்பாட்டல்போல என்னிடத்தில் கிருபைவைத்து என் குற்றங்களைப் பொறுத்து ரக்ஷியுமையா நடேசரென்று பேர்படைத்த ஐயனே! இடபவாகனராகிய சிவபிரானே! பாவங்களைக் கடக்காத பாவிகளறியப்படாத கைலாயத்திலிருக்கின்ற கடவுளே! ஜகதீசனே! எண்பத்துநான் கிலட்ச ஜீவபேதங்களைப் படைத்தளிக்கும் பரமசிவமே! நிர்மலகுணனே! உலகநாயகனே! பரஞ்சுடரே! சிவப்பிரகாசனே! பரிசுத்தனே! காலாந்தகனே! தேவர்சிரமாலை தரித்தோனே! கிருபாகரனே! சர்வத்துக்கும் தானாய் நிற்பவனே! ஆபத்பாந்தவனே! மெய்ஞ்ஞானச்சுடரே! மும்மூர்த்திகள் முதலானவர்களிடத்திலு மனிதர் மிருகமுதலான ஆன்மகோடிகளிடத்திலுஞ் சைதன்னியமாய் விளங்கும்பராபரமாகிய

வஸ்துவே! சர்வசாக்ஷியாய், சர்வாந்தரியாமியாய், அம்பிகாசமேதனாய் விளங்குந் தெய்வமே! மேலானமோட்ச வுண்மையினையும், அதனை யடையவேண்டிய சாதனங்களையும், பரபுருடார்த்தத்தையுஞ்சொல்லு ஞான காண்டமாகிய வுபநிடதத்திலும் ஞானபாஷியமாகிய வாதுளாகமத்திலும் விளங்காநின்ற மகாவாக்கியார்த்த சொரூபமான நடேசப்பெருமானே! நித்த சுத்த புத்த சத்திய பரமானந்தாத்துவிதமான பரமசிவனே! பரிபூரண பிரணவசொரூபமாக மெய்யடியார்களிதயத்தில் பூரணமாகப் பிரகாசிக்கும் பிரமமே!

ஆத்மஞான மில்லாமல் வேதாகம வரம்பைக்கடந்து ஐம்புலன் வழியிற் பாய்ந்து பவநெறியை முக்கியமாகத் தொடர்ந்து தீவினையிற்படர்ந்துமயங்கி உண்ணல்-உடுத்தல்-புணர்தல்-துயிலல்இவைகளுடன் கள்ளுசாராயம் குடிக்கல்-கஞ்சாவினுடன் அபினி பலமாமிசங்களைப்புசித்துக்களித்தலாதியவைகளையே மோக்ஷமெனவும், அவைகளைத்தவிர வேறொரு முத்தியிருக்கின்றதென்பது அஞ்ஞானமென்றுநினைத்து; தவஞானமுள்ளவர்களாகிய பெரியோர்கள் செய்துவரும் ஞான காரியங்களைப் பார்த்து ஏளனம் செய்பவர்களாகியுந் தங்களைத்தாங்களே புகழ்ந்து பேசிக்கொள்பவர்களாயுங் கடைசியாயெமதண்டனைக்கு ஆளாகும் பிரஷ்டர்களுமாகிய அஞ்ஞானிகளையுறவு செய்யாம விருக்கும்படிச்செய்து பெரியவர்களுடைய சாவகாசம் பெற்று வாழும்படிக்கு அருள்செய்யுமையா அந்தகாசுரனை அதஞ்செய்த சூராதிசூரனே! பெருமையாகியசாஸ்திரங்களில் அடங்கினவனாகியும், அடங்காதவனாகியும், ஆத்மகோடிகள்தோறும் நிலைத்தவனும், நிலையாதவனும், ஓரிடத்துந் தட்டாதவனும், தன்னைத் தானறிந்த தலைவருக்குத் தானறியுந் தலைவனும், ஆணவப்பேய் கொண் டலைவார்க்குக் காணக்கிடையாத அரும் பொருளாயும், நிர்மல நிரந்தர வஸ்துவாகியுமுள்ள தேவரீர் மகத்துவத்தையும், திருநாமத்தையும், திவ்ய திருவுருவத்தையும் அடியேன் எடுத்துப் பேசி ஏத்திவணங்கி இறைஞ்சும்படிக்கு அநுக்கிரகஞ் செய்யுமையா ஏழைபங்காளனாகிய நடேசமூர்த்தியே! இவ்வாறு முனிவர் குழாங்களிலொருவர் தோத்திரஞ் செய்தனர். பிறகு சித்தர்களிலொருவர் தோத்திரஞ் செய்வதாயினர்.

# ஆத்மபோதப்பிரசங்காமிர்தம்.

## ௩-வது சித்தர்களிலொருவர் செய்யுந் தோத்திரம்.



*சங்கரா சிவசங்கரா சிவசங்கரா*
*ஓம் ஹரஹர ஹரஹர சங்கரா*
*சங்கரனே சிவனே பரனே பராபரனே!*

### சூதசங்கிதை.

*காரண மூலகிற் காகிக் காரணங் கடந்த தாகி*
*யாரண முடிக்கு மெட்டா வானந்த ரூப மாகி*
*நாரணன் பிரமன் றேடி நணுகொணுப் பொருளு மாகிப்*
*பூரண மாகி நிற்கும் புண்ணிய புரண போற்றி.*

### தேவாரம்.

*கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்*
*விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை*
*யரவாடச் சடைதாழ வங்கையி னனலேந்தி*
*யிரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே.*

### இதுவுமது.

*பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து*
*மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே*
*மன்னே மாமணியே மழ பாடியுண் மாணிக்கமே*
*யன்னே யுன்னையல்லா லினி யாரை நினைக்கேனே.*

### தாயுமானவர்.

*வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடா*
*வந்தெனை யீர்த்துவெங் காமத்*
*தீயிலே வெதுப்பி யுயிரொடுந் தின்னச*
*சிந்தைநைந் துருகிமெய்ம் மறந்து*
*தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்*
*றமியனுங் கருணையா மன்றுள்*
*நாய்கமாகி யொளிவிடு மணியே*
*நாதனே ஞான வாருதியே.*

## கூர்மபுராணம்.

அணுவாயவ் வணுவுக்கு மணுவாயிருந்தி யகிலங்கண் மூடியொளிருந்
தணியாத வண்ட வுருவா யிருந்தி தருபஞ்ச பூத மதிவான்
மணியா மருக்க னுயர்சோம னாதி வடிவா யிருந்தி மறையுங்
கணியா திருந்தி நினைப்பார் கணிப்பார் கலைகண்ண தாய பெரியோர்.

## சோணசைலமாலை.

வந்துமா மறலி யெனதுயி ருண்பான் மயிலையுஞ் சிரவினிற்கின்றான், முந்திநீ யெனையா னந்தவா ரிதியின் மூழ்குற விடுத்தருள் புரியாய், நந்துளான் மலையே யென்றுசா திப்ப நனைமலர் வேங்கையுமசோகுஞ், சந்துமென் முளைப்பச் செய்துகொள் சோண சைலனே கைலைநா யகனே.

## கோயிற்புராணம்.

ஆரணங்கண் முடிந்தபதத் தானந்த வொளியுலகிற்
காரணங்கற் பனைகடந்த கருணைதிரு வுருவாகிப்
பேரணங்கி னுடனாடும் பெரும்பற்றப் புலியூர்சேர்
சிரணங்கு பணிமாடத் திருச்சிற்றம் பலம்போற்றி.

## வேறுகவி.

சங்க பாணியன் தாமரை நான்முகன்
கொங்கு லாந்தருக் கோவிந்தி ரன்முதல்
பொங்கு தேவர்கள் புண்ணிய மாதவர்
தங்கிப் போற்றுறுந் தாணுவென் றெய்வமே.

## (வள்ளலார் சாத்திரம்.)

ஒன்றென்றும் பலவென்று முபயமென்று முருவென்று மருவென்று முறைவதென்று, நன்றென்றுந் தீதென்று நானேயென்று ஞானமென்று ஞேயமென்று ஞாதாவென்று, மன்றென்று மாமென்

றுஞ் சமயப்பேய்க ளறைகின்ற பிணக்குவழி யனைத்து நீத்துக், குன் றலிலா வானந்தக் குரவநின்னைக் குபபிட்டே னென்பிறவி பின் பிட்டேனே.

இதுவுமது.

அப்பிர மேய போற்றி யாருயிர்த் துணைவ போற்றி
யொப்பிலா வொருவ போற்றி யுணர்பவர்க் கணிய போற்றி
நட்பய வில்லோய் போற்றி நாதநா தாந்த போற்றி
சுப்பிர மணியே போற்றி சுயம்பிர காசா போற்றி.

வேத வேதாந்தமான உபநிடத முதலாகிய அநேககலைகளை நன்காராய்ந் துணர்ந்து ஐம்பொறிச் சேட்டையு மடக்கி, இயமம்-நியமம் - ஆசனம் - பிராணாயாமம் - பிரத்தியாகாரம்-தாரணை - தியானம்-சமாதி - இவ்வட்டாங்க யோகத்தினுடைய ஆசனம் - மந்திரம்-இயற்கை-பேதாபேதம் ஆகிய இவைகளைச் சாதகம்செய்து விளைந்த சுவானுபவாதீதத்தில் திளைத்துப் பகிர்முக விளைவில் உலகத்தவரைப் போல வாழினும் அந்தர்முக நோக்கிலேயே காலத்தினைக் கழித்து வரும் மகான்களுக்கு ஞான பட்டாபிஷேகஞ்செய்து தன் திருவடியில் சேர்க்குமையனே ! மெய்யடியார்களின் அஞ்ஞான இருளைப்போக்கிச் சூரியனைப்போல உனதுஞானமென்னுஞ் சோதியைப் பிரகாசிக்கச் செய்யும் ஐயனே ! அடியேன் கடைத்தேறும் பொருட்டு எனக்கு மப்படியே செய்யுமய்யா ஆனந்த திருத்தமிடு மகாதேவராகிய நடேசவள்ளலே ! நானென்பதும் நசித்துத் தானென்பதுந் தவிர்ந்து வண்டியுருளையைப் போல கீழது மேலதாயச் சுழன்றுகொண் டிருக்கப்பட்ட செனன மரண மென்னும் வியாதியானது என்னைவிட்டு நீங்கும்படி அநுக்கிரகம் செய்மையா சாம்பவ மூர்த்தியாகிய பசுபதியே! உன்னைப் போதுமான வரையில் போற்றி ஏத்தி வாழ்த்தித் தோத்திரஞ் செய்யத் தெரியாத பாமரனென்று என்னைக் கைசோர விடடுவிடாதேயு மையா! மார்ச்சால நியாயமாகத் தேவரீரே வலியவந்து அடியேனை யாட்கொள்ள வேண்டு மண்ணலே! சிவபிரானே! சர்வஜீவ தயாபர மூர்த்தியே! சத்துச்சித் தானந்த தற்பரானந்த சாம்ப சிவமாகிய பரமே ! பராபரப் பொருளே! தீனதயாபர மூர்த்தியே! அற்புத குணசீலராகிய பரஞ்சுடரே!

அநாதியாய், சாஸ்வத சுயம்புவாய், பிரணவப் பொருளாய்,
வேதாகமப் பொருளாய், சுசாதிக விசாதிக சுகதபேத மற்று
நான்கு மகா வாக்கியங்களுக்கு முடிவாய் விளங்கும் ஏகமேவாத்து
விதப் பிரமமாய்,ஞானபரி பூரணமாய் நிறைந்திருக்கும் வஸ்துவாய்,
பஞ்ச கோசாதி முப்பாழுங்கடந்து மேல்விஞ்சும் பொருளாய் விளங்
கும் வஸ்துவாகியுமுள்ள நடேசப் பெருமானே!

சத்துச்சித் தாநந்த நித்திய பூரண குணாகார பரம்பொருளாயும்,
சுமங்களநிராலம்ப சுயம்ப்ரகாச பிரபலைகோதய பரம்பொருளாயும்,
பிரணவாதீதமாயும், பிரம்மானந்த ஸ்வரூபமாயும், பிரம்மாதி ஸ்தம்ப
பரியந்தம் உயிர்க்குயிராகியும்,அதனை யாக்கி யளித்துத் துடைத்தற்
கேதுவாகியும், நிலைபெற்ற பரிபூரணமாகியு மிராநின்ற திரிநேத்திரங்
களையுடைய சிவபெருமானே! சராசரப் பிரபஞ்சங்களுக்குக் காரண
மாகிய சதாசிவமாதி சர்வாதாரமாயுஞ் சர்வவியாபகமாயுஞ் சர்வ
காரணமாயுஞ் சர்வாத் மகமாயுமிருக்கின்ற அம்பலத்தாடு மய்ய
னே! மனது ஸ்வாதீன மடைந்தால் உன் திருவடியையடைய மார்க்க
முண்டாகு மென்பதை ஞானநூல்களால் அடியேன் தெரிந்து
கொண்டவனா யிருப்பதால் சார்வதாய் ஊஞ்சலாடுவதுபோல் அசை
யுமனத்தை நோக்கி, ஏ மனமே! நீ அறிவினிடமாய்ச் சென்று என்
ஆண்டவனது திருவடிக்கு அன்பு செலுத்தி வாவென்று சொன்
னால் அந்தவார்த்தையைக் கேட்டவுடன் அம்மனமானது தென்னா
ராமன் வளர்த்த பூனையானது பாலைக்கண்டால் ஓட்டம் பிடித்தது
போல, அனேக வாண்டுகளாகப் பழகியுள்ள பழக்கத்தால் எனது
கட்டளையைச் சிறிதுங் கவனியாது அது எள்ளளவுந் தீரவிசாரி
யாது விடயத்தைவிரும்பி அதன்பின் ஓட்டம் பிடிக்கின்ற படியால்
கொடும்பாவியாகிப் போகங்களை விரும்பும் அடியேன் உன்திரு
வடியை எப்படி அடைகுவேன்.

அடருஞ் சத்திய ஞானானந்த சொரூபமாய் அடியார்களு
டைய தீவினைச்சமுசாரத் தொடர்பை நீக்கப்பண்ணும் பரமசிவமே!
நிருமலமாய் நித்தியமாய் நிரஞ்சனமாய் நிகரிலதா யருவமுமா யரு
வுருவமுமா யொளிருஞ் சர்வகாரணமான பரம்பொருளுமாகிப் பரம

ளுகி ஞானதாண்டவமாடும் பன்னக பூடணனுமாகிய தில்லைநாய கனே! தூய சச்சிதானந்த சொரூப பரமசிவனே! மெய்ஞ்ஞானிக ளுக்குச் சம்பூரண சச்சிதானந்த நற்சொரூப பிரகாசமாய் விளங்கும் நித்தியகல்யாண சுந்தர நாயகனே! உயிர்க்குணமாகிய காமாதிகளைய டக்கிய அடியார்களினுள்ளத்திற் குடிகொள்ளு மையனே! கோதி லாத குணப்பெரியோனே! பரதத்துவமாய்த் தத்துவங்களெவையுங் கடந்த வதீதமுமாய், வரமுற்றிடு சிற்சத்தியுமாய், மருவு சடசத்தி யுமாய், உறவுற்றிடும் சத்திக டம்பேதங்களுமா யொளிர்கின்ற பரம் பொருளாகிய தாண்டவ ராயனே! சந்திரசேகரனும் நீலகண்ட னுமு மொளிர்தரும் அர்த்தநாரீசரான அம்பலவாணனே!

நித்திய ஞானானந்த நிர்மலனே! மூவாமுதலே! கோவாமணியே! மூத்தே! அமுதகுணக்குன்றே! சுடருஞானவானந்தசொரூபனே! மலரி னுண்டாகுஞ்செழுந்தேனே! மாறாவின்பப்பெருவாழ்வே! அவ்வவ்வம யங்களி லடியார்கட்கு அனுக்கிரகமாகக் காட்சியருளும் பரனே! ஒருசமயம் பாதியாய் மற்றொருசமயம் முற்றுமாய்ச் சகளீகரித்து நிற் கும்பரமசிவமே! சுருதியந்தமு மெட்டாத சுடரொளியாகி நிற்கும் பரமமே! பரமானந்தமாகிய பரஞ்சுடரே! இலக்கணவிலக்கியங்களிவை யுடன் வாசக வாச்சியங்களின் விதிப்படி உன்புகழை விரித்துரைக் கத் தெரியாது தீத்தொழில்செய்யும் அற்ப வறிவையுடைய அடி யேன் உனது திருவருளைப் பெறும்படிப போற்றுகின்ற எனதுவாக் கிய மாலையும் உனக்கு ஒரு தோத்திரமாகுமோ? ஓ மஹாதேவனே! ஓம் பரப்பிரமமே! அநாதி முத்த சித்த அரும்பெரும பொருளே! முத்தியாகி விளங்கிடு மனுதி முழுமுதல்வனே! சுத்தமெய்ஞ் ஞானு னந்த சுயம்பிரகாச சொரூபனே! படிந்து நினைப்பணிபவர்கள் பவந் தோறுஞ் செய்வினை யாவுங் கடிந்து நடிக்கும் பாதத்துவத்தை யுடைய ஆண்டவனுகிய அய்யனே! மன்னுசிற் றம்பலத்து மாணிக்கக் கூத்தனே! எத்திசையும் புகழும் தில்லைக்கூத்தனே! புனிதருளம் புகு ஞானப் பூங்கோதை நாயகனே! அடியார்களை எதிர்த்துப்போராடு கின்ற பகைவர்களாகிய வினைகளையு மாயாமலங்களையுங் கெடுத் துப் பிறவியை ஒழித்தருளுகின்ற தில்லை நாயகனே! அகண்ட பரி பூரணமான பிரமமும், சப்தகோடி மகாமந்திரங்களும், அம்மந்திரங்க

ளிற்குத் தலைமையாகிய பஞ்சாக்ஷர சொரூபமுமாகிய சிவபிரானே! மானுக்குப் பசியெடுத்தால் வைக்கோலைத் தின்னாததுபோலவும், புலிக்குப் பசியெடுத்தால் தேரையைத் தின்னாததுபோலவும், அடியேனுக்குப் பசியெடுத்தால் உணவாதி போக விஷயங்களைப் பொசியாமல் உன் திருநாமமாகிய பஞ்சாக்ஷர உச்சரிப்பென்னும் உணவைப் பொசிக்கும்படி அருள்செய்யுமையா என்னாண்டவனே! அடியேன் அநாதி கேவலத்தினி லழுந்தி அஞ்ஞானியா யிருந்து பிறவியாகிய சிறைச்சாலையில் அகப்பட்டு ஆசையாகிய பசாசங்கள்பிடித்துக் கொடிய பாவங்களைச் செய்து பரணாந்தத்தில் எமதூதர்கள் சூலாயுத முதலானவைகளால் குத்தித் துன்பப் படுத்துவதற்கு ஆளாகும்படி விடாமல் காத்து ரக்ஷித்தருளுமையா உமாபதியாகிய நடேசபெருமானே! பயக்கம் பொருந்திய ஈஷணாத்திரய மென்னும் பெரிய பாசமாகிய வலையை வளைத்துச் சுரோத்திராதி பஞ்சேந்திரியங்களாகிய வெறிகொண்ட நாயகளையேவிச் சத்தாதி விஷயங்களாகிய வேட்டையாடிக்கொண்டு அஞ்ஞான மாகிய இருண்மோக வெளியிலிருந்து கூத்தாடிக் கொண்டிருப்பவர்களானாலும் உன் திருப்பெயரை ஓர்முறையாவது அபுத்தி பூர்வமாகவேனுஞ் சொல்வார்களே யாகில அவர்களைத் தீவினையினின்று நீங்கச் செய்கின்றவையனே! எண்பத்துநான் கிலக்கம் யோனி தோறும் புகும் புண்பொதிந்த காமாதிகளை நீத்து தேகமே நானென்னு மபிமானத்தைத் தொலைத்துக் காணவாதனையைக் கடந்து திருவருட் சொரூபமாய் விளங்கும் உன்னுடைத் திருவடியாகிய ஞானசெல்வத்தை அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்யுமையா தில்லை நாயகனே! அனந்த கல்யாண குண சச்சிதானந்த பரம்பொருளே! அடியேனுக்கு சாக்கிரமுஞ் சொப்பனமுந் தணவாச் சுழுத்தியையும் போக்கித் துரியமாய் விளக்குவிக்குமையனே! அணுவுக் கணுவா யகண்டமாய் நின்றிலங்குந் தெய்வமே! சீர்கொண்ட வடியார்களுடைய சிந்தையெனும் கயிலாயத்தில் கால்கொண் டிருந்தாடுங் கருணாகரனே! எங்குஞ் சிவமயமாய் எங்குஞ் சுகவடிவாய் எங்குஞ் சிவலோகத் தெல்லையாய் விளங்குஞ் சிவபிரானே! தற்பரமாய் சிற்கனமாய் தத்துவாதீதமாய் சிற்பரமாய் ஞானச்செழுஞ்சுடராய் விளங்கும் பரமே! அறிவுக்கறிவா யகண்டிதமா யெங்குஞ் செறியும் பரமசிவமாய் விளங்

கும் பராபர வஸ்துவே! நிராமய நிமல நித்தியானந்த பராபரப் பிரமமாகிய நற்சபையி லாடுகின்ற நடேசப் பெருமானே! சர்வ பரிபூரணராய், சர்வஞான காரணராய், சர்வலோக நாயகராய், சர்வசீவ தயாபரராய், சர்வகாரிய காரணராய், சர்வதேவ சிகாமணியாய் விளங்குமையனே!

எங்குஞ் சமாசநிலைச் சிவமயமாய், எங்குமாம் பதிறண்டமடங்கலு மொருநிறைவா பறிவானந்த பிரமமான சுத்த நிர்க்குண சுகவாரி யானந்தமாய் விளங்கும் பிரமமாகிய நடேசப் பெருமானே! எங்கு மண்டபிண்ட சராசராத்ம மேலா மகண்ட அறிவானந்த பதியாகிய சிவபிரானே! எதிரில்லாமல் சகலமுந் தன்மயமாக விளங்கும் பிரணவ சொரூபமாகிய சிவபிரானே! அடியார்களுடைய சஞ்சித வினைகளழியவும், மும்மலமாகிய இருள் நீங்கவும், ஞானசூரியன் உள்ளத்தி லுதிக்கவும், பஞ்சேந்திரியங்களும் அதன் விஷயங்களுங்கெடவுஞ் செய்து என்று மழிதலிலாத பிரம்மானந்தக்கடலி லழுக்கச்செய்யுஞ் சிவபெருமானே! ஐயனே! உன்திருவருள் நோக்கத்தால் உன் பாதாம்புயத்தை எனது முடியின்கண் வைத்து நான் வாழ்வையடையும்படி செய்யுமையா தேவதேவனே! பொன்னம்பலச் செல்வனே! எம்பெரியோனே! சர்வாங்க ரத்நாபரண பூஷண னாகிய சபாபதியே! கோதிலாத குணப்பெரியோனே! பதியே! எம்பரனே! பராபரனே! ஞானநாதனே! என்கண்ணே! என்கண்மணியே! மாணிக்க மணியே! கோமேதக மணியே, வைடூரிய மணியே! பவள மணியே! மரகத மணியே! புட்பராக மணியே! வைர மணியே! நீலமணியே! சோதியுருவனே! ஞான சபாபதியே! பூங்கமலத் தயனொடு மாலறியாத பெரியானே! சுடலைப் பொடி பூசிய அண்ணலே! தோடுடைய செவியனே! பகவானே! சாமவேதப் பிரியனே! மதுரைமாநகராண்ட மீனாக்ஷியின் மணவாளனே! நந்திவாகனனே! அழலாடு மையனே! ஏகாம்பரனே! அற்புதனே! சொற்பதங்கடந்த சோதியனே! மாண்டார் சிரங்களை மாலையாக வணிந்தவனே!

மேகத்தைப்போன்ற கருமையாகிய கண்டத்தை யுடையோனே! அஷ்ட புஜங்களை வாய்ந்தோனே! மூவாமுதல்வனே! பார்வதி

கொழுநனே! நீக்கமி லகண்டாகார பரிபூரணமாய்ப் பொங்கித் ததும்பித் தானே தானாய் நிறைந்தோங்கி நிற்கும் பரமே! எவ்வுயிர்க்குந் தாயாயிருந் தின்பவமுதளிக்கு மையனே! மறைமுடிவதனில் விளங்கிடுமொளியே! நானாவாகத் தோன்றியிடு நாமரூபமிவையனைத்துந் தானாக விளங்கிடுந் தற்பரனே! சச்சிதானந்த தற்பரசொரூபமாய் விளங்குஞ் செல்வமே! சேதனனாகிய எனக்கு உன்னிடத்தில் சதா உண்மையான பக்தி, குருபக்தி, நித்தியாநித்திய வஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிசட்க சம்பத்து முதலியவைகளும்; முத்திவிருப்பம், பிரம்மஞானம், யோகசாதனம், அடக்கம், நற்கிருத்தியம், பரோபகாரம், ஜனனமரண மொழிக்கும் விருத்தி, சர்வபாப காமநிவர்த்தி, மனோநாசம், நிராசை, கிரியாபூசை, யோகபூசை, ஞானபூசை இவையாதிய லக்ஷணங்களு மில்லாவிட்டாலும் அவைகள் உண்டாகும்படி அநுக்கிரகஞ்செய்து ஞான செல்வத்தைக் கொடுத்து ஆண்டருளுமையா பூலோக கயிலாசமென்று பெரியோர்யாரும் புகழ்ந்திடுந் தில்லைச்சிற்றம்பலத்தில் அடியாரின் பொருட்டு ஆனந்தக்கூத்தாடும் புனிதனாகிய நடேசப்பெருமானே! பூதபதியான சிவபெருமானே! நாதாந்தநாட்டுக்கு நாயகனே! பரிபூரண பரமபுருஷனாகியும், மான்மழுவேந்திய கரத்தனாகியும், மதிபுனல்தரித்தசடையனாகியும், ஆனந்தவடிவனாகியுங் கூத்தாடல்செய்தருளுங் காலகண்டனாகிய நடேசனே! பல்லாயிரங் கோடி பானுவுதித்தாற்போற் கலலாலின் கீழிருந்த கண்ணுதலான சிவபிரானே! இந்திரியங்களாகிற பாம்புகளைக் கொல்லும் கருடனாகிய நீலகண்டனே! தில்லைவாணனாகிய நடேசனே! நித்தநிராகரமாகிய நின்மலனே! என்னையனே! தில்லைப்பதிநாட்டானே! மறனாகிய அறவனே! வெண்புரிநூன்மார்பனே! குணப்பெரியோனே! சர்வமங்கள தேஜோமயமாகிய சிவபெருமானே! சிதாகாச ஸ்வரூபமாயும், அகண்டாகார ஸ்வரூபமாயும், நிரந்தரமாயும், நிராகரமாகியும், நித்தியானந்தஸ்வரூபமாயும், பரிபூரணானந்த ஸ்வரூபமாயும், சத்யஸ்வரூபமாயும், ஞானஸ்வரூபமாயும், ஆனந்தஸ்வரூபமாயும், அமிர்தஸ்வரூபமாயும், சர்வஸ்வரூபமாயும், பிரம்ஹானந்த ஸ்வரூபமாயும், ஆதியந்த ரகிதானந்த ஸ்வரூபமாயும் விளங்கும் ஐயனே! கோத்து நெளியும் புழுவூர்ந்தை நரம்புகளும், நாற்றமலங்களும் நிறைந்து

மூத்திர நீர் சந்ததம் சுரந்துகொண்டிருக்கும் அநாசார அசுத்த வுடலைப் பூதபவுதிகாத்மகமாகத் தோற்றப்படுகிற சகத்தில் இப்போது நான் சுமந்துகொண்டு திரிவதுபோல இனி அப்படிக்கொத்த வுடலை அடியே னெடாம லிருக்கும்படியாயும், ஒருவேளை அப்படியாக ஜனித்தபோதிலுந் திருச்சிற்றம்பலத்துளாடும் உன்செங்கமலப் பொற்பாதங்களை வணங்கித் துதித்து வாழும்படி யனுக்கிரகஞ் செய்யுமையா பன்னகாபரணனாகிய பரமசிவனே! ஓம் பிரம்மஞான சொரூபதாரியாகிய நடேசப்பெருமானே! தத்துவாதீதமாய், தனிப் பொருளாய், அண்டபிண்ட பிரமாண்டங்களும் அதனுள்ள யாவும் தானாய், பிரம்மஞானமயமாய், எங்கும் வியாபித்துநிற்கும் சர்வசாக்ஷியாய், யாவையும் பார்க்கின்ற சர்வேஸ்வரனே! ஸ்பரிசிக்கத் தகாததாயும், மனோதிருஷ்டியினால் காணக்கூடாத தாயும், அஞ்ஞானத்தால் அறியக்கூடாததாயும், மெய்ஞ்ஞானிகளுக்குக் காணப்பட்டதாயும், சைதன்னியவடிவான மங்களமாகிய நிரதிசயானந்த சந்தோதயமான ஞான சொரூபமாகியும் விளங்கும் நடேசப்பெருமானே! சர்வேசனே! ஒருவனே! தனக்குமேல் பெரியவரொருவருமில்லாத சிவபிரானே! அளவிறந்த பெரியோனே! ஆத்மஞானத்துக்குச் சத்துருவாயிருக்கும் அஞ்ஞானப்பேயை ஓட்டிவைக்கும் பூசாரியாயிருப்பவனே! என்னை யாண்டருளுமையா! என்றிவ்வாறு சித்தர்களி லொருவர் தோத்திரஞ்செய்தனர். பிறகு யோகிகளிலொருவர் தோத்திரஞ்செய்த விதமாவது.

---

## ௪-வது, யோகிகளிலொருவர்செய்யுந்தோத்திரம்.



சங்கர சங்கர மாதேவா!
மங்கையோர் பங்குடை மாதேவா!
திங்களைச் சூடிய தேவதேவா!

### திருவிசைப்பா.

தனதநற்றோழா சங்கராசூல பாணியேதாணுவே சிவனே, கனகநற் றூணே கற்பகக்கொழுந்தே கண்கள்மூன் றுடையதோர் கரும்பே, அனகனே குமர விநாயகசனக வம்பலத்தமரர்சே கரனே, யுனகழலிணையென் னெஞ்சினுள்ளினிதாய்த் தொண்டனே னுகருமா றுகரே.

## பட்டினத்தடிகள்.

பூதமுங் கணமும் பொறிகளெம் புலனும் பொருந்திய குணங்களோர் மூன்று, நாதமுங் கடந்த வெளியிலே நீயு நானுமாய் நிற்கும் வாறுளதோ, வாதமுஞ் சமய பேதமுங் கடந்த மனோலய வின்பசாகரனே,யேதுமொன் றறியேன் யாதுநின் செயலே யிறைவனே யேகநாயகனே.

## திருவிசைப்பா.

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே யுணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே, தெளிவளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே சித்தத்துட் டித்திக்குந் தேனே, அளிவள ருள்ளத் தானந்தக் கனியே யம்பல மாடரங் காக, வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத் தொண்டனேன் விளம்புமா விளம்பே.

## (சிவப்பிரகாசம்.)

ஓங்கொளியா யருண்ஞான மூர்த்தி யாகி யுலகமெலா மளித்தருளு முமையம்மை காணத்,தேங்கமழு மலரிதழித் திங்கள் கங்கைத் திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து, நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்கமன்றுள் நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ் செய்யும், பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும் புந்தியினு முறவணங்கிப் போற்றல் செய்வாம்.

## (திருப்பல்லாண்டு.)

பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கட லீந்தபிரான், மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன் மன்னிய தில்லைதன்னுள், ஆலிக்கு மந்தணர் வாழ்கின்ற சிற்றம் பலமே யிடமாகப், பாலு மமுதமு மொத்துநின் றானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## இதுவுமது.

சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்,போலும் பொடியணி மார்பினி லங்குமென்றே புண்ணியர் போற்றிசைப்ப, மாலு மயனு மறியா நெறிதந்தென் மனத்தகத்தே, பாலு மமுதமு மொத்துநின் றானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

காசிகாண்டம்.

ஐம்பெரும் பூதமாகி யவற்றுறு குணங்க ளாகி
ஐம்பொறி யாகியந்தக் கரணமா யறிவு மாகி
ஐம்பெருங் கருமமாகி யனைத்திலுந் தோய்ந்து தோயா
ஐம்பெருங் கடவு ளாகு மாதிநின் னடிகள் போற்றி.

திருவாசகம்.

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே.

(சூதசங்கிதை.)

பூமலிமென் கங்கையணி யொடுபணியும் பிறையொடுதண் புனலுந் தோளி, லேமமுடி யினில்வடிவொற் றுமைநோக்கி யியைய நாட விமையோர் போற்றத், தூமறைகள் வாழ்த்தெடுப்பத் துடி முதல வைந்திடத்தைத் தொழிலுந் தோன்றக், காமருபொன் மன்றிலன வரதநட நவில்வானைக் கருத்துள் வைப்பாம்.

தரைபுனலனல்கா லம்பரம் பரிதி தண்சுடரோடுபல் லுயிரென், றுரைதரு மெண்மூர்த் தங்கொடு நின்று யுனக்குவே றுயதொன் றில்லாய், புரையறு விசுவா தீதனே நிமல பூரண புராணனே தரும, நரைவிடை யோனென் னையுமினி யாரு நம்பனே நின்னடி போற்றி.

உன்னைச் சதாகாலமும் மெய்யன்போடு உள்ளத்தில் தியானிப்பவர்களுடைய பாபங்களை நிவர்த்திசெய்து சித்தசுத்தியை யுண்டாக்கி ஞானநிஷ்டைக்கு ஏதுவாயின சாதன கருமங்களைக் கூட்டுவித்து அச்சாதனங்களிற் றேர்ந்த பக்குவா பக்குவர்கட்குத் தக்கபடி நற்கதியடையும்படி அனுக்கிரகம் செய்கின்ற ஐயனே! சர்வேசுவரனாகவும் சர்வஞ்ஞனாகவும் தன்னிடத்தி லில்லாதபொருள் ஒன்றுமில்லாதவனாயுமுள்ள நடேசப்பெருமானே! அநாதிமுத்தனாகிய முதல்வனே! உன்னையறிவதற்குச் சாதன

மொன்றறியாத அடியேன் ஊன்பொதிந்தவுடலைச் சுமப்பதற்காகவா
பிறந்தேன்? ஆணவத்தான்மூடனாய், மாயையாற்கிஞ்சிக்ஞனாய், பூ
ணும்வினையாற்புருடனுமாகிய அடியேனை அஞ்ஞானியென்று நீர்கை
விடாதேயும். மெய்யடியார்கள் அஞ்சலியத்தர்களாயிருந்துகொண்டு
கண்ணீரோடும்படி அனேகவிதமாகத் தோத்திரஞ்செய்திடும் நடே
சனே! ஐயனே! நான் இந்திரியங்களைவென்று சப்தாதி விஷயங்களை
நிவர்த்தித்து மகாபுருஷார்த்தரூபமான மோட்சத்தை அடைய
முயற்சி செய்யப்போனால் என்களமனம் சங்கற்பவடிவமான அஞ்
ஞான மார்க்கத்தையே அனுசரிக்கின்றது அதற்குநான்புத்திசொன்
னாலும் கேளேனென்கின்றது. அதின்துற்புத்தியையே காட்டுகின்
றது.நாய்க்குப்பொற்கலத்திற் சோறிட்டாலும் பிறர் எச்சிற் சோற்
றையே இச்சிக்குமாபோலும், கோழிக்கிரை போட்டாலும் அது
குப்பையைச் சீப்பது போலும் மனமானது காமாதி விஷயங்களை
யே தாவிக்கொண்டிருப்பதால் உனது தாமரைமலர்போன்ற இரண்டு
திருவடிகளைத் துதித்து வினையையகற்றி ஞானவாழ்வை யெப்படி
யடையப்போகிறேனையனே! பார்த்த திசையெல்லாம் பரிபூரண
சொரூபமாய்விளங்குமையனே! அனர்த்த சடதுக்கரூபங்களாகிய
அஞ்ஞானத்திற்கு மூலமான தேகேந்திரிய பிராண புத்தியே நா
னென்றுகொண்டிருக்கின்ற ஆசையையுடைய லோககாமியாகிய அ
டியேன் எப்படி உன்திருவடியை அடைகுவேன். தனதானியாதிகளி
டத்திற் பிரியமாயிருக்கின்ற வஞ்ஞானமான மோகாந்தகாரத்தைநா
னெப்படி போக்குவேன்.சுகதுக்க போக கர்மபந்த சனனமரணங்களை
எப்படிநிரசனம்பண்ணமாட்டுவேன். அண்டமெலாந்தானாயறிவுவடி
வாகக் காணப்படும் பரானந்தசிவமே! சிவஞானம்பெற்ற பெரியோர்
சரித்திரத்தைக் குற்றமென நாடுங் கொடியோர்கள் ரவுரவாதி நரகத்
தில்கிடந்து துன்பப்படும்படியாயும் பின்பு கோசகாரப் புழுப்போற்
கோடானுகோடி சென்மமெடுத்து அவதிப்படும்படியாயுஞ் செய்விப்
பவனே! நித்தியநிராகார நின்மலானந்தமாகி, சுத்தபரிபூரண சொரூப
வத்துவிதமாய் விளங்கும்பரனே! ஒருகுணமு மில்லாதவனாய், ஒரு
கர்மமு மில்லாதவனாய் ஒரு விகாரமு மில்லாதவனாய், ஒருருவமு
மில்லாதவனாய் நித்திய முத்தனாகி விளங்குஞ் சிவபிரானே! தில்லையில்
அரியஆனந்தத் தாண்டவம் புரிந்தருளும் நடேசப்பெருமானே! அஞ்

ஞான மோகாந்தகாரமான சமுத்திரத் தலையி லகப்பட்டுக்கொண்டு தவிப்பவர்களை ஞானிகளாக்கி சிவாநந்தமாகிய மௌனாநந்தம் பொங்கித் ததும்பும் வாரியில் முழுகச்செய்யுமையனே! சக்கராயுத மேந்திய திருமாலும், அரியவேதங்களுக்குரிமையனை பிரமதேவனும் போற்றித்தொழும் சிவபிரானே! ஞான நாயகராகிய நடேசமூர்த்தியே! அஞ்செழுத் ததனி லமர்ந்தபரனே! மோகமாகிய மாயையை விளையாட்டாகவுடைய ஈசுவரனே!

சத்துடன்சித்தும் ஆனந்தமும் சமமும் ஸ்திரமும் சாக்ஷியும் ஏகமும நித்தியமும் பூரணமுமாகி விளங்கும் திரிமூர்த்தி ரூபமான நடேசப்பெருமானே! வேதமுடிவிலுள்ள மகாவாக்கியார்த்தமான ஞானானந்தமாய் விளங்குமபரமே! அத்துவிதம் அவிநாசம் உபமானரஹிதம அவாங்மனோ கோசரம மௌனாதீதம் அஸ்திபாதிப பிரிய லக்ஷணமாகிய விக்குணங்களையுடைய தில்லைநாயகனே! அண்டசராசர சமஸ்தபூத சகல ஆத்மகோடிகளுக்கும் பூதவிஷய இந்திரிய அந்தக்கரண ஜீவசாட்சிபரியந்தம் சகலஹேதுக்கும் அகில நிகில சகலாதாரங்களுக்கும் காரண காரிய அகாரியமா யிருக்கிற தெய்வமாகிய காந்திமதி மணவாளனே! நன்றுமாய்த் தீதுமாகி, இருளுமாய் நல்வெளியுமாகி, யுருவமா யருவமாகி விளங்குமையனே! ஆயிரம்பணாமுடியையுடைய ஆதிசேஷனாகிய பாம்பை மலர்மாலையாகத் தரித்த அம்பலவாணனே! சர்வலோககர்த்தராயும், சர்வஜீவதயாபரராயும், சர்வாந்தரியாமியராயும், கோடிசூரியப்பிரகாசராயும், சகலகேவல மிலாராயும், தத்துவாதீதராயும், தானேதானாய்ப் புகலவடங்காதவராயும், உணர்பவர்க்கரிதானவராயும, ஆறுகோடி மாயாசத்திகளுக்கு எஜமானராயும், முப்பாழ்க்கபாலாயமுடிந்தவிடத்தில் விளங்குஞ்சுத்தசிவமாயும், என்குருசாமியாராயும், அலையில்லா சமுத்திரமபோல் ஞானசொரூபராயும் விளங்கும் நீலகண்டத்தையுடைய நடேசப்பெருமானே! பூரணானந்தனே! காலகாலனே! சிவசிதம்பர நாதனே! உலகநாயகனே! அரகர மகேசனே! பிரமமகுரு வீசனே! மாவலிச்சக்கிரவர்த்திக்குச் சோதிசொரூபமாய்த் தரிசனங்கொடுத்தகைலாசபதியே! எல்லாவற்றிற்கும் ஆதியானவனே! எல்லாஞ்செய்ய வல்லவனே! அஹம் சப்த லக்ஷியார்த்தமான பிரம்மஸ்வரூபமாகிய சிவ

பிரானே! கருணாநிதியே! கனகசபாபதியே, நடனசபாபதியே! பரிபூர்ண ஞானசபாபதியே! பரத்துவம் பரவொளி பரமாத்விதமான பரமசிவனே! நித்தியப்பிரகாச சொரூபியாகிய சிவபெருமானே! நிரஞ்சனமாகியும், அனுமயமாகியும், ஆதியந்த மில்லாததாகியும், நிஷ்களமாகியும், நிராபாசமாகியும் விளங்காநின்றபரனே! என்பராபரனாகிய ஆண்டவனே! சர்வவியாபக நிராகுல கோலாகலனாகிய சபாபதியே!

தன்னை அனவரதமும் அனுசந்தானம் பண்ணிக்கொண்டிருக்கு மகான்களுக்குப் பிறப்பற்ற சிவசாயுச்சியத்தைக் கொடுக்கும் சிவபெருமானே! மதுபானங்கொண்டவனது நற்குணத்தை லாகிரி மாறுபடுத்தி அவனை மயக்குதல்போல் மாயா காரிய மாகிய கருவிக் கூட்டங்களின் சேட்டை என் ஞானகுணத்தை மாறுபடுத்தி மோக மயமான மாயா காரியத்தில் என்மனதைச் சாரவிட்டு என்னைப் பாதைபடுத்துவதால் அடியேன் என்னமாய் உன்திருவடியை வந்து அடையப்போகிறேனையனே! சேமநிதியே! தெய்வதருவே! ஞானக் கரும்பே! மெய்ஞ்ஞானானந்தக் கடலே யென்று போற்று மடியார்களைக் கைப்பிடித்தாளு மிறைவனே! திரிசூலதர திரியம்பக திரிலோக நாயகனும், அடியார்கள் வேண்டியவரங்களை யீண்டருளும் ஆண்டவனும் விளங்கும் சந்திரனைச்சூடிய சிவகாமிநேசனே! அண்டர்பணியுந் தில்லையாண்டவனே! திருநாமங்கள் ஆயிரமுள்ள பேரருளாளனே! அண்டர்போற்றிடுந் தில்லைநாயகனே! உமது மகிமையையும் புகழையும் நாரத தும்புருவாதியர் சுரவடிவாகிய வேதங்களோடிணைத்துப் போற்றுகின்ற மஹாதேவனாகிய உம்மை நாயினுங்கடையேன் எப்படிப் போற்றுவேன். ஆயினும் சிலமகான்கள் உம்மைப்போற்றிய கீர்த்தனங்களால் அடியேனும்போற்றுகிறேன்.

## கீர்த்தனைகள்.

இராகம் - ஆரபி - தாளம் - திரிபுடை.

பல்லவி.

சரணம் சரணம் ஸ்ரீபார்வதிபதே - சரணம் பரமதயாநிதே
சரணந்திரிபுர மெரிசெய்தற்பர - சரணம் முக்திபிர தாயக
ஹர:—ஸர்வலோகைக நாயகா சரணம் சரணம்.

அநுபல்லவி.

அருணைஞெடுசெசி யழ.லுமெறிசுட - ரணிசேர்திருமுக மண்டலா
கிரணமாலிகா பரானலங்கிர்த - கேம்செய்மரகத குண்டலா
என்றும் - தாழ்விலுயர் பரவிண்டலா - சரணம் சரணம்.

சரணங்கள்.

க. அன்றுவடகிழற் சென்றமுனிவரற்
கருமைநெறிசெரித் தாண்டவா
என்றுமடியார்க டென்றுவினைகெடுத்
தெழில்பெறுந்திலைத தாண்டவா
முரு - கெழுமிதழிமலர் பூண்டவா - சரணம் சரணம்.

உ. பூங்கணைதொடு மாங்கவனுடன்
பொன்றுவெஞ்சின மூர்த்தியே
ஈங்கென்விக்கையி தோங்குகல்லெறி
யின்பமாய்க்கொளுங் கீர்த்தியே
யான் - அன்பிலேனுமாள் கீர்த்தியே - சரணம் சரணம்.

ரு. குமரகுருபர முருக சரவண
குழகனைத்தரு நாதனே
அமரர் முனிவர ருரகரவுணரு
மரகராவெனும் வேதனே
முரா - ஹரியுமேதுதி பாதனே - சரணம் சரணம்.

ச. சித்தலயமுற வுத்தமவழி
செப்புமத்வைத நூலனே
நித்தமுன்பதம் பாடுமவர்க்கரு
ணித்யமங்கள சீலனே
அதி - ஸ்துத்தியரஞ்சித லோலனே—சரணம் சரணம்.

இராகம்-தோடி-தாளம்-சாப்பு.

பல்லவி.

ஆடியபாதத்தைக் காணுரே—பிறந்
தானந்தம் பூணுரே.

அநுபல்லவி.

நாடுங்கைப் பூரணை பூசத்திலே தில்லை
நாயகனார் நரு வாரத்திலே மன்றாள்—ஆடியபாத.

சரணங்கள்.

க. பாசமறுத்துடல் வாசிதொடுங்கி
பத்திபண்ணுங்காட்டில் பாபபுலிதாக்கி
யாசையுடனே யாருளைபெருக்கி
அன்பர்களிக்க சிலம்புகுலுக்கி-ஆடியபாத.

உ. கொட்டமடிச் சூர் புலன்செருமில்நீக்கி
கோடி காலனுமெய்ந பாழ்வினைபோக்கி
வெட்டவெளியிலே நெட்டுடத்தூக்கி
வேதமபணிந்திடத் தென்முகநோக்கி-ஆடியபாத.

ங. சேனுஞ்சடைப்புனல் பூமியில்சொட்ட
சேவித்தநாரதர் பாடியேகிட்ட
கோணங்கிழிந்தண்ட கோளமுமுட்ட
கோபாலகிருஷ்ணனு மந்தளங்கொட்ட-ஆடியபாத.

சாமிநாதா! உனக்கு நான் சரணஞ்செய்கிறேன். சின்மயசொரூப செழுஞ்சுடர்க் குன்றே! தில்லையம்பலத்தில் திருநடஞ் செய்வதை விட்டு மானிட வேடம்பூண்டு தேசிக வடிவங்கொண்டு எழுந்த பெரியோனாகிய சிவபெருமானே! ஏகம்பனே! என்னையாள்பவனே! முத்தனே! மூவா முதல்வனே! அறிவாகி யானந்தமயமா யென்று மழியாத பரமபொருளே! உனக்குச் சரணம். அடியேன் மெய்த்தொண்டர் செலுநெறியறியாது, உண்மையான பக்தியில்லாமல் சதுர்வேதங்க ளோதினும் என்ன பிரயோசனம். உண்மையான பக்தியில்லாமல் சிவபக்தனும்,சாஸ்திர பண்டிதனுகியும், ஓதுவானும், யோகியாயும், எதிசனுயு மிருப்பதாகச் சொல்லுவதினுல் என்ன பிரயோசனம். ஜீவாத்துமாவை அறியவொட்டாமல் மறைத்திருக்கும் அஞ்ஞானத்தைத் தொலைக்காமலும், பக்திக்குத் தகுந்த சாதனங்களைப், பற்றுமலும், முத்தியை யடைய வெத்த

ணப்படுகிறது எரிகிறநெருப்பில் நெய்யைவிட்டுத் தணிப்பதுபோலாமென்று சான்றோர் சொல்லுகிற படியால், உண்மையான பக்தியில்லாத அடியேன் உன்திருவடியை எப்படி அடையப்போகிறேன். சகலதீவினைகளையுண்டாக்கும் அஞ்ஞானம் நீங்காது அடியேனுக்கு மெய்ஞ்ஞானம் உண்டாகப்போகின்றதா?

கருணாநிதியாகிய கண்ணுதற்பரப்பிரமமே!கனகசபைநாதனே! சந்திரசேகரனே! புஜங்க பூஷணனே? பக்தவச்சலனே!காலநாசனே! நாகாபரண பூஷிதனே! வாமதேவனே! சதாசிவனே!மஹேசுவரனே! கங்காதரனே! திரிசூலபாணியனே! சர்வபசுபதியே! பரப்பிரகாசனே! திரிநேத்திரனே! பினாகபாணியனே! நிஷ்களங்கனே! பரமசாந்தப்பிரகாசனே!தேஜோரூபனே! வேதநுதித்திடுமையனே!பதஞ்சலிவியாக்கிரபாத ரிதயப்புகுந் தாண்டவனே! புலிப்பாலனையாண்ட கிருபாகரனே! பெருமானே! எக்காலத்து நிலைத்திருப்பவனே! மாதேவனே! மங்களாகரனே! தற்பரனே! தயாநிதியே! ஒளிவடிவாயுள்ள வுத்தமனே! அநாதிமல முத்தராய், நித்தியானந்தராய், சாந்தராய், சர்வதோமுகராய், சர்வஞ்ஞராய், சாவாநுக்கிரகராய், சர்வகர்த்தாவாய், சர்வவியாபகராய, அதிசூக்குமராய், சின்மாத்திரமூர்த்தியாய், அதிமகாநுய, அதிபரமாப்தபதியானவரான சிவபெருமானே ! சிவசங்கரனே! பரப்பிரம பாவஸ்துவாகிய சிவபிரானே! இரத்தினாபரண முதலியவற்றை யணியாது கிழானவரைப்போல பாம்பு முதலியவற்றை மேலே போட்டுச் சுமந்துகொண்டும், கொலைத் தொழிலாளர் போலக் கரங்களிலே யாவர்க்கும் அச்சம்விளைக்கும் சூலம் வாள் கோடரி அக்கினியாதி ஏந்திக்கொண் டிருக்கு மையனே!தற்போத வழியால் அறியப்படாத பரம்பொருளே!

ஆன்மாக்களை அநாதியிலேயே பந்தித்த பாசங்களைப் பரிகரித்துக் காக்கும் பரமனே!ஓங்கார சொரூபமான அநாதிமல முத்த பதியாகிய சிவபெருமானே! பிருதிவியாதி முப்பத்தாறு தத்துவங்களையுஞ் சோதித்து நியதிகளைந்து பஞ்சசுத்திகளைச் செய்து மெய்யடியார்களுக்குத் தன்னை உள்ளபடி அறிவிக்கும் பரமபதியாகிய ஐயனே! அநாதிமுத்த சித்துருவாகிய சிவபெருமானே! சேதநா சேத

னப் பிரபஞ்சங்கட் கெல்லாம் ஆதாரமாயிருக்கும் பராபர வஸ்து வே! சர்வசாட்சித்துவ பரமானந்த சுத்த பரப்பிரம சொரூபராய் விளங்கும் நடேசபெருமானே! வேதத்தின் முடிப்பொருளாம் வேதாதீதராய், வேதநாதராய், பாச ஞானத்தாற் காணப்படாதவராய் விளங்கு மையனே! திருவாலங்காட்டிலே முஞ்சிகேசர் கார்க்கோடகர் எனனும் இருடிகள் தரிசிக்க நிருத்தகோலங்கொண்டு காளியுடனேயாடி அவள் அகங்காரத்தை அடக்கிய ஊர்த்தகதாண்டவமூர்த்தியே! மெய்யடியார்களுக்குப் பிரமஞானத்தையும், ஈஸ்வரஞானத்தையும், சத்தியஞானத்தையும், ஆன்மஞானத்தையும் அறிவில் விளங்க உணர்த்திச சனனபந்த முதலானவற்றையும் நீக்கிப் பரமபதத்தையளித்த மையனே! கந்தர்ப்பகோடி சதசுந்தர திவ்விய விக்ரகமூர்த்தியே! தில்லைச் சிற்றம்பலவனே! பாபநாசனே! ஜனனமரண துக்கசேதனனே! கவுரி நிரந்தர விபூஷித வாமபாகனே! சந்திரசேகரனே! நீலகண்ட உமாபதியே! நின்மலாங்கரனே! திரிசூலபாணியனே! தேவாதிதேவனே! மஹாதேவனே! வாமதேவனே! சதாசிவனே! நித்தியனே! நித்திய சுத்த பரிபூரண சச்சிதானந்த சிவனே! ஜன்ம துக்க விநாசக கர்த்தனே! சஞ்சித பாபவிநாசனே! பரம பரமார்த்த சொரூபனே! கபாலமேந்து கையனே! என்புமாலாதரனே பாசாங்குச தரனே! பரமசிவனே! ஜன்ம கோரதுக்க நாசனே! சர்வ ஜீவ ரக்ஷகனே! நன்மையாகிய ஞானானந்த பூரிப்பினையுடைய சுத்தராகிய மகான்கள் புகழ்ந்து போற்றும் பராபரவஸ்துவான நடேசப் பெருமானே! மூலகாரணமான பிரணவஸ்வரூபியே! ஞான சஞ்சீவியே! ஆனந்த சாகரமே! திவ்வியகுண மேருவே! மணியே! ஒருபால் பச்சைமாணிக்க வல்லிபடர்ந்தமலையே! சித்தாந்தசெம்பொன்னம்பலவாணனே! அந்தரி சிவகாமசுந்தரி மணவாளனே! முத்திமுதலே! நன்மைமிகுந்த குருஸ்வாமியே! ஸர்வேஸ்வரனே! வேதமுடிவாகிய சுத்த பதார்த்தமே! அருவமு முருவமுமாகிய பொருளே! அத்துவித சுத்த சொற்பிரகாச தனிப்பரம் பொருளே! பந்தமின்றி வீடின்றி யெங்கும் விளங்கும் பரமே! பொய்யெல்லா மொன்றுப் பொருத்திவைத்த பொய்யுடலை மெய்யென்றுநம்பி அபார சம்சார சமுத்திரத்தின்மத்தியி லமிழ்ந்துகிடக்கும் கர்மபிணியனாகிய அடியேனைக் காத்தருளுமையனே! வஸ்திர அலங்கார ருத்திராக்ஷ கங்கண கடிசூத்ராதரனே!

அண்டமுமாய்ப்பிண்டமுமா யளவிலாத வாருயிர்க்கோருயிராயமர்ந்து விளங்கும் பரனே! இந்தப் பஞ்சபூத காரியமாகிய தேகம் நெடுநாளிராததால் அதனைச் சுத்த வாதனையாற் பக்குவப்படுத்தி தேகாந்தத்தில் அடியேன் உன்திருவடியைவந்து சேரும்படி அனுக்கிரகஞ்செய்யுமையா சிவபிரானே! பிரபஞ்சகர்த்தாவே! ஆனந்தப் பிரவாகம் பொருந்திய மஹாநதியே! ஆவியே! உயிருக்குயிராய் நின்றவனே! தம்பிரானே! எம்பிரானே! எமதிறைவனே! எவ்விடங்களைநோக்கினும் அவ்விடங்களி லதுவதுவாய் விளங்குமையனே! சச்சிதானந்த சொரூபனே!

ஆணவமல சத்தியை மாய்த்தருளிய சிவபெருமானே! கலைமதியைப்புனைந்த புலியூரானே! அண்டரண்டங்கடந்த ஆதியானசோதியனே! வேலனையீன்றவனே! கநகாம்பரதர கநகசடாதர கநகசுபாசுர கந்தர்ப்பகோடி சதசுந்தர திவ்விய பரப்பிரம சொரூபமாகிய நடேசப்பெருமானே! நந்திவாகனனே! அந்தி மேனியனே! தருமமால்விடையோனே! சமயாதீதப்பழம்பொருளே! வேதபாதுகையனே, சுகசொரூபமேயனைத்துமென்றகத்துதி துவிதபாவனையுடைய மெய்யடியார்களுக்கு நேசனாயிருப்பவனே! அளகாபுரிக் கிறைவனாகிய குபேரனது தோழனாயிருப்பவனே! அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகியும், எங்குநிறைந்துள்ள ஞானப்பிரகாசமாயுமிரா னின்ற ஆனந்தநடேசமூர்த்தியே! உலகெலாம்நிறைந்த வகோசர சுயப்பிரகாச பிரமமாய் விளங்குஞ் சிவனே! என்னைக்கைவிடாதேயும். கங்கையு மதியமுந்தரித்த சடைமுடியும், முக்கண்ணும், காதிற்குண்டலமும், மார்பிற் பணியும், தொங்கு பொன்வடமாதி யாபரணமும், செங்கையின் மழுவுடன் மானும், உடுக்கையும், பீதாம்பரமும், தண்டைச்சிலம்புங் கொண்ட புண்ணியனாகிய சிற்றம்பலத்தாடு நடேசப்பெருமானே!

தகதகத்தென தகதகத்தென தகதகத்தெனவும், கிரிகிட கிரிகிடவெனவும், தத்ததிங்கணத்தோம் தத்ததிங்கணத்தோமெனவும், திந்திமி திமிதிமி திந்திமி திமிதிமி யெனவும், தாகுசெம்தரி தகுர்தசெப்தரியெனவுங் கனகசபைதனிலே நின்றாடுமையனே! சிவகாமிநேசனே! தென்புலியூரம்பலவாணனே! அந்தரி சிவகாமசுந்தரி மணவாளனே!

பால்வெண்ணீற்றனே! வியாக்கிர சர்மாம்பரனே! எண்ணினர்களினிடர்களைபவனே! நிரதிசயானந்தனே! சர்வசங்கார சுடலையிலாடுபவனே! சண்டேசானுக்கிரகனே! பிக்ஷாடனனே! இலிங்கோற்பவனே! இரசிதாம்பர பரதநடனனே! சர்வலோகதுரந்தரனே! சண்பகசுந்தரனே! சகலகலாண்ட சராசரகாரண சம்பூரணனே! மகாசங்காரகால ருத்திரனே! மறைப்புரவி ரதயுத்தனே! உருத்திரகோடி தலைவாசனே! கிஞ்சிஞ்ஞர்களுக்கெட்டாத சர்வக்ஞனே! சாரங்கபாணிக்குச் சக்கர தானமீந்தவனே! உமாபாகட்கரசே! விஷவியாலிகாதரனே! சேதநாசேதநங்களுக்கு அந்தர்யாமியாய் வியாபித்து நிறைகுமையனே! இந்நிலைமையுடைய பராபரவஸ்துவே! உபாதித்ரயத்தால் நீறானேனும் பேதமையுடைய சமுசார சாகரத்திலழுந்திக்கிடக்கும் அடியேன்மனம் அசாத்தியமான உத்தேசங்களையெல்லாம் சிந்தித்துச் சிந்தித்துப் புண்ணாகப்போகின்றதே: ஏனவாழ்க்கையைக் கைவிடாத அடியேன் தேவரீரை அறிவோடுநின்று வணங்க வழியறியேன். கள்ளமனைச் சிவஞானத்திலாப்பணம் செய்ய வகையறியேன். எவர்க்கும் பெம்பொருட்டும பதியாயிருக்குமீமனைவாழ்வை வெறுத்து மாதவம்புரிந்த மெய்யடியார்கள்பலரிருக்கப் பசுவர்க்கம் எல்லாவற்றினுங் கடையாய் நாய்த்தன்மையும் பேய்த்தன்மையு மலமயக்கத்தையு முடையவனாகித் தேவரீருடைய பெருமையையுந் திருவருட்பெருமையையுந் தெரியாதவனாய மாயாவசப்பட்டு அசுத்தமாயையினின்றுந் தோன்றிய அனித்தியமாகிய பிரபஞ்சத்தை மெய்யென்றுங் காயமே நிலையென்றுமெண்ணி இச்சைசெல்லும் வழியெல்லா மனதைவிட்டு அதின்காரியங்களாகிய பொய்வாழ்வில் கூத்தாடிக் கொண்டு பாபகர்மத்தில் பந்திக்கப்பட்டவனுயுமுள்ள அடியேனும் உனக்கோர் அன்பனாவேனோ? உன்திருவடியையடைய அருகனாயிருப்பேனோ ஐயனே! எனதுகர்த்தனே! அடியேன் எண்ணில்லாத ஜனனமெடுத்துத துக்கசாகரத்தழுந்தி புண்ணியபாவங்களுக் கேற்ப சுகதுக்கங்களை நுகர்ந்ததேயன்றி, அவற்றிலெனது உயிருக்குறுதிபயக்கும் வஸ்துவானதொன்றுமில்லாமையால் யாது செய்வதென்று மனக்கவலையுற்று தேவரீர் சகலருக்குந் தாயாயிருப்பதால் உமதுதிருவடியையே தஞ்சமென்றடைந்தேன். கன்மவினைகளை விட்டோட்டி யழியாதவீட்டைத் தந்தருளுமையனே!

மண்ணைப் பறிக்கும் பன்றிக்குட்டிகட்குப் பால்கொடுத்த கிருபாமூர்த்தியே! பஞ்சகிருத்திய காரணமான நடனத்தைநடத்துமையனே! அடியேன் தேவரீர் பார்வையில இரும்பையொத்த மனதையுடைய பாமரனாயிருந்தாலும், எனது அஞ்ஞானத்தையுஞ் சஞ்சிதவினையையுமொழித்து, உனக்குத் தொண்டனாக்கி முத்தி சாம்ப்ராச்சியத்தையெனக்குத்தந்து இரகஷியுமையா கனகசபைத்தாண்டவராயநடேசப் பெருமானே! ஏகநாயகனே! சகல ஆத்துமாக்களின் உள்ளத்தின்கண் சீவசாட்சி மாத்திரமாயும், துரியாதீதத்திற் பரசாட்சி மாத்திரமாயுமிருக்கின்ற நடேசப்பெருமானே! சுயஞ்சோதியென்னும் ஞானசூரியனும், அற்பமுந் துன்பமில்லாதவனும், சகலத்தையுமுண்டாக்குபவனுமிராநின்ற சிவபிரானே!

சலட்சண விலட்சணமாயும், நிட்களமாயும், சகளமாயும், ஈசனும், குருவாயும் விளங்குபவனே! சச்சிதாநந்த பிரமத்தின் சுயம்பாகிய நடேசப் பெருமானே! நித்தியமாய், பூரணமாய், ஏகமாய் பரமார்த்த பரப்பிரம்மமாய, சத்தியமாய், கேவலமாய், துரியமாய், நிருமலமாய், நிராமயமாய, பூரணமாய், நித்தியாநந்தமாய், நிராமயமாய், நிராகாரமாய், நின்மலமாய், நிரஞ்சனமாய், நிரதிசயானந்தமாய், நிராதாரமாய், நிட்களாதீதமாய், அபரமேயமாய், வசனாதீதமாய், அசங்கமாய், அதுலமாய், நிரந்தரமாய், நிருபமாய், நிர்க்குணமாய், அநாதியாய், அசலமாய், அப்ரமேயமாய், விமல அத்துவிதப்பொருளான இவ்வித லக்ஷணங்களுடனேகூடிவிளங்குஞ் சிவபெருமானே! வேதாகமங்களின் முடிவான தத்துவப் பொருளே! ஞானப்பிரகாசனே! அண்டமுழுதும் நடேசனென்று போற்றித்தொழு மையனே! புண்டரீகபுரத்தானே! மலத்தினால் விளைந்த புழுக்கூடாயும், துன்பவாரிதியாயும், புலவேடர் வாழும் பெருங்காடாயும், சலத்துளியால் மலிந்த வீடாகியுமிருக்கின்ற புலால் நாற்றமுள்ள இவ்வுடலைப்பெரிதென்று கூறிக்கொண்டு சனனவாரியில் உழலும்பேயனாகிய அடியேன் இனிப் பிறவாநெறி யடையும்படி அனுக்கிரகம் செய்யவேணு மென்பதாகக் கேட்டுக் கொள்ளுகிறேன் என்னப்பனே! உலகெலாம் நிறைந்தவனே! ஒன்றிலுந் தாக்கற்றவனே, ஓரணுவினு மிருப்பவனே தக்கன்சிரந் துணித்தவனே! கனகமேனியனே! நித்தமுமே யா

நந்தநடனஞ் செய்யும் நிமலனே! பூரணமாயுள்ள வகண்ட சிதாகாசமான பதியாகிய பரமசிவனே! அடியேனை பிரபஞ்ச வாசனையாலுண்டாகும் துர்க்குண நாற்றத்தைக் கைப்பற்றி உன் திருவடியை யடையத் தகுதியுள்ளவனு யிருக்கும்படி யனுக்கிரகஞ் செய்யுமையா நிர்க்குணமான பரமசிவனே! ஒ கருணாநிதியே! சர்வபூததயாபரனே! அம்பிகாபதியே! அன்பாரத் தியானிப்பவரது மனதைக் கோவிலாகக் கொண்டவனே! பார்வதி பிராட்டிக்கு நாயகனே! உருவமில்லாத தூய்மையான மேலான பொருளே! கங்கை யென்னும் பெரும்புனலை சூடும் பிரானாகிய சிற்றம்பலவனே! அந்தமற்ற வகண்ட பரம்பொருளாய் விளங்குபவனே! சகலசக நாயகனாகிய நடேசப் பெருமானே! நித்திய நிட்களமாகி, நிருவிகற்பமாகி, நிரஞ்சனமாகி, நிராகரா சொரூபமுமாகிய வத்துவிதமான புலியூரானே! ஆயிரம் பிறைகண்ட அழகியவந்தி யம்மைக்குக் கூலியாளாய் மண் சுமந்து பிரம்படிபட்ட ஐயனே! கோவணமு மோடுந் திருடிய திருட்டுச் சிவனே! தன்னை மறந்த மதமிகுந்து மகஞ்செய்த தறிதலையாகிய தக்கன் தலையைத் தறித்தவனே! அம்பர சிதம்பர பரம்பர சதாநந்தவடிவ பரமனான பரஞ்சோதியானே! சிற்றம்பலத் தானே! ஸ்ரீதாண்டவனே! காலனை வதைசெய்த காலனே! திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் இம்மூவர்களினாற் செய்தருளிய தேவாரப் பாசுரத்திற் கிரங்கியருளிய செம்பொன் னம்பலவாணனே! மாணிக்க வாசக சுவாமிகள் பாடலை யெழுதின சிற்றம்பலத்தாடு மெங்கூத்தப்பிரானே! ஆலவிட மருந்திய சர்வேசனே! சிதம்பரத்தில் ஒரு சேவடி தூக்கி ஆடினவனே! ஒன்றல்ல விரண்டல்ல ஒன்றிரண்டுமல்லாதவனே! அண்டர் பிரானே! அண்டபகி ரண்டமும் படைத்தவனே! சாது சர்ச்சன சாம்பிரதாய பக்தராகிய மெய்யடியார்களுக்குப் பிறப்பிறப் பென்னுந் துயர்போ யொளிக்கும் பேரின்பமான சுகமளிக்கு மையனே! எவ்வுயிர்க்கு முயிராக விளங்கு மெய்யனே! ஆகமவேத புராண வுல்லாச சிவோக மகேச நடேசனே! பொன்னம்பலவாணனே! சொர்ணச்சபையில் ஒருகாலாலே துள்ளிக் குதித்துக் குதித்துக் கூத்தாடும் நாதனே! வெற்றி விஜயனைக் கொல்லவந்த பன்றியைத் துரத்திச்சென்று அவனுடன் போர்புரிந்து

அவனது காண்டீபத்தா லடிபட்டு அவனுக்குத் திருமேனி சொரூப தரிசனந்தந்து பாசுபதாஸ்திர மருளிய பகவானே! வெள்ளியம்பலத்தில் கால்மாறி யாடுங் கருணையங் கடவுளே! தன்னை மறந்து தவம் செய்யும் அடியார்க்கு நேயமா யிருக்கு மங்கை பங்கனே! சாதியுந் தாயுந் தகப்பனு மில்லாத தனிப்பெரும் பொருளே! தாழ்ந்த குலத்தராகிய குறவர் வீட்டில் செல்வப் பிள்ளைக்குப் பெண்கொண்டவனே! சடைப்பண்டாரம்போல் வந்து குழந்தையை யறுப்பித்து உண்ணவந்த பசியாளனே! தசைகழிந்த வெள்ளெலும்பையாபரணமாகவணிந்த பயித்தியக்காரனே! கட்டப்பழந் துணியு மில்லாமல் புலித்தோல் உடுத்தவனே! வீடொன்றில்லாமல் காட்டில் சஞ்சாரம் செய்பவனே! ஓட்டிவிரந்து தின்றும் பசிதீராம லுதிர்ந்த பிட்டைவாங்கித் தின்றவனே! சித்தாந்த நெறியில்நிற்கும் மெய்யடியார்களின் பூர்வகன்மவினைகளைப் போக்கி மறுஜென்ம மெடாமலே காக்குமையனே! கோடிமறையாலுஞ்சொல்லிமுடித்தற்கருமையான பெருமையை யுடையனாயினும் ஆகாயாந்தத்தி லமர்ந்து விளையாடி தன்னுண்மையை விளக்கும் தற்பரனே, பாதிமதியணிந்த பரமசோதியனே! அம்பரமான திகம்பரரூப பரமான சிதம்பர தேவனே! ஒன்றாகநின்ற சுதந்தரமும், மூவுலகுக் குயிராகியே யுணர்த்தும் விசித்திரமு மெந்நாளுங் கனகசபையி லனவரதநடஞ்செய்யும் பெருமையு முடையநடேசப்பெருமானே!

உணர்ந்தார்க் குணர்வரியோனாகிய தில்லைச் சிற்றம்பலவனே! மாயைப்பேய்பிடித்த பாதகமனத்தைவென்று, தத்துவானுஷ்டானத்தைக் கைப்பற்றி ஞானசெல்வத்தை யடைந்து உன் திருவடிக் காளாகும்படி யருள் செய்யுமையா சிற்றம்பலவனே! தானாகித் தன்னந்தனியாகித் தன்னிலையாயெங்கு மறிவாகி விளங்கும் பரனே! மங்களாகரமாய், அகண்டபிரம்மாகார லிங்கமாய், அகண்டவிஸ்வ விராட்டுஸ்வரூபமாய் விளங்கும் நடேசமூர்த்தியே! ஓம் அகண்டாகண்ட தன்மாத்திர சர்வ அண்டபிண்ட சராசர பகிரண்டாகார வனுரூப சர்வவியாபக சாட்சியானந்த அமிர்தசஞ்சீவியாகிய நடேசப் பெருமானே! சுத்தமதாய்ச் சுகுணமாய்ச் சோர்வில்லாதாய்ச் சுதந்தரமாய் சுயஞ்சோதிச் சுபாகரமாய் நித்தியமாய் நிற்குணமாய் நிகரில்

லாதாய் நிரஞ்சனமாய் நிராமயமாய் நிமலரூபமாகிய சிவபிரானே! என் மாயையின் வேரறுத்து உன் திருவடிக் கருகனாகச் செய்யுமையனே! என்றிவ்வாறு அவ்வியோகியானவர் தோத்திரஞ்செய்தனர். பிறகு ஞானியர்குழாங்களி லொருவரெழுந்து தோத்திரஞ்செய்யலாயினர்.



## ௫ - வது, ஞானிகளி லொருவர்செய்யுந் தோத்திரம்.



வேதாந்த நாதனே சரணம் சரணம்
போதாந்த புண்ணியனே சரணம் சரணம்
நாதாந்த பேரொளியே சரணம் சரணம்.

தேவாரம்.

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் றிருமலை
யதிர வார்த் தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றணைந் துய்ம்மினே.

இதுவுமது.

அங்கமே பூண்டா யனலாடினா யாதிரையா யானிழலா யானே றூர்ந்தாய், பங்கமொன் றில்லாத படர்சடையினாய் பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய், சங்கையொன் றின்றியே தேவர்வேண்டச் சமுத்தி னஞ்சுண்டு சாவா மூவாச், சிங்கமே யுன்னடிக்கே போதுகின்றேன் றிருப்புகலூர் மேவிய தேவ தேவே.

நீரேறு செஞ்சடைமே னிலாவெண் டிங்க ணீங்காமை வைத்துகந்த நீதியானே, பாரேறு படுதலையிற் பலிகொள் வானே பண்டனங்கைப் பார்த்தானே பாவ நாசா, காரேறு முகிலனைய கண்டத்தானே கருங்கைக் களிற்றுரிவை கதறப் போர்த்த, போரேறே யுன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

நெய்யாடி நின்மலனே நீலகண்டா நிறைவுடையாய் மறைவல்லாய் நீதி யானே, மையாடு கண்மடவாள் பாகத்தானே மான்றோ லுடையாய் மகிழ்ந்து நின்றாய், கொய்யாடு கூவிளங் கொன்றை மாலை கொண்டடியே னிட்டுக் கூறிநின்று, பொய்யாத சேவடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

## தேவாரம்.

கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
யற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
யல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பிலா மைந்தா போற்றி
வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

பிரமன்றன் சிரமரிந்த பெரியோய் போற்றி
பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி
கரநான்கு முக்கண்ணு முடையாய் போற்றி
காதலிப்பார்க் காற்ற வெளியாய் போற்றி
யருமந்த தேவர்க் கரசே போற்றி
யன்றரக்க னைஞ்ஞான்கு தோளுந் தாளுஞ்
சிரநெரித்த சேவடிகள் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

## இதுவுமது.

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
யரவாடச் சடைதாழ வங்கையி லனலேந்தி
யிரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே.

அடுத்தானை யுரித்தானை யருச்சுனற்குப் பாசுபதங்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சினமல்கு கயிலாய
மெடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே

## விருத்தசால புராணம்.

திருமாலு நான்முகனுந் தேவர் கோவுந்
தேவர்களு மியாவர்களுஞ் சிந்தை யாலு

மருவாய மறையானு மளவையானு
மளப்பரிதா யகண்டிதமாய் நின்ற மூர்த்தி
யுருவாய கிரிவடிவா யனந்தகோடி
யொளியுடைய கொடுமுடிக ளாகிநின்ற
பெருவாழ்வைத் திருவருட் குண முடையான் றன்னைப்
பெருங்கருணை யாளனையாம் வணங்க லுறுவோம்.

திருவருட்பா.

சொல்லவனே பொருளவனே துரியபதத் தவனே தூயவனே நேயவனே சோதியுரு வவனே நல்லவனே நன்னிதியே ஞானசபாபதியே நாயகனே தாயகனே நண்பவனே யனைத்து மல்லவனே யானவனே யம்மையப்பா வென்னை யாண்டவனே தாண்டவனே யருட்குருவே யெலலாம வலலவனே சிவகாம வலலி மணவாளா மன்னவனே யென்னவனே வந்தருள்க விரைந்தே.

அத்துவித பூரணமா யமர்ந்து நிறகும் நடேசமூர்த்தியே! ஆகாயதத்துவமாய, சதந்விஷயமாய, சுத்தவெளியாய், சதாசிவரூபமாய், அக்கினிமயமாய், நிருமலமாய், நிட்களமாய், நீங்காத சத்தாய், நிகழுணர்வாய், நிரதிசயாநந்தமாய், சருவபரிபூரணமாய், சாந்தமாய், சஞ்சனமாய், சலனமில்லாச் சுபாவமாய், அருவமதாய், அயலிலதாயமாநதுநின்ற வகண்டசிதாகாய பரப்பிரமமாகிய நடேசப்பெருமானே! உத்தமர்கட்கு நன்கு வெளிபபட விளங்கியும், அதமர்கட்குச் சிறிதும் வெளிப்படாது மறைந்தும, அவரவர்கள் உயிர்க்குயிராயுமிருப்பவனே! கண்ணினுண்மணியே! கரும்பினுள்ளிருக்குஞ் சுவையே!எனதுநாயகனுகிய தேவனே!நான்குவேதங்களின் முடிவில் விளங்கும் ரத்தினமே! கருணைநிறைந்த அமிர்தமே! மாண்டுபிறவாத நெறியைத் தந்தாண்டுகொள்ள வேணுமென்று அடியேன் கேட்டுக் கொள்ளுவதற் கிரங்கியருள் செய்யுமையா நடேசப்பெருமானே! ஒலிக்கும் பெரிய பிறவிக் கடலைக்கடக்க விரகன்றையணிந்த உன் திருவடிப்புணையைத் தந்தருளுமையா பசுபதியே! நானுன்னைக் கலம்.நினைத்தற்கரியமகிமையுடைய பொதியமலையில்வாழு மகத்திய முனிவர் வணங்கும் பொன்போலு மரியதிருவடிகளை யுடையவனே!

இறைவனே!கானற்சலத்தை நீர்ப்பெருக்கென்றுதாகவிடாய்கொண்டு தாவியோடு மானினைப்போல,அவன் அவள் அதுவெனக்கூறுபாடாயமித்தை நிறைந்த மாயாப்பிரபஞ்சத்தின் காரியத்தைமெய்யென்று அதிகஆவல்கொண்டு யான்செய்தேன் பிறர்செய்தாரென்றும், இன்ப முந்துன்பமும் புதிதுபுதிதாய் வருந்தோறும் மிக்க விருப்பத்தையும் கோபத்தையும் அடைந்து பிரஷ்டனாய்ப் போகிறேனல்லது நீ என் னுயிருள்நின்று நடத்தும் செயல்களையறிந்து பிறவிக்கடலைக் கடக்க உன்னைப்போற்றி உன்திருவடியாகிய மரக்கலத்தையடைய முயற்சிசெய்யாத பாவியாயிருக்கிறேனையனே!

விஷயங்களைப்பற்றி ஐம்புலவழியாய்ச் செல்லும் மனதை அகத்தடக்கி அதைத்திருத்தி உன் பாதாம்புஜத்தின்கீழ் வைத்து உன்னைப்போற்றித் தொழுவதற்குத் திறமையில்லாத புலையனாகிய நாயேன் சிவநேசர்களைப்போல வேடங்கொண்டு உன்னைப்போற்றித் தொழுவதாகக் காட்டும்பொருட்டு காக்கைகத்துவதுபோல வாய் மொழியினாலே தோத்திரஞ் செய்வதனால் என்ன பலனடையப்போகிறேனையனே! உன்திருவருள் என்னிடத்தில் உண்டானாலல்லவோ நானுன் தொண்டனாவேன். மனம் வாக்கு காயமென்னுங் கரணங்களாகியபாயாகாரியங்களினாலுன்னைப்போற்றாது ஞானமாகியஅறிவே சொரூபமாக வுன்னைப்போற்றினா லன்றோ உன் திருவருள் கிடைக்குமென்று நான்மறையாகமங்கள் நவில்கின்றதே நாயினேனோ அஞ்ஞானமாகிய ஜீவதசையில நின்று போதுமான பக்தியில்லாமலும் அடியார்கோலமில்லாமலும் நற்குணமில்லாமலும் வாக்கினால் கூறும் பிரார்த்தனைகள் எங்ஙனம்உனக்கு அங்கீகாரமாகப்போகிறது அண்ணலே! மெய்யடியார்களுக்கோர்பற்றுக்கோடாயருள் சுரக்கும் சிவபிரானே!மாதவமே!ஞானமலர்பூக்குங்கற்பகத்தருவே! சூலத்தை யேந்திய பெரியவனே!வானோர்தொழும் பதியே! தேவர்கள்வணங்குமிறைவனே!ஞானசந்திரனே! தேனிறைந்த மலர்கள்செறிந்த சோலை சூழ்ந்த தில்லையிலெழுந்தருளிய இறைவனே! அடியாரிதய கமலத்தின்கண் நீங்காதமணமே! இருக்குமுதலிய நான்கு வேதங்களும் வணங்கிப் போற்றும் நாதாந்தத்தொனி வடிவாய்விளங்கும் சுயஞ்சோதியே!உன்புகழை எடுத்துக்கூறுமெய்யடியார்களுக்கு அஞ்ஞா

னவிருளைநீக்கி ஞானவொளியைக் காட்டு மணியே! ஆன்மாக்களு டைய மாயாப்படலத்தை யுரித்து ஆன்மஞானத்தையுண்டாக்கி அரு ளாகிய வமிர்தத்தைப் புசிப்பித்து தன்திருவடியில் சேர்ப்பிக்கும் இறைவனே! விலைவரம்பறியாத இரத்தின மகுடமணிந்த திருமுடி யையும், விட்டுவிட்டொளிவீசும் மகரகுண்டலஞ் செறிந்த திருச் செவிகளையும், பாந்தவாகு வலயமணிந்த புயங்களையும், ஒலிக்குஞ் சதங்கைகளணிந்த திருவடிகளையுமுடைய ஐயனே! மண்டலமு ழுதும் ஊடுருவிநிறைந்து அருள்மயமாய் விளங்கும்பரனே! சகலபு வனத்தினுமுயிர்ப் பயிர் தழைப்ப நற்றண்ணளிசுரந்திடுந்தெய்வமே! பல்லுயிர்த்தொகுதியும் பவக்கடலழுந்த வல்லல்செய்யு மாயை யெனப்படும் நிலையினின்றுநீக்கி ஞானமெனுஞ் செல்வத்தை யளித்தருளுஞ் சிவபிரானே! அருவமு முருவமுமாகி யவ்வு ருவமு மருவமுமகன்று நிற்கும் சோமசுந்தரக்கடவுளே! உதயாத்த மனமின்றி சுயமாய்ப் பிரகாசித்துக்கொண் டிருக்கும் பரம்பொரு ளாகிய நடேசப்பெருமானே! சிவபிரானே! அர்த்தநாரீசனே! அடி யேன் தேகமாகிய இல்லத்தை மெய்யெனக்கருதி மோகமயமான சக பந்தத்துக்குள்ளா யிருப்பதால் விடயவாதனை வசத்தால் குற்றம் பொருந்திய அடியேனுடைய மனம் அறிவையிகழ்ந்து காமவேட் டையாடிக் கொண்டிருப்பதால் அம்மனதைச் சகமாயா மயக்கத்தி னின்று நீக்கி உன்னைப் போற்றித்தொழ வல்லவனுவேனு அண்ண லே!மகாதேவனே! சத்தியஞானாநந்த சொரூபனே!உத்தமனே!அற்பு தனே!நான்மறைக்கிழவனே!பெண்ணொடாடும்பிஞ்ஞகனே!அகண்ட பரப்பிரமமாய், நிராமயமாய், நிரந்தரமாய்,நிகரிலாப்பரப்பிரமமாய், நிரதிசயப்பிரமமாய், அத்துவிதப்பிரமமாய், சுத்தபரப்பிரமமாய், ஏக பரப்பிரமமாய், சதாநந்தபிரமமாய், சிதாகாசப் பிரமமாய், அகண்ட பரப்பிரமமாய்,நீக்கமற எங்குநிறைந்த பரமகுருவான பொருளாய், நித்திய நிர்க்குணமான பொருளாய்,சுத்தபரவெளியான பொருளாய் பின்னமிலாவகண்ட பரமோட்ச லக்ஷ்யமாய், சகலவித நூல்களி லுஞ் சார்ந்துநிற்கும் வஸ்துவாய், அந்தமிலாவகண்ட பரமானந்தப் பொருளாய்,ஆதிமுடிவொன்றுமிலாத இவ்விதலக்ஷணங்களையுடைய பொருளாயுள்ள நடேசப்பெருமானே!

அகிலாண்ட வகண்டமான வகிலலோகேசனே! ஆனந்தவல்லியுடனானந்த கானகத்தே யானந்தக் கூத்தாடும் கடவுளே! உலகமெழும்பெற்ற உமாதேவிமணாளனாகிய விசுவநாதனே! கொன்றைமாலை தொடுத்தணியுந் தொண்டர்க்குத் துணையாயிருப்பவனே! சுத்த நிர்க்குண சஹித சுமங்கள நிராலம்ப சுயம்ப்ரகாச ப்ரபல சுகோததி ப்ரவாகமான பொருளே! நிஷ்கள நிராகார நிர்விஷய நிர்த்தொந்த கைவல்ய நிஜாத்மக சிதாகாசமாய் விளங்கு மையனே! சீர்மலிஞானச்செழுஞ்சுடர் விளக்கே! திரையிலாச் சுகப்பெருங்கடலே! விந்துநாதமுங் கடந்த மெய்ப்பரம்பொருளே! விரும்பு மெய்யடியார் பவச்சிறை தவிர்ப்ப விருதுகட்டிய கடவுளே! சாதனநிறைந்தோர் தமக்கருள் சுரக்கும் தயாநிதியே! சச்சிதானந்தனே!

நிராலம்பமாய், நிர்லேபமாய், ஸ்வப்ரகாசமாய், பரஞ்சோதியாய் நிரஞ்சனமாய், திரிகுணாதீதமாய், நித்யகலியாணமாய் விளங்கும் சிவபிரானே! பலபிறவிக்கண்ணும் பிணித்தென்னை யெனக்குத் தோற்றவொட்டாமற் செய்யும் அஞ்ஞானாந்தகாரமென்னும் வலிய மயக்கினைக் கொடுக்கும் பழுத்தவிருட்டினில் நெருங்கியிருக்கின்ற பிசாசுக்குச்சமானமாகிய அஞ்ஞான சிறைச்சாலையினின்றும் அடியேனை விடுவித்து இனிப்பிறவாநெறியாகிய வரத்தைத் தந்தருளுமையா நடேசப்பெருமானே!

அற்புதசுவானுபவ மேலிட்டுக் கற்பனாதீதமாய் விளங்குமகான்களுக்குச் சர்வசம்பூரண நித்திய சர்வமங்கள சர்வாபிஷேக சர்வப்பிரகாசமாய் விளங்கும் பிரமமாகிய நடேசப்பெருமானே! ஸ்ரீஅகண்டித அலங்கிருத கிருபாசமுத்திரமாகிய பரனே! நித்யகோலாகல அஷ்டவித்யேஸ்வர சேவித அஷ்டமா நாகபூஷித அஷ்டயோகநாயக அஷ்டாக்ஷர வரி யர்ச்சிதபத அஷ்டாக்ஷர பஞ்சாக்ஷர சொரூபமாய் விளங்கும் பரநாதனே! சுடலைநீறணிந்த சுந்தரவேடனே! பெருமையையுடைய புலியும் பாம்புங்களிக்கக் கூத்தாடுஞ்செல்வனே! நிராலம்ப சொரூபனே! ஆதிபராபரமாகிய சிதம்பரநாதனே! அஷ்டகுண பரிபூரணனான சிவனே! பகவானே! ஏகபரிபூரண பரப்பிரமமே! எப்போதும் பிரிவில்லாத நித்தியானந்தபரப்பிரம்ம சுகோததியாகிய வானந்தப்பெருக்கே! சர்வேஸ்வரனே! நிர்க்குண நிரவயவ நிரதிசய

நிராநந்த நிஷ்கிரியாதி விதேகரூபப் பிரதிரூப சதேக சகுணவர்ச்சித
தேகேந்திரிய மனோதீதம் சர்வேந்திரிய பிரகாசகாரண சோமசூ
ரியாக்கினியாதி தேஜோப் ரூபமான பிரமமே! நாதாந்த நாட்டுக்கு
நாயகனே! அருட்பெருஞ் சோதியனே! பரிபூரண ஞான சிதம்பரனே!
நடராசமணியே! பொன்மணியே! கண்ணினுண் மாமணியே! நடன
சிகாமணியே! மாணிக்கமணியே! மாசிலாமணியே! ஊழ்வினைச் சேட்
டையால் சிந்தைமயங்கித் தியங்குகின்றபேயேனை நாயேனை பித்தனை
வஞ்சகனை வினையேனேனை சண்டாளனைப்பற்றிய பாசத்தளைக ளனைத்
தையுஞ் சேதித்துத் தம்மடியார் குழாங்களிற் சேர்ப்பித்தருளு மை
யனே! தில்லைச் சிற்சபையில் திருநடனஞ்செய்யு மாணிக்கமலையே!
கனகசபாபதி பசுபதி நவபதி அனக உமாபதி யதிபதி சிவபதி எம்
பதியே! பரிபூரண ஞான சிதம்பரபதியே! மறைநாடுஞ் சதாபதியே!
தினதயா பதியே! பராதேவி யுமாபதியே! நெடுங்காமப் பெருங்கடலை
நீந்துதற்கான வகையறியாது கொடிதாகிய மும்மலப் பயித்தியத்தில்
முதிர்ந்த நாயேனாகிய அடியேன் போற்றித் தொழும் பதியே! ஆர
ண முமாகமும் புகழ்ந்துபேசும் பதியே! சொல்லா லளப்பரிய துரியா
தீத மேருமலை யுச்சியில் சோதிமயமாய் விளங்கும் பதியே! பிர
பஞ்சங்களையுஞ் சுகதுக்கவேதனைகளையும் கைவிட்டு மேலாகிய பத
வியை யடைய விரும்பும் அடியேனுடைய பிறவித்துன்பமெலா மின்
றேயோட ஆன்மபோதத்தின்கண்ணதாகிய வாணவ விருளைக் கிழித்
தெறிந்து என்னை யாண்டருளுமென்று நான் கேட்டுக்கொள்ளுவதற்
கருள் செய்யும் ஸ்ரீகனக சபேசரே! அருள்வடிவான பதியே!
தானே தானாகித் தழைக்கும் பதியே! மெய்யடியார்களை ஆனந்த
வெள்ளத் தழுத்தும் பதியே! எனதுடலு முயிரும் பொருளுந்
தனதென்று கைக்கொள்ளும் பதியே! சிவசத்தியாவது
நற்குண நற்றவமாவது இல்லாமல் அசத் தாகிய உலகவாழ்
வில் மயங்கித் தவிக்கும் விஷயகாமக் கள்ளனாகிய அடியேனது
மனக்குரங்கைப் பத்தியாங் கயிற்றினாற்கட்டி விடாது காக்கும்பதி
யே! சதாநந்த மான பதியே! சிதாநந்த மயமான பதியே! [illegible]
வடிவான பிரமமே! சிதாகாச வடிவான பிரமமே! எப்போதுஞ் சித்
தாந்த சொரூபமாய்ப் பிரகாசிக்கும் பிரமமாகிய சிவபிரானே! அகில
பரிபூரணமா யனைத்து முண்டா யடங்குதற் கிடமாயிருக்கும்பதியே!

சுத்த பரமாநந்த சொரூபனே! வேதமுடிவாகிய உபநிடதத்திற் கூறும் நித்யபரமாநந்த சொரூபனே! அகண்ட பரமாநந்த சொரூபனே! நாதாந்த மான பரப்பிரம மாகிய பரனே! போதாந்த பரப்பிரமமாகிய நடேசனே! வேதாந்த வேத்தியமாகிய பரநாதனே! சிவபெருமானெனும் பேர்கொண்ட செல்வ நடராஜனே! என்னுயிரிற் கலந்துகலந்து இனித்து நிற்குமென்னிறைவனாகிய பெருமானே! அணுவிலணுவாயிருந்து விளங்குஞ் சபாபதியே! பாசவலையிற்சிக்கிமயங்கிக் கிடக்கின்ற பொல்லாத நெஞ்சப் புலையனாகிய நாயேன் இவ்வுலகில் மின்னல்போற் றோன்றியழியும் நிலையில்லாவுடம்பை நிலையென்றே நேசித்துச் சோர்வடைந்து கலங்கும் ஜீவனது கரணங்களைச் சிவகரணங்க ளாகச் செய்து உன்சொரூபத்தைத் தெரிசிப்பிக்கச் செய்து ஆண்டருளு மையா கோதிலாத குணப்பெருங் குன்றே! என்னையாளும் பொன்னம்பல வாணனே, சர்வமங்கள பஞ்சவிம்ஸதி விக்ரஹ சொரூபனே! ஸ்ரீஜயவிஜயீபவா சர்வசர்வ துர்வப்ர வுன்னத பரிபூரண விக்ஷ ருத்ராக்ஷ மோக்ஷ கடாக்ஷனும் காலருத்திர கஜமுக கந்த காலபைரவ வீரபத்ரவர்த்திகளும் விளங்கும் பரனே! தீங்குசெய்த சூரனைக்கொன்ற பிள்ளையாகிய ஆறுமுகனைப்பெற்றோனே! பலபிறவிக் கண்ணும் பிணித்து என்னை யெனக்குத் தோற்றவொட்டாமற் செய்யும் அஞ்ஞானாந்தகார வாணவமென்னும் வலிய மயக்கினைச் சேதித்துப் பெறுதற்கரிய வொப்பற்ற சிவாநந்தப் பெருஞ் செல்வத்தை யடையச்செய்யும் நடேசப்பெருமானே! உடங்குமாயையான் மறைப்புண்டு உண்மை தெளியவொட்டாத மடங்கொண் மனத்தனாகிய அடியேன் சிவாநந்தச் செல்வத்தை உன் அருளில்லாமலெப்படி யடையப்போகிறேனையனே! அஷ்டாதச வாத்ய கோஷாலங்கிருத சஹித தணு தகணம் தகஜம் தளாங்கு ததிங்கணதி சப்ததாள ரஞ்சித பரதநடன த்யாக கோலாகலனே! சதுர்த்தசோ லோகோன்னத சிவலோக நாதனே! சீலம் குணம் சிந்தைத்தெளிவு பக்தி இவைகள் சற்றுமில்லாத நாயேன் மன்னுமறைக் கெட்டாத பரம்பொருளாகிய உன்திருவடியை யெப்படி யடையப்போகிறேன் மாதேவனே! பவந்தோறு மீட்டிய பாதகங்களைப் பற்றற வொழிக்காதவர்கள் கதியடையார்க ளென்று நூல்கள் கூறுவதால் யாதொரு தவமுஞ் செய்யாத அடியேன் உன்திருவடியை யெப்படி யடையப்

போகின்ற ஐயனே! மெய்யடியார்களது தற்போதநாசத்தின் கண்ணே யருளானந்தத்தைப்பொழியுந் தெய்வமாய் விளங்குபவனே! கண்மணியே!

நிகரிலாத திருத்தில்லையில்வாழ் கோதிலாத குணப்பெருங் குன்றே! அரஅரசிவனே! கருணாநிதியே! சபாபதியே! ஜாலகோல கனகாம்பர நாயகனே! அம்பர விம்ப சிதம்பரதேவனே! அச்சுத சேவிதபாதாம்புஜனே! இரணிய கர்ப்ப பிதாமக சேகர பூஷணனே! பிராரத்வ சத்தாய்க் காமபோகத்தைப் பொசித்து மாயாகற்பிதமான நாமரூபப் பிரபஞ்சத்தை யுண்மையாய்க் கருதிக்கொண்டு நிஷ்பிரபஞ்ச சொருபத்தைக் கருதாது அஞ்ஞான மற்சாகத்தாய் தத்துவசங்கச் சேட்டைகளின் கொடுமையால் துன்பப்படும் அடியேனுடைய வினைவாழ்வை வேரறுத்து சத்தியஞானமான உன்திருவடித் தாமரையிலுண்டான பரமானந்தத் தேனூறிய மதுவை யுண்ணச்செய்து அடியேனை யாண்டருளி மெய்வாழ்வை யடையச் செய்யுமையா நடேசப்பிரபுவே! சகல பரிபூரணமாய், அந்தமிலா வானந்த பரப்பிரமமாய், பராபரமாஞ் சின்மாத்ர சொருபமாய், கருதிக்குஞ் சொல்லவொண்ணாச் சொரூபமாய், தற்பதலட்சியமான பொருளாய், பலகோடிப் பிரமாண்டங்களுந் தானாய், நீக்கமற நிறைகின்ற சொருபமாய், சிதானந்தமயமான சொரூபமாய், சதானந்த பரப்பிரம சொருபமாய், சிதாநந்த பரப்பிரமசொரூபமாய், சதாநந்தமயமான பரம்பொருளாய், சிதாநந்தமயமான பரம்பொருளாய், பரசிவமாய், பராபரமாய், பரமான்மாவாய், பரசுகமாய், பரிசுத்தமாய் விளங்கும் வஸ்துவாகிய சிவபெருமானே!

தனக்கென வொருசங்கற்பஞ் சற்றுமிலாப்பரமாய், சந்ததமும் ஆன்மாக்களினிமித்தந் தன்சந்நிதி மாத்திரத்தில் அவரவர்கள் கோடானுகோடி சங்கற்பங்களை நிறைவேற்றுஞ் சாமியாய், சாந்தபரப்பிரமவஸ்துவாய், கோதிலாதாய், குணமிலாதாய், குறியிலாதாய், குறைவிலாதாய் விளங்கும் நடேசப்பெருமானே! நாகேந்திர பூஷணனாயும், திரிலோசனனாயும், பஸ்மாங்கனாயும், மஹேஸ்வரனாயும், நித்ய சுத்தனாயும், மந்தாகினி சலில சந்தன களப மகாபாருவை யுடையவனாயும், நந்தீஸ்வரப் பிரதம கணநாதனாயும், மந்திர புஷ்ப பெகு

புஷ்பபூஜிதனும், கவுரிமகனுப்ஜ விர்க்தனும், தக்ஷத்துவ நாஷகாய ஸ்ரீநீலகண்டனும், விருஷபத்வஜனும், வசிஷ்டகும்போதபவனும், கௌதமாதிமுனீந்திர தேவார்ச்சித சேகரனும, சந்திரார்க்க வன்னிநயனனும், யக்ஷஸ் சொரூபனும, பிநாக ஹஸ்தனும், திவ்ய தேவனும், இருதய சரோருக சிதாகாசானந்த நிர்த்தசபா பதியுமாகிய பரபிரமப்பொருளே! இரசித கைலாச கனகர உசித சிகராஷ்ட நவரத்ந கசித சிதர விசித்ர சிம்மாதன தேஜோமத்ய ஜோதிர்மய ஸ்வரூபனுகிய நடேசனே! அநாதி நித்திய சுய சுபாவ சதானந்த பிரம்மாகாரத்துவ சொரூபமாய் விளங்கும் பரமே! மெய் யடியார்களுக்குச் சர்வானுசூத சாவ வியாப்தி சாவாந்தயாமித்துவ ததாகார தத்ேதாமய ததேகார அண்டரண்ட தன்மாததிர சம்பூர்ண நிரஞ்சன நிராமய நிராகார நிஷ்களங்க ஆனந்தாகார வெட்டவெளியி னறிவாய், திருஷ்டியாகார அநாதிநித்தியசுயசுபாவ அரூபபிரம்மரஹித பிரமமாகாரமாய், சகலலக்ஷணங்களோடுங்கூடிய சுயப்பிரமம சாக்ஷாத்காரமாய் விளங்கும் பதத்தை யளிக்கும நடேசபெருமானே! சச்சிதானந்த சொரூபத்தினை யறிந்து தனக்கெனச சங்கற்பமேதுமின்றிச் சிறிதுந் தற்போதந் தலையெடாதபடி நின்று பரபோதத்திற் கட்டுப்பட்ட மெய்யடியார்களுக்கு அருளானந்தத்தைப பொழியாநின்ற பேரானந்த வெள்ளமே! வேதங்களையெல்லாம் மோதாம லுணர்ந்த ஞானப்புலவராயும், மும்மலங்களையுங் கடந்துநின்ற நின்மலராயும், தமிழினிலக்கணமெல்லாங் கடல்போல நிறைந்து சீகாழியென்னுந் திருப்பதியி லெழுந்தருளிய திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால கொடுத்த சிவகாமசுந்தரியாரிடத்தி லெபபோதும் அதிகபிரீதியாய் பொன்மன்றி லனவரதமு நடனமிடுந் தில்லைநாயகனே!

உன்திருவடியை யிடைவிடாது தோத்திரஞ் செய்கின்ற அடியார்களை உடம்பை யுயிரபிமானித்தல்போலும், கண்ணை யிமையானது காத்தல்போலுங் காத்திரக்ஷித் தருளு மையனே! மலரகிதமாய், பரிபூரணமாய், நிருவிகாரியாய், அநாதி நித்தியமா யிருக்குமையனே! சரியை கிரியா யோகங்களைச் செய்து பாசத்தை நீக்கிப் பதியை யடைந்து பிறவித் துன்பத்தைநீக்க முயற்சி செயயாத அவிவேகிகளில் அடியே னொருவனு யிருப்பதால் என்னை உன்தொண்ட

னுக்கிக் காவுமையா வாக்கு மனாதீத கோசரமாயுள்ள நடேசப்பெருமானே! தேக போகங்களாகிய துன்பத்தை யின்பம்போல் மாறுபாடாய்த்தோற்றுவித்து எனக்குஆசையையுண்டாக்கு மாயையின்காரியமாகிய ஜீவபோதத்தைக்கெடுத்துக காத்தருளுமையாசிவபிரானே! எமதிறைவனே! பரங்கருணைத் தடங் கடலாகிய சிவபிரானே! நறுமணமிக்க மலர்கள்நிறைந்த சோலைகளும்,கிளிகளுடன் மயிலும், கோகிலங்களும், போர்செய்யுங் குரங்குகளும் வாசஞ்செய்யுங் கனிவகைத்தோட்டங்களும்,நதிகளும்,அன்னங்கள்விளையாடுந்தாமரைத்தடாகங்களுஞ்சூழ்ந்து வேதபாராயணவோசைவொலித்துக்கொண்டிருக்குந்தில்லையிலெழுந்தருளியஞானசபாபதியே!மாணிக்கவாசகராதிமற்றுமகான்களும பாடிய தமிழின் மணம் மணக்கின்ற தில்லையில் ஞானதாண்டவமாடு மையனே! என்னுள்ளத்தையே குடிகொண்டு என்னையும் என்தலைவனாகிய உன்னையும் காட்டாதுமறைத்து தானேதோன்றிவிளங்கிய ஆணவவிருளைத்தேசிகோத்தமராக நீர் எழுந்தருளிவந்து மகாவாக்யோபதேசத்தை அடியேற்கருளிப் பாசாதிபந்த தொந்தங்களைக் கழற்றி யாண்டருளு மையா நடராஜப்பெருமானே!சங்கரனே! எனது தந்தையாயுள்ளவனே! உன்திருவடியில் நேயம்வைத்த அன்பர்களை அடிமையாகக் கொள்ளுமையனே! அடியார்களை அல்லற்படுத்தும் ஆணவ மலத்தை நீக்கு மப்பனே!

பங்கஜநயனனாகிய பரந்தாமனும், பாராதியண்டமெலாம்படைக்கும் பதும வாசனாகிய மறைக் கிழவனும் போற்றற்கரிய பரஞ்சோதியே! நீக்கமிலா தெவ்வுலகும் பூரணநின்மலமாய் நின்ற நிஜானுபூதி சாக்ஷாத் காரமான பரப்பிரமப்பொருளே! சதுர் மாமறை ஸ்வரூபமாகிய தவளவிருஷப வாஹனாரூடனே! கொங்குதேரஞ்சிறைத்தும்பி பாட்டயருந் தும்பை மாலிகாதரனே! ஸ்வேத தந்த கும்பமத்தக கஜசர்மாம்பரதரனே,தன்னையுண்மையாய்த்தியானிப்பவர்களுடைய ஜனன மரண பவரோக நிவாரண பண்டிதனாகிய மஹாதேவனே! யக்ஷசிரேஷ்ட தாருவன ரிஷீஸ்வர ரேஷிய அரிணகரதல கமலனே! இரணிய சம்மார நரசிம்ம சர்மதரனே!மச்சாவதார மதுசூதன நயனாமர விகாதரனே! பலியசுர பங்க வாமன கெர்வநாச கர்த்தவ்யனே!அநேகடலைமையும் அதஞ்செய்த மாயனாகிய ஆமையி னோட்டை யணிந்த

மகாவீரனே! பாரேழையு நிலையுறச் செய்த பத்மநாபனாகிய பன்றியினது கொம்பையணிந்த பகவானே, தசரதாத்மஜ ரகுபுங்கவனைப் பிடித்த இராவண பிரமத்தியாதி தோஷ நிவாரண சங்கரனே!

அறிவிற்கறிவா யகண்டிதமா யெங்குஞ் செறியுஞ் சிவபரஞ்சுடராய் விளங்கும் பரனே! மேலான உமாதேவியார் தந்தருளிய சிவஞானப் பாலையுண்ட சம்பந்தப் பிள்ளையார் தமது செவ்வல்லி மலர்போன்ற திருவாயின் வழியே மேகம்பொழியு மழையைப்போற் பெய்த திருப்பாடல்களாகிய திராவிடவேதமென்னுந் தேவாரங்களை யணிந்த பரமசிவனே! கங்கையையணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானாகிய என்தந்தையே! என்னண்ணலே! அகண்டசச்சிதானந்த தனிபூதராய் விளங்கும் இறைவனே! சிவவேடம் பூண்ட மெய்யடியாருக்கு உள்ளும் புறம்பும் நிறைந்து விளங்கும் பெருமானே! மாயாகாரியங்களாகிய மனமுதலிய வந்தக்கரணங்களால் காணப்படாத நடேசப்பெருமானே! பொய்விட்டார் போற்றும் புனிதனே! நாயிற்கடைப்பட்டயான் நுகராதபோகமில்லை, நானடையாத சரீரமில்லை; ஆகையால் என்னைநாடிவந்த சஞ்சிதவினைக்குத்தக்க கொடியபிறவித்துன்பமறும்படிகிருபைசெய்து என்னைக்காத்தாரக்ஷித்தருளுமையா நடேசப்பெருமானே! பசுவாகிய என்பொல்லாப் பழவினையைப் போக்குவித்து அரிய ஆனந்தத்தாண்டவம் புரிந்தருளும் உன்திருவடியில்வந்து சேரும்படி அனுக்கிரகஞ் செய்யுமையா ஞானபசுபதியே! ஈசான தற்புருட அகோர வாமதேவ சத்யோஜாத மென்னும் பஞ்சமுகத்தையுடைய பரம்பொருளே! ஐம்புலன்களையும் வென்றவர்களாகிய ஜிதேந்திரியர்களுடைய மாயப்படலத்தை யுரித்தெறிந்து அவர்களுக்கு ஞானாமிர்தத்தைப் பெருக்கெடுத்தோடும்படி செய்யுங் கருணாநிதியாகிய சிவபிரானே! ஜீவன் முத்தர்களுக்குத் தெவிட்டாத வினிய திருவருளைத் தந்தருளு ஞானச்செல்வமே! கள்ளமே குடிகொண்ட நெஞ்சினையுடைய பாவியேனது தீவினையை நீக்கிக் காத்தருளுமையா முக்கண்ணுடைய எந்தையே! என்னுயிரே! பூரணமான அமிர்தமே! வீரகண்டாமணி யணிந்த திருவடிகளையுடைய அண்ணலே! தற்போத மொழிந்த அடியார்களுக்குக் கற்பக விருட்சமாய் விளங்கும் பரமே! சிவஞானதீபமே! மூலாதார மாதி

யாறுதாரங் களையுங் கற்பனைகளையுங் கடந்துநின்ற ஞானக்கண்ணுடையோர்களாற் கருதப்படுங் கருணானந்த வாரிப்பெருக்கே! தற்சொரூப மகிழ்ந்துநின்ற யோகிய ருளத்தில் தாண்டவமாடுந் தில்லையாண்டவனே! வேதவிந்தனே! பேய்கள்வாழு மயானத்துப் பெரிய பெருமானே!

பண்ணார்மொழி மங்கையோர் பங்குடையானே! பசுக்களின் இருதயந்தோறும் வாசமாயிருக்கும் பரனே! கனகசபேசனே! மிருகண்ட மகாமுனிவரின் புத்திரராகிய மார்க்கண்டேயருக்கு மாலுநான்முகனுங் காணு வுருவைக்கொண்டு எதிரே வந்து காட்சியளித்து அம்மார்க்கண்டேயரைப்பற்றிவந்த காலனுருயிரைச்செகுத்தவனே! தேவகுலாந்தக தானவ ஜலந்தரவதஹரனே! கையாற் கயிலைமலை யெடுத்த இலங்கை மன்னவன் கரங்களொடு சிரங்கள் நெரியக் காற்சிறுவிரலாலூன்றி அவன் மகாகங்காரத்தை யொடுக்கிய சிவபிரானே! பொன்னம்பலவாணனே! விகற்பசங்கற்ப குரோதமோக துன்ப அகங்கார சந்தோஷாதி யாவற்றையுஞ் செய்யும் வினையை யடியார்களினின்று நீக்கி அவர்களை யாண்டருளுகின்ற சிவபிரானே! தேவர்கோனே! நந்திமுதல் கணநாதர், நூற்றுப் பதினெட்டு உருத்திரர், வீரபத்திரர், பிரமாதி பல்லாயிரந் தேவர்கள், நாற்பத் தெண்ணாயிர முனிவர்கள், சநகாதி மகரிஷிகள், கருட கந்தருவர், தேவேந்திரன், பன்னிரண்டு சூரியர்கள், சந்திரன், அக்கினிதேவன், நிருதிதேவன், வருணபகவான், வாயுதேவன், அஷ்டவசுக்கள், தும்புருநாரதர், கின்னரர், கிம்புருடர் சித்தர், வித்தியாதரர் முதலானவர்கள் ஹரஹர சிவசிவ கங்காதர சங்கர மகாதேவாவென்று துதித்து நமஸ்கரித்துப் போற்றித்தொழுஞ் சிவபிரானே! அடியேனை இனிப் பிறவா நெறியாக ஆண்டு அருளிச் செய்யுமையா வென் றிவ்வாறு ஞானிகளி லொருவர் தோத்திரஞ் செய்தனர்.

இவ்வண்ணமாகப் பொதியமலையிற் கூடியசபையில் சிவநேசர் முதலியவர்களாலே சிதம்பரத்திலெழுந்தருளி விளங்காநின்ற சபாநாயகரைப் போற்றித்தொழுவதைக் கேட்டானந்தமடைந்த எமது பிதாவாகியபரமசிவனடியார்களிலொருவர்யாத்திரைமார்க்கமாகமுற்சென

னத்திற்செய்த சகல பாவங்களையும் பரிகரிக்கின்ற அழகிய காசிஸ்த லத்திற்குச் சென்று கங்கையில் ஸ்நானஞ்செய்து மாணிக்கம்போல் விளங்காநின்ற விசுவநாதரையும் விசாலாக்ஷி யம்மனையுந் தரிசித்துப் பின்பு சிவனடியார்கள் வசிக்கும் ஓர்மடத்தி லிறங்கி யிருந்தபோது, பரமசிவத்தினுடைய திருவடிகளை வணங்கித் தான் பொதியமலையிற் கேட்டபடி கங்கையைத்தரித்த சடாபாரத்தை யுடைய பரமசிவனைத் தோத்திரஞ்செய்கையில், நன்மைபொருந்திய அநேகசாஸ்திரங்களைக் கற்றறிந்தவரும், யாவருமதிக்கும்படி யானவரும், பெருமைபொருந் திய தத்துவஞானத்தையறிந்த பெரியவருமாகிய அமமடாதிபதி இச் சிவபத்தரைநோக்கி, ஐயா சிவபத்தரே! நீர் சிவசிவவென்றும் அரகர சம்புசங்கரமகேசா அம்பிகைபாகாவென்றும், இன்னும்பலவிதமாகச் சொல்லிய தோத்திரத்தைக் கேட்டவையு மானந்தத்தின் பெருமை யை என்னவென்றுசொல்வது. வெவ்விய தீவினைகளைச்செய்யாநின்ற மாயாவிடய போகத்தையுந் தேகாதி பிரபஞ்சங்களையும் பொய்யென் றறிந்து கொள்ளாமலும் ஜீவபோதத்தைக் கைவிடாமலு மிருக் கின்ற பாமரர்களும், இத்தோத்திரத்தைக் கேட்டாலும் அல்லது இந்தப்படி செய்தாலும் தெய்வானுகூலத்தால் அவர்கள் கைலைமாந கரைக் காணியாக்ஷியாகக் கைப்பற்ற அருகராவார்களே யானல், ஞானநூல்களை ஆராய்ச்சிசெய்து தேகாபிமானத்தை விட்டு, மித் தையாகிய பிரபஞ்சவாசனையைமறந்து துறவுநிலையைப் பெற்று, சரி யையாதி சாதனங்களைச்செய்து, பிருதிவிமுதலிய பஞ்சபூதங்களை யுஞ் சத்தாதிவிடயங்களையும் வாக்காதி கன்மேந்திரியங்களையுஞ் சட் சுவாதி ஞானேந்திரியங்களையு மனமாதி யந்தக்கரணங்களையு நாத தத்துவமீறாய்க்கிடந்த மற்றதத்துவங்களையுமியதிகழித்து, அவற்றின் முடிவினின்ற சைதன்யப்பேற்றைத் தரிசித்து இத்தோத்திரத்தைச் செய்பவர்கள் ஞானசாதகத்தை யடைந்து மெய்ஞ் ஞானியர்களா கிப் பிறப்பிறப் பற்றுப் பேரானந்த மாகிய மோக்ஷ சாயுச்சியத் தை அடைவார்க ளென்பதற்கு யாதொரு ஐயமின்று.

வினு—இவ்வண்ணஞ் சொல்லிய அம்மகானைச் சிவபத்தர் துதித் து வணங்கி தேவரீர் சொல்லிய வார்த்தையினுல் தேகாபிமானத்தை விடவேண்டியதா யிருக்கிறதே இத்தேகத்தை அபிமானித்தன்றோ

சகலகாரியங்களையு முடிக்க வேண்டியது. அப்படியிருக்க இத்தேகத்தை நிஷேதமாகவும் அநுசிதமாகவுங் கூறவேண்டிய தேதற்கு?

விடை—பஞ்சபூதபரிணாமமாகிய இத்தேகம் புன்புலால்நிறைந்த அசுத்தமாயா காரியத்தின் தோற்றமேயன்றி வேறன்று. இத்தேகமானது ஆன்மாவாகிய பக்ஷி வாசம்பண்ணுகின்ற கூடுபோன்றதாகும். இதனால் அடையும்பயன் யாதொன்று மில்லை. அடையும் பலன்களெல்லாம் ஆன்மாவினால்தா னடையவேண்டுமேயன்றி வேறன்று.

இத்தேகாபிமானத்தைக் கைப்பற்றிச் சிலபசுநூல்களைக்கற்று மாயவேஷங்கொண்ட வஞ்சகராகிய கபடசந்நியாசிகளிடத்திற் சில வுபதேசம் பெற்றுக்கொண்டு ஜகதம்பிகையின் நாயகனையும், ஆணவாதி மதங்களைப் பொழியுங் கஜமுகாசுரனை அழிப்பதற்கு வேழவதனங்கொண்டெழுந்தருளிய விநாயகப் பெருமானைப் பெற்றெடுத்த கடவுளாயுமிருக்கின்ற தில்லைச் சிற்றம்பலவன் திருவடியையடைவோமென்று சிலர் நினைப்பதுண்டு. அது எத்தன்மைக் கொத்ததெனில்; கரையில்லாத சமுத்திரத்தைக் கைகளால்நீந்திக் கரைசேர்வேனெனவும், காற்றைக் கயிற்றாற் கட்டுவேனெனவும், அளவில்லாத கடல்நீரைப் படியாலளந்து அளவிடுவேனெனவும், மணலைக்கயிறாய்த் திரிப்பேனெனவும் ஒருவன் சொல்லுந் தன்மைபோன் றிருக்கும்.

ஆதலால் இத்தேகம் ஆபாசமானதென்றும், இதைப்போல்கெட்டவஸ்து வேறே ஒன்றுமில்லையென்று முணர்ந்து, தேகாபிமானத்தைவிட்டு திரிகரண சுத்தியாய் அகத்தின்கண்ணே சிவபிரானைத் தியானித்து மெய்ஞ்ஞானம் பொருந்திய ஞானசாதகங்களால் ஸ்வாநுபோகத்தை அடைபவர்கள் அநாதியாகிய பிறப்பிறப்பென்னும் பாவப் படுகுழிச் சுழலிலகப்பட்டுச் சுழலுந் துன்பங்களில் நின்று நீங்கி ஞானவாழ்வாகிய மோட்சசெல்வத்தையடைவார்கள். இத்தேகமாபாசமானதென்பதற்கு ஒருசிறுகதை இதனடியிற் கூறுகின்றோம் கேள்.

சிவஸ்தோத்திரரத்நாவளி • முற்றிற்று.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஆத்மபோதப் பிரசங்காமிர்தம்.

## இரண்டாவது பிரகரணம்

## தேகாபாசலக்ஷணம்.

பிரமனைச் சிறையிலடைத்தவனும், நற்றீரனைச் சிறையினின்று விடுத்தவனும், போருக்குவந்த சூரபன்மன் உயிரை வாங்கிய காளையாயும், அந்தரி சிவகாம சுந்தரிக்குப் புத்திரனும், சாளிங்கனென்னும் பாம்பின் மேலேறி நடனஞ்செய்த மாலின் மருமகனு மிராநின்ற முருகக் கடவுள் வாசமாயிருக்குந் திருவாவி நன்குடியென்னும் பழனியில் வாசுதேவனென்னும் பெயரை யுடைய ஒருவனிருந்தான். இவ்வுலகத்தில் அவன் இழிவு மிகுந்த புன்புலால் போர்த்த புழுக்குரம்பை யாகிய எலும்பு முதலியவைகளால் அமைக்கப் பட்ட வுடல் அனித்திய மென்று நினையாது, அஞ்ஞானத்தை ஆபரணமாக வணிந்த உலக காமிகள் பாசவசத்தாற் றேக போகங்களைக் கருதிப் பரமானந்தத்தை விளைவிக்குஞ் சிவத்தை அடைதற்குச் சாதனமாக விருக்கும் சரியை கிரியை முதலியவற்றை யனுஷ்டிக்காமல் அசுத்தமாகிய மாயையினாற் பந்திக்கப் பட்ட பிரபஞ்சத்தைச் சத்தாகவும், இன்பந்தரு மொரு பொருளாகவு நினைத்துப் பதி பசு பாசங்களைச் சொல்லுகின்ற ஆகமமுதலிய ஞான சாத்திரங்களை ஆராய்ச்சி செய்து ஜனன மரணத்தைப் போக்கடிக்கும் அகில காரணராகிய சிவபிரானைத் தொழாமல் தத்துவஞா

னத்தைக் காட்டுவதற்கு அருகமில்லாத ஈஸ்வர பேத வாதங்களைக் கற்பிக்கும் பாசநூல்கள் பசுநூல்களைக் கற்றுப் பதிநூல்களை யாரா யாது மாயையினு லுண்டாகும் அஞ்ஞான சாகரத்தி லழுந்தி அசத்து ரூபமாகிய சடசரீரத்தை நானென்று அபிமானிக்கும் அந்தக்கரண வுபாதி, விஷய விச்சையி லுபாதி, சாக்கிர சொப்பன வுபாதி, இவை முதலிய உபாதிகளால பாதைப்பட்டு வாணாட்களை வீணாட்களாகக் கழிக்கையிற் பஞ்சரமாகிய இந்த வுடலி லடைக்கப் பட்ட பிராணன் முடிவு காலத்தில பிரயாணப் படும்போது உண்டாகும சஞ்சலத்தையும், பிராணன் பிரிந்தபோது உண்டாகும் பாதையையும, அள்ளல் - இரௌரவம் - கும்பிபாகம் - கூடசலம் - செந்துத்தானம் - பூதி - மாபூதி யென்கிற ஏழுநரகங்களி லடைந்து துன்பப் படுவார்களைப்போல அவ்வாசுரீதவணிராமல் ஜனனக் கடலி லழுந்தும் அஞ்ஞானத்தை நீங்கி மெய்ஞ்ஞானத்தை அடையவேண்டு மென்பதாகச சைவசித்தாந்த சாஸ்திரங்களை ஐயந் திரிபற ஓதி யுணர்ந்து அவற்றிற் கூறப்படும் சரியை கிரியை யோக ஞானுபவங்களை மேற்கொண்டு குருபக்தியிற் சிறந்து விளங்கும் அடியார் திருக்கூட்டங்களிற் சேர்ந்து அவர்களுக்குத் தொண்டுசெய்தும், தன்னிடத்தி லிருந்த ரொக்கம் முதலியவைகளை மனமகிழ்ச்சியுடன் உபயோகப்படுத்தியும், சிவாலயத் திருப்பணி முதலிய தர்மார்த்தங்களிற் செலவுசெய்தும், வேதாந்த சித்தாந்த நூல்களை ஆராய்ச்சி செய்தும, அவைகளிற் கூறப்பட்டிருக்கும் அனுபந்த சதுஷ்டயங்களைக் கைபற்றிக்கொண்டு வந்தவனாயு மிருந்தான்.

மேலும் வேதங்களும் ஆகமங்களும் வடிவுகொண்டு இருபுறத்திலுந் துதிக்கவும், தும்புரு நாரதர் வீணைகள் பாடவும், விநாயகக்கடவுளும் முருகக்கடவுளும் வீரபத்திரக் கடவுளும் சமீபத்திலிருந்து ஆனந்தங் கொள்ளவும், இந்திரன் முதலானோர் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கித் தோத்திரஞ் செய்யவும், மகாமகிமையையுடைய திருச்சிற்றம்பலத்தில் ஆனந்த நடனஞ்செய்யும் அரவுலாவுஞ் சடை யண்ணலாகியும் அன்புடையா ருள்ளத்துச் சுவையுடைப் பொருளாகத் தித்திக்கு மிறையவனாகியு மிராநின்ற அம்பலவாண மூர்த்தியை நோக்கி வாசுதேவன் அனவரதமும் தொழுதுகொண்டு

வந்தவனுயு மிருந்தான். இதனால் அவனுக்குச் சிவபெருமானிடத்தில் உண்மையான பக்தியும் கிரியையிற் பழக்கமும் உண்டாகிவந்தது. இதனாலே வாசுதேவன் சந்திர ஜடாதர மூர்த்தியாகிய சிவபிரானுடைய பாதபங்கயத்தை அடியிற்கண்டபடி தொழுதுவருவான்.

## வாசுதேவன் தோத்திரம்.

நடேசமூர்த்தியே! அடியேனுக்குச் சிவபோதந் தோன்றாமல் உன்போதந் தந்தருளுமையா சிவபிரானே! மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளியபடி திருவாசக மெழுதி யதன்முடிவில் திருச்சிற்றம்பலவன் கையெழுத் தென்று முத்திரை வைத்த முழுமுதற் கடவுளாகிய எம்பெருமானே! உபமன்னியருக்குத் திருப்பாற்கடலை யழைப்பித்துக் கொடுத்தவனே! திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் முதலிய மூவர்பாடிய திராவிடவேதஸ்தோத்திரமாகியதேவாரப் பதிகங்களை மாலையாகத்தரித்தவனே! தில்லையில்அனவரதத்தாண்டவமாடுகின்ற மெய்ப்பொருளே! எருமைமுகத்தினையுடைய மகிடாசுரனைச் சயித்த உலகமாதாவாகிய பார்வதியை வாமபாகத்தில் வைத்திருக்கும் சகதீசனாகிய சிவபிரானே! சகள நிட்கள மூர்த்தியாகிய சிவனே! தேவாதி தேவனே! தயாநிதியாகிய நடேசப் பெருமானே! பொல்லாத துக்க கோர பவசாகர வாரியி லழுந்திக்கிடந்து ஜடாமுனியாகிய மனதின் சேட்டையால் துயர்பட்டுக் கூற்றென்னு முதலைவாய்க் கிரையாவதற் காளாயிருக்கு மடியேனாகிய பாதகனைக் காத்தருளு மையா தம்பிரானே! புராண காரண புராந்தகனாய், நித்த சுத்த புத்த நிஷ்கள நித்திய பரமானந்தனாய், பரஞான சுயஞ் சோதியாய், கர்த்தனாய், ஆனந்தனாய், மறை முடிவுங் காணரிய பேரொளியாய், முத்தியாகி விளங்கு மனாதி முழு முதலான வடிவாய், தொழும்பவ ருள்ளச் சுடரொளிச் சுடராய், சுடருட் சுடராய் விளங்கும் வஸ்துவாய், நிகரிலதாய் நிருவிகற்பமாய், நிருமலமாய், அருவமோ டுருவிலதாய் விளங்கும் நடேசப் பெருமானே! சதுமறைக் கிழவனே! படிந்து பணிபவர்கள் பவந்தோறுஞ் செய்வினை யாவுங் கடிந்து தனது காருண்ணிய மாகிய உண்மைஞானத்தைக் கடாட்சித்துக் காப்பவனே! பிரணவ சொரூபமான பெருந்தகைத் தம்பிரானே!

உன்றொண்டராகிய அஷ்டாவதானம் பூவைக் கலியாண சுந்தரனிடம் அன்புள்ளவனே! பக்தர் பொருளாய் விளங்குந் தெய்வமே! அகத்திற் பசையில்லாத கருங்கன் மனத்தையுடைய சண்டாளர்களை ஜனன மரணப் படுகுழியிற் றள்ளும்படிச் செய்விப்பவனே! தத்துவப் பிரபஞ்சத்தைப் படைத்த சங்கரனே! விறகிலே யிருக்குந் தீயைப்போல வான் சரீரங்களிற் கலந்து உயிர்களை யெல்லா மாட்டி அம்பலத்தாடுகின்ற பரமபதியாகிய தில்லைநாயகனே! பத்தியே பொருளாகக் கொண்டு நிராகார சிவயோக நித்திரை கொண்டு நிற்கும் பெரியோர்கள் கொண்டாடுந் தெய்வமே! உப்பிட்ட பாண்டமுடைந்து கழிவதுபோல நிலையில்லாத இவ்வுடலை நானென்று அபிமானிக்கும் நாயேனுக்குத் தென்படாத தில்லைநகர்ப்பதியே! மறைமுடிவினிலாடு மாணிக்கமணியே! பொன்னே! மாதவமே! பூரணமே! ஆரணமே! தில்லையில் ஞானநடனம்புரி ரத்தினமே! நீ நான் அது இது வென்னு மியாவுந் தானாய் விளங்கும் வஸ்துவே! என்னாயகனே! பரஞ்சோதியே! பணிந்தார்கள் பாவங்களைப் பற்றறுக்க வல்லவனே! ஞானவிநோதகனே! ஸ்ரீகண்டனாகிய நடேசப்பெருமானே! அஞ்ஞானச் சிறையிடைப்பட்டு ஜனன சாகரத்தில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் பேதையாகிய அடியேன்பேரில் எள்ளின்முனை யளவாவது கிருபையைத் தாருமையா சிவபிரானே! பரமானந்த பரஞ்சோதியே! மெய்யடியார்களுடைய ஜனன துக்க விடாயினைத்தீர்க்குஞ் சிவனே! பாபிகளின் அநாதியாகிய மலநோயைத் தீர்க்கும் ஞானபண்டிதனே! அகண்டாகார சிதாகாச ரூபனே! புலிக்கால் முனிதொழும் பரனே! கைலாசனே! நடேசனே! சர்வான்மாக்களுக்கும் ஒருமுதலாக நின்றுணர்த்துகின்ற கர்த்தனே!

நாயிற் கடைப்பிறப்பாய் நான்பிறந்து ஆசைவலைப் பாசத்துட்பட்டுத் துக்கத்துக் கேதுவாயுள்ள சரீரத்தைச் சுமந்துகொண்டு ஐந்து பொறிவழிப்போ யலையுமிந்தப் பாழ்மனத்தாற்படுந் துன்பத்தைச் சகிக்காமல் அவதிப்படு நிர்ப்பாக்கியனாகியவடியேனுக்கு உன்னைத் தவிர வேறாதர வில்லையே ஐயனே! இருக்கு, யஜுர், சாமம், அதர்வணமென்னு நான்கு வேதங்களும் ஆறு சாஸ்திரங்களும் புகழ்த்தக்க உமாமகேசனே!

ஓமஹாதேவனே! மஹாநுபாவனே! பிறவிவேதனையால் மெலிந்திருக்குமடியேன் உன்பாதாம்புஜத்தை அடையவேண்டுமென்பதாகக் கொண்டிருக்கும் வைராக்கியத்தை நிறைவேற்றும்படி நின்னையே நினைக்கு நெஞ்சகத்தையு நின்னையே துதிக்கு நாவையு மனுக்கிரகஞ்செய்யுமையாவென்று நான் வருந்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சோணசைலமாலை.

நின்னையே நோக்கி விடாதகட் புலனு நின்னையே நினைக்குநெஞ்சகமு, நின்னையே துதிக்கு நாவுமெற் கருளி நின்றிருவடியின் வைத் தருள்வாய், தன்னையே பினர்க்குச் சகமெலாங் காட்டுந் தரணியோ டிகலிமே லினர்க்குத், தன்னையே காட்டு மலையெனுஞ் சோணசைலனே கைலைநாயகனே.

இளமையாகிய பிறையின் சந்திரிகை பிரகாசிக்கவும், ஆபரணமாகிய புற்றிலிருக்கின்ற சர்ப்பத்தின் றலையிலிருக்கு மாணிக்கக் காந்தி வீசவும், உலகமாதா வாகிய பார்வதி தேவி யொருபாகத்திலிருக்கவும், கையிற் கபாலமேந்திக்கொண்டு வீடுதோறும்பிச்சைக்காகப்போகும் நீர் ஆணவம், கன்மம், மாயையென்கிற மும்மலங்களையும் நீக்கி இருவினையொப்பு கூடி மனமென்பதிறந்து தற்போதங் கெட்டு உலகம் சிவசொரூபமாய்த் தோற்றும்படியான பதவியை அடைந்தவர்கள்போல அடியேனுமடையும்படி கிருபை செய்வீராகில் அதற்குக் கைம்மாறாக அடியேன் உமக்கொன்று கொடுக்கச் சித்தமாயிருப்பேன். அது யாதெனில் என்னிடமிருக்கு மனக்குரங்காம். நீர் அந்தக்குரங்கையுங் கரணங்களாகிய அதன் குட்டிகளையுங் கொண்டுபோய் ஆட்டுவிப்பீராகில் போனவிடமெல்லாம் உமக்கு வேண்டிய அன்னங் கிடைக்கும். அப்படி கிடைக்கும் அன்னம் உமக்கும், அம்பிகையாகிய என்தாயார்க்கும், உம்மையடுத்த அடியார்கட்கும் போதுமானதாயிருக்கும்.

அடியேன் இப்படி சொல்லுவது கெருவத்தினாற் சொல்லியதல்ல. இந்த மனக் குரங்கினால் அடியேன் படும் துயரத்தைச் சொல்லி முடியாது. அண்ட பகிரண்டங்களெல்லாங் கிடுகிடென்று நடுங்கி

யொடுங்கினும் மனமாகிய குரங்கு அடங்கி ஒடுங்கமாட்டோ
மென்கிறது. அது வெளிப்புறமாக உலாவுமாகில் அதைப்பிடித்துக்
கட்டி அடித்து அதின் அட்ட விகடத்தை அடக்கிப் போடுவேன்.
அது உடலாகிய கூட்டிலேயே கண்ணுக்குத் தென்படாம லுலாவிக்
கொண் டிருக்கிறதே அதற்கு யான் செய்வதென்ன? அந்த மனக்கு
ரங்கின் சேஷ்டையினலே நேரிடும் துன்பங்களைப்பற்றி நான் யாரிடத்
தில் முறையிட்டுக் கொள்ளுவேன். தேவரீரைப் பார்க்கிலும் அடி
யேனுக்கு உயிர்த்துணை வேறே ஒருவருமில்லை, பஞ்சபூத பரிணாம
மான அண்டாண்ட பகிரண்டங்கட்கெல்லா மகாத்துமாவாகிய
உமக்கு நான் அன்னியனல்ல, நான் உமது அருளாணையின்படி இந்த
உலகத்திற்கு வந்தேன். இந்திரிய வேடர்களிடத்தில் அகப்பட்டுக்
கொண்டு தவிக்கும் பாமரனாயிருக்கும் அடியேனைக் காப்பது உம்மு
டைய கடமையாயிராதா!

சகலான்ம கோடிகட்கும் கிருபாவருஷம் பொழிகின்ற மேகம்
போன்ற பரமசிவனே! ஆன்மபோதத்தையே பொருளாகக்கொண்
டிருக்கும் என்னுடைய பாசத்தின் வல்லமையை யொழித்து பெரு
வாழ்வாகிய பரமானந்த செல்வத்தை எனக்கு அனுக்கிரகம் செய்யு
மையா சிவபிரானே! வீணைகள் கின்னரியோடு தும்புரு நாரதர்
பாட மாமலைநாயகி பார்வதிகூட மாலிசைக்கு மிருதங்கமுடன்
பிரமதாளம் கணீ கணீ ரென்னவும், தீம் தீம் தீம தீமென்னவும், தக்
கிடதிக்கிட தரிகிட வெனவும், திததிமி திமிதிமி திமிதிமி யெனவும்,
திககட திககிட திரிகிட வெனவும், தகதக தகதக தகதக தகதக
வெனவும், திகிதிகி திகிதிகி திகிதிகி திகிதிகி யெனவும், தகிங்கத்
தோம கிரிகிட தகிங்கத்தோமகிட தத்திமி தெய் தெய்யெனவும் தில்
லைச சிற்சபையில் நின்றானந்தத் தாண்டவ மாடு மையனே!

பொங்கிய சமாதியைப் புரிகின்றோர்க்குத் தங்கிய ஞானுயிர்த்தத்
தைத் தந்தருளுமையனே! சக்தி தத்துவத்தைச் சிவத்தினி லொடுக்
கிச் சுத்தமாயையை யொழித்து நித்தியமாகிய நிறைவியாபகமாய்
ஞானத்தினிற் சிறந்த மேலோர்க்கு அண்ணலாய்க் காண்பவனே!
தேவதேவனே! திரிபுவனேசனே! சிகரமாதி பஞ்சாக்கரமே திரு

மேனியாகக் கொண்டு ஆன்மாக்கள் பிறவியறத்தக்க நிருத்தஞ்செய்பவனே! உபநிடத வாக்கியத்தின் உட்கிடைப் பொருளாயும், முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்த விடத்து மேலிடுந் திருவருளாயும், தேவர்கள் விழுந்து வணங்குங் கடவுளுமாகிய உன் திருவடியில் விழுந்து வணங்குகிறேன் ஐயனே!

தாத்தாதன தானன தானன தாத்தாதன தானன தானன தாத்தாதன தானன தானன தனவென்றும், தானந்தாதன தானன தானன தானந்தாதன தானன தானன தானனதனவென்றும் கனகசபையில் நிருத்தஞ்செய்யும் பரமே!

ஓதுதற் கரும் பரஞ்சுடராகி யொளிரும் வேதநாயகனே! அடியார்களுடைய இருதயமாகிய குட்டையி லடைபட்டிருக்கும் அஞ்ஞானச் சேற்றினைக்கலை அடித்துக் கொண்டுபோகும் ஞானவெள்ளமே! சூலபாணியனே! உன் துணைமலர்த்தாளினைத் தொழுகின்றேன் என்னைக் காத்தருளுமையா!

"கலையாகிக் கலைஞானந் தானேயாகிப், பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணுமாகிப், பிரளயத்துக் கப்பாலோ ரண்டமாகி, எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்துமாகி யெழுஞ்சுடராய் நிற்கும் பரனே," ஐயனே! அஞ்ஞான மருளுடைய பித்தனாகிய அடியேனை அம்மருளினின்று நீக்கித் தனதென்றுரைக்கு மவையெல்லாந் தள்ளித் தன் சுதந்தரத்தினையு மிழந்து தோன்றுவனவெல்லா நீயாகக்கண்டானந்த மடையும் புண்ணியவான்களின் கூட்டத்தி லடியே னொருவனா யிருக்கும்படி யாவது, அல்லது அவர்களுடைய ஏவற் பணிவிடையைச் செய்யும்படியான பாக்கியத்தை யாவது அடையும்படியாக அனுக்கிரகஞ் செய்யும்படி மனுவுசெய்து கொள்ளுகிறேன்.

இப்படியாக எமக்கு நாதராக விருக்கின்ற பரமசிவனை, வாசுதேவன் சார்வதாய் போற்றித் தொழுதுகொண் டிருந்த காலத்தில் ஒருநாள் அவனுக்கு நூலாசிரியராயும் சிவபத்தி முதலிய வற்றிற் சிறந்தவராயு மிருந்த வேத பண்டிதராகிய விசுவனாத சாஸ்திரியார் அவனை நோக்கி, அப்பா வாசுதேவா! நீ அடிக்கடி திவ்விய க்ஷேத்திர

மாகிய சிதம்பரம்போய், அவ்விடத்திலிருக்குஞ் சிவகங்கையென்னுந் தடாகத்தில் மூழ்கி, சிற்சபையில் உமாதேவியார் காண நடனஞ் செய்யுஞ் சிவபிரானுடைய உருவத்தைக் கண்டு தரிசித்துவா! அப்படிக்கு நீ அந்தக் கடவுளைத் தரிசித்து வருவையாகில் அது உன்னை ஊசலாட்டுகின்ற இருவினைகளையு மறுத்து அறிவைத் தந்து ஒளியுருவாக்கிப பந்தங்களைப் பற்றறுத்து ஆசையையொழித்து மெய்யடியார்களி னிலையில் சேர்த்துவிடும். மாபாதகங்களைச் செய்தவர்களா யிருந்தாலுஞ் சிதம்பரத்துக்குப்போய், அங்கு ஞானசொரூபமாய் ஆனந்தத் தாண்டவஞ்செய்கின்ற அம்பலவாண மூர்த்தியைத் தெரிசனஞ் செய்வார்களே யாகில் அவர்கள் பாவங்களினின்று நீங்கி நற்கதியடைவார்கள்.

சிதம்பரபுராணம்.

"கொடியவினைக் கிருப்பிடமாய் மிக்கபயங் கரமாகிக் கூறற்கொண்ணுக், கடியகலி யுகத்துதிப்போ ருய்யுநெறி வேறுளவோ கணக்கிலாத, நெடியவினை கடந்திடவு மரிதுசிதம் பரந்தன்னை நீங்காதாதி, முடிவொருவு பதங்கண்டான் முடியாத வினைமுடிந்து முத்திசேர்வர்".

வினா—ஐயா! அத்தலததின் பெருமையையும், அதற்குச் சிதம்பரமென்று பேர்வந்த காரணத்தையும், சிவகங்கையின் பெருமையையும் அடியேன் செவ்வையாய்த் தெரிந்து கொள்ளாதிருப்பதாலதை விவரமா யுரைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

விடை—மேற்படி தலத்தைச் சிதம்பரமென்றும், புண்டரிகபுரமென்றுங் கூறப்படும். சிதம்பரமானது பெருமைபொருந்திய விராட்புருட னெழுந்தருளி யிருப்பதற்கு ஞானாகாயமாகி விளங்குகிற படியா லிதைச் சிதம்பரமென்று சொல்லப்படுகிறது. சித்தென்றால் ஞானம், அம்பரமென்றால் ஆகாயம். இதிலுளதாகிய கனகசபையில் மூன்று கண்களையுடைய பரமசிவன் ஆனந்த நிர்த்தனஞ்செய்கின்றார். அவருடைய மூர்த்தி கரத்தி லாயிரத்திலொன்றுதான் கைலாசத்தி லிருக்குமென்றால், அத்தலத்தின் பெருமையைப் பேசுதை

யாகிய என்றுச் சொல்லச் சாதகியப்படுமோ? அப்படிப்பட்ட அழகு பொருந்திய கனகசபையைக்கண்டு தரிசித்தவர்கள் விஷ்ணுவினாலும் பிரமாவினாலுங் காணப்படாத முத்தியை யடைவர்க ளென்பதாக வேதங்கள் கூறுகின்றன.

எங்கும் பிரகாசியா நின்ற விராட்புருட னிதயார விந்தமான பழமையாகிய தில்லையில் அனுக்கிரகசத்தி சொரூபமாய் அம்பலவாண மூர்த்தி ஆனந்தத் தாண்டவஞ் செய்வது யாதுக் கென்று வினவில், இவ்வுலகமெல்லாம் அவன் திருமேனியாக விளங்குதலின், அவனை யைந்தாலன்றி உலகமசையாதாகலின், "ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்களித்ததும், "அவனன்றி யோரணுவு மசையாது" எனத் தாயுமானவர் கட்டளை யிட்டதும் இக்கருத்தைப்பற்றியேயாம்.

"தத்துவ மாடச் சதாசிவந் தானுடச், சித்து மாடச் சிவசத்தி தானுட, வைத்த சராசர மாட மறையாட, வத்தனு மாடினு னம்பலக்கூத்தே"

இனிப் புண்டரிக புரமெனக்கூறுவதற்குக்காரணம் யாதெனில், தாமரைமலர்போ லிருக்கின்ற தென்று சொல்லப்பட்ட இதையார விந்தத்தில் பரப் பிரமம் எப்போது நிலையுற்றிருக்கின்ற படியினுல் அந்த இதைய தாமரைக்குப் புண்டரிக புரமென்று பெயராயிற்று. சாந்தோக்கிய உப நிஷத்தில் "பிரமபுரமாகிய இந்தச்சரீரத்தி லுள்ள தகரமாகிய அப்புண்டரிக வீட்டினுள்ளே யிருக்கும் ஆகாசம்" என் பது முதலாகத் தகரவித்தை கூறப்பட்டது. இங்கே ஆகாசம் என் றது பிரமமாகியசிவத்தைப் புறத்துமிவ்வாறே இப்பிரமாண்டம் பிரம புரமெனவும், இப்பிரமாண்டத்தி னுள்ளே யிருக்குந் தில்லைவனம் புண்டரிகவீடு எனவும், தில்லைவனத்தில் நிருத்தஞ்செய்யுஞ் சிவம் ஆகாசம் எனவுங் கூறப்படும்.

தாவரமாகிய அண்டமும் சங்கமமாகிய பிண்டமும் சமமாத லால் பிண்டமாகிய சரீரத்தில் இடைக்கும் பிங்கலைக்கு நடுவினுள்ள

சுழுமுனைநாடியும்,பிரமாண்டத்திலுள்ளவிப்பரதகண்டத்திலே இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவிலுள்ள தில்லையும் சிவன் ஆனந்தநிருத்தஞ்செய்யும் தானமாம். அச்சிவன்நிட்கள சொரூபமானதினாற் கண்ணினாற் பார்க்கவும், வாக்காற்றுதிக்கவும், மனத்தானினைக்கவும், அறிவா லறியவுங்கூடாத பொருளாதலாற் சுத்தவெளியாகிய அப்பிரபத்தைச் சிதாகாசமென்று கூறுவது.

## சிதம்பரபுராணம்.

சொற்றவுடற் கமலநிக ருளக்கமலம் பிரமமுறை தொன்மை
தன்னா, னற்றமைய புண்டரிக வகமாயிற் றந்தவக நண்ணலாலும்,
பற்றுடலம் புரமெனப்பேர் படைத்ததுபுண் டரிகவகம் பற்றிநித்
தம், பெற்றபிரமங்ககன வுவமையாற் ககனமெனப் பேசிற்றாமால்.

இந்த விராட் புருடனிருக்குந் தலமாகிய தில்லைக்குப் போய் தாண்டவ ராயனாகிய நடராஜ மூர்த்தியைத் தரிசித்து வந்தால், சிவ சாயுச்சிய முத்தியை யடையும் பார்க்க மேற்படுமென்பதாக ஞான நூல்கள் பேசுகின்றன. ஞானாகாச சொரூபமாய் ஆனந்தத் தாண்டவஞ் செய்யும அம்பலவாண மூர்த்தியைத் தெரிசிக்கும் புண்ணிய வான்களுக்குமாத்திர மெய்ஞ்ஞானங் கிடைக்குமேதவிர ஏனையோர்களுக்குக் கிடைக்க மாட்டாது. இது சத்தியம் சத்தியம் முக்காலுஞ் சத்தியமேயாம். ஆன்மபோதத்தைத் தொலைத்துச் சிவசாயுச்சிய மடைய விருப்ப முள்ளவனா யிருந்தால நீ தப்பாம லடிக்கடி தில்லைக்குச் சென்று ஜெக மண்டலம் புகழும் பரமண்டலமாகிய கனகசபையிற் றிரு நடனம் புரியுங் கழல்தா வென்று நடேசப் பெருமானைக் கேள். இது நிற்க.

இனிச் சிவகங்கையின் பெருமையாதென்றுவினவில்,இந்தத்தீர்த்தத்தில் பலதரம்மூழ்கினோ ரினிப்பிறவாநெறியடைவர்.மநுச்சக்கரவர்த்தி என்பவருடைய குமாரனாகிய இரணியவன்மனென்பவன் குட்டநோயால் துன்பப்பட்டுக்கொண்டிருந்தனன். அவன் அந்தக்கங்கையில்மூழ்கிஅகண்டாகாரபரிபூரணமாகி யோங்கிநிற்கின்றபேரின்பமாகிய நடேசனைத் தெரிசித்துவந்ததில் அக்குட்டநோய் நீங்கித் திவ்விய தேகத்தை யடைந்ததாகச் சொல்லப்படுகின்றது. தில்லைத்தலத்தின்

பெருமையை விஸ்வநாத சாஸ்திரியார் மேற்கண்ட படி சொல்லிய
தை வாசுதேவன் கேட்டு அடிக்கடி தில்லைக்குப் போய் சுவாமி
யைத் துதித்துப் போற்றித்தொழுது தரிசனஞ் செய்துவருவான்.
அப்படியிருக்க வாசுதேவன் சுவாமி தரிசனஞ் செய்து தன் னிருப்
பிடத்துக்குக் காட்டுவழியாக வருகையில் வழியிலே ஓராலவிருக்ஷத்
தின்கீழே பிரமதேஜஸை யுடைய ஒருதபசி நிஷ்டையி லிருந்
ததைக்கண்டு இவர் மோக்ஷத்திற் கேதுவாகிய தத்துவ ஞானத்
தைப் போதிக்க அருகரா யிருப்பாரென் றெண்ணி அவர் முன் கை
கட்டி நின்றுகொண் டிருந்தான். அவர் நிஷ்டையி லிருந்து விழித்த
போது வாசுதேவனைப் பார்த்து நீ யார்? இங்கு ஏன்வந்தா யென்று
வினவினர். "புணர்ந்த பாவமெலாம் பரிபூரண முணர்ந்தஞானி விழி
பட வோடுமே யென்று" ஆன்றோர் கூறிய வாக்குப்படி வாசுதேவ
னைச் சூழ்ந்திருந்த பாவங்கள் வெருசா யகன்று போனபடியால்,
அவன் நிஷ்களங்க மனதுடன் சுவாமி! அடியேனுக்குத் தீட்சை
செய்து பரமஞானோபதேசஞ் செய்யவேணுமென்று விண்ணப்பஞ்
செய்தான். தபசி வாசுதேவ னிடத்தில் ஞான சம்பாஷணை செய்த
தில் மோகத்தைக் கொடுக்கும் அஞ்ஞான கற்பிதமாகக் காணப்படு
கிறபிரபஞ்சத்தை மெய்யென அபிமானித்திருக்கும் புறப்பற்றுஞ்
சீவப்பற்றும் முற்றுமொழிந்து நித்தியாநித்யவஸ்துவிவேகம் - இக
மூத் தார்த்த பலபோக விராகம் - சமாதிசட்கசம்பத்து - முமூட்சுத்து
வமென்கின்ற சாதன சதுஷ்டயங்களி னனுஷ்டானங்களை விசே
ஷமாய்க் கைப்பற்றாதவனா யிருந்ததைக்கண்டு, அப்பா வாசுதேவா!
கொஞ்சநாள்கழிந்தபிறகு உபதேசஞ் செய்கிறேனென்றார். இத்தே
கம் நீரிலெழுதிய எழுத்தைப்போல நிலையற்றதென்று வாசுதேவ
னெண்ணி அதைக்கேளாமல், சுவாமி! இப்போதே மும்மல வழக்கை
நீக்கிப் பிறப்பையறுக்கும்படி யாகிய ஞானோபதேசஞ் செய்ய
வேண்டுமென்று பிடிவாதமாய்க் கேட்டான். அராகமுதல் அகங்
காரம் வரையுமுள்ள பதின்மூன்று குணங்களையுங் கைவிட்டு, சிவ
பத்தியிற் சிறந்திருப்பவர்களாய்ச் சாதனசதுஷ்டய சம்பன்னர்களா
யிருப்பவர்களுக்குமாத்திரம் உபதேசஞ்செய்யும்படியாக ஞானநூல்
களில் விதித்திருக்க, இவன் இப்போதே உபதேசஞ் செய்யவேண்டு
மென்பதாக அறியாமையாற் போராடுகிறானே தொண்ணூற்று

தத்துவங்களையு நியதிகளைத்தவர்க்கல்லது இப்படிப்பட்ட அபக்குவனுக்கு உபதேசஞ்செய்கிறதானால், மலர்ந்தவாசனையுள்ள புஷ்பத்தை மூக்கில்லாதவனை முகரச்செய்வதற்கும், குருடன் கையில் கண்ணாடி கொடுத்து அவன் முகத்தைப்பார்க்கச் சொல்லுவதற்கு மொக்குமாகையால், இவனை நம்மைவிட்டு நலமாய்த்தொலைக்கவேணு மென்பதாக வெண்ணி அடியிற்கண்டபடி வாசுதேவனுக்குக் கூறலுற்றார்.

பசுவர்க்கத்திற் சேர்க்குசிதாபாசனாகிய ஆடவனே! துயர்ப்பிறவி வெங்கொடு நோய் தொலைக்க ஒருவனுக்கு உபதேசஞ் செய்கிறதானால் முன்னதாய்க் குருதக்ஷிணை பெற்றுக்கொண்டுதான் உபதேசஞ் செய்யவேண்டியது விதியாகையால், தக்ஷிணை கொண்டுவா! அப்படி நீ கொண்டுவரப்பட்ட தக்ஷிணை ஆபாசமானதாயும், அருவருக்கப்பட்டதாயும், நாற்றமுள்ளதாயுமிருக்க வேணுமென்பதாகச் சொன்னார். அந்தப்படிக்கு வாசுதேவன் கொண்டுவருவதாகச் சொல்லித் தன் னிருப்பிடத்திற்குப் போய் விட்டான்.

வாசுதேவனுக்குக் கெட்டவஸ்து இன்னதென்பதாகத் தெரியாமல சிலநாள் மனக்குழப்பத்தைக் கொண்டவனாயிருந்தான். அப்படியிருக்க அவன் ஒருநாட் காலைப்பிரவிர்த்திக்குப் போகையில், மலம் துர்க்கந்தமான நாற்றமடிப்பதுகண்டு, இது கெட்டவஸ்துவா யிருப்பதால் இதைத் தான் காணிக்கையாகத் தவசிக்குக் கொண்டுபோய்க் கொடுக்கலா மென்று எண்ணி, வேத முதலாகிய கலைகளனைத்தையுமுணர்ந்த தன்னூலாசிரியரிடத்திற்குப்போய் நடந்தவிருத்தாந்தத்தை அவருக்குத் தெரியப்படுத்தித் தன்னெண்ணத்தையுஞ்சொல்லினான், அட அட வாசுதேவா! வாசுதேவா! புத்தியில்லாதவனே! சிறிதும் மலம் கெட்டவஸ்தாகுமா? நல்லது நேற்றையதினம் நீ என்னபோஜனஞ்செய்தாயென்று கேட்டார். அதற்கு வாசுதேவன் ஐயா! ஒரு சினேகிதன் வீட்டில் நடந்த விருந்திற்குப் போயிருந்ததில், மிட்டாய் இலட்டு முதலிய இனித்த பண்டங்களையும் நல்ல போஜனங்களையும் உண்டேனென்றான். அதற்கு நூலாசிரியர் வாசுதேவா! நீ உண்ட பதார்த்தங்கள் நல்லவஸ்துவா யிருக்க அதனாலுண்டான மலத்தையெப்படி

கெட்டவஸ்துவென்று கூறுவது; அது உன்னுடலிற் கூடியிருந்ததில்லையோ கெட்டது? ஆகையால், உன்னுடல் கெட்டதா? மிட்டாய்பூ, இலட்டுங் கெட்டதா? நீ சொல்லென்றார். மலத்தில் விளைந்த புழுக்கூடான இந்த வுடல் அசுத்தமானதென்றும், சலம்-குடர்-மூளை-தசை முதலியன நிறைந்துள்ளனவென்றும், அது நாடோறு மிவ்வித வசங்கிதமாகிய மலமுதலியவைகளைச்சேர்ந்து வளர்ந்ததென்றுமறியாத சிலர் குதிரைமுதலிய வாகனங்களின்மேலேறியுலாவித் திரிந்து தளுக்குசளுக்கு என்கிற வீச்சுகளைக் காட்டித் திடீரென்று ஒரு தினத்தில் தனக்குள்ளிருந்த ஆவி வெளியிற் போக மயானத்துக்குப் போய்த் தீயில் வெந்து ஒரு பிடி சாம்பலாய்ப் போகத்தக்கதை இந்நாளளவும் நீ யறியாயா? வாசுதேவா! நீ அதை நன்றாயோசித்துப்பார். இப்படிப்பட்ட அபாசமான தேகத்தைத் தான் புத்தி தாழ்ச்சியுள்ள நாட்டாள்கள் அதைத்தானென்றபிமானித்துப் பெருமை கொண்டாடித் திரிகிறார்களன்றிப் பஞ்சபூத விகாரமாகிய தேகம் தாங்களல்லவென்று உண்மையினை அறிவார்களில்லை.

## வள்ளலார்சாத்திரம்.

தேகமலேன் பொறியல்லேன் செறிகரண நானல்லேன்
மோகபிரா ணனுமல்லேன் முழுப்பிரம நானென்னச்
சோகமெனப் பாவிக்கிற் சுகமுனிவ வுயிர்த் தடைபோய்
மாகமுறு மதிபோல விளங்குமுன்றன் மதிதானே.

இந்தக் கர்மபூமியில் தோல் எலும்போடு நரம்புகொண்டிடையிற் பிணித்த கொழுந்தசை மெய்ந்த வுதிரச்சிறு புழுக்குரம்பையாகிய அருசியான பூதவுடல் நீர்க்குமிழிபோல நிலையில்லாமலிருக்க அதை நிலையென்று கருதிய ஜீவர்கள் அவிவேகத்தால் மாயவாழ்க்கையாகிய பிரபஞ்ச மோகத்திலாழ்வார்கள். வினையினாலெடுத்த அந்தத் தேகம் மாயா சம்பந்தமான பஞ்சகோசத்தாலுண்டானதென்பதையும், அது நிலையற்றதென்பதையுமறியாது அதை நானென்றபிமானித்து, நிராமயமும் நிஷ்களமும் நிர்விகற்பமுமாகிய சிவபெருமானை ஏற்றித் தொழாமல் மறந்து போவதாகிய மதிகேடான பேதைமைக்குத் தெண்டனையாக வண்டியினுருளையைப் போல் கிழது

மேலதாய்ச் சுழன்றுகொண் டிருக்கப் பட்ட ஜனன மரணத்திற் சுழன்று கொண்டு பலவித துன்பங்களை யச்சீவர்க ளநுபவித்துக் கொண் டிருப்பார்களென்று வேதாக மங்கள் கூறுகின்றன.

வாசகனே! தேகாபாச லக்ஷணமென்னவென்பதைப் பற்றி நாம் கூறுகின்றோம் கேள். பஞ்சகோசத்தா லுண்டான இந்தத் தேகத்தை நானென்றுகூறி அதனிடத்தில் எவன் அபிமானத்தைப் பாராட்டுகிறானோ அப்படிப்பட்ட மானிடன் வீணாய்க்கெட்டுப் போவானென்று அறிவாயாக. பாம்பானது தன்னுடையதோலைத் தானென்றும், பக்ஷியானது தான் வசிக்குங் கூண்டைத் தானென்றும், சொல்லுந் தன்மை யுடையதோ? உடையதன்று. அத்தன்மைபோல், பஞ்சேந்திரியர்கள் வாசமாயிருக்கு முடம்பை சிதாபாசனானவன் தானென்று சொல்வதற் கியாது சம்பந்தமுளது.

திருவிளையாடற்புராணம்.

விடம்பயி லெயிற்றர வுரியும் யி றுறை
குடம்பையுந் தானெனு ங கொள்கைத் தேகொலோ
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வா
ழுடம்பையுந் தானென வுரைக்கற் பாலதோ.

ஒருவீட்டில் குடிக்கூலிக்கிருப்பவன் அந்தவீட்டைத்தன்சொந்தமென்று பாராட்டிச் சொல்லக் கூடாததுபோல, தேகியென்றுசொல்லப்பட்ட ஜீவனாகிய வொருவன் தான் சில நாளைக்கு வாசமாயிருக்கும் இவ்வாபாச தேகத்தைத் தனக்குச் சொந்தமென்று கூறலாமா கூறக்கூடாது. ஆன்மாக்களில ஜகத்து மோகத்தை யடைந்தோர்கள் மாத்திரம் பொந்துபோ லமைந்த விந்தத்தேகத்தை நானென்று கூறுவார்கள். தேகத்துக்கு வேறாகிய ஆன்மா பொய்யுடலாகிய இவ்வில்லத்தில் வாசமாயிருக்கிற தென்பதை யுணரார்கள். எது விஞ்ஞானாநந்த மயமாகிய காரண சரீரத்தையும், மனோமயமாகிய சூக்குமசரீரத்தையும், அன்னமயம் பிராண மயமாகிய தூலசரீரத்தையும் பொருந்தி யிருக்கின்றதோ அதைத் தான் ஆன்மா வென்றும், அல்லது தேகியென்றுங் கூறப்படுவது. ஆன்மா ஞானசொரூபி. அஃது பிரகிருதியாகிய பாச சம்பந்தத்தாற் பசுத் தன்மையை

யடைந்து அவலமாய்ப் போகிறது. ஆன்மா பிரகிருதி சம்பந்தமில்லாதபோது அதுஞான சொரூபியாய் விளங்கும்.

### வள்ளலார் சாத்திரம்.

பாசத்தாற் பசுவெனப் பகரப்பட்டன
பாசந்தா னிரிதரப் பதியெனப்படுங்
காசத்தாற் குருடெனக் கழறப்பட்டன
காசந்தா னிரிதரக் கண்ணெனப்படும்.

பிரகிருதி சம்பந்த முண்டாகும்போது ஆத்மாவினாற் செய்யப்பட்ட பலவித கன்மமானது அவ்வான்மாக்க ளெடுக்கப்பட்ட வுடல்களுக்கு முன்னிலை காரணமாயப் பலவிதமான புசிப்புக்களை யுண்டாக்கியும், நாலுவித சனனங்களை யுண்டாக்கியும், பலபேதங்களை யிருப்பதாயும், அக்கன்மம ஆன்மாக்க ளெடுக்கும் பற்பல ஜன்மங்கள்தோறுஞ் சென்று பொருந்துவதாயு முளது.

இன்னும் இக்கன்மம் வரும் வழியைப்பற்றிக் கூறுவோமகேள். அக்கன்மம் சாதி, வாழ்நாள், புசிப்பு என்னு முறைமையை யுடையதாக வருவழி மூன்று விதமாம். இப்படிவரு மூன்றும் ஓரான்மாவிலே கூடிவருகிறது ஊழ்வினைப் படியாகும். அக்கன்மத்தை யநுபவிப்பது அவ்வான்மாக்கள் முன்செய்த நன்மை தீமைகளின் முறைமையன்றி இவ்விரு வினைகளில் எவ்வினை மிகுதியாய்ச் செய்திருக்கின்றனவோ அவ்வன்மை மென்மைகட் கீடாகவந்து பொருந்தும். அவ்வாறு வந்துகூடுங் கன்மப், ஆதிதைவிகம் - ஆதிபௌதிகம் - ஆதியாத்மிகம் என்னும் வாயிலாகச சுகதுக்கங்களாய்ப் பொருந்தும். இவ்வாற்றால், நன்மை தீமைகளைச் செய்துவருகின்ற ஆன்மாக்கள் மேலு மேலுஞ் சனன முண்டாகைக் கேதுவான கன்மங்களைச் செய்துகொண் டிருக்கும்.

### சிவப்பிரகாசம்.

கன்மநெறி திரிவிதகற் சாதியாயு போகக் கடனதென வரு மூன்று முயிரொன்றிற் கலத்தல், தொன்மையதா மூலதுணை வாகாதாலுந் தொடக்கடைவி னடையாதே தோன்று மாறித், தன்மை

தரு தெய்விகமும் பவுதிகமான் மிகமாக் துகையிறுறு மசேதனசே தனத்தாலுஞ் சாரும, நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவ னுண ணுடலத னுயிர்வினையா தனுகுந்தானே.

வினா—ஐயா! மேற்கூறியபடி ஒருவன் வாடகைக்குக் குடியிருக்கும் வீட்டைத் தன் சொந்தமென்று கூறுவதானது பெரிய பிசகு தான். ஆனால் சீவாபாசன் எதைக்கொண்டு சகல காரியத்தையு நடத்திக் கொள்ளுகிறனோ அந்தச் சரீரத்தை யபிமானித்து அதைச்சொந்தம் பாராட்டி நானென்று சொல்லுவதனாலே கெடுதலை யுண்டாவதற்குக் காரணமென்ன?

விடை—மூலகாரணமாயும், தத்துவங் கடந்த தனிப்பரம் பொருளாகியும், பிரணவ ஸ்வரூபியாகிய நடேசப் பெருமானைத் துதித்துப் போற்றுதற்காக விந்தவுடலை யவரா லுனக்கு இரவலாகக் கொடுக்கப்பட்டிருக்க நீ அந்தப்படி செய்யாமல், புதல்வன் மனைவி யிவர்கள் முதலியவர்களையும், வீடு வாசல் ஆடை ஆபரணம் இவை முதலியவைகளையு மென்னவை யென்றும், தேகிக்கு அன்னியமாயிருக்குந் தேகத்தை நானென்றுங் கூறலாமா?

சசிவர்ணபோதம்.

மனைதாடை பொன்பூண் மகன்றையல் பாய்மா
விபங்கண் முதலான வையா னென்னதென்றுந்
தனதா யுரைப்பா னவருந்திருந்த வூனைத்
நானென் றயர்ந்துஞ் சொலத்தக்க தன்றே.

அறிவானந்தசித்தியார்.

அன்னமய கொண்டெடுத்த வுடல்களு மாயிழையும்
பின்னமுடன் வருபிள்ளையுஞ் சுற்றமும் பேருலகின்
மன்னுநரை திரைமூப்பிணு நோயினு மாளக்கண்டு
முன்னுமறிவி லன்மா விதுவென்று சொல்லுவரே.

வினா—ஐயா! இந்தத்தேகத்திற்குள் தேகி யொருவ னிருப்பதாகக் கூறப்படுகிறதே அப்படிக் கிருப்பதற்குப் பிரமாணமுண்டா?

விடை—பிரமாணமுண்டு, அது எப்படி யென்றால், மதம் பொழியாநின்ற யானையைப்போல் மரத்தா லோருருவஞ் செய்து அதற்குள்ளாக வோர் புருடனின்று நடத்தினால், அது துதிக்கை கால் கண் முதலியன வசைத்து மெய்யானையைப்போல நடக்கும்; உண்ணின்றவன் நடத்தாதபோது சும்மா கிடக்கும். அவைபோல விந்தத்தேகத்தைத்தேகி நடத்தாதபோது பிரேதமாய்க் கிடக்கும்

## ஆத்மபோதம்.

மாக்கையா விற்குள்ளோர் மைந்த னிருந்தாட்டிற்
செருக்கி யதுவாட்டுஞ் செய்கைபோல்—தரிக்குமுட
லொட்டிவா னாட்டிடு லாடுமவ னட்டாக்கா ற
நாட்டம்போ லாகுமிது காண்.

## சசிவர்ணபோதம்.

"கடக்குஞ் சரப்பண்ணி யுண்ணின் றொருத்தன்
கைபாத கன்னங்கண் மெய்போ லியங்கும்
கிடக்கும நடத்தா விடத்திவ் வுடம்புங்
கிடக்கும் மொருத்தன் னடத்தா விடத்தே."

என்பதனுங் காண்க.

இப்படியாகத்தேகத்திற்குத் தேகிவேறாயிருக்க இந்தமாமிஸபிண்டமான தேகத்தை நானென்னலாமா! பஞ்சபூத விகாரமாகிய தேகமுதல் சித்த பரியந்தமும் நீயல்லவென் றறிந்துகொள். தேகம் நீயாயிருந்தால் உயிர்நீங்கி விட்டபின் உன் தேகம் நடமாடாமற் பிரேதமா யிருப்பானேன்? இதை நீ நன்று யோசித்துப் பார். அப்போது தேகம் வேறு தேகி வேறென்று நாம் கூறுவது உண்மையென்று நீ அறிந்து கொள்ளுவாய். உனக்குச் சிவபிரான் இம்மானிட தேகத்தைக் கொடுத்தது தன்னைத் தொழுவதற்கு இரவலாகக் கொடுத்ததென்று மேற்கூறி யிருப்பதற்குப் பிரமாணம்.

## வைராக்கியதீபம்.

கருமமொன் றியற்றப் பிறர்கையிற் கருவி கவர்ந்துளோன் பினுமவர் கொளுமுன், விரைவினண் ணியசெய் யாதுமற் றதையே மிகச்

சிறப்பித்துநோக் குதல்போல், புரையில்வீட் டின்ப மடைகுவா னதற்குப் பொருந்திய வருந்தவஞ் செய்யா, தொருகண மேனு நிலையிலில் வுடலை யொப்பனைச் செய்துநோக் குதலே.

வினா. ஐயா? வீட்டின்ப மடைதவதற்கு உடலைக் கொடுக்கப் பட்டதென்று சொல்லுகிறீர் அவ்வுடலைக் கொண்டு சிவனாரை யெப்படித் தொழுகின்றது.

விடை. அடியிற் கண்டபாட்டிற் கூறியபடி தொழவேண்டியது.

சிவஞானசித்தியார்.

பனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
வினமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம்போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கு
முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே.

விஷயங்க ளிப்படி யிருக்க அஞ்ஞானிகளாகிய தேகாபாசர்கள் தேகங் கிடைத்தற் குண்டான காரணத்தையும், அதனா லுண்டாகுந் துன்பத்தையும், அதனாலுண்டாகும் அவலக்ஷண மான அருசியையும், அதன் அனித்தியத்தையும், பாசத்தொடர்பாலப் போதைக்கப் போது வேறுவே றுடலாய் மாறிவருவதையு மாராய்ச்சி செய்யாமலும்; அநாதி நித்தியஸ்வய சுபாவ பிரம்ம மாயும், அகண்ட சுத்த பரமாத்ம பிரமேஸ்வர மாயும், சிவசொரூப மாயும் விஷ்ணு சொரூபமாயும், பிரமதேவஸ்வரூபமாயும், சுகுண தரிசன திரிஸ்வரூப பாவாகாரமாயும் விளங்கிச சர்வத்வ கோலாஹல சிருஷ்டியாதிய பஞ்சகிருத்தியத்துடன் தில்லைச் சிற்சபையில் நிர்த்தனஞ் செய்கின்ற நித்திய வஸ்துவான சிவபெருமா னாகிய பசுபதியைப் போற்றித் தொழுது அவனுடைய கமல மலர் போன்ற பாதங்களை யடைய முயற்சி செய்யாமல், உண் டுடுத்த லாகிய இன்பமே போந்த நெறி யென் றெண்ணிக் காம போகத்தை விரும்பி ஒருநாள்புசித்த வுணவையே மீண்டு மீண்டும் புசித்து ஒருநாள் கண்ட காட்சியையே மீளவுங் கண்டு, ஒருநாள் கொண்ட கோலத்தையே மீளவுங் கொண்டு, அதிற் களிப்புற்று, வாழ் நாட்களை வீணாட்களாகக்கழித்து மாண்டு போவார்கள்! இப்படியாக

அஞ்ஞானிகளாகிய சிதாபாசர்க ளிறக்கிறதும் பிறக்கிறதுமாயி ருப்பார்களே தவிர ஜனன சாகரத்தைக் கடக்க முயற்சி செய்யார்கள். இவர்களுடைய நோக்க மெல்லாங் காமவிஷயங்களையே பற்றிநிற்கும்.

ஞானவாசிட்டம்.

"உண்ட வினையே யினியு முண்கின்ற தென்றுகொண்டாட
கண்ட காட்சியே யினியுங் காண்கின்ற துவந்து
கொண்ட போகமே யினியுங் கொள்கின்ற தென்று
விண்ட மேலவா நாளுமொழிவிலா தெழுந்தது"

அரசனு யிருந்தாலும், தலைவனு யிருந்தாலும், தாழ்ந்த சாதி யென்று சொல்லிக்கொண்டு திரிபவனு யிருந்தாலும்; எவன் அசுத்த துக்கமாயுள்ள தேகமும், அதனைச் சார்ந்த இந்திரியாதி கரணங்களும், அத்தேகத்துக்கு இடமாயிருக்கின்ற புவனங்களும், அவைகளினின்று புசிக்குஞ் சப்தாதி விஷயங்களாகிய போகங்களும், அவைகளைப் புசிப்பதற்குக் கருவியாயிருக்கும் தசேந்திரியங்களும், இளமையும், செல்வமும், உயிர் சமானமாயுள்ள குடும்பங்களுமாகிய பலவகைப்பட் டிருக்கின்ற தேகாதிப் பிரபஞ்ச வாழ்வுக ளனைத்தும் நித்தியமென்று நம்புகிறானோ அப்படிப்பட்டவன் ஞானத்துக்கு விரோதியாயும், அஞ்ஞானத்துக்கு நேசனாயு மிருப்பான். இப்படிப் பட்டவன் அநாதி கேவலத்திற் களிம்பு தோய்ந்த செம்புபோ லழிவின்றி அஞ்ஞானத்தில் மூழ்கிக் கிடக்கும் ஆன்மாக்களில் ஒருவனாயிருப்பான். இவன் எஞ்ஞான்றும் காமபோகங்களை யனுபவித்துக்கொண்டு அனந்த கோடி ஜனனங்களில் நொந்து நொந்து துன்ப வெள்ளத்துள்ளே துளைந்து அவதிப் பட்டுக்கொண் டிருப்பான். பாசபந்தவலையி லகப்பட்டவர்கள் யாரோ அப்படிப்பட்டவர்களெல்லாம் பிறக்கவு மிறக்கவும் நரகவேதனைக்கு ளழுந்தவும் ஆளாயிருப்பார்கள்.

சிஷ்—ஐயா! தேகத்தைக் கொண்டு உலகத்தார்கள் சகல காரியங்களையும் நடத்திக் கொண்டு அதைப் போஷித்துப் பெரு

மைப் படுத்திக்கொண்டிருக்க அதை அநாசார முள்ளதென்று கூறி நிஷேதப்படுத்துகின்றீரோ அதெப்படி யிழிவாய்ச் சொல்லக் கூடுமே ?

விடை. அது தேகத்திற்கு இடமாயுள்ள அநாசாரத்தைக்கொண்டு அப்படிச் சொல்லவேண்டியிருக்கின்றது அசுத்தமாகிய அதன் ஆசாரம் யாதென்றுவினவில சொல்லுகிறோம் கேள்.

உலகாம்பிகைதுதி.

ஒன்று மலச்சொடி லொன்பது பிறவெவ் வொன்பதினு
நின்று மலர்செடில விழிமெங் கேமுற நீர்வட் டன்றைக்
கன்றுதுடைபயினும் போகாது பார்த்த வருவருப்பை
யென்று துடைப்ப துலகேகநாத பதிநுன்றே.

திராவிடமாபாடிய முனிவர்.

பந்தவுடல வீண்பாடு பட்டவுடல் சீசீதூர்ந்
சந்தவுட லொன்றுக்கா காதவுடல்—விந்தவுடல்
வைத்துப்பார்த் தென்ன வலிய வுயிர்மாய்த்துச்
செத்துப்போ னுடனல்லதே.

நாலடியார்.

தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்ம்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானுல்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாகு மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும்.

மலமும் புழுவு நிறைந்த புலால் நாற்ற மிக்க பொருளாகியு மிருப்பதனாலே இத்தேகமான வில்லத்தை ஆபாசமென்று கூற லுற்றோம்.

திருவாசகம்.

பொத்தையூன்சுவர் புழுப்பொதிந்துளுத் தசும்பொழுகிய பொய்க்கூரை, யித்தைமெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்த

லைப் படுவேனை, முத்துமாமணி மாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி, யத்தனாண்டுதன் னடியாரிற்கூட்டிய வதிசயங் கண்டோமே.

## தேவாரம்.

கால்கொடுத் திருகையேற்றிக் கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிரநீராற் சுவரெடுத் திரண்டு வாச
லேல்வுடைத் தாவமைத்தங் கேழுசா லேகபண்ணி
பால்கொடுத் தாவிவைத்தார் மாமறைக் காடனாரே.

## இதுவுமது.

என்பினாற் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந் திதுநம் மில்லம்
புன்புலா னாறுதோல் போர்த்துப்பொல் லாமையான் முகடுகொண்டு
முன்பெலா மொன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கி டாதே
அன்பனாரூர்தொழு துய்யலா மையல்கொண டஞ்சனெஞ்சே.

## சிவதருமோத்தரம்.

பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிந்த போர்வைதனை
நில்லாத நீரெழுத்தை நிகரிலிதன் றிருவாக்கைக்
கல்லாதார் பொருளெனவே காண்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் பொருளாக வொருகணமு நாடாரே.

## இதுவுமது.

தன்னுடலந் தருவருப்பைத் தானறிந்துஞ் சரீரத்து
ளென்னிருப்பா மெனத்துளங்கி யிளையாத விழுதைக்குப்
பன்முறையா னுடற்பழுதைப் பாடித்தும் பயனில்லைச்
சொன்னிரையிற் றுணிவாரோ காட்சியினிற் றுணியாரே.

## இதுவுமது.

பொற்கடத்துண் மலம்பொருந்திற் புல்லியரும் பொருணசை
லக்கடத்தைப் பற்றிவிடா ரங்கையினு லதனிதனின் [யா
மக்கடம துடலினைத்தா மலபாண்ட மெனவறிந்து
மெக்கணத்தா விகழாதே யருவருப்பற் றிருக்கின்றார்.

## இதுவுமது.

அருந்திடுமை யமிர்தனை மலமாக்கு மலவாக்கை
பொருந்திடுமோ நலமுனிப் பிரத்தத்திற் பொருந்திடினும்
விரிந்தசுருங் காபளத்தின் வெள்ளைநிறம் விளங்கிடுமோ
சொரிந்திடினு மான்பாலை யொருபொழுதுந் துறவாதே.

## தணிகைப்புராணம்.

தானியங் கடமே யாயினும் பல்லித் தங்குமின் விழைஞரும் பற்று, தமிழ்தமே யானாக துய்ப்புறப் பல்லி யாக்குமில் வுடற்புக ரதிந்து, மிழிந்தாப்ப பற்று மடவருந் துரைத்து மென்பயன் றீர்க்கு மா டிடிறு, முமிழ்முறை யாகனை அசிபுரு திறைமவ னுண்மைநேர்ந் துயிர்சுத்தி யுருவே.

இந்தயாக்கை யேயாகுமெப்படி புண்புலால் காயுந் தோலால் மூடப்பட்டு குடல், இரைப்பை, மலம், மூத்திரம், இரத்தம், சீழ், முதலியன நிறைந்தவையாயிருப்பதுடன் வாதநோய், சூலைநோய், தலைநோய், முதலிய வனந்தையு முடையதா யிருக்கின்றது. இப்படியிருப்பதுடன் இன்னும் அதனுடைய ஆபாசத்தை யெடுத்துக் கூறுகிறோம் கேட்பாயாக.

## பட்டினத்தடிகள்.

ஆணவ மலத்துதித் தலைந்ததி லுலைந்திடு
நினைவைப் புழுவென நெளிந்திடு சிந்தையும்
படிறும பாவமும் பழிப்புறு நினைப்புந்
தவறு மழுக்காறு மிவறுபொச் சாப்புங்
கவடும் பொய்யுஞ் சுவடும் பெருஞ்சின
விகலுங் கொலையு மிழிப்புறு புன்மையும்
பகையு மச்சமுந் துணிவும் பனிப்பு
முக்குண மடமையு மைம்பொறி முயக்கமு
மிடிமையும் பிணியு மிடுக்கிய வாக்கையை
யுயிரெனுங் குருகுவிட் டோடுங் குரம்பையை
யெலும்பொடு நரம்புகொண் டிடையிற் பிணித்துக்

கொழுந்தசை மேய்ந்து மொழுக்குவிழுங் குடிலை
செழும்பெழு வுதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவுடற் குடத்தைப் புலவுடற் புட்டிலை
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்
கொலைபடைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்
சலிப்புறு வினைப்பல சரக்குறு குப்பையைக்
கோட்சரக் கொழுகும் பீற்றற் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் றுருத்தியை
யைம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தைப்
புலராக் கவலை விளைமரப் பொதும்பை
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரத்தைக்
காசிற் பணத்திற் சுழலுங் காற்றாடியை
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்
கடுவெளி யுருட்டிய சகடக் காலைப்
பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத் தலைப்பக்
கெடுவழிக் கரைசேர் கெடுமரக் கலத்தை
யிருவினை விலங்கொடு மியங்குபுற் கலனை
நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையை

இதுவுமது.

ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
யேற்றுத் திரிந்துவிட் டேனிறைவா கச்சி யேகம்பனே.

நாறுமுடலை நரிப்பொதி சோற்றினை நான்றினமுஞ்
சோறுங்கறியு நிரப்பிய பாண்டத்தைத் தோகையர்தங்
கூறுமலமு மிரத்தமுஞ் சோருங் குழியில்விழா
தேறும்படி யருள்வா யிறைவா கச்சி யேகம்பனே.

நெஞ்சுவிடுதூது.

கொண்டதொரு காமனுக்குங் கோபனுக்கு மோகனுக்கு
மண்டு மதமாச் சரியனுக்குந்—திண்டிறல்சே

ரிந்திரியம் பத்தநத மீரைந்து மாத்திரைக்கு
மந்தமிலாப் பூதங்க ளைந்திலுக்குஞ்—சிந்தைகவர்
மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றுமல மூன்றவத்தை
யென்றுநிலை யாயுமி ருவினைக்கு—தோன்றுந
வாயுவொரு பத்தாந் தபாறு நலவினையே
யாயவிளைந் தமருந்திநக—நேயமா
மிசையை கிரியை யிவைதரிக்குந் தெண்ணரிலா
வசசய கொடுமை யனைவூணமு—காசவல
சிரிணிலை நிலலாமற் றிண்டாடும பலகருவி
வாரி யகப்பட்டு மயங்கினேன்.

தேகத்தில யாதொரு ருக்கமுமில்லாத மலமுதலிய ஆபாசங்கள் நிறைந்திருப்பதுடனவா நோய்முதலியன வாசமாயிருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றதல்லவா? அப்படிப்பட்ட வியாதிகளின் விபரத்தை யெடுத்துக் கூறுகின்றதென்றால் சாத்தியமான காரியமாயிராது.

தத்துவாமிர்தம்.

பிணிகளுங் கவலையும் பேசினேழுகட
லணைதரு மணலினு மனந்த கோடியா
யிணைதரு பிறவியி லிடரலா தொரு
கணமது மிலதெனக் கண்டு நொந்தனன்.

இப்படிப்பட்ட வியாதிகள் உண்டாவதற்குக் காரணம் யாதென்று வினவில், அஷ்டமூர்த்தமும், அவற்றினுக்குப் பரமாகி யுள்ளவும், வாக்குக்கு, மனத்திற்கு மெட்டுவனவு மெட்டாதனவுமாயும், பூலோக புவலோக சுவலோகமாயும், பூதங்களாயும், பூரணநாதனும், உலகமியாவு முயிர் பலவுந் தானும், அந்த ஆன்மகோடிகளின் யோக்கியதைக்கு வேறுபடி யாட்டி வைக்குந் தெய்வமாகிய சிவபிரானும், இடபக்கொடியை யுடைய கைலாசபதியாயும், வெள்ளிய விளம்பிறையினை யணியுஞ் சடாமகுடத்தை யுடையவனும், நிட்களனும், அடியவர் பொருட்டுச் சகளீகரித்துத் தோன்றும் நடேசப் பெருமானும், சைவ நாயகனும், அடியார் பிறவிக்கட்டையை யடியோடே கொளுத்துபவனும், மறை முடிக்கு

பெட்டாத மலரடியோனையும், மன்று சிற்றம்பலத்து மாணிக்கக் கூத்தனையு மிராநின்ற சிவபிரானைத் தொழுது போற்றாமலும், சிவபுண்ணியங்களைச் செய்யாமலும், சிவதருமத்தின் முறைமையை யறியாமலும், மாயையினால் வரு மயக்க விகற்பங்களினா லுண்டாகு மோகாந்த காரமான லௌகிக காரியங்களைச் செய்து அதனா லுண்டாகும் கொடும் பாதக வாயிலாய் வந்த பலவித வியாதிகளால் துன்பப்பட்டுக் கடைசியாய், இத்தேகத்தைவிட்டு யாதனா சரீரத்துட னியமபுரிக்குப் போகையிற் கொடியவியமதூதர்களால் மூக்கிற் பாசக் கயிற்றைக் கோத் திழுத்தும், உதைத்தும், குத்தியும், பலவிதமான பயங்கத்தையுந் துன்பத்தையுந் துயரத்தையு முண்டாக்கித் தீவினைப்பயன் பலிக்கு மெல்லையாகிய யமலோகத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பார்கள்.

தம்மிடத்திற் பெரியோர்கள் வருங்காலத்தி லெதிர் கொள்ளல் பணிதல் முதலாயினவைகளைச் செய்யாதிருக்கும் பாவிகளையும், வேதாகமங்களிற் சொன்னவழி நடவாதவர்களையும், புண்ணியங்களைச் செய்யாது கொடிய பாவங்களைச் செய்த பாதகர்களையும், எமலோகத்திலெமகிங்கிலியர்கள் தங்கள்யஜமானாகிய யமதர்மராஜனுத்திரவின்படிக்கு ஆயுதங்களாற் குத்திக்குத்தி கோபிப்பார்கள். உப்புநீர் முதலிய கார நீரையும், அக்கினிக் குழம்பையு மேலே தெளிப்பார்கள். சரீரமெங்குஞ் சின்னஞ் சின்னமாக வரிந்து எண்ணெய்க் குடத்துக்குள் ளடைத்து வேகவைப்பார்கள்.

எமதூதர்கள் சில பாவிகளைச் செக்கிற்போட்டு எள்ளுப்போல வரைப்பார்கள்.

எமதூதர்கள் சில பாவிகளைக் கூரிய வாயினையுடைய இருப்பு முளைகளை யவர்கள் கழுத்தி லுள்ளிறங்க வடித்துப் புறம்பே பொருந்திய இருப்பாணி வளையத்திற் சங்கிலியைப்பூட்டி இரண்டிருப்புத் தூணை நாட்டி யதன்மே லுத்திரத்தைப்போட்டு அதனடுவே நூறு வருடங் கிடக்கும்படி கட்டித் தூக்கிக் காலுங்கையு மிரண்டு புறத்திலும் பறக்கத்தக்கதாக விடுவார்கள்.

## சிவதருமோத்தரம்.

அறைந்திடுவா ரடியவா யிருந்தபுருஷனை யவர்பிடப்புறம்
புறம்புறமா யானிலனைச் சிருங்கலியையப் பூட்டிடுவர்
சிதைந்தவா விருந்தபாக் கிடைநகலையிற் செறிந்திடுவர்
பறந்திடவே பதுமபாணி பக்கமுறப் பயிற்றுவரே.

இவ்விதத் தெண்டனையானையுந் துன்பம் எதற்கொத்திருக்குமென்றால், ஒருவன் இவ்வுலகத்தில் மற்றவொருவனைக் கொன்று போட்டதற்காக அவனைத் தூக்கிப் போடுவதாலுண்டாகுந் துன்பத்துக்குச் சமானமாக விருக்கும். அல்லது பெருங் குற்றஞ் செய்த வொருவனை முள்ளு மரத்தியிற் போட்டு ஒரு நாள் முழுதும் முறுட்டிக்கொண்டுபடுந் துயரத்துக்குச் சமானமாயும், பெரியதொரு செம்புப்பாத்திரமதை யடுப்பின்மேலேற்றி யதனுள்ளொருவனிருத்தியே போட்டு அதன்வாயைமூடித் தீ மூட்டினால் அதற்குள்ளிருப்பவன் படுந் துயரத்துக்குச் சமானமாயும், ஒருவன் பீஜத்தில் ஈயக்குண்டுகளைக் கட்டி யானையோடேபடி யடித்தால் அவன் படுந் துயரத்தைப் போலவுமிருக்கும். இவ்வுலகத்தில் மானிடராய்ப் பிறந்தவர்களில் யார் தருமத்தைச் செய்யாமலும், வேதாகமங்களை யோதி யதனாற் பதிமுதலிய வுண்மை ஞானத்தை யுணர்ந்துயிர்க்குயிராகியும், அயபவத்தை நாடுவோராகிய பிராகின்ற சிவபிரானது போதங்களை யடைதற்குரிய தவத்தினைச் செய்யாமலும், சரீரத்தையும், மடவார் முதலிய பொருள்களையு நிலையென்று கருதிப் பாவத்தையே செய்து வருபவர்கள் யாரோ அப்படிப்பட்டவர்கள் மேற்கூறிய படி நரகவேதனையை யடைவார்கள். இப்படிப்பட்டவர்கள் தங்களுடைய ஆன்மாக்களுக்குத் தாங்களே வஞ்சகஞ்செய்தவர்களாகிறார்களென்று கூறப்படுகிறது.

## சிவதருமோத்தரம்.

வேத நீதி விளங்குமிவ் வெல்லையு
ளோதி யுண்மை யுணர்ந்துயி ரொன்றிய
வாதி பாத மடையு மருந்தவஞ்
சாதி யாதவர் வஞ்சகர் தாமரோ.

வினா—ஐயா! மானிடராகப் பிறந்தவர்கள் தவத்தினைச் செய்யாமற்போவதினாலேயே தம்முடையவான்மாக்களுக்குத் தாமேவஞ்சகஞ் செய்தவர்களாகின்றார்களென்றதெப்படி?

விடை—கரியமாலொடு நான்முகனுந் தேவரு முனிவரு நெருங்கி நின்றுதுதிசெய்ய மணிநிறைந்த சோலைகள் சூழ்ந்த தில்லை மணிமன்றுள் பஞ்சகிருத்திய நடாத்தும்பொருட்டு நித்தியானந்தத் திருத்தாண்டவஞ் செய்கின்ற கடவுளாகிய சத்துவாந்த தனிப்பர தற்பர சிவபிரானுமாகிய நடேசப் பெருமானைப் போற்றித்தொழாமற் புலன்களைப் புறம்போகவிட்டுப் பொல்லாப் புலையுடலை நில்லாதென்றுணராது நேரிழையார்களின் வாரணிந்த கொங்கையால் மயங்கிக் கொடிய காமாந்தகாரத்தில் மூழ்கித் தேகாந்தத்தில் யமயாதனைக்குரிய நரகபாதனைக்கு ஆளாவதனாலே தங்களாத்மாவுக்குத் தாங்களே வஞ்சனைசெய்துகொள்ளுகின்றார்கள்.

வினா—ஐயா! தேகத்தை அநித்தியமென்று பேசுகூறியிருக்கின்றீரே, அதன் விபரம் யாது?

விடை. அன்பனே! இத்தேகமானது தானாகவுண்டாக்கிக்கொண்டதா? பிறரொருவரா லுண்டாக்க வுண்டாயிற்றா வென்று முன்பு யோசனை செய்ய வேண்டும். தானாகவுண்டாக்கிக் கொண்டதெனில், அதனுள் வாசமாயிருக்கும் ஆத்துமாவைப்போலத்தேகம் என்றும் நிலையாயிருக்கவேண்டும் அப்படியன்று. தேகமோவென்றால் ஆன்மாக்கள்செய்த கன்மபலத்தை மீளவுமநுபவிக்கும் பொருட்டுச் சர்வசாக்ஷிகாருணியனாகிய சிவபெருமான் தமதருட்சத்தியால் மாயையினின்றுங் காரியப்படுத்த வந்த தோற்றமாகும் இஃதெப்படியெனில், குயவன் மண்ணைக்கொண்டு தண்டசக்கரங்களாற் குடத்தைச்செய்தல் போலவாம். ஆதலால், ஒருவன் காரியப்படுத்துபவைகளெல்லாம் எக்காரிய நிமித்தஞ்செய்தனனோ அஃது முடிந்துவிடின், அக்காரியப்பாடு அழிபொருளன்றி நிலைபொருளன்று. இத்தேகமு மவ்வாறே ஆன்மாக்கள் முற்செய்த கன்மப்புசிப்பு வரையினுங் காலவரையறைப்படியிருந்து பிறகழிந்துவிடுவது பிரத்தியக்ஷப்பிரமாணமாதலால் அநித்தியமே.

## பட்டினத்தடிகள்.

வினைப்போக மேயுறு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால்
தினைப்போ தளவுநில் லாதுகண் டாய்சிவன் பாதந்தனை
நினைப்போரை மேவு நினையாரை நீங்கிந் நிலையினின்று
தனைப்போ லொருவருண் டோமன மேயெனக் குற்றவரே.

## சிவஞானசித்தியார்.

முற்செயல் விதியையிங்கு முயற்சியோ டனுபவிக்கா
னிச்செயல் பலிக்குமாறெ னிதம்பகில் தங்கண் முன்னை
யர்ச்செய லொருவிருக்கு மவைசெயின் மேலைக் காகும்
பிறசெயா தனுபவிப்ப தின்றாயின் றொடருஞ்செய்தி.

அன்பனே! இத்தேகப் அநித்திய மென்று கண்டு நிற்பதற்குப் பிரமாணங் கூறுகின்றேம் கேட்பாயாக.

## சிவஞான சித்தியார்.

கருவினு ளழிவதாயுங் கழிந்திடா தழிவதாயும்
பரிணமித் தழிவதாயும் பாலனா யழிவதாயுந்
தருணனா யழிவதாயுந் தானரைத் தழிவதாயு
முருவமே யழிவ தாகு முள்ளபோ தேபா ருய்ய.

## நாலடியார்.

புன்னுனி மேனீர்போல் நிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப்படுத லான்.

## இதுவுமது.

மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினா ரிவ்வுல கில்.

### திருக்குறள்.

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

அன்பனே! சிதாபாசர்களாகிய ஜீவர்களில் அனேகர் பகடா சூரனைச்சயித்தகாளியாகிய பார்வதியைவாமபாகத்திலேவைத்திருக்கும் சிவபிரானதுவைராக்கியவிலேயுடைய பொற்பாதங்களைமெய்ப்பொருளென றுந் தங்களுடைய பொக்கிஷ மென்றும் நினைத்து அதை யடைய ஆசை கொள்ளாது ஊழ்வினைச் சேட்டையால் இந்த தேகத்தைத் தன்னுடையதென் றபிமானித்துத் தற் குறைந்துகொண்டு, அவமாய்ப் போகிறார்களே. உடல் அவர்களுடைய தானால் நாய், நரி, நமன், பிதா, அக்கினி, மண் இவைகளெல்லாம் அதைத் தங்களுடையதென்று கூறுகின்றதே அப்படி கூறுவானேன்.

### திருவிளையாடற் புராணம்.

நாய்நம தெனநரி நமதெனப் பிதா
தாய்நம தெனநமன் றனதெனப் பிணி
பேய்நம தெனமனை மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே.

அன்பனே! இதுகாறும், அநித்திய வஸ்துவாகிய தேகத்தின் அநாசார அவலக்ஷண அசுசியாகிய அபாசங்களைக் கூறினோம். இனி இத்தேகத்தால் தேகியானவனடையுந் துன்பத்தைச் சொல்லுகின்றோங் கவனித்துக்கேள்.

### மகாராஜாதுறவு.

அரங்கையதனை யொழுங்காக வரையக்கேளீ யவனியெல்லாம்
பரந்தசிருட்டி திதியொடுக்கம் பண்பாய்நிகழுஞ் சிருட்டிதனில்
பொருந்துபெரிய துன்பைந்து போய்மாண்டுறில தெண்மடங்கே
யிருந்ததிதியு மிரண்டாகு மிளமையென்று மூப்பென்றும்.

### இதுவுமது.

விருத்தபருவ மிகத்துன்பம் விளங்குமிளமை யிரண்டவையில்
வருத்துபிணியின் மிகத்துன்பம் வளமையிளமை மூன்றாகும்

கருத்தகத்தியாக் குழந்தையென்றுங் குமாரனென்றுங் காளையென்று மந்தகமதியா தந்துன்ப மடையும்பாலப் பருவத்தில்.

இதுவுமது.

தந்தைதாய ராசிரியர் தாங்கண்டு முனிதனா லகப்பசிச்
சிந்தைநலங்குன்ற கவுமாரன் சிறந்ததாயோப் பருவத்தின்
முந்துபசிநோய காமநோய முதிர்ந்தகனிக்கசப் பொருட்டே
இந்தப்புவனத் திரவுபக லிடையாறுத தொழிற்றுன்பம்.

இதுவுமது.

பொருளுண்டாகிற் காப்பதனாற் பொருள்தந்து துன்பமரசாதி
யொருத்தம்பித்துதத பொசரா றுதவுந்துன்ப பொருளுடைக்கிழ்
நிருபனுகி நேயுயாரண நேந்துமென றமாயய நதாணும்
வருவதெத்தேயோ பறுமைமினி யென்னுறுப வாடித துன்புறுமே.

இதுவுமது.

மாகாக்கநரா பகையுளது மகிழ்ச்சிவாட்ட மிகவுமுள
ராகத்தகலா நோயுமுள தளங்களுளது நகையுளது
போகத்தமுந்தன் மிகவுளது பொன்றலுளது கற்பத்தே
சோகத்திறங்க ளிவையுடைய துறக்கத்தென்னை சுகமுளதே.

இதுவுமது.

தேவர்மனிதர் துன்பத்தின் றிறங்களிவ்வா றுகியிடி
னெவர்பூர மிருகமுத லசரம்முறு மைவகையி
லொலவலிலனாத் துன்புகநோ ருவனாயிலலை நிரயத்தி
னுவதுன்பஞ் சொல்வதென்னை நோயேபவத்திற் சுகமிலதே.

விவேகியா யிருப்பவர்கள் மேற்கூறிய தேகத்துக் குண்டான அருசியையும், அதின் அநித்தியத்தையும், ஜீவன் மருள்வடிவா யிருக்கும் வரையில் துன்பமன்றி யின்பத்தை யடையா தென்பதையு மறிந்து கொண்டு சிவபிரானைப் போற்றவேண்டும்.

இத்தேகம் தாயினது கருப்பத்தின் கண் உற்பவியா நின்ற காலத்திலும், ஸ்திதி காலத்திலும், லய காலத்திலும் பெரிய துன்

பமே யன்றி ஒரு காலத்திலுவது இன்பமே யில்லை இதற்குச் சுருதி வாயிலாகப் பிரமாணங் கூறுகிறோம், கேள்.

சிவதருமோத்தரம்.

கருப்பா சயமே கட்டமதா மதனி னதிகங் கடுங்கானு
முருக்க மிகவு மோகமுற முன்னை யுணர்வு மகநிலையே
மரிக்க வாலைக் கருப்பெனவே யோனி வழியின் வழிதொலைய
நெருக்கப் பட்டு நிலமிசையே தோன்று முயிரு நிலையுடனே.

என்றென் றென்று மிருந்தமுயி ரிடாபட் டழியு மெழில்வரைக்கி,ழொன்று மொருவன றனைபபோலக் கருப்பா சயப்பை யுறுத்துதலான், மன்ற வுதகி மறிந தாழ்வான் வருத்த மென்ன வருந்தியிடு, நின்ற கருப்பா சயவுதக வெள்ளங் கொள்ள நிறையழிந்தே.

அங்கி யதனிற் றங்கியிடு மயோமயத்த கும்பததிற்
றங்கு மொருவன் றபனம்போற றபனமெய்து தாயுதரத்
தங்கிடவே யழலனைய குசிய ரறு லாகதனைப்
பங்கித்திடவே படிமிடரி னிருநாற் குணிதம பட்டழுங்கும.

(வேறுகவிகள்.)

கருவிடை யழுந்துந் துன்பமு நிலத்தின் கண்ணுறுமக் கொடியவெங் கோயான், மருவுவெந் துயரு நரைதிரை யெய்தி வருந்திடுந் துன்பமுங் கூற்று, முருவினை யொருவுந் துன்பமு மீட்டுங் கருக்குழி யொன்றுறு துயரும், வெருவர வெண்ணி யின்பமீ டதனை மேவநன் குணர்தலே வேண்டும்.

வந்திடு மரணத் துன்ப மறித்துரை செய்யப் போமோ
வுந்திமே லையும் பித்து முணர்வொடு பொறி கலங்கி
சுந்திடா விருளே மூடி நாவுலர்ந் தலமந் தென்னே
யிந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்ம டங்கே.

பரண மாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டு தங்கையிற் றந்த
விரண மானவை கொண்டிட விவரை விட்டியம் பிடாதிவ னேகு
மரண வேதனை யாவரா லறியலா மயங்கி யைம்புல னந்தக்
கரணம் யாவையுங் கலங்கிட வருந்துயர் கடவுளே யறிகிற்பான்.

உயிர்கள்போல மெய்நாம மெழுந்தான் றளர்ந்துள்ள மெழுகி
நெறியை நோக்கிக் கண்கூழன்று நின்று நடுங்கா முன்
அறுதியாகி னைநாயன்பா யாயிர நாமஞ் சொல்லி
வெறிகொள் வண்டு பண்கள் பாடும் வந்தி வணங்குதுமே.

உடலிற்றா யுடைக்கொளாப் பொருந்துயரமாய்ந் துறுகணைத் துயரி னெண் மடங்கா, மிடையுள திதிக்கட் பொருளைப்பறிபோவங் கிளமையிற் பிணியுறு விடத்தும், விடல நம் பசிநோய் காமநோய் தணிப்பான் மிகுபொருடேடுத றுயரின், டடையினு மதனைக் காத்துத றுயர்வேந் தாயினு மிகுநராற் றுயரே.

இவ்வண்ணம் தேகம் எடுத்த நாண்முதல் இறக்குநாள் காறும் துன்பமயமா யிருத்தலன்றி யின்பமயமா யிருத்தலைக் காணேம். ஆதலால், வாசுதேவா! அஞ்ஞானமாகிய மலத்திரயங்களின் வலிவால் தேகத்தை நானென்று அபிமானித்து உலகத்தில் தனத்தையுங் கனகத்தையும் விருப்பி மிகவும் அதிகாரஞ்செய்து வேண்டிய சம்பத்தை யடையவேண்டிய தென்பதாக ஆசை கொள்ளாமல் ஜீவபோதம் நஷ்டமாகும்படி நீயார் உனக்குப் பதியாரென்று விசாரித்துவா.

## வள்ளலார்சாத்திரம்.

நாமார் நமக்குப் பதியா ரெனவரு ஞானங்களே
மாமாயை கன்ம மலத்திரள் மாற்றிடு மாற்றிடலுந்
தாமாய முழுதுஞ் சத்திய ஞானத்தைச் சார்வனென்றான்
காமாக்ஷி யம்மைக கினியபிரான் கச்சி யேகம்பனே.

வாசுதேவா! நாம் தேகநிலைமையோ டிருந்து பொருள் சம்பாதித்த காலத்து வெகு சிரத்தையாய் உபசரித்துவந்த பந்துக்கள் முதலானவர்கள் நாம் சம்பாதியாது வியாதியினு லவஸ்தைபட்டுப் படுத்திருக்குங் காலத்து நம்மைக் கவனியார்கள், இது நாம் உலகத்திற் கண்டறிந்த விஷயமே யாதலின், அதனுண்மையை மனதிற் கொண்டு நாமே பரீக்ஷித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளுமாறு காத்திராமல், சம்பாதிக்குங் காலத்திருந்து பந்துக்களின்மீது பற்று வையாது அவர்களை நம்மை யாதரிப்பா ரென்று வீணெண்ணங்

கொள்ளாது தெய்வமே தனக்குப் பந்து, தெய்வமே அபத்பாந்தவர், அவரே ஆதரவு; பந்துக்க ளென்போ ரனைவரும் நமது கைப்பொருளை யபகரிக்க வந்தவர்கள். அவர்களை நம்பலாகாது, நம்பிக் கெடலாகாது; உற்றபந்து ஒருவனே, உறுந்துணை யொருவனே யென்று தெளிந்து அவனையே, அந்தத் தெய்வத்தையே சரணமடைந்து உய்யவேண்டும்.

வாசுதேவா! யார் பூர்வ ஜனனங்களிற் செய்த மகா பாதகக் கூட்டங்களின் வல்லபத்தால் இந்தேகத்தை நானென்று அபிமானித்து மலயத்துவச பாண்டிய ராசன் மருமகனுகிய சௌந்தர பாண்டியனெனும் பெயர்பெற்ற சிவபிரான் திருவடியையடையத் தவறிப் போகிறார்களோ அப்படிப்பட்டவர்கள் பிறவி நோயி லிருந்து மீளார்கள்.

வெண்பா.

யானென தென்னு மிவைகழன்று வந்துசிவ
ஞான குருவை நணுகிலோ—மானிடர்தம்
பொல்லாப் பிறவிநோய் போமோ வரினுநிலைத்
தெல்லாக் கடவுளரு மின்று.

யார் இந்த வுடலை யபிமானித்து அதைத்தன்னுடைய தென்று கூறிக் கைப்பற்றுகிறாரோ அப்படிப்பட்டவன் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஆசாரியன் கொள்ளும்படி விரும்புவானுகில் அவனைத் தான் உண்மையான முமூட்சு வென்று சொல்லப்படும்.

திருப்போரூர் சந்நிதிமுறை.

எனதபிமா னம்பிடித்த விந்தவுட லாதி
யுனதபிமா னம்பிடித்தா யுற்றே—னெனதாகக்
கொண்டேன் மயக்கங் குலையுநா ளெந்தநாள்
கண்டே போரூரா கழறு.

எவர்கள் மேற்கண்டபடியாக உடல் பொருள் ஆவிமூன்றையும் ஆசாரியாருக்கு ஒப்பித்து விடுவார்களோ? அவர்கள் பவந்தோறு மீட்டிய கொடும்பாதகங்களி னின்று நீங்கிச் சிறந்தசிவகதியையடைவார்கள்.

## சூதசங்கிதை.

*பலநதொறுமீட் டியகொடுமை பாதகங்கள் பறந்தொழியச்*
*சலந்தமைந்து கதியடைவா ராற்றியவிந் தானங்க*
*ளிவந்தவற மிலரேனுங் கெட்டோரம பால்விடுத்தோர்*
*சிவந்தனையுஞ் சிறந்தகதிச் செலவுய்க்கு முய்தருமே.*

வாசுதேவா! நாம இதுவரையிற் கூறிய ஆபாசமாகிய தேகம் அசுசியான படியால் அன்னமாதி யுணவுகளுங் கெட்டநாற்றமுள்ள மலமாயிற்றென்று தெரிந்து கொள்ளெனச் சாஸ்திரியார் சொல்லவே, வாசுதேவன் கேட்டு இவ்வுடல்தான் கொடிய ஆபாச நிறைந்த வஸ்துவென்று தெரிந்துகொண்டு விசுவநாத சாஸ்திரியாரை வணங்கி, சுவாமியினது குருவின் சோரிக்கைப்படி அவருக்கு அடியேன் செலுத்தும் அநந்தவஸ்து வின்னதென்று உமதருளால் தெரிந்துகொண்டேனென்று அவரிடமிருந்து செலவுபெற்றுக் கொண்டு சிதம்பரத்துக்குப் போகும் வழியில் நிஷ்டை கூடியிருக்கின்ற தபசியாகிய ஞானவானிடத்துச் சென்று அவரைத் தெரிசித்து நிலத்தில் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து கைகூப்பி நின்று தபசியை நோக்கி யடியிற்கண்டபடி விண்ணப்பஞ் செய்து கொண்டான்.

ஐயா ஞானகுருவே! அடியேன் தேகத்தினிடத்தில் அபிமானம் வைத்து ஊழ்வினையாற் போகத்தையே பொருளாகக்கருதி வாணாட்களை வீணாட்களாகக்கழிக்கும் வஞ்சத்தையுடைய வென்னையாளுமையா! என்னை நாடிவந்த சஞ்சிதவினையால் நேர்ந்த பிறவித்துன்பம் விட்டு நீங்கும்படி செய்யுமையா! ஆணவமலத்தின் காரியமான அஞ்ஞானத்தால் மயக்கத்தைச் செய்கின்ற மாய்கையாலே உடம்பு ஜனனந்தோறும் பலியா நிற்குந் துன்பத்தினால் நரகத்துக் கேதுவாகாமல் சிவனடிக் காளாகும்படி செய்யுமையா வென்று கேட்டுக்கொண்டான்.

தபசி வாசுதேவனை நோக்கி, அப்பா வாசுதேவா! குருதக்ஷணை கொண்டு வந்தாயா? ஐயா கொண்டுவந்தே னென்று சொல்லித் தேகத்தைக் காட்டி இந்தத் தேகத்தைவிட வேறே கெட்டவஸ்து

இல்லாமையால் என்தேகத்தையே காணிக்கையாகப் பெற்றுக்கொள் ளுமையா வென்றான். அப்போது தபசிரேஷ்டர் வாசுதேவனுடைய பக்குவத்தை யறிந்து அவனை திருவருளமுதை யடையும்படி அவ னுக்கு ஞானசாதகங்களைச் செய்யத்தக்க விஷயங்களைப் போதித்துப் பின்பு சிவஞான உபதேசங்களைச் செய்து தன்னைப்போல ஞானநிஷ் டையி லிருக்கும்படி செய்து கொண்டார்.

இந்திரியங்களின் கூட்டத்தால் நிறைந்திருக்கின்ற சரீரத் தின் பாசத்தைப்பற்றி இன்னுங் கூடிய வரையிற் கூறப்பட் டிருந்தாலும், இன்னுமதன் அமங்கலத்தையும், அத்தேகத்தை யழிப்பதற்கு மரணம் பெரும்போதாக காத்துக் கொண்டிருப்பதை யும், மரணம் நிச்சயமென்பதையும் பற்றி பின்னரு மிதிகாசத்திற் கூறுவோம்.



## சோமசுந்தரநாதன் கதை.



முன்னொரு காலத்தில் தெய்விகபுர மென்னும் பட்டணத்தை அரசாண்ட சோமசுந்தர நாதனென்னும் பெயரையுடைய ஓரரச னிருந்தான். இந்த அரசன் புண்ணியசீலனையும், வேதமுதற் கலைகளைத்தையும் விதிப்படி கற்றுணர்ந்தவனும், உபநிடத வாக்கி யங்களின் முடிவும் பொருளுணர்ந்த ஞானச் செல்வர்களின் பழக்க முள்ளவனுமிருந்த படியால் திரிசியமாய்த் தோன்றுகின்ற அசத்து ரூபமாகிய சடப்பிரபஞ்சம் அநித்திய மென்றும், பிரபஞ்ச வாசனையை விட்டு இந்திரியச் செய்கைகளை நீக்கி இருவகைப் பற றுக்களி னின்றும் விடுபட்டா லப்போது இவன் அவன் என்கிற கற்பனைச் சொல்லும் அஞ்ஞான முதலியவு நீங்கு மென்றும், அவை நீங்கவே ஞானவைராக்கியமும் விசேஷ பக்தியு முண்டாகு மென் றும், அவை யுண்டாகவே வேதோப நிடதங்களிற் கூறப்பட்ட அண் டபகிரண்ட பிரமாண்ட சராசரப் பிரபஞ்சங்களுக் காதார மாகியும், வாசா மகோசரமாகியும், பரஞான வானந்தமாகியும், ஸ்வயஞ்சோதி ஸ்வரூபமாகியும், சச்சிதானந்தமே திருமேனி யாகியுமுள்ள நடன

[illegible]சதியாகிய பாசிலைத மலர்ந்த தாமரை போலுஞ் சிவந்த திருவடிகளைத் தெரிசிக்கக் கூடுமென் றுணர்ந்து அந்தக் கடவுளை பக்தியோடு நாவினாலும் பாவினாலுந் துதித்துப் போற்றி வருவதானான்.

இந்த வாசன நிராஜீரனுஞ்செய்து வருகையில் நீதி தவறாதவனாயும், வைதிகமாகிய சைவநெறியில் மாறுபடாமல் நடந்து வருபவனாயும், மாயா சொரூபமாகிய தேகாபிமானத்தை அவித்தைகளைப் போக்கி சதசியானந்தமடைய வேண்டுமென்று விருப்பமுடையவனாய் பழநகடி விராட்புருஷனிதயஸ்தானமாகிய சிதம்பரத்துக்குப் போய் மங்களஸ்வரூபமாகிய ஸ்ரீ மகாதேவரான தில்லைநாயகனுடைய திருவுருவத்தைக் கண்டு தெரிசித்து அவரைநோக்கி ஓசிவபிரானே! காதநாயனே! எம்பெருமானே! மகாதேவனே! சாம்பசிவனே! பரம்பரனே! அமலனே! பதியே! ஐயனே! காமனை யெரித்த கண்ணனே! செங்கண் மாலாகிய இடப வாகனத்தை யுடையவனே! மும்மூர்த்திகளுக்கு முதல்வனாயிருப்பவனே! திரிநேத்திரங்களை யுடையவனே! எங்கும் பூரணமாயிராநின்ற பழமையானே! விஷத்தை யணிந்த ஸ்ரீகண்டத்தை யுடைய அண்ணலே! சர்வஞ்ஞத்துவாதி குணசகிதனை பரமனே! இயமனுடைய உயிரைக்கவர்ந்த திருவடியை யுடையவனே! பஞ்ச பூதங்களுக் கிறைவராகிய நடேசப் பெருமானே! அடியார்க் கெளியவனே! பரிசுத்தமும் பொருந்திய வேதாகம புராணங்களின் பொருளாயுள்ளவனே! ஆன்ம போதத்துக் கெட்டாத பொருளாகிய பரம்பதியே! புண்டரீகபுர மென்னுஞ் சிதம்பரத்தில் சச்சிதானந்த மயமாய ஞானதாண்டவமாடுஞ் சிதம்பரேஸ்வரனே! கபாலீசனே! அனந்த ரூபனே! கபால மாலாதரனே! கோதிலாத குணப் பெரியோனே! சரீர சம்புடத்துக் குள்ள மணியே! கௌரி நிரந்தர பூஷித வாமபாகனே! ஞானவரசனே! அமிர்தசாகரமே!

பன்றிக் குட்டிகட்குப் பால்கொடுத்துப் பின்பு அவைகளை மந்திரிகளாகச் செய்தவனே! நரிகளைப் பரிகளாக்கினவனே! நாரைக்கு முத்தி கொடுத்தவனே! உத்தமமாகிய சுயம்பு வாயும், சுயம்பிரகாசமாயும், நிட்கள திருமேனியாயும, சத்துசைதன்ய சொரூப மாவனாயும், ஞானரூபமாயும், முத்து பாமணி மயமாய், நிறைந்த பராபர வஸ்து

வாயும், விஞ்ஞான மாயும், நிராமயமாயு முள்ள பரம்பொரு ளென்று
நூல்களாற் சொல்லப்படுகிற பிரம மாகிய சிவபிரானே! தத்துவ
மாய், தத்துவத்தின் பொருளாய், ஞானத்தாயாய், சித்தி முத்திகள்
ஜனிப்பிடமாய், பத்தி நெறி தெளிந்தவர்பால் வயங்கா நிற்கும் வஸ
துவாகியு முள்ள நடேசப் பெருமானே! எந்தச் சிதாபாசன் தனது
எதார்த்த சொரூபத்தை மறந்து பகிர்முகத்தில மனதை விடுத்து
அதன் வழியாய்ப் பாசபந்தங்களிற சிக்கிக் கோர சம்சாரத்தி லுண்
டாகும் பாதையை யுணர்ந்து அதைநீக்க இனிப்பிறவார்செலவத்தை
யடைய விரும்பி, ஆத்மசொரூபமின்னதென்பதைத் தெரிவிக்கும் தத்
துவ ஞான நூல்களை ஆராய்ச்சிசெய்து ஞானோபதேசம் பெற்றுக்
கொள்ள அருகனாயிருக்கும் பக்குவத்தில் பரம சற்குரு நாதனாயெழுந்
தருளிவந்து அவனுக்குத் தத்துவாதீதத் தன்மையுங் காட்டி மௌன
மொழியால் முடிவினை யுணர்த்தி யவனை யெதார்த்தமாகிய ஞானசொ
ரூபத்தி லிருக்கும்படி யனுக்கிரகஞ்செய்யுந தாண்டவ மூர்த்தியாகிய
சிதம்பரதேவனே! எவ்விடத்தும் பூரணமாய்ச சதது சித்தானந்த
வடிவாக விளங்குஞ் சிவபெருமானே! உலகத்துள்ள பொருள்களைப்
பகுத்தறியா வண்ணங் கட்புலன்களை மறைந்திருககு மிருளைப்
போலப் பிறப்புக்களையு முத்தி நெறியையும் பகுத்தறியாவண்
ண மறைத்திருக்கும் ஆணவமலமென்னுமிராட்சசப்பேயாகிய பீடை
யை விரட்டி யோட்டி அடியேனை யாண்டருளுமையாவென்று தொண்
டர்களுக்குத் தொண்டனாகிய நாயடியேன் வருந்திக்கேட்குஞ் சகள
நிட்களப்பொருளான தில்லைக் கதிபதியாகிய சிவபெருமானே! பிர
பஞ்ச வாசனையை விட்டு இம்மையிலேயே பிரமஞான ஐஸ்வரி
யம் பொருந்தி உன் பாதாம்புஜ நிழலிற் சுகமாய் வாழ்ந்திருக்கும்
புண்ணிய வான்களைப் போல அடியேனும் அததகைய வாழ்வை
யடையும்படி யனுக்கிரகம் செய்வீரா ஐயனே! அப்பனே! மங்கை
பாகனாகிய சிவனே! வேதங்களுக்கு நாயகனே! சிவகாம சவுந்திரியை
வாமபாகத்தி லுடைய பரமசிவனே! பராபர வஸ்துவாய்த் திருச்சிற்
றம்பலத்தில் ஆனந்த நடனம் புரியுஞ் சபாபதியே! திருஞான சம்
பந்தமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் சுந்தரமூர்த்தி
சுவாமிகள் ஆகிய இவர்கள் முதலிய பக்தாக ளிடத்தில் அதிக அன்

புள்ளவர்களாய், மாயா சம்பந்தமான தேகத்தை நானென்று சொல் லும் பாசவறிவைத் தூக்கி அஞ்ஞானத்தைக் கெடுக்கும் வேதாகம புராணங்களில் விதித்துள்ள விதியை யுணர்ந்து உன்னருளைப்பெற வல்லவர்களுக்கு அதிக மேன்மையையுங் கீர்த்தியையு மடையும்படி செய்விக்குஞ் சிதம்பர தேவனே!என்றிவ்வாறு இரவும்பகலுந் தோத் திரஞ் செயது வருவான்.

இப்படி யிருக்க ஒருநாள் வேதங்களாற் றுதிக்கப்பட்ட பராபர வஸ்துவாகிய அம்பலவாணனைத் தரிசனஞ்செய்யச் சிதம்பரத்துக் குப் போயிருந்தபோது அவ்விடத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் சாபாநுக்ரக சாமர்த்தியத்தை யுடைய ஒரு மகாபுருஷன் வந்திருப்ப தாகக் கேள்வியுற்று அவ்விடம்போய் அவரைக்கண்டு தெரிசித்த தில் அவர் மகாசுந்தரமாகிய பிரமதேஜஸுள்ளவராயும்,சிவஞானநிலை யை யடைந்த பரிசுத்தமபெற்றவந்தக்கரணமுடையவராயுங் காணப் பட, அரசன் அவரிடத்தில் ஞானசம்பாஷணை செய்யும்படி அவரை நோக்கி, ஐயா! அடியேன் வேதமுதலாகிய சாஸ்திரங்களை வாசித்த வனா யிருந்தாலும் பரிபூரணமான ஞானத்தை யடையுமார்க்கம் அடி யேனுக்கு விளக்கமாய்த் தெரியவராததால் அதை விவரமாய்த் தெரி விக்க வேணுமென்பதாக மனுவுசெய்துகொள்ளுகிறேனென்றனன்.

அப்போது மகாபுருஷரான தத்துவஞானியானவர், இவ்வர சன் சிவபிரானிடத்தில் அதிகபக்தியுள்ளவ னென்பதாகக்கண்டு, ஓ மன்னவனே நாம் சொல்வதைக் கவனத்துடன் கேளுமென்று அடி யிற்கண்டபடி கூறலுற்றார்.

அரசனே! மண்ணுலகிற் பிறந்து சிவபிரானை வாழ்த்த வகைய றியாத சிதாபாசர்களுக்கு இல்வாழ்க்கையில் சமுசாரதோஷ தரிச னத்தா லுண்டாகும விஷய விர்த்தியானது அவர்களைக் காமக்கருங்க டலின் மாய்கையில் விழத் தள்ளிச்சங்கடப்படச் செய்யும்,அப்படிச் சங்கடப்படும் பாமரர் புண்ணிய புருஷர்களாகிய தத்துவஞானத் தை யுடைய மகாபுருஷரைக் கண்டுதெரிசித்தும்,வாக்கிற்குமனத்திற் கும் வேதத்துக்கு மெட்டாத ஒப்பற்ற காருண்ணியராகிய நடேசப் பெருமானுடைய பொன்னடிகளைப் போற்றித் தொழுதும் வருவார்

களே யாகில் அந்தக் கடவுளுடைய அருளானது அவர்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தை யுண்டாக்கும்.

வினா—ஐயா! மானிடர்களும் தேவர்முதலியோரும் நடராஜனைத் தொழவேண்டியது அவசியமான காரியமாயிருக்க மானிடர்கள் தத்துவஞானிகளையுங் கண்டு தெரிசிக்கவேண்டிய தவசியமென்ன? அவர்களிடத்தி லென்ன விசேஷ குண குணங்களும் யோக்கியதையு மிருக்கின்றது.

விடை—தத்துவ ஞானிகள் தூலசூக்குமகாரண சரீரத் திரயங்களையும், சத்துவாதி குணங்களையும் விடுத்து அஞ்ஞான சாகரத்தை மெய்ஞ்ஞானத் தெப்பத்தாற் கடத்தல்வேண்டும். அப்படி கடக்கையி லெதிர்த்து வரு மிராகத்துவேஷாதிகளான இராக்கதர்களை விவேக மென்னும் வாளால் வென்று சாந்தி சமம் தமம் என்னும சுத்த குணங்கள் வாய்ந்து அக்குண விசேடங்களா லறிவு மயமான ஆன்மாவைத் தவிர மற்றுள்ளவனைத்து மசத்தெனவுணர்ந்து அவ்வான்ம சொரூபமாகிய அறிவின்சொரூப பாவனையினு லந்தப் பிரம சொரூபத்தை நேக கலந் தேகமாகுஞ் சீவன் முத்தர்களாகுவதினாலே யவர்கள் சாபானுக்கிரக சாமர்த்தியத்தை யுடையவர்களாயிருப்பார்கள். ஆதலால், இவர்களைக் கருணாகர வல்லியாகிய சிவகாம சவுந்தரியை வாம பாகத்தில் வைத்த அம்பல வாண மூர்த்திக்குப் பிரீதியுள்ளவர்களென்று இவர்களையுங் கண்டு தொழுதுவரவேண்டியதா யெண்ணிச் சொல்லியதே தவிர வேறில்லை. எவர்கள் சரீரத்திரயம் சத்துவாதிகுணம் மனமுதலான வந்தக்கரண நான்கினுடைய தொழில் இவைகளைப் பற்றற விடுத்தவர்களே அறிவு மயமாய் விளங்குவார்கள்.

## ஆத்மபோதம்.

மோகவா ரிதியை ஞானமாம்புணையான் முற்றுறக்கடந்துநின் றிகலும்
வேகமாம் ராகத் வேஷராக் கதரை விவேகமாம் வாளினாற் றடிந்து
சோகமில் சாந்தி சமந்தம முதலாஞ் சுத்தநற் குணமுள யோகி
யோகமா மான்ம ராமனைத் தோன்ற விளங்குறு மிராஜயோகத்தில்.

உலகத்துள்ள எழுவகைப் பிறவிகளிற் சிறந்தனவாக விருப்பது மக்கட் பிறவியாம். அம்மக்கட் பிறவியாகப் பிறந்தவர்களி லெவர்கள் தூல சூக்கும காரண மென்னுஞ் சரீரத்திரயங்களினுற்பத்தியு மொடுக்கமு மறிந்து, புறப்பற்றாகிய பெண்டு பிள்ளைகளி னிச்சையு மகப்பற்றாகிய சரீரத்திரயங்களி னிச்சையு மொழிப்பதற்கான வுபாயமு மறிந்து, அச்சரீரத்துள்ள தத்துவங்களை நியதிகளைந்து, சரியை கிரியை யோகங்களைச்செய்து, ஞானாநுஷ்டானத்தைக் கைக்கொண்டு, சஞ்சிதம் பிராரத்வம் ஆகாமியமென்னு மூவகை வினைகளையுமகற்றிப் பராபதமாகிய ஸ்ரீபசுபதியினது திருவடிகளை யடைய முயற்சிக்கிறார்களோ அப்படிப்பட்டவர்கள்தாம் பெறுவதற்கரிய மானிடப் பிறவியினால் வாய்ந்த பயனை யடைபவர்களென்று கூறப்படும்.

சிவபுண்ணியங்களைச் செய்தவர்கள் மாத்திரம் இப்படிப்பட்ட பெரும்பதவியை யடையத் தக்கவர்களா யிருப்பார்களே தவிர வேனையோர்க ளடைகிறதென்றா லசாத்தியமான காரியமா யிருக்கும். ஏனென்றால் நாமரூபக் கிரியைகளிற் சதா பழகிவரும் பேதமனதை முன்னதாகக் கைவசப் படுத்த வேண்டியது. பின்பு எந்தப் பொருளுக்கு நாமரூபக் கிரியைக ளுண்டோ அந்தப் பொருள் நாசமடையு மென்கிற நிச்சயத்தையு மறிந்திருக்க வேண்டியது. தத்துவவிசாரணைசெய்து ஒவ்வொரு தத்துவங்களையு நியதி களைந்து அவற்றிற் கெல்லாம் சாட்சியாகிய வப்பேரறிவே தனதுண்மை வடிவென்றும், அவ்வடிவே சுத்தப் பிரம மென்று முணர்ந் தறிய வேண்டியது. இவை முதலானவற்றை யறிந்து கொண்டபின், ஆசாரியன் சொற்படி சகுணோ பாசனையிற் பழகிவர வேண்டியது. பின்பு நிர்க்குணோ பாசனையைக் கைப்பற்ற வேண்டியது.

இப்படியாக இந்த வுபாசனைகளிற் பழகி வருகையில் சகுணோபாசனா வுபாயத்திற் கூறிய மூன்று மண்டலங்களுக் குள்ளேயே ஆறாதாரங்களு நாத விந்துவு மிருப்பதா லம்மண்டலங் களையும் ஆதாரங் களையும் நாதவிந்துக்களையுந் தரிசித்து, அவ்வவ் வாதாரங்களின் ஸ்தானங்களும் வடிவங்களு மதினிறைந் துள்ள அட்சரங்களு மவ்

வட்சரங்களி னதிதேவதைகளு மவ்வட்சரங்களுக்குக் காரண மாகிய வாக்குகளு மாகிய இவ்வனைத்துந் தெளிவா யுணர்ந்த மாத்திரத்தில், வேதமுதலிய கலைகளிற் கூறியிருக்கும் பஞ்சகர்த்தாக்களோடு சத்தி சகிதாக ளனைவரு மிச்சரீரத் திரயத்துள்ளேயே நிறைந் திருக்கின்றார்க ளென்பது நிச்சய மேற்படும். இப்பஞ்சகர்த்தாக்கள் செய்யுங் கிருத்தியங்கள் முறையாய் பிரமத்தினால் நடத்தப்படுமென்றமைதனாற் பிரமமே சகலசெயல்களுக்கு மாதாரமா மென்பதுந் தெளிவாகும். அத்தெளிவும் "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்னு மான்றோர் வாசகத்தின்படி அறிவுமயமாகிய அச்சுத்தப் பிரமத்தினாலேயே யுண்டாகும். மேற்கூறிய அருமையான காரியங்களை யெல்லாஞ் செய்து முடிப்பதானால் பிரயாசமான காரியமா யிருக்குமாகையால் அவைகளைச் சிவபுண்ணியங்களைச் செய்தவர்களாலே மாத்திர நிறைவேற்றப்படு மென்று பேதையோர்களா லாகாதென்று மேற் கூறப்பட்டதே தவிர வேறல்ல.

வண்டார்பூங் குழலாள் பாகனாகிய ஸ்ரீகண்டபரமசிவமாகிய நடேசனைப் பக்தியோடு தொழுது வாழ்த்துபவர்களை அந்தக்கடவுள் தன் னடிமையாகச் செய்து தன்றிருவடியிற் சேர்த்துக் கொள்வா ரென்பதாக நூல்கள் கூறுகின்றன.

பஞ்சகிர்த்தியங்களையு நடத்தும் நடேசப் பெருமானையே சகளவடிவமாக வுபாசனை செய்யவேண்டியது. இந்த வேதாந்த நடேச மூர்த்தியின் வடிவமே சகளமாகும். இந்தக் கடவுளுக்குச் சகளமே அங்கமாகவும், சகள நிஷ்களமே பிராணனாகவும், சந்திரார்க்க வன்னியே நேத்திர மாகவும், சிருஷ்டி திதி சம்மாரமே சூலமாகவும், பக்தாதிகளுடைய பாவஹரணச்சேதனமே பரசாகவும், துட்டரைச் சம்மரித்து அடியார்களைக் காக்கும்பிரதாபமே கட்கமாகவும், வேதாகமங்களாற் பேதிக்கப்படாத அபேத்ய குணமே வச்சிராயுதமாகவும், அடியார்க் கனுக்கிரகிப்பதே அபய வரத கரமாகவும், ஜீவர்கட்கு மாயா போக்ய போகங்களை நியமித்தலே பிரப்பாகவும், ஜீவர்கட்குப் போகிக் கிறதற்குத் தேகேந் திரியாதிகளைச் சிருஷ்டிக்கிற கபட நாடகமே பாசமாகவும், தன்னிடத்தி லெழு

தப்படாத அநுகரணை வோசையே அங்குசமாகவும், வேதாகமாதி யிற் பிறக்கின்ற தொனியே தமருகமாகவும், ஜகசிருஷ்டி யந்தத்திற் சர்வத்தையு நடத்துஞ் சம்மாரமாம் அக்கினி யாகவும், ஜீவர்க ளாதி சிருஷ்டி தொடங்கி யநுபவிக்கிற மலத்தினின்று மிரக்ஷித்தப்ப டுத்தலே வீரகண்டா மணியாகவும், அநேகப் பிரத்யங்க சாங்கோபாங் காதி சர்வலக்ஷண சம்பூரணமாகவும் விளங்குகின்ற திருவுருக்கொ ண்ட பரமேஸ்வரனே அவரவர்கள் பக்குவபேதத் துக்குத்தக்கபடி குரு மூர்த்தமாயெழுந்தருளி வந்து உபதேசானுக்கிரகங்களைச் செய்வார்.

வேதாகம புராண கீதைகளெல்லாம் பிரமமே பராபரவஸ்து வெனப் பிரபலதொனியுட னுறுதியாய்ப் பேசுகின்றது! இதுநிச்சய மென்றே "பரந்த வான்கலை முழுதுமாகம நூற் பகுதியும் பலசமய சாஸ்திரமுந்தெரிந்து தேர்ந்த" மகான்களு மொப்புக் கொள்வார்கள். ஆனால் யாராகிலு மதைப்பற்றி விரோதமாகத் தர்க்கித் துப் பேசுகிறதானால் கோபுரவாசலிற் காவற்காப்பவன் ஆலயத்துக் குள் சுவாமி சன்னிதானத்தில் நடக்கும் காரியங்களைக் கண்ணாற் கண்டெடுத்துப் பேசக்கூடாமைபோலப் பகிர்முகத்தின் கோலாக லத்தி லுலாவு மநாத்மசொரூப கிஞ்சிஞ்ஞனாகிய சிதாபாசன் அந் தர்முகத்தில் பரமாத்மாவி னுடைய சொரூபநிலையை ஞானக்கண் ணினாற் காணமுடியாது.

இப்படியாக மேற்கூறிய பராபரவஸ்துவாகிய பிரமம் எங்கும் வியாபியாய்ச் சர்வாந்தரியாமியாய்ச் சர்வபரிபூரணமாய் வேதம் வே தாந்த வேத்திய வேதமகாவாக்கியவிலாசமாய வியாபித்துவிளங்கும்.

## ஒழிவிலொடுக்கம்.

எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றனனுணை
யங்கந் திரள்கருவி யாணவமாம்—பொங்குமிருண்
மைசெய்த மாமாயை மாயைவினை யற்றனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய்.

இப்படியாகப் பராபர வஸ்துவானதெங்கும் வியாபியாய்விளங் குவதுமன்றி வேதோபநிடதப் பொருளாயும் விளங்கும்.

## திருவிளையாடற்புராணம்.

வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தி
னீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியா
யாதியா யாயினும் நவா யனைகடிந்த
சோதியாய் நின்றுமென் சோதனைத்தோ நின்னியல்பே.

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினுஞ் சிறியதுமா
யரியதினு மரியதுமா யெளியதினு மெளியதுமாய்க
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமா யனைகடந்த
துரியமுமாய் நின்றுமென் சோதனைத்தோ நின்னியல்பே.

## சொரூபசாரம்.

நித்தியமா யேகமாய் நிமலமாய்ப் பூரணமாய்ச
சத்தியமாய் நின்றெளிருக் தறபோதச—சுத்தராய்ச்
சித்தமிலே பெற்றவராயத் திரநதசென னைத்தவரா
யுத்தமரா யுள்ளாரக் குறும.

இந்தப் பிரமவஸ்துவாகிய நடேசபெருமானைத் தான் அரிகரப் பிரமாதி முதலியோர் மனோவாக்குக காயங்களால் நமஸ்காரம் பண்ணுவதும் ஸ்மரித்துப் புகழ்ந்துபேசுவதுமாம. இந்தப் பரமாத்துமாவினுடைய ஆதரவால தான் சட்சுராதி பாகியேந்திரிய கோசமாய்க் காணுஞ் சகத்திலுள்ள ஆத்மகோடிகள்ஜீவித்திருப்பது. இந்தப பரமாத்துமாவினுடைய சங்கற்பத்தால் தான் ஆத்மாக்கள் போக மோக்ஷார்த்தமாயச் சனித்திருப்பது.

வினு—ஐயா பரமாத்மாவையே சகலத்துக்குங்கர்த்தா வென்பதாகப் பேசுகின்றீரே பிரகிருதி மாயை முதலியவைகளைச் சகத்கர்த்தாவா யிருப்பதாகச் சொல்லலாகாதோ?

விடை—சொல்லக்கூடாது ஏனெனில், பரமாத்மாவாகிய சைதன்யத்தாலன்றி,சடரூபமாகிய பிரகிருதிமாயை முதலியவைகளால் சகங்களை நிரூபிக்கப்படமாட்டாது.

வினா—சேதனனான சீவனே சகத்கர்த்தனாக விருப்பதாய்ச் சொல்லலாகாதா?

விடை—சேதனனான சீவனுக்குக் கிஞ்ஞித்துவா திஷ்டான பரதந்திரத்துவ அநீசுரத்துவாதி தோஷ முண்டாகையால், அவன் சகத்துக்குக் கர்த்தனாகமாட்டான். இரதத்தைச் செய்பவன் போலவொரு கர்த்தகத்துவ முண்டென்னையாகில், இரதந் தன்னிலையினின்று போவது ரதாசாரிய னென்னு மொருவன் சூத்திரத்தாலாவதல்லது மற்றவர்களாலல்ல. அவரவர்க ளபிமானத்தால் தங்களுக்குத் தாங்களே ரட்சித்துக்கொள்ளுங் காரியமானாலநேக கர்த்தவ்வியத்தா லொரு காரியமுமாகாது. ஆகையால் சகத்துக்கு ஈச்சுரனொருவனே கர்த்தனாகவேண்டும். அந்தவொருவனாகிய ஈச்சுரனுக்கே யெக்காலத்திலு மெத்தேசத்திலும் வியாபகத்துவமும், எக்காரியமு மறிவதற்குஞ் செய்வதற்குஞ் சாவஞ்ஞத்துவமும், சர்வசத்தித்துவமும், காலமானது தான் முன்னின்று பலவகை அரும்புகளை மலர்விப்பதுபோல, அச்சிவன் சகல காரியோற் பாதகனாகையால் சர்வேசுரத்துவமும், சர்வாத்துமாக்க ளிதயத்திலும் அந்தரியாமியாகிப் புறம்பே சுருதி ஸ்மிருதி ரூபமான ஆக்கினையால் நியாமகனாகையால் சர்வப்பிரேரகத்துவமும், குலாலாதி கர்த்துருத்துவத்தால் அந்நியமான கடபடாதிகளை நியமிக்கிற தெப்படியோ அவ்வாறாக அந்நிய சரீராதிகளை நியமிக்கையாலும் விசுவமெல்லாம் விசுவேச்சுரனால் நியமமானதென்று சுருதியுண்டாகையாலும் சர்வாத்துமகத்துவமும், தனக்கிதர காத்தரின்றி அத்துவிதியனாகையால் சர்வ சுதந்திரத்துவமும், ஆத்மாக்கள் செய்த கர்மத்துக் கேதுவான சுகதுக்கங் கொடுக்கையால ராகத்துவேஷ ரகிதத்துவமும், தன்னால் சிருஷ்டி செய்யும்வியோமாதி விசுவத்தை வேறொரு பிரகாரமாக சிருஷ்டிசெய்வதற்குப் பிரதிசமர்த்தரில்லாமையால் சர்வேச்சுரத்துவமு முண்டென்பது நிச்சயம்.

மன்னவனே! இவை இப்படி யிருக்கட்டும் நாம் மேற்கூறிய பிரமந்தான் சடசேதனங்களுக்குச் சேஷமாய் விளங்குவது. இப்படியாக பிரமம சத்தைதன்னிய சொரூபமாய் விளங்குங் [illegible]

அதற்கு நிஷ்கள திருமேனியென்று கூறப்படும். இந்தத் திருமேனிக்குப் பரமார்த்த உருவம் அல்லது சோதிசொரூபம் அல்லது பிரம சொரூபமாம். இப்படி நிஷ்கள வடிவமாயிருப்பதுவே சகளவடிவமாகத் தோற்றும். இப்படிப்பட்ட நிஷ்களவடிவமாக விளங்குவதைக் கண்ணால் காணக்கூடாது.

வினா—ஐயா! நிஷ்களவடிவமா யிருப்பது சகளவடிவமாய்த் தோற்றப்படுவானேன்? அப்படி சகளீகரித்த வடிவத்தின் லக்ஷணமும் அதின் கிரியைகளுமியாது?

விடை—இந்தப் பிரமமாகிய பரம நிஷ்களவடிவா யிருப்பது பனிநீரானது ஆலங்கட்டியானதுபோல சகளவடிவமாய்த் தோற்றியது. இப்படிச் சகளவடிவாய்த் தோற்றுவதற்குக் காரணம் யாதெனில், அனுதிமல பெத்தர்களாயுள்ள ஆன்மகோடிகள் தம்மையறிந்து வழிபட்டுய்வதற்காகத் தனது நிசானந்தகூத்தை வெளிப்படுத்து நிமித்தம் பிரமமே சதாசிவ மூர்த்தியாய்ப் பரிபூரண கலையுடன் சகளவடிவாய்த் திருமேனிகொண்டு நடேசரெனும் நாமத்தைத் தரித்துக் கொண்டு தில்லையி லெழுந்தருளி யிருக்கும் சபாநாயகரென்றறிக. இவருடைய கிரியைகள் சிருஷ்டி திதி சங்காரம் திரோதானம் அனுக்கிரக மென்னும் ஐந்தொழில்களாம்.

இம்முழுமுதற்கடவுளாகிய சம்புவானசிவபிரான் மலபந்திகளாயுள்ள ஆன்மாக்களுக்காகப்பிரமனிடத் தாவிர்ப்பவித்து நான்மறைகளையும், தமது பஞ்சமுகங்களினின்றும் இருபத்தெட் டாகமங்களையுந் தோற்றுவித்த பின்னர், அவ்வேதாகம மோக்த சைவசித்தாந்திகளான சமயாசாரியர் நால்வரிடத் தாவிர்ப்பவித்துத் தமிழ்வேதங்களைத் தோற்றுவித்தனர். அவ்வாசாரியருள் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்னும் மூவர்வாயிலாகத் தோற்றுவித்த தேவாரத் திருப்பதிகங்கள் இலட்சத்திராயிரமாம். இவற்றை வாசிப்பார்களுக்குப் பரமானந்தத்தையும் பரகதியையு மளிக்குமென்பதாகச் சொல்லப்படுகிறது.

வினா—ஐயா! தேவாரத் திருப்பதிகங்கள் இலட்சத்திராயிரமெனக் கூறப்படுகிறதே அத்தொகையுள்ள பதிகங்கள் இப்போது வழங்குவதாக வேற்படவில்லையே அதென்ன?

விடை—இப்போது உலகத்தில்வழங்குந் தேவாரத்திருப்பதிகங்கள் எழுநூற்றுத் தொண்ணூற்றைந்தாம். இந்த பதிகங்கள் சர்வ பரிபூரணமாயும், எல்லாவற்றிலும உள்ளும் புறமும மேலுங் கீழும் பக்கங்களிலும் எங்கும் நிறைந்து சகலத்திற்கும் அந்தரி யாமியாயிருக்கும் வஸ்துவாயும், ஞானிகள் சுவாநுபத்தால் அநுபவிக்கும் வஸ்துவாயும, நவரத்தினங்களினு லலங்கரிக்கப்பட்ட கனகசபையிலெப்போதும ஞானசத்தியாகிய சிவகாமியார் கண்களிக்க நின்று நடனஞ்செய்துகொண்டிராநின்ற சபாநாயகர் பெருமையைப் பற்றி புகழ்ந்து பேசும்.

இந்த சிவபிரான் எப்படியாக விளங்குகிறா ரென்னில் வேதங்களின் பிரகாசமாய், எங்கும பரிபூரணமாய், சகல ஜீவகோடிகளுக்கு ஆதாரமாய, ஆனந்தமயமாய, நிஷ்கள ரூபமான பரவிந்து பரநாத பராசக்தி பரசிவமாதி நவதத்துவங்களாய, அதற்கு மேலுமாய், எந்த விதத்திலு மிப்படி யப்படி யென்று உவமை சொல்லப்படாத சராசர ஜீவகோடிகளெல்லாங்கலவாமல் கலந்திருந்து கருணை யென்னு மமிர்தத்தையே சொரிந்துகொண்டு யாவரும் நினைத்தற்கரிய ஞானசபையிலே ஓங்கார உருவமாய்ப் பிரகாசித்துக்கொண்டு விளங்குந் தெய்வமா யிருப்பவர்.

இன்னுமச்சிவமாகிய சபாநாயகர் எத்தகைய அருமையும் பெருமையுமுடையவ ரென்றால் விராட்புருட னிதயாரவிந்தமான திருச்சிற்றம்பலத்தி லெப்போதும் ஞானசத்தி வாமபாகத்தினில் விளங்க ஆனந்த நிர்த்தம்புரியுங் கடவுளென்றும், பரமபதத்தனென்றும், பரமுத்தனென்றும், அளவிடற்கரிய பலபேர்களைப் பெற்றவனென்றும், அக்கினியையும்சர்ப்பத்தையும் புனைந்தமூர்த்தியென்றும், மஹாதேவனென்றும் வேதமனைத்து முறையிடும். மூவரினுமுதல்வாய் நடுவாகிய மூர்த்தியா யிருப்பவர். மெய்யடியார்களுடைய நனவினுங் கனவினும் இருப்பவர். ஞானபித்தேறி மயங்கும்பத்தர்களுக்கு உத

விசெய்யு மங்கையுமைபாகர். தக்கன் வேள்வியை நிர்மூலம் செய்த முக்கணர். தஞ்சமென்று சரண்புகுந்தோரை அஞ்சலென் றருள்புரியும் மாணிக்கவண்ணர். தண்புனலும் வெண்பிறையுந் தாங்கியதாழ் சடையர். புண்ணியர். மெய்யடியார்களுடையகேடும பிறப்பு மறுக்கவல்லவர். வேதமுதல்வர். மாலாயவனும் மறைவல்ல நான்முகனும் அவன்பாலாய தேவர்களும போதுமானவரையில் ஏத்தியும் போற்றப்படாதவர்.

கைலாசவரையையெடுத்த இலங்கைமன்னனை விரலூன்றிப் பங்கப்படுத்திய சடைமுடிப்பெருமான். செல்வச் சிந்தையர். அரகரஅரகர அரகர சிவ சிவ சிவவென்று போற்றித் தொழுக்களிப்புக்கொள்ளும் கபாலீசர். அட்டமூர்த்த வடிவுடையவர். தன்னை நினையாமல் பொய் வாழ்க்கையி லிருந்தாடும் பேயர்களை நமனோடு தூதர்கொடுபோய் நரகவேதனைக்கு ஆளாக்கும்படி செய்விக்கும் நஞ்சணி கண்டத்தை யுடையவர். செப்பிளமுலை நன்மங்கை யொரு பாகமாக விடையே றுஞ் செல்வர்.

மேலும் இந்தச் சபாநாயகர் எப்பேர்ப்பட்டவ ரென்றால் பஞ்சேந்திரியங்கள் சத்தாதி விடயங்க ளென்னு தத்துவ சத்துருக்கள் முதுகுகாட்டி முறிந்தோட சன்மார்க்கத்தைப் பெற ஞானாசிரியனது அநுக்ரகத்தைப்பெற்று எப்போதும பரமார்த்திக சிந்தையுடன் சிவஞான யோகத்திலிருக்கும் மெய்யடியார்களை ஆண்டருளும் அம்பலவாணரா யிருப்பவர். பிரணவஸ்ரூபராயும் பூரண காரண புராந்தகராயும் பஞ்சபூதமாதிசம்பந்தமான பிரபஞ்சத்துக்கு நிமித்தகாரணருமா யிருப்பவர்.

யாராகிலும் மாயக் கூரைவாழ்க்கையை வெறுத்து ஞானாகாசமாகிய கூடாட்டி யினையுடைய இச் சபாபதியைச் சித்தத்திலிருத்திப் போற்றிப் தொழுவார்களே யானால் அப்படிப்பட்டவர்கள் அனந்தமகா பாதகங்களைச்செய் திருந்தாலு மவைகளினின்று நீங்கி மோட்சத்தைப் பெறுவார்கள்.

இப்படியாகிய ஞானபோதனையைக் கேட்டுக்கொண்டிருந்த மன்னவன் மறுநாள் வந்து அந்த மகானைக் கண்டு வார்த்தையாடுவதாகச் சொல்லித் தன்னரண்மனைக்குப் போயினன். அன்றிரவில் மாரடைப்புகண்டு மரண மடைந்தான்.

இதனாலே தேக மனித்திய மென்பதும் மரணம் நித்தியமென்பதுந் தெரிந்துகொள்ளக் கூடியதா யிருக்கிறது.

வள்ளலார்சாத்திரம்.

இன்றைக்கோ நாளைக்கோ வின்றுமறை நாழிகைக்கோ
என்றைக்கோ வாவி பிரிவென்று—சென்றிறைஞ்சி
யாசா ரியனுங் கனகல சிந்தையுட்
பாசா திலைக்கறுப் பார்.

பதிபசுபாசவிளக்கம்.

என்று மிருபயனு மெய்ப்பயனு நிச்சயமு
மொன்றேட்டி விந்திரா னாயினும் பொன்றுவன்
நன்றைட் டழிபுமுன் ஞானத்தினாலே
தன்னை யழியாது காத்தருள் பாதகமே.

மாரடைப்பால் மரணமடைந்த இராஜனுடைய சவத்தைச் சமாதிசெய்ய ஒரு சிங்காரவனத்துக்குக் கொண்டுபோகப்பட்டது. அப்போது அவ்விடத்துக்குவந்த ஒருமாது இராஜ னிறப்பினைப்பற்றிப் புலம்பித் துக்கித்ததுந் தவிர அவ்விடத்தில் வந்திருந்த அனேகதேசத்து அரசர்களையு மற்றுங் கோடானுகோடி பிரஜைகளையும் பார்த்து நேத்திரங்களிலிருந்து நீர் தாரை தாரையா யொழுகும்படி விசனமுற்றவளா யிருந்தாள். அப்போது மரணமடைந்த இராஜனுடைய குமாரன் அகோ இதுவென்ன ஆச்சரியமா யிருக்கிறது. இந்தமாதினைப்பார்த்தால் தேவகன்னிகைபோலக் காணப்படுகிறாள், இவளிங்குவந்து துக்கிப்பானேனென் றெண்ணி அம்மணி! நீயார்? நீயிப்படிக்குக் கவலைப்படுவா னேனென்று வினவினன். அதற்கு அந்தமாது மறுமொழி கூறியதாவது ஒ இராஜகுமாரனே! அதோ விருக்கும் பூங்காவனத்தில் வாசமாயிருக்கும் வனதேவதை, யான் மறித்துப்போன

உன்பிதா வெனக்கு நேசர். எண்பதாண்டுக்குமுன் ஏகச் சக்கிரவர்த்தியாயிருந்த உன்பாட்டன் மாண்டுபோய் அவர்பிணத்தைச் சமாதி செய்ய இந்தச் சிங்காரவனத்துக்குக் கொண்டுவரப்பட் டிருந்தபோது பெரியநதியின் வெள்ளம பொஙகிப் பிரண்டு ஓடிவந்ததுபோல அனேக அரசர்களும், சிற்றரசர்களும், பாளையக்காரர்களும், அதிகாரஸ்தர்களும், தனவான்களும், கோடானுகோடி ஜனங்களும் வந்திருந்தார்கள். அவர்களில் இப்போதொருவராவது ஜீவித்திருப்பதாகக் காணப்படவில்லை.

அதுபோலவே இப்போது இவ்விடம் வந்திருக்கும் அரசர்கள் முதலானவர்கள் இனிவரு மாண்டுகளில இயமனுக்கு இரையாகி விடுவார்களே யல்லது ஒருவருமிரார்கள். அந்த இயமன் எப்படிப்பட்டவனென்றால்? கருடன் சர்ப்பக்கூட்டங்களைக் கொல்லுந்தன்மைபோல இவ்வுலகை ஒரு குடைக்கீழரசாளுஞ் சக்கிரபதியாகிய அரசர்களையும், மகாமேருவை யொத்துச சலியாத பலவந்தராகிய தேவாசுரர்களையுந் தன் பாசத்திற் கிரையாக்கிக் கொள்ளுவான். மேலும் அவ்வியமன் புழுதி - இலை-துரும்பு - மேருகிரி - சமுத்திரம் - மயேந்திரம் இவைமுதலியவைகளை முடிவுகாலத்தில்அழித்துச் சூனிய மாக்குவன். சமுத்திர ஜலத்தைக் குடிக்கும் வடவா முகம் போல சராசரப் பிரபஞ்சங்களை யெல்லா முடிவு காலத்தில சம்மாரஞ் செய்யும்போது ஒன்றையும்விடான். எவவுலகங்களினும் எப்பேர்ப்பட்ட பெருந்தன்மையை யுடையவர்களாயினும் அவர்களைக் கொல்வதில் ஒருகணமேனுந் தாமதப்படான். யாவரையுங்கொன்று தானே தனித்து நிற்பன்.

கவி.

விழுமியர் சுபத்தின் பாலர் மேருவை யொப்போ ரெல்லாம்
பழுதறு கருடன் கொல்லும் பாம்பெனக் காலன் கொல்லும்
புழுதியோ டிலைதுரும்பு பொன்மலை புணரி வெள்ளஞ்
செழுமயேந் திரமுங் காலன் சிதைத்துத்தன் வடிவ மாக்கும்.
௰
மகாநீர்க் கடல் குடிக்கும் வடமுகக் கனலே போலச்
சகலமும் விழுங்குங் காலன் சகத்திடை விழுங்கா தில்லைப்

புகலரும் பெரியோ ரேனும் பொழுதொரு கணமுந் தாழா
னகிலமும் விழுங்கித் தானே யகிலமாய் நிற்குமன்றே.

ஆகையால் மாந்தரிலே யாராகிலுந் தன்னைப் படைத்த நடேசப் பெருமானை ஸமரிக்காமல் காமாந்தகாரமான அஞ்ஞானசாகரத்திலமிழ்ந்தி இராஜனாயாவது அதிகாரியாயாவது செல்வந்தனாயாவதிருந்து பெருமபுகழை யடைவதைப் பார்க்கிலுந் தரித்திரனுந்தனா யிருந்தாவது விஷயங்களிலே சென்று சஞ்சரிக்கிற மனதைப் பிறையோடு பெண்ணொருபாலவைத்த சங்கரன திருவடியில் செலுத்துவானேயாகில் அவனைத் தான் செல்வந்தனென்று கூறப்படுமென்று வனதேவதை சொல்லி மறைந்துவிட்டாள்.

இதற்குப்பின் சிலநாள் சென்றபின்பு இராஜகுமாரன் மாதவாரியில் வனதேவதையிடத்துக்குப் போய் அந்தமாலைக்கண்டு தரிசித்து அவ்விடத்தில மஹான்களாலே நடக்கும ஞானப்பிரசங்கங்களைக் கேட்டும், ஞானநூல்களை ஆராய்ச்சிசெய்தும்வந்ததில் ஞானோதயமாய்ப் பின்பு ஞானநிலையைப் பெற்றுக்கொண்டு ஞானவந்தனாயினனென்றறிக.

இப்படியாகக் காசிமா நகரத்திலுள்ள மடாதிபதியானவர் தேசசஞ்சாரியாகிய சிவநேசருக்குச் சொல்ல அச்சிவநேசர் அம்மடாதிபதியைப் பணிந்து ஸ்வாமி! தேகாபாசலக்ஷண மின்னதென்றும், அதனாலடையும் பயன யாதொன்றுமில்லையென்றுந் தெரிந்துகொண்டேன். ஆதலால், நடேசபெருமான் திருவடியை யடைவதற்குரிய மார்க்கத்தை யடியேனுக்கு அநுக்கிரகம் செய்யவேண்டுமென்று கேட்க, அதற்கு மடாதிபதியானவர், அப்பா சிவநேசனே! அந்த நடேசப்பிரான் திருவடியையடையவேண்டுமேனில் முதல் முதல் பிரமத்தி னிலக்ஷண மிப்படி யென்றுணரவேண்டும். அப்பிரமத்தி னிலக்ஷணத்தை நமக்குத் தெரிந்தவளவு நாம் கூறுவோம் கேளென்று சொல்லலுற்றனர்.

தேகாபாசலக்ஷணம் முற்றிற்று.



### தாண்டகம்.

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதிமிக்க
உருவேயென் னுறவேயென் னூனேயூனி
னுள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே யென்கண்ணே
கண்ணின் மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோ யடையா வண்ணம்
மாவடுதண் டுறையுறையு மமரரேறே.

### சோணசைலமாலை.

திங்களுங் கதிரு மிலங்கிய மானுந் திகழ்பெரும் பூத மோரைந்துங்
கங்குலும் பகலுங் கடந்தநின்வடிவங் கண்டுகண்களிக்குநா ளுளதோ
பொங்குகுங் கிலியக் கலயவா ரழலிற் புகையெனச் சரோருக வலலி
தங்குவண் டெழுபூம் பொய்கைசூழ்சோணசைலனே கைலைநாயகனே.

### தேவாரம்.

வட்டணைமதி சூடியை வானவா
சிட்டனைத்திரு வண்ணா மலையனை
யிட்டனையிகழ்ந் தார்புர மூன்றையு
மட்டனையடி யேன்மறந் துய்வனோ.

### இதுவுமது.

புழுவாய்ப்பிறக்கினும் புண்ணியாவுன்னடி யென்மனத்தே
வழுவாதிருக்க வரந்தரவேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க்கிரங்கி யிருந்தருள்செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடைமேல்வைத்த தீவண்ணனே.

### திருவாசகம்.

போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்குகின்றேன்
போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன்றில்லை

போற்றிபோ நமச்சிவாய புறமெனைப் போக்கல்கண்டாய்
போற்றிபோ நமச்சிவாய சயசய போற்றிபோற்றி.

விருத்தாசலபுராணம்.

திருமாலு நான்முகனுந் தேவர்கோவுந்
தேவர்களு முனிவர்களுஞ் சிந்தையாலு
மருவாய மறையாலு மளவையாலு
மளப்பரிதா யகண்டிதமாய் நின்றமூர்த்தி
யுருவாய சிவவடிவா யனந்தங்கோடி
யொளியுடைய கொடிமுடிக ளாகிநின்ற
பெருவாழ்வைத் திருமுதுகுன் றுடையான்றன்னைப்
பெருங்கருணை யாளனையாம் வணங்குவாம்.

சூதசங்கிதை.

தருவாதி சொரூப போற்றி தருபசு பதியே போற்றி
திருவளர் புகழும் பல்வேதத் திரபதி போற்றி போற்றி
மருவாரோ டதிவிருக்க வன்செந்து பதியே போற்றி
யொருவாத யாவருக்கு மொருபதி போற்றி போற்றி.

இதுவுமது.

திங்கள் சூடிய செஞ்சடைப பகவனைத் திரிபுராந்தகன் றன்னை
யங்கண்மா வுலகத்தினெவ் வுயிருக்கு மாருயி ராகுனைத்
துங்க மாருமவைச் சூலமெம் படையனைத் துவசவெள் ளேற்றானைச்
சங்க வார்குழைச் செவியுடைப் பரமனைச் சந்ததம் பணிகின்றேன்.

மகாராஜாதுறவு.

திங்களார் சடையிற் கங்கைநீர் துளிப்பத் திருந்திழை யுமை யுளங் களிப்பப், பொங்கராவொடுநற் புலிமுனிவர்கள் மாலய னமரர் கள் போற்றத், துங்கநான் மறைக டுதித்திட வைந்து தொழில்விரித் திடப் பொதுவதனிற், செங்கழ லதிர நடஞ்செயும் பொருளைத் தி னம்பணிந் திடரொழித் திடுவாம்.

## பெரியபுராணம்.

ஆதியாய் நடுவுமாகி யளவிலா வளவுமாகிச்
சோதியா யுணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகி
பேதியா வேகமாகிப் பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றிபோற்றி.

என்னும் பாமாலைகளால் தோத்திரஞ் செய்பவர்கள் சிலரும், வேதங்களினால் விதிக்கப்பட்டிருக்கிற கர்மாதர்மங்களின் பேதமறிந்து சாஸ்திரவிசாரணையைப் பகவானாகிய நடேசப் பெருமானிடத்தில் சலிக்காமல் மனதை நிறுத்தி ஞானசாதக முயற்சி செய்யுந் தன்மையுமுடைய புண்ணியவான்களாகிய சிலரும், சுருதி யுக்தி அனுபவம் இவைகளுக் கொத்திருக்கின்ற பிரமாணம் பிரமஹ: பிராபஹி: சிவ: சிவ சிவை மஹாதேவ மஹாதேவி என்னும் தன்மையோடு கூடிய கடவுளினது சொரூபலக்ஷணத் தன்மையைப் பற்றியும், ஐம்புலகை காட்சியுங் கரணவாசனையும் ஆணவமறைப்பு நீங்கு மார்க்கத்தைப் பற்றிக் கூறும் ஆரிய வேதாகம சாஸ்திரபுராண கலைஞானங்களை யெல்லா மறிந்து அதிலனுபவித்துக் கொண்டிருக்குஞ் சிலரும், அவைகளை வாசித்தும் கேட்டும் சிரவணமுதலான அநுஷ்டான ஞானத்திலே சகுணோபாசனை முதலானவை செய்து அதனால் ஆத்மானந்த அனுபவ நிலையையடைய முயற்சிசெய்பவர்கள் சிலரும், நீகத்தற்கரிய தபோதநிலையை நிஷ்களங்கமான மனதுடன் திரிமூர்த்திகளிற் றலைமையாகியும் வினையைத்தீர்க்கும் நல்லவனுமாகிய சாம்பவமூர்த்தியைப் பூசிப்பவர்சிலரும், களங்கமில்லாதமுத்திவீடடைய மாயாகாரியமாகிய தத்துவங்களை நியதிகளையும் அடியார்கள்சிலரும், செம்பிற்களிம்புபோல ஆத்மாவாகியதன்னை விழுங்கி நிற்கும் மும்மலத்தை வேறு செய்து பிறப்பு மிறப்பும்போக்கிக்கொள்ளும் பொருட்டு ஸர்வேசுரனாகவும், ஸர்வவியாபியாயும், ஸர்வாத்மகமாகவு மிருக்கின்ற கடவுளைத்தொழுது ஆங்காரமுள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்து ஞானானந்த நிட்டையிலே தூங்காமற் றூங்கிக்கொண் டிருக்குஞ் சிலரும், மாயாவசப்படாமல் அத்துவிதமாயிருக்கின்ற பரமாத்மாவைக்கருதி, மோக்ஷத்தை யடையலாமென்

கின்ற விருப்பத்துடன் தேகபோகங்களைக் கருதாது சிவபோகத்தைக் கருதி சரீரத்தை மறந்திருப்பதற்குரிய யோகசாதனங்களைச் செய்துகொண் டிருந்தருஞ் சிலரும், அப்புமுப்பும்போற் சிவபதம் பெற சிவயோக நித்திரை செய்துகொண் டிருப்பவர் சிலரும், அகங்காரமே பிரபு - விஷயங்களே பரிசாரகர் - தத்துவங்களே கூத்தாடி - இந்திரியங்களே தாளமெத்தைக்காரர் - உலகமே நாடகசாலை இவைகளனைத்தையுந் தோற்றுவிக்கின்ற சாக்ஷியே ஆத்மாவென்றும், அவ்வாத்மாவுக்கு அறிவைக்கொடுத்து சகலத்தையு மறிவிக்கின்ற வஸ்துவே நாதமுடிவில் நடனமிடும் பரசிவமென்றும், அதை யறியும்படி முயற்சி செய்பவர் சிலரும், அடிக்கடி விஷயங்களிற் செல்லுகிற மனதின் சேட்டையை யடக்கி அகண்டாகார வறிவு மயமாவதற்கு அருந்தவங்கள் புரிபவர் சிலரும், பிறப்பிறப்பு துன்பங்களை நீக்குதல் செய்யும்படி சிவானந்தமாகிய மெய்ஞ்ஞானச் செல்வத்தையடைய முயற்சிசெய்யும் பொருட்டு பசவாணுகிய நடேசரிடத்தில் சலிக்காமல் மனதை நிறுத்தி அவருளின் திவ்ய திருவருள் கிடைக்கும்படி ததாகாரமாகிய சிவத்தியானத்திலிருப்பவர் சிலரும், இப்படிப்பட்டவர்களால் சூழ்ந்திராநின்ற இடமாகியும் சாபாநுக்ரஹ சாமர்த்தியமுடைய ஞானிகளின் தன்மைவாய்ந்த அகஸ்தியமுனிவ ராச்சிரமமுமாகிய பொதியமலையின் சாரலிலிருக்கும் ஓர் வனத்திலிருப்பவன் யான். ஆநந்தமான நிர்வாணமான மோட்சத்தை யடைவதற்குச் சாதனமான அவ்விடத்தில் நான் சித்தாந்த சாஸ்திரங்களை வாசித்து ஞானப்பியாசஞ் செய்துகொண்டு எனது வாழ்நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிறேன்.

அப்படியிருக்கையில் சோமசுந்தரமென்னும் பேருடைய சிவநேயச்செல்வ னொருவன் என்னிடம் வந்து தன்மனமாகிய மனைவியை ஐம்புலாதிகளாகிய கள்ளப்பயல்கள் தமது சுவாதீனப் படுத்திக்கொண்டு வைசயோகிக்கின்றமையால், மதுராபுரியி லன்பனாகிய பாணபத்திரனுக்காக விறகுச்சுமையை சிரமேற்றாங்கி விலைகூறிவந்த சொக்கலிங்கக் கடவுளாகிய நடராஜப்பெருமானைத் தொழுவதற் கிடையூறாயிருப்பதாக தான்படுங் கவலையைச்சொல்லி முறையிட்டு

அவ்வைம்புலன்களாகிய கள்ளர்களை யடக்கித் தன்மனமாகிய மனைவியை மீட்டுக்கொடுக்கும்படி கேட்டுக் கொண்டான்.

நான் அவனது பக்குவத்தை யறிந்து சொல்லியதாவது தகுந்த ஆசாரியனைக்கண்டு உனது குறைவைப்பற்றி முறையிட்டால் அது நிவர்த்தியாகுமென்று சொல்லினேன். சோமசுந்தரம் அதைக்கேட்டு அன்றுமுதல் பசித்தவன் அன்னதாதாவைத் தேடுதல்போலவும், அநாதன் கோடைகாலத்தில் நீர் தேடற்போலவும் ஆசாரியனைத் தேடித் தன்காரியங்களைச் சொல்லிக் குறைவை நிவர்த்திசெய்து கொண்டு அவரால் ஞானோபதேசம்பெற்று மீண்டு என்னிடம் வந்து தன்குறைவைச் சீர்படுத்திக் கொண்டதாய்ச் சொல்லினான்.

அதன்பேரில், நான் சோமசுந்தரத்தைப் பார்த்து உனக்கு ஆசாரியார் உபதேசித்த ஞானவிஷயங்களைக் கூறுகென்றுகேட்க அவன் சொன்னதாவது.

ஐயா! என்மனதிற் கேற்ற ஆசாரியனைக்கண்டு எனது குறையைச் சொல்லிக்கொண்டபோது அவர் அடியேன்பேரில் கிருபா நோக்கம் வைத்து அப்பா! சோமசுந்தரம் பிரபஞ்சம் பிரகிருதி சம்பந்தமாதலால், அப்பிரகிருதிக்குரிய சடமாகிய பஞ்சபூதவடிவமான இந்தத்தேகமாகிய இல்லத்திலிருக்கும் ஜீவாத்மாவாகிய புருஷன் அஞ்ஞானத்தினாலுண்டாகும் தத்துவசேஷ்டை —அவிவேகம் - அபிமானம்-மோகம்-இராகத்துவேஷாதி குணங்களாகிய இவைகளின் செய்கையால் துன்பப்படுகிறான். இப்படிப்பட்ட புருஷன்தான் மனோதுக்கங் கொண்டலைந்து திரிபவனாயிருப்பான். இப்படிப்பட்டவன் பேரறிவிலேமனதைச் செலுத்தாமலிருப்பதால் இவனைப்பாபியென்று அழைக்கப்படும். இவன் நானாவித பிறப்பாகிய எண்பத்து நான்குலட்சம் யோனிபேதங்களிற்பிறந்திறந்துழன்று அவதிப்படுபவனாயிருப்பான்.

ஆத்மவிஷயத்தைத் தெரியப்படுத்துகிறதாகிய ஆத்மவிசாரணையற்றவர்களும், விஷயவிச்சையுடையவர்களுமான பாமரர்கள்பிரபஞ்ச வாழ்வில் மயங்கி அவதிப்பட்டுப் பலவிததுன்பத்தை அநுபவிப்பார்கள். இரும்புபோலக் கடினமான கள்ளம் வாய்ந்த மனத்தையுடைய

வனும், பொய் பேசுபவனும், உருட்டுப் பிரட்டுகள் செய்பவனும், பொய்சாக்ஷி சொல்லுபவனும், வாங்கின கடன் கொடாதவனும், நிர்த்தோஷியர்களா யிருப்பவர்கள் பேரில் குற்றஞ்சாட்டுபவனும், ஏழைகளைப் பயமுறுத்திப் பணம்பறிப்பவனும், தான்சம்பாதிக்கும் திரவியங்களைத் தனக்கிஷ்டமானபடி கெட்டமார்க்கத்தில் உபயோகப்படுத்தப்பட்டவனும, மோசஞ் செய்பவனும், ஞானசாதனங்களைச் செய்பவர்களிடத்தில் பகைமையையுடையவனும், ஜனனமரணத்துடன் விளையாடிக்கொண்டிருப்பவனுமிருப்பவன்யாரோ? அப்படிப்பட்டவன் யாவர்க்குமபொல்லாங்கு செய்பவனுமிருந்து தேகாந்த காலத்தில் இயமபுரியடைந்து அங்கனமேயமான துன்பங்களை அநுபவித்துக் கொண்டிருப்பான். இவனைத்தான பாபியென்றும், பிரஷ்டனென்று மழைக்கப்படுவது.

இவன் செய்யுங் கொடுஞ் செய்கையால் இவ்வுலகத்தில ஆதியாத்மிகம. ஆதிதெய்விகம. ஆதிபௌதிகம் இவைகளாலாய கொடுமைகளால், வெய்யிற்கிடந்த புழுப்போல் வெம்பி சம்சாரதாபத்திரயத்தி லிருந்து அவதிப்படுவான். இந்தப் பிரபஞ்சத்தின் வாழ்வு நிலையற்றதென் றுமறியான். எவர்கள் தெய்வபக்தி யில்லாதவர்களாயும, அஞ்ஞானத்தைத யுடையவர்களாயும, அறிவும் நன்னெறியுமிலலாதவர்களாயு மிருக்கிறார்களோ? அப்படிப்பட்டவர்கள் இழிவான கதியை யடைவார்கள். சாபந் தீண்டிய ஒருவன்படும் வேதனை அவனைவிட்டு நீங்காததுபோல மாயா பிரபஞ்சத்தின் அபிமானம் இவ்வஞ்ஞானியர்களை விட்டு நீங்காது. பிராரத்த வாதனையும் அவர்களைவிட்டு நீங்காது. இப்படிப்பிரஷ்டர்களா யிருக்கும்பாமரர்கள் சுகதுக்கத்துக்கும், பிறப்பிறப்புக்கும், ஆளாயிருப்பதைப் பார்க்கிலும் இப்பிறப்பின் துன்பத்தை நன்குணர்ந்து இனிப்பிறவா நெறியாகிய வீட்டின்பத்தைச் சிந்தித்து நடேசப் பெருமானைத் துதித்து வாழ்த்திப் போற்றி வந்தால் அவர் உயர்கதியைத் தந்தருளுவார். ஆகையால்சோமசுந்தரம்!உன்சரீரம்நழுவுமுன்சான்றோரைத்துணைபற்றிக் கொண்டு எப்போதும் சிவசிவ - சிவசிவவென்று செபித்துவா! அப்

படி செபித்துவந்தா லது அஞ்ஞானத்தின் கற்பனைகள் யாவற்றை யும்போக்கிப் பசுகரணங்களை யெல்லாம் சிவகரணங்களாகச் செய்து சிவஞானத்தை யுண்டாக்குவிக்கும்.

இப்படிக்கு நல்லவர்களின் வல்வினைகளைத் நீக்கும் சிவசங்கரனைத் தொழாமல் மனதைச்சத்தாதி விடயங்களிற் செலவிடுபவர்கள் துன்பப்படுவார்கள். கண்ணியி லகப்பட்ட பறவை மீளாததுபோல சத்தாதிவிடயங்களிலகப்பட்டமனம் மீளாமல் தேகத்திற்குவேறாகத் தேகி ஒருவனிருக்கத்தேகத்தைத்தானென்றெண்ணிபரமான்மாவாகி யபதியை மறந்துதேகபோகங்களைக்கருதி இப்பிறப்பினாலாகிய துன்பங்களை அனுபவித்து வாழ்நாட்களைக் கழிப்பார்கள். ஆகையால் பரமான்மாவாகிய நடேசப் பெருமானுடைய மலர்போன்ற மிருதுவாகிய பாதங்களை மறந்தும நினையாமலிராதே. சிவசிவவென்பதை மறந்தும் சபிககாமலிராதே. சிவமென்னல் யாதென்னிற் சித்தத்தெளிவே சிவமாகும்.

ஞானுபவரசம்.

சிவமென்னல யாதென்னிற் சித்தத்தெளிவே
சிவமாகுஞ் சத்தியமாய்த் தேரின்—பவமென்ன
வீங்கிதற் கெங்ஙனுண்டா மெங்கெங்குந் தன்மயமா
யோங்கிலகு மெஞ்ஞான்று முற்று.

யான் எனதென்று கூறும்படியாகிய மோகத்தைக் கைப்பற்றிக்கொண்டு அதனால் மம்மதை யடைந்திருக்கு மஞ்ஞானிகளாகிய பாமராளுக்குச் சிவசிவவென்று சொலல நாவு வராது. ஆனாலிவர்கள் சங்கற்ப வடிவமாகிய அகங்காரம் பொருந்திய மனத்தின் விகற்பத்தால் தோற்றும் சகத்துக்காரியங்களைப் பிராந்தியால சத்தியமென்று எண்ணி பத்மினிசபா இந்திரசபா நாடகத்தின் பாடல்களைப்பாடிக் கைத்தாளமுஞ் சிட்டிக்கையும் போடுவதுடன் இடையிடையே மூக்குத்தூள் போட்டுக்கொண்டும், கடைசியாய்ச் சித்தசலனம் கொண்ட பித்தர்களைப்போல மாண்டுபோவார்கள். இவர்கள் பிறப்பிறப்பென்னுந் துக்கமாகிய போர்த்தொழிலில் நின்றும் நீங்காதவர்களாயிருப்பார்கள்.

சிவசிவ வென்று கூறுவதனு லுண்டாகும் பலன் யாதென்று வினவில், சிவசிவ வென்பது உருத்திர மந்திரமாகும். இந்த மந்திரத்தை யுச்சரிப்பவர்கள் சிவகதி யடைவார்கள். புண்ணியவான்களா யிருப்பவர்கள் மாத்திரம் இந்த மந்திரத்தை அனுஷ்டித்து வருவார்கள். தீவினையுடையோர்கள் அதை யொருபோதும் நினையார்கள்.

## திருமந்திரம்.

சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்னச் சிவகதி தானே.

## இதுவுமது.

அளவிறந்தது வருள்சிவ சிவசிவ
வகமிறைந்தது வடியிணை சிவசிவ
உளமிறந்துயி ருணாவொடு பரமற
வொளிருகின்றது சிவசிவ சிவசிவ.

"சிவ என்னுந் திருநாமத்தை அன்புடன் உச்சரித்தலினுலுங் கேட்டலினுலுஞ் சமஸ்த பாவங்களு மரிக்கப்படும். அன்றியும், திரிகரண சுத்தியாய் இதை உச்சரித்துத் தியானஞ் செய்வோர் ஒரு மாத்திரைக்குள்ளே அவரது திருவருளைப் பெற்றுச் சிவகதி யடைவார்கள்.

## (தேவாரம்.)

சாத்திரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்திரஞ்சிவ மென்றுபணிதிரேன்
மாத்திரைக்கு ளருளுமாற் பேறரோ.

சிவவென்பதற்குப் பொருள் பரனையும்பரையையுங் குறிக்குமாம். அவாங்மனோகோசரமாய் விளங்கிய சிவசொரூபமே பராசத்தியோ டெங் கூடிச் சர்வஜகத்காரண மூலவஸ்துப பரசிவமாகியும் ஆதிசத்தியோடெங்கூடி அப்பிராகிருத சிவலோக அபரிச்சின்ன மூர்த்திகளாகி

யும், இச்சாசத்தியோடுங் கூடி பக்த சிந்தித வரப்பிரசாத மூர்த்திக ளாகியும், கிரியாசத்தி யோடுங்கூடிப் பஞ்சகிருத்திய பராபரப்பொரு ளாகியும், ஞானசத்தியோடுங்கூடி அறிவுககறிவாக நின்று சர்வர க்ஷை பண்ணுவதாகியும், சமுத்திர தரங்க நியாயத்தாற் சர்வமும் சிவாகார சுகோததியுருவாயும விளங்கிய சுத்தசிவமே சிவசொரூப மென்றறிக.

சிவநேசனு யிருப்பவனுக்குச் சர்வமும் சிவாகார சுகோததி சொரூபமாய் விளங்கும். அநதச சுத்தசிவத்தைத தரிசிக்கவேண்டு மென்கின்ற வாஞ்சையை யுடையவனுயிருந்தால் அகமுகநோக்கத் தால் தரிசிக்கவேண்டியதா யிருக்கும. அப்படித தரிசிககவிருப்பவ வன் தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆத்துமரூபம், ஆத்துமதரிசனம், ஆத்துமசுததி இவைகளைக் காண்டலும், தரிசித்த லும், சுத்திசெய்தலு மாகியவிவற்றால் அச்சிவசொரூபத்தைத் தரி சிக்க வியலும்.

இவற்றில தத்துவரூபமாவது பிருதிவி தத்துவமுதல் நாததத் துவபரியந்தம் தனித்தனியேகாண்பது; தத்துவதரிசனமாவது அத் தத்துவங்களை மலத்திரய சடத்துவாகாரமாயக் காண்பது; தத்துவ சுத்தியாவது சற்குரு கடாக்ஷத்தினல் அத்தத்துவங்களை நியதி களைந்து நீக்கப்படுவது; ஆத்துமரூபமாவது அக்ஞானவிருளைச் சிதைத்து சுக்ஞான சொரூபமாய்க்காண்பது; ஆத்துமசுத்தியாவது தத்பாவதிசையிற் றேற்றும் தற்போதத்தை நீங்கியிருததல்.

இவற்றால் சிவரூபம் சிவதரிசனம் சிவபோகம் வாய்க்கும். சிவ ரூபமாவது ஒருவனே பஞ்சகிருத்திய பராபரப் பிரம்ம அநுபவநிச் சயமாய்த் தெளிந்திருப்பது; சிவதரிசனமாவது சுட்டுதலற்று அற் புதாகாரமாய் விளங்குவது;சிவபோகமாவது கிருத்தியா கிருத்தியங் களைத் திருவருளாலே நடத்தக்கண்டு சித்தசலனத்தை மாற்றிச் சிவானந்த வாரியிற் படிந்து நிற்பது.

இவற்றால் ஆசிரய விஷயங்களிற் பக்குவாபக்குவம் பாராதே ததாகாரமாக விளங்குவதாகிய சிவபோகம் வாய்ந்தின்புற்று விளங்கி நிற்பன்.

இவ்விதமாகிய சிவபோகம் வாய்ந்தின்புறுதற்குக் குருவுபதேசமே வேண்டும். அக்குருவுபதேசமாவது அத்தியாரோப அபவாத யுக்தியினாலே மித்தையாரூப ஜெகஜீவபர பிராந்தியைப் போக்கிச் சாவமும் பிரம்மமயமென் றுணர்த்தப்படுவதாம்.

இவற்றில் ஆரோபமாவது துரியாதீத வஸ்துவே புருடனது மயக்கரூபத்தால ஜெகஜீவ பரமாக் தோற்றப்படுவது. அபவாதமாவது, சற்குருகடாக்ஷத்தால் அவ்வாரோப ஜெகஜீவ பரகல்பிதங்களை வர்ச்சித்து அதிஷ்டான துரியாதீத வஸ்துவாயத் தரிசிக்கப்படுவதாம்.

வினா—ஐயா! குருவுபதேசமானது மித்தையாரூப ஜெகஜீவபர பிராந்தியைப்போக்கிச் சாவமும் பிரம்மமயமாய்த் தோற்றுவிக்குமென்கிறீரே அது எவ்விதத்தா லப்படி செயவிக்கின்றது.

விடை—சகல நிஷ்பிரபஞ்ச எஜமானனும், எல்லாப்பிரவர்த்திநிவர்த்திகளுக்குஞ் சாக்ஷியாயும், எல்லாவற்றிற்கும் ஆதிபூதனும், பரப்பிரம்ம ஸ்வரூபனுமாயு மிராநின்ற நடேசபெருமானைப் புகழ்ந்துபோற்று மெய்யடியார்களுக்குத் தேசிகோத்தமனாகிய ஆசாரியன்கூறும் ஒரு மொழியானது ஜீவனைமயக்கச் செய்யும் சரீரேந்திரிய மனோ புத்தியாதி பரிச்சேத பந்தத்தை நிவர்த்திபண்ணி தன் சொரூபநிலையறிந்து தரிசிக்கச் செய்து சிவானந்தப்பேற்றைக் கொடுத்தருளும்.

இப்படியாகச் சிவானந்தத்தைப் பெற்ற மகான்களைத் தான் சீவன்முத்தர்களென்று கூறப்படுகிறது. இந்த மகாபுருஷர்கள் பஞ்சபூத விவேகத்தை விசாரம்பண்ணிச் சகல பிரபஞ்சத்தையுஞ் சின்மாத்திரமாய்க் கண்டு அத்துவித நிலைபெற்றவரா யிருப்பவராதலால் இவர்களிடத்தில் பேய்களாகிய மோகம்வந்து நேரிடினும் பயப்பட்டோடிப்போம். இவர்கள் பிராரத்துவ தேகத்துடன்கூடி யிருக்கும் போதே பரமாத்துமாவினது லக்ஷண லக்ஷியசொரூபவிலாசாதிகளைக் கண்டு தெரிசித்தவராவார்கள். அந்தப்பரமாத்மாவாகிய சுத்தசித்தினது லக்ஷியமாவது எத்தன்மைத்தெனில்.

நித்தியமாகவெங்கும் இடைவிடாது வியாபித்துப் பிரியாதிருத்தலாலும், சேதனாசேதனப் பிரபஞ்சங்கள் அனைத்துக்கும் பிரேரகமாய் நிற்றலாலும், அதற்குச் சாந்தியாதீதகலை சாந்திகலை வித்தியாகலை பிரதிட்டாகலை நிவர்த்திகலை என்னும் பஞ்சகலைகளையு முடிகளாகவும், சாந்திகலை முதலிய நான்கு கலைகளையு மார்பாகவும், வித்தியாகலை முதலிய மூன்றுகலைகளையு முந்தியாகவும், பிரதிஷ்டாகலை முதலிய இரண்டு கலைகளையு முந்தியின்கீழுள்ள உறுப்புகளாகவும், நிவர்த்திகலையை முழந்தாளாகவும், அக்ஷரங்களைத் தோலாகவும், புவனங்களை உரோமங்களாகவும், மந்திரங்களை இரத்தமாகவும். பதங்களைத் தசையாகவும், தத்துவங்களை ரேதசு எலும்பு நிணம் மூளை என்பவைகளாகவும், சத்திகளைப் பதினைந்து கண்களாகவு மமைத்து ஆறத்துவாக்களையும் வடிவமென்று சொல்லுமபடி நிற்கும்.

## சிவஞானதீபம்.

அத்துவா வடிவாமெம் மிறைமுடிதான் கலைக
ளைந்தாகுஞ் சாந்திமுத லானநான் குரமாம
வித்தைமுதன் மூன்றிரண்டாம் பிரதிட்டாதியுந்தி
வியன்பாத நிவர்த்தியதா மிளிர் துவக்கக் கரங்கள்
வைத்தபுவனங்கண்மயிர் மந்திரங்க ணெய்த்தோர்
வளந்திகழும் பதங்களருந் தசையாகு மதித்த
தத்துவங்கள் சுக்கிலமோ டத்திநிண மூளை
சத்திகடா நேத்திரமூ வைந்தாமித் தகையே. என்பவற்றுணர்க.

இந்தப் பரமாத்மாவைத்தான் - பிரமமென்றுகூறப்படுவது. இந்தப்பிரமந்தான் சிவானந்தப் பொருளாய் விளங்குவது - இந்தச் சிவானந்தப்பொருளே அறிவுமயமாகிய வாத்மாவாக விளங்குவது. உலோகத்திலே சகல பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கின்ற வெய்யில் அந்தந்தப் பதார்த்தத்தின் பேரிலே விழுந்து அவைகளின்னதின்னதெனத் தோற்றுவிக்கின்றதுபோல், பரிபூரணமாயும், சுயம்பிரகாசமாயு மிராநின்ற பரமாத்துமாவாகிய பிரமமானது பிரபஞ்சத்திலுள்ள சகல வஸ்துக்களிலும் அந்தராத்மாவாக இருந்து அவைகளைத் தோற்றுவிக்கின்றது. உபாதி பேதத்தாற் பிராந்தி

யாய்த் தோற்றிக்கொண் டிருக்கின்ற மாயாப்பிரபஞ்சத்திற்கு ஆதார பூதமாயிருப்பதும் அந்தப்பிரமந்தான். மனது முதலியவைகள் பிரவர்த்திக்கிறதற்கு அந்தர்யாமியாயும், அறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் வேறாயும், ஞான அஞ்ஞான காலாகாலங்களி லிருப்பதாயும், சர்வம் ஏக பரிபூரண ஸ்வாநுபூதி ஸ்வைதுவாயும், எல்லையற்று அவாங் மனோ கோசரமாயும், நிராமயமாயும், நிட்களமாயும், நித்தியமாயும், நின்மலமாயும், புராதனமாயும், சஞ்சலமாயும், சஞ்சல ரகிதமாயும், பூரணமாயும், நிராமயமாயும், நிரஞ்சனமாயும், புனிதமாயும், சராசரமாயும், சாட்சியாயும், சத்தியமாயும், சித்துருவாயும், பராபரமாயும், வெறு வெளியாயும் இன்னும் பலவித தன்மையாயுமுள்ளது அந்தப்பிரமந்தான்.

வள்ளலார்சாத்திரம்.

நிராமயமாய் நிட்களமாய் நித்தியமாய் நின்மலமாய்ப்
புராதனமாய்ச் சஞ்சலமாய்ப் பூரணமாய்ப் புனிதமாய்ச்
சராசரமாய்ச் சாட்சியாய்ச் சத்தியமாய்ச் சித்துருவாய்ப்
பராபரமாய் வெறுவெளியா யிருக்குமந்தப் பரமசிவம்.

சொல்லாலு மனத்தாலுந் தொடாத சூக்குமமாய்ப்
பல்லான்ற கேள்வியரு மிதென்று பகர்வரிதா
யொல்லாத பரஞ்சுடரா யுயிர்க் குயிரா யுண்மையா
யெல்லாமா யல்லவுமா யிருக்குமந்தப் பரமசிவம்.

ஒன்றாயும் பலவாயு முருவாயு மருவாயுங்
குன்றாயு மணுவாயுங் குணமாயுங் குணியாயு
நன்றாயுந் தீதாயு நானாயுந் தானாயு
மின்றாயு முளதாயு மிருக்குமந்தப் பரமசிவம்.

சித்திக்குந் தெள்ளமுதாய், சித்தாந்தத்துட் பொருளாய், முத்திக்குவித்தாய், ஆறாதாரங்கடந்த வானந்தப் பேரொளியாய், நினைக்கு நினைவுதோறும் நிறைந்த பரிபூரணமாய், வெட்ட வெளிக்குள்ளே விளங்கும் பரஞ்சுடராய், ஆனந்த வெள்ளமாய், அமிர்த சாகரமாய், போக்கும் வரவும் புறம்பு முள்ளுமாகி நின்று தாக்குமொரு

பொருளாய், பஞ்சரித்துப் பேசும் பல கலைக்கெட்டாப் பொருளாய், இப்படியாகவிளங்குவது அந்தப்பிரமந்தான். அந்தப்பிரமம் சர்வபரிபூரண நித்திய சர்வபங்கள, சர்வப்பிரகாச காலாதீத தத்துவாதீத வஸ்துவாய் விளங்கும். அந்தப்பிரம ஸ்வரூபத்தைத்தான் வேத வேதாந்த ஸ்மிருதிமுதலிய சர்வசாஸ்திரங்களும் எடுத்துப் பிரபலமாய்ப் புகழ்ந்து பேசுவது.

எவ்விடத்திலுந்தானாய் நிராமயமாய் பரம்பொருளாய் சங்கற்ப விகற்பங்களை யெல்லாங் கடந்து நிற்பதும் அந்தப் பிரமந்தான்.

## மஹாபாரதம்.

எங்குந் தானாய் நிராமயமா யேக மாகிப் பரம்பொருளாய்
அங்கம் பிரமாண் டத்தெல்லை யடங்கா வாகி யமைவின்றிச்
சங்கற்பங்கள விகற்பங்க டவிர்ந்த கடராய்த் தனிவெளிமீப்
பொங்குபரமா னந்தவெள்ளப் புனலையா னைவரே புலப்பட்டோர்.

அவ்வவ் வான்மாக்களின் கன்மாசாரத்தை அநுசரித்து அரிய வினைப் போகங்களை முறைமுறை குறையாமற கூட்டிப் புசிப்பித்தும், சர்வசங்கார காலத்தி லான்மாக்கள சகலாவத்தைபட்டுப் பிறந்திறந்தலைந்து திரிந்தவினைப்பு நீங்கும்படி கரணரகேவலாவத்தையி லொடுக்குவித்தும், அநாதியேதொடுத் தாதியாய சிருஷ்டித்தாந் திதித்தாஞ் சங்கரித்தும் அளவிறந்து ஆதிநடு அந்த மற்றதாக நிற்பதுவுமாகிய வஸ்து எதுவோ அவ்வஸ்துதான் அந்தப்பிரமம்.

உலக விஷயங்களிலாசை யுடையவர்களாயும், இதுநல்லது இது கெட்டது இதுதர்மம் இது அதர்மம் என்று தெரிந்துகொள்ளாமலும், நடேசப்பெருமானைப் போற்றித் தொழாமலும், ஆகாரம் நித்திரை பயம் மைதுனங்களை மாத்திரஞ் செய்து கொண்டிருக்கும் அவிவேகத்தை யுடைய பசுக்களைப் போலிராமல் பூர்வஜன்மாந்திரத்தில் செய்த நிஷ்காம கர்மங்களினாலே சிவபத்தராய் தத்துவவிசாரணைசெய்து இராகத்துவேஷங்களை அகற்றி சித்த சுத்தியை யடைந்திருக்கும், பக்குவான் மாக்களைத் தீக்ஷாக்கிரமங்களினாற்சோதித்து அருள்வடிவாக்கும்படியாகத் திருச்சிற்றம்பலத்தின் கண்ணே நின்

றாடுங் திருநடனத்தொழிலும், பிரகாசம் பொருந்திய நீலமணிபோல விளங்குங் காளகண்டமும, திருமேனியிற் பாதியாய்ப் பச்சைவடிவு கொண்டிலங்குஞ் சிவகாமியம்மை தங்கிய இடப்பாகமும், பவளக் கொடிபடர்ந்து கிடப்பதுபோன்ற திருச்சடாபாரமும, அச்சடா பாரத்தின்மேற் றரித்திருக்கின்ற கங்கையும, பாலசந்திரப் பிரபையும, சாபமும, அக்கினி நேத்திரமும, வலக்கையில் முழங்குந் தமருகமும், இடக்கையிற் றாங்கிய அக்கினி குண்டமும, அரையிலே கட்டிய ஐந்தலையரவக்கச்சும், புலித்தோலுடையும் ஆன்மவர்க்கங்களை மோட்சமாகிய பேரின்பவெள்ளத் தழுத்துதற் கூன்றின திருவடியும், அடியார்களுள்ளத்திற் கலந்து இன்ப பூரணமாயிருக்கின்ற குஞ்சிதபாத முமுடைய நடேசப்பெருமானுமாயிருக்கின்றவரும் அந்தப்பரமாத்மா. அங்கங்கவைகந்து நெருங்குராய் தானே தானாய்த் தானே யானந்தமாய அவ்வெளியே யருளொளியாய் தங்கிய திசையெங்கு முயாததனிப்பரவெளியே யருளொளியாய்விளங்கும் வஸ்துவும் அந்தப்பிரமந்தான்.

ஞானமயமான அறிவினால் தன்னைத் தரிசிக்கும் சீவன்முத்தர்கள் இதயத்தில் எழுந்தருளும் இயல்புடையதும, ஆகாயச்சொரூபமாயிருப்பதும, அதற்குக் காரணமான பிரகிருதிக்கு ஆதாரமான கலாரூபமாயுள்ளதும, அக்கலைக்கு மேலாகிய சுத்தமாயைக் கப்பாற்பட்ட சுத்த வித்தையையுங் கடந்தவிந்துவி லிருப்பதும், அவ்விந்துவைக் கடந்த சதாசிவத்திற்கு மேலான பராசக்திக் காதாரமான பரசிவமாயிருப்பதும அந்தப்பரப்பிரமந்தான். சூரியப் பிரகாசத்தினாலேயே எல்லாம் பிரவிர்த்தி மார்க்கத்தில் பிரவர்த்தித்த போதிலும், சூரியன் எப்படி தானொன்று செய்யாமலும் செய்விக்காமலும் இருக்கின்றானோ அதைப்போல எந்தப் பரம்பொருள் தானொன்று செய்யாமலும் செய்விக்காமலு மிருந்தபோதிலும் ஆத்ம சைதன்யத்திலே எல்லா விஷயங்களும் செல்லுவதற் காதாரமாயிருப்பது எதுவோ அதுதான் அந்தப்பிரமம்.

பிரமன்-விஷ்ணு-உருத்திரன்-மகேசுரன் - சதாசிவன் - விந்து-நாதம் - சக்தி-சிவம்-என்னும் நவந்தருபேதமாக விளங்குவதும், வே

தாகம சாஸ்திர விதிகாச புராணமாகிய அபரஞான ஸ்வரூபமாகி விளங்கி நிற்பதும் அந்தப் பிரமந்தான்.

எங்குஞ்சமரச நிலைச்சிவமயமா யெங்குமாம் பஹிரண்ட மடங்குமொருநிறைவாயறிவானந்த சுகதரிச்சுணசகவாரியானந்தமாய் பொங்குமறிவுதானாய் விளங்குந் தெய்வாதிகபரம்பிரண்டிற் பரவுஞ சுகானந்த சிவமயமாய் விளங்குவதும் அந்தப்பிரமந்தான்.

சரியை யநுஷ்டித்தோர்க்குச் சாலோகபதவியும், கிரியை யநுஷ்டித்தோர்க்குச் சாமீபபதவியும், யோக மநுஷ்டித்தோர்க்குச் சாரூபபதவியும், ஞான மநுஷ்டித்தோர்க்குச் சாயுஜ்யபதவியும் அருள்வதும்; ஆசிரியன் திருவருளால் அறியாமையும் அறிதலுமாகிய இருவகைப் பாசங்களு நீங்கி அறிவின் கண்ணே கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடலென்னு ஞானத்தின் முயன்றவர்கட்கு நித்தியா நித்தியங்கடந்த நித்தியமாகிய பரவெளியைத் தந்தருள்வதும் அந்தப் பிரமந்தான்.

உருத்திர மூர்த்தியாகி, பசுபதியாகி, முடலையாக்கையோடுங் கூடிய ஜனனமரண துக்கத்திற் கிடந்தழுந்துகின்ற ஆன்மாக்களைத் திருவடிக் குறித்தாகக்கொள்ளவேண்டி தனக்குள்ள மெய்வடிவைக் காட்டாது மானிடகோலங்கொண் டெழுந்தருளி யருள்செய்யும் பொருளாகி, போககாண்டமாகிய ஆன்மதத்துவம் இருபத்துநான்காகி, போக்கிய காண்டமாகிய வித்தியாதத்துவமேழாகி, பிரேரககாண்டமாகிய சிவதத்துவமைந்தாகி, இம்முக்காண்டப் பிரிவாகிய முப்பத்தாறு தத்துவங்களைக்கடந்த பரவிந்து பரநாதமாகி, நல்வினை தீவினையென்னும் இருவினைப்பகுதிகளும் சமமாய்த் துலையொக்க விடத்து ஆன்மாக்களுக்கருள் செய்யப்பட்டதாயுமுள்ளது அந்தப் பிரமந்தான்.

யான் எனது என்னும் அகங்கார மமகாரங்களாகிய இருமாப் பினின்று நீங்கித் தன்னை யறிந்துள்ள மெய்ஞ்ஞானியர்கள் கண்டுகளிப்பதும் அந்தப் பிரமந்தான்.

மனவாக்குக் கெட்டாத அருளைவடிவாய், உலகத்திலே தாக்கற்று நிற்கும் ஒப்பற்ற சத்தவ்யமாய், ஒவ்வொரு பொருளினையும் விட்டு நீங்காது நிறைவுமாகியாய், சூரியப்பிரகாசத்தின் முன் சந்திரப்பிரகாசம் இரண்டற நிற்குமுறைபோல நாதாந்தப் பேரொளியாகிய தனது திருவடியில் ஆன்மாக்களைக் கலப்பித்து ஆன்மபோதம் நிகழாவண்ணம் அருள் செய்திருப்பதும் அந்தப்பிரமந்தான்.

ஆன்மாக்களின் உள்ளும் புறமும் விடாதமைந்த ஆணவமல இருள் ஒட்டமெடுக்கும்படி விளங்கும் அளவிறந்த கிரணத்தையுடைய பரிதியாகியும், கடலையொத்து மிகுந்த அருளாகிய அமுதத்தை நமமுடைய மனதிற் சொரிகின்ற மதியாகியும், அவையனைத்து மென்னுங் கூறுபட்ட பிரபஞ்சமாகி நிற்பதும் அந்தப்பரப்பிரமந்தான்.

உயிர்க்குயிராகியும், பரஞ்சுடரொளியாகியும் வேதங்களின் முடிவிலுள்ளதாகியும், பரம்பொருளாகியு மிருப்பது அந்தப்பிரமந்தான்.

நான்கு வேதங்களும் பிரணவமும் மற்றக்கலைகளும் மிகுந்தாதரத்துடன் பிரபலமாகப் புகழ்ந்து பேசும்படியான வஸ்துவும், அந்தப்பிரமந்தான். ஞானிகளுக்கிறங்கசீர எகமே வாத்வைத வஸ்துவாயிருப்பதும் அந்தப்பிரமந்தான். இனமுறும் பிறப்பு இறப்பை யடியோடே கட்டறுத்து நித்தியானந்த முத்தியளிக்க ஞானகுருவாய் எழுந்தருளிவரும் தேசிகோத்தம மூர்த்தமும் அந்தப்பிரமந்தான்.

பிரபஞ்ச மாயாகாரியங்களைச் சத்தியிராஜிதமாகவும், முயற்கொம்புபோலவும், வந்தியா புத்திரன்போலவும், ஆகாயமலர் போலவும், மித்தையாகக்கண்டு அற்பசுருதியாகிய கன்மகாண்டத்தையும் பத்திகாண்டத்தையுங் கழித்துப் பிரபலசுருதியாகிய ஞான காண்டத்தினுட் பொருளை யறிந்து பதிபசுபாசங்களி னிலக்ஷணங்களைத் தேர்ந்து தற்போத மடங்கிப் பகலிலேற்றியதீபம்போ லான்ம சேட்டையடங்கி நிற்கும் ஜீவன்முத்தர்கள் தரிசிக்கத்தரிசனந் தந்தருள்வதாயும், நிர்விகார ஸ்வரூபமாயுள்ளதாயும், முன்னைப் பழம்பொ

ருட்கு முன்னுள்ளதாயும், பின்னுண்டாகும் புதுப்பொருட்கும் புதுப் பொருளாயுமுள்ளதாயுமுள்ளது அந்தப் பரப்பிரமந்தான்.

இந்தச்சுத்தப் பிரமமானது சகளீகரித்துக் கொண்டகாலையில் உலகமே தனக்குத் திருமேனியாகவும், யானைமுதலெறும்பீறாகிய எண்பத்து நான்கிலக்கயோனிகளை அவயவங்களாகவும், இச்சாஞானக் கிரியைகள் அந்தக் கரணங்களாகவும் ஆன்மகோடிகள் செய்யும் இருவினைக்கேற்றபடி பஞ்சகிருத்தியங்களாகிய நாடகநடிக்கும்.

சிவஞான சித்தியார்.

உலகமே யுருவமாக யோனிக ளுறுப்பதாக
இலகுபே ரிச்சாஞானக் கிரியையுட் கரணமாக
அலகிலா வுயிர்கட்கெல்லா மிருபயனாக வைந்து
நலமிகு தொழில்களோடு நாடகநடிப்ப னாதன்.

வேதாந்த முடிவில் பிரமமாய் எடுத்துக் காட்டப்பட்டிருக்கும் வஸ்துவாய் நிவர்த்தி கலைக்கதிபதியான விஷ்ணுவுக்கும், வித்தியாகலைக் கதிபதியான உருத்திர மூர்த்திக்கும், சாந்தி கலைக்கதிபதியான மகேஸ்வர மூர்த்திக்கும், சாந்தியாதீத கலைக்கதிபதியான சதாசிவமூர்த்திக்கும் எட்டாதபரநாதமூலத்துள் முளைத்த தனிப்பெருஞ் சோதியாயும், சுத்தமாயையின் சொரூபமாகவிளங்கும் பராசத்திக் காதாரமான பரமாகியும், நிர்மலமாகிய வெட்டவெளியில் முடிவில்லாத சுத்த சூனியமாகியும், பாதாளசத்தி தொடங்கிய பராசத்தியாபகம் வரையினுமுள்ள சத்துக்களின் ஞானமாகியும், தன்னிடத்து அபின்னமானவைகட்குத் திருமேனியாகியும்-சாக்கிரம்-சொப்பனம் சுழுத்தி-துரியம்-துரியாதீதம் என்னும் பஞ்சாவத்தைகளுங் கடந்த பரமாகியும், காருணியத்தால் மேலுமேலும் வளர்ந்தோங்குகின்ற நித்தியானந்த சுகமாயும், நான்குவேதம் - இருபத்தெட்டாகமம்- இவைகளாலறிந்து பொருந்தப்படாத திருநாட்டை யுடையதும், பூதாகாயமாயும், பரமாகாயமாயும், இவ்வாகாயங்களெல்லாந் தோற்றுகின்ற ஞானாகாயமாயும், மௌனாகாயமாயும், சிதாகாயமாயும், ததாகாயமாயும், இன்பாகாயமாயும், இயற்கையுண்மையாயும் விளங்குவதும் அந்தப்பிரமந் தான்.

## திருவருட்பா.

வண்ணமிகு பூதவெளி பகுதிவெளி முதலா மருங்குறாடி வெளிகளெலாம் வயங்கு வெளியாகி, எண்ணமுறா மாமௌன வெளியாகி யதன் மேலிசைத்தபர வெளியாகி யிரண்டுமிலா வெளியாய், அண்ணுறுசிற் பரவெளியாயத் தற்பரமாம் வெளியா யதுவாம் பெருவெளியாகி யருளின்ப வெளியாய்த், திண்ணமுறுந் தனியியற்கை யுண்மைவெளி யான திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர்.

இவ்வளவென்று எல்லைப்படுத்தற்கரிதாயும், பிரபஞ்சமுழுதும் வியாபகமாயிருப்பதும், ஆன்மபோதத்தா லறியப்படாததும், எங்கும் பெருஞ்சோதியாயிருப்பதும், சோமசூரியாக்கினியென்னு முச்சுடராயிருப்பதும், ஞானநேத்திரங்களுக்கன்றி ஊனநேத்திரங்களா லறியப்படாததும், ஆணவம்-கன்மம்-மாயையென்னு மும்மலங்களை யுமகன்றதும், உலகாயதம்-புத்தம்-சமணம்-மீமாம்சம், மாயாவாதம் பாஞ்சராத்திரம் மென்னும் அறுவகைப் புறச்சமயங்களுக்கும் எட்டாத பொருளாயும், சைவம்-பாசுபதம்-காளாமுகம்-வயிரவம்-வாமம்-மாவிரதம் மென்னும் உட்சமயமாறி னுட்பொருளாயும், பொன்னும் பணியும்போற் பேதமில்லாத தோற்றமில்லதாயும், இருளும் வெளியும்போற் பேதமில்லதாயும், சொல்லும் பொருளும்போலப் பேதாபேதமுமில்லாததாயும், வேதாகமங்கள் கூறிய சிவதன்மங்களின் கூறுபாட்டினாலே விளக்கமுறுவதாயும், உடலு முயிரும், கண்ணும் சூரியனும், ஆன்மபோதமும் கண்ணொளியும்போல வேற்றுமையில்லாத அத்துவிதமாகுஞ் சிறப்பினை யுடையதாயும் விளங்கி நிற்பதும் அந்தப்பிரமந் தான்.

## சிவப்பிரகாசம்.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபேத முமின்றிப் பெருநூல் சொன்ன

லறத்திறனால விளைவதா யுடலுயிர் கண்ணருக்க
னறிவொளிபோற் பிரிவருமத் துவித மாகுஞ்
சிறப்பினதாம் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்கு தெரிக்க லுற்றாம்.

ஒளியுருவாகி, ஞானானந்த சமுத்திரமாகி, சித்துமல அசித்துமல்லாத பரமசித்தாகி, பிருதிவிமுதலாகிய பஞ்சபூதங்களுமாகி, சோம சூரியாக்கினிகளி னொளிகட்கு மேற்பட்ட பேரொளியாகி, ஒப்பிலாத வேகவஸ்துவாகி, அளவுகடந்த ஞானாகார வொளியாகி, அகண்டாகார பரிபூரணமாகி, பேச்சிறந்த மௌனமயமாகி, இவை முதலிய தன்மைகளை யுடையவைகளாகி யிருப்பதும அந்தப்பிரமந் தான்.

பிரமசகசம்.

சீரொளி யாகிச் சிறசுகக் கடலாய்ச் சித்தசித் திரண்டற நின்ற,
பாரொளி யாகிப் பார்முதற் பூதப் பகுதியா முச்சுடர் களும்போய்,
ஏரொளி யாகி யெதிரிறந் தொன்றா யேரபா யெல்லையொன் றில்லாப்,
பேரொளியாகி யகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரமம்.

அசுத்தப் பிரபஞ்சம்போல முக்குணரூபமா யறியப்படுவதுமல்லதாய், முக்குணங்களைக் கடந்தமிச்ர பிரபஞ்சம்போல மலகன்மகாரியரூபமா யறியப்படுவதுமல்லதாய், மலகன்மங்களையுங் கடந்த சுத்தப்பிரபஞ்சம்போல அநித்தியானந்த ரூபமாயறியப்படுவது மல்லதாய், நிற்பதும் அந்தப்பரப் பிரமந்தான்.

அஞ்ஞான திசைக்கண் உபாதி சகிதமாகிய எண்ணரிய உயிர்களுள் எஞ்ஞான்றும் எங்கணும் நான் நானென்று கூறி விளங்கும் அவ்வுயிர்களுக்கு உபாதானகாரணமாயும், சீவபோதமாக விளங்குவதாயும், ஞானதிசைக்கண் ஏகமாகிய சிவபோதமாகவும் விளங்குகின்றதெதுவோ அதுதான் அந்தப்பிரமம்.

இந்தப்பிரமம் ஒன்றே நித்தியமானதென்றும், இன்னும் இப்பிரமத்தைச் சகல உபாதிகளற்றதென்றும், சாந்தமானதென்றும், நித்தியமானதென்றும், இரண்டற்றதாகிய அத்துவைதமானதென்றும்,

காலத்திரயாபாதிதமென்றும், நிர்க்குண ஸ்வரூபமென்றும், இவ்விதமாக விளங்குவதாய உபநிஷத்துக்களில் சொல்வதுடன் வேதாந்திகளாலும் அப்படியே கூறப்படுகின்றது.

காலத்ரயா பாதிதம் பிரம்ம ||
நிர்க்குண ஸ்வரூபம பிரம்ம ||
ஆதிமத்யாந்த சூன்யம் பிரம்ம ||
சர்வம கல்பிதம பிரம்ம ||
மாயாதீதம் குணாதீதம பிரம்ம ||
அநந்தமப்ரமேய மகண்டபரிபூர்ணம் பிரம்ம ||
அத்விதீய பரமானந்த சுத்தபுத்த முக்தஸத்யஸ்வரூப
வ்யாபகாபிந்ந அபரிச்சிந்நம பிரம்ம ||
ஸத்யம் ஞாநமனந்தம் பிரமம ||
ஸச்சிதானந்த ஸ்வயம்பிரகாசம பிரம்ம ||
மநோவாசா மகோசரம் பிரம்ம ||
அமிதவேதாந்த வேத்யம் பிரம்ம ||
தேசகாலவஸ்து பரிச்சேதரகிதம் பிரம்ம ||
ஸர்வ பரிபூர்ணம் பிரம்ம ||
துரியம் நிராகாரமேகம பிரம்ம ||
அத்வைத மநிர்வாச்யம பிரம்ம ||
பிரணவாத்மகம் பிரம்ம ||
ப்ரக்ஞானம பிரம்ம ||
அயமாத்மா பிரம்ம ||
ஸர்வம் ஸத்யமபரப் பிரம்ம ||

இப்படியென்று சுருதிகள் கோஷிக்கிறபடியால் அப்படிப்பட்ட பிரமத்தின் நிலைமையைப் பகிர்முக நோக்கத்தால் அறிந்துகொள்வது மிகவும் அருமை.

ஞானவாசிட்டம்.

அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தனவரத
முரைப்ப தாகி
நிகழொளியா மாத்துமதத் துவமான சொரூபத்தை
நினைத்தல் செய்வார்

இகழ்திதய குகையுறையுந் தேவதனை
விட்டயலே தெய்வந் தேடல்
மகவரிய கௌத்துவத்தை யெறிந்து
மணிதேடும் வேடகை போலாம்.

என்பனவற்றானறிக.

இந்தப் பிரமமானது ஒன்றிலும் ஒட்டாததும், எல்லா ஜகத்பிரமைகளுக்கும் அதிஷ்டானமானதும், சத்துவ ரஜஸ தமஸ குணங்களற்றதும், சகல மங்களகரமான வஸ்துவாயிருப்பதுமாக சுருதி ஸ்மிருதிகள் கோஷிக்கிறபடியால், இந்தப் பிரமத்திற்குச் சரியாக வேறொருவஸ்துவில்லை யென்றறிக.

வினா—ஐயா! ஸ்வயஞ்சோதி ஸ்வரூபமா யிருக்கின்ற இந்தப்பிரமத்தை யெப்படித் தெரிந்துகொள்ளுவது?

விடை—இந்தப் பிரமத்தைச் சிரவண மனன நிதித்தியாஸனைகளினு லடைந்த ஸ்வாநுபவத்தினாலே தெரிந்துகொள்ள வேண்டியது. இதற்கு இந்தப்பிரம ஸ்வரூபத்தைச் சகுணமாக உபாசித்து ஞான நிஷ்டையை யடையவேண்டியது. சகுண உபாசனமும் ஞானநிஷ்டையும் யாருக்குக்கூடுமானாலென்றால், யார் பூர்வஜன்மத்தில் மலரும் புனலுங்கொண்டு சிவபிரானைத் தொழுது பூஜித்துவந்தார்களோ அப்படிப்பட்டவர்களுக்கு அந்தப்புண்ணியத்தினாலும், இச்சென்மத்தில் செய்யப்படும் சத்சங்க சாவகாசத்தினாலும், சற்குருவை யடைந்து அநுஷ்டிக்கப்படும்சற்கிரியைகளாலும், மனதைவசப்படுத்திக்கொண்டு இடைவிடாமல் நடேசப் பெருமானை யர்ச்சித்து வருவதினாலும் சகுண உபாசனையும் ஞானநிஷ்டையும் கைகூடிவரும்.

இந்தப்படிக்குப் பிரம லக்ஷணத்தைப்பற்றி எனதாசிரியர் கூறினார். அக்காலையில் நான் சுவாமி இன்னும் அடியேன் அறியாத விஷயங்கள் பலவுள்ளன அவைகளை அடியேனுக் கருள்செய்ய வேண்டுமென்று கேட்டேன். அதற்கு ஆசிரியர் ஒவ்வொரு விஷயங்களையும் கேள் அதற்குப்பிரதிகூறுகிறோமென்று சொல்லினார். அப்போது நான் கேட்ட கேள்விகளும் அவர்தந்த விடைகளுஞ் சொல்லுகிறேன் கேளுமையா வென்று கூறத்தொடங்கினார்.

வினா—ஐயா! சீவபோதமென்பது யாது?

விடை—அவத்தாத்திரயங்களோடாறுந் தூல முதலியனவாகிய உபாதித்திரயங்களை நான் நானென்றழுந்தியிருக்கும் மயக்கமே சீவபோதமாம். இந்த மயக்கத்தைமாற்றி சிவபோகத்தை அடையவேணுமென்கிற எண்ணத்தை யுடையவர்கள், சித்தசுத்தி ஆத்மசுத்தியானுஷ்டானத்தையும், தத்துவ விசாரணானுஷ்டான முதலிய அனுஷ்டானங்களையும் கைப்பற்றியதால் அஞ்ஞான இருள்நீங்கி மெய்ஞ்ஞான அருள் தாக்கச் சிவபோதமடைந்து பேரின்ப வீட்டை அடைவதாயிருக்கும். இப்படிக்கு வீடடைய வேணுமானால் சித்தாந்த வேதாந்த சம்பிரதாயத்தைக் கைப்பற்றிச் சிறுமனத்தின் செய்கையற்றுத் தேகமிரண்டையுந் துளிர்ப்பற்று, சொந்தமற்றுபதி பசு பாசப் பகுப்பற்றுச் சிந்தையடங்கச் சும்மாவிருந்தால் பந்தகர்ம ஜன்ம துக்கத்தை மாற்றுமந்த சிவபிரானாகிய சாம்பதியின்கிருபையால விஞ்ஞானகலப் பிராப்தயாவார்கள்.

வினா-ஓ அண்ணலே! உலகத்துள்ள பூதவிருளை யோட்டும்படிச் சூரியனுதித்தாற்போல அடியேனுடைய அஞ்ஞானவிருளைத் தமதருட்பிரகாசத்தினாலே துரத்தும்படி யெழுந்தருளிய ஞானதேசிகனே! எங்கும் சர்வவியாபகமாயிருக்கின்ற அப்பசுபதி அஞ்ஞானத்தோடு கூடிய அடியேனிடத்தில்கூடியிருந்தால்; அவரை அஞ்ஞானத்தைச்சேதிக்கிறவனென்றும், அநாதி சுத்தனென்றும், நின்மலனென்றும், சர்வவுபாதியுஞ் சூனியமுமங் கடந்தப்பாற் பட்டவனென்றும், எல்லாவற்றிற்கு மேற்பட்ட பொருளென்றும் எப்படி வேதாகமங்கள் கூறுகின்றன.

விடை-உன்னுடன் அந்தக்கர்த்தா கூடியிருப்பதென்பது, நீயாகிய ஆத்மாவினிடத்திற் கூடி நின்றதல்ல, உன்னுடைய அறிவை அறிவித்து நிற்பதென்பதாம்.

வினா-அடியேனுக் கறிவை யறிவிக்குமிடத்து என்னுடன் கூடிநின்றோ அன்றி வேறாய்நின்றோ அறிவிப்பார்.

விடை—நீயாகிய சீவனுடன் கூடாது உனக்கு மேற்பட்டிருக்கும் அறிவிற்கறிவாய் நின்று அறிவை யுணர்த்துவார்.

வினா-அறிவிற் கறிவாயுணர்த்துவ ரென்பது அடியேன் என்றெரிந்துகொள்ளக் கூடாமையாயிருக்கிறது.

விடை—மேகமானது சூரியவொளியை மறைத்தாற்போல உனது அறிவின்வியாபகத்தை ஆணவம் மாயை கன்மமென்னும் மும்மலமும் மறைத்து நிற்றலால் நீ அருகத்தானை அறிந்துகொள்வதற்கு அசக்தனாயிருக்கிறாய்.

வினா—அம்மும்மலங்களில், ஆணவமல மென்பது யாது?

விடை—ஆணவமலமென்பது, யாதொன்றுக்குந் தன்னைவிகற்பித்துத் தன்னையொழிய மற்றொருவரு மில்லாதவரென்று நிற்கிறதும், யாதொன்றினைச் சங்கற்பித்துக்கொண்டு நிற்கிறதும், கோபம் பண்ணிக்கொண்டு விரோதிக்கிறதும், ஆசைப்படுகிறதும், உயிர்களைக் கொல்லுகிறதும், துன்பம் வந்தால் அதற்கு வருத்தப்படுகிறதும், இன்பம் வந்தால் சந்தோஷிக்கிறதும், ஏதாவதொன்று செய்யுமிடத்துஞ் சொல்லுமிடத்தும் மங்காமாய் நிற்கிறதும் ஆணவமலத்தின் காரியங்களாம்.

வினா-ஐயா! மாயாமலமென்பது யாது?

விடை-பொய்யை மெய்யென்றுபொல்லாங்கு செய்வதும், பொய் சொல்லுதலும், கண்டதை மறந்து மயங்கி வருந்துகின்றதும், ஆசையினால் பிறருடைமையை யபகரிக்க வபேக்ஷித்தலும், ஆன்மாக்களை யடிக்கவும் கொல்லவுமெழுகின்ற நினைப்பும், பிறரிடத்துப் பொறாமை கொண்டு அவர்களுக்குக் கேடுசெய்தலும், பிறரோடு வயிராக்கியம் பேசுதலும், தன்னுயிருக்கு முடிவைக்கருதி அச்சப்படுதலும் மாயாமலத்தின் காரியங்களாம்.

வினா—கன்மமல மென்பது யாது?

விடை—ஒவ்வோரிடங்களைப்பற்றியிருத்தலும், நோயாய்க்கிடத்தலும், புண்ணிய பாவங்களைச் செய்தலும், பற்றுக்களாய் நின்றதொந்தங்களை விடுதலும், நித்தித்து நடக்கிறதே தொழிலாகப் பொருந்தியிருக்கிறதும், பிறரை இகழ்ந்தாருடன் பொருந்தலும், கன்மமலத்தின் காரியங்களாம்.

வினா—ஜீவர்களைக் கெடுப்பதாகச் சொல்லப்படுகின்ற மும்மலங்கள் சித்துப்பொருளா சடப்பொருளா?

விடை—மலங்கள் சடப்பொருள்.

வினா-மலங்களைச் சடப்பொருளென்றால், கடபடாதிகளைப் போல் சேட்டையற்றிருக்கவேண்டுமே, அப்படியில்லாமல் சேட்டை செய்வானேன்?

விடை-அம்மலங்கள் கடபடாதிகளைப் போலல்ல. நீயறியாது கூறினாய், விடத்தையுடைய வசநாவிமுதலிய பொருள்கள் சடமாயிருக்கினும், அறிவுடைய ஆன்மாக்கள் அவைகளைப் புசிக்குமிடத்து அதன்குணமேலிட்டு அறிவை மயக்குவதுபோல அம்மலங்கள் சடமாயிருக்கினும் சேதனனாகிய உன்னோடு சம்பந்தமான அவசரத்து வருத்துவிக்கும்.

வினா—ஐயா! தேகம் உண்டானதற்குக் காரணம் யாது?

விடை-கன்மமலத்தின் கூறுபாட்டால் மாயாமலமாகிய தேகம் வந்தது.

வினா-கன்மமுன்னா? மாயைமுன்னா?

விடை-கன்மமில்லாவிடில் மாயாமலத்தின் காரியமாகிய தேகம் வாரா. தேகமில்லாவிடில் கன்மம் வாரா. இஃதெதனைப் போலெனில், வித்தில்லாவிடின் மரமுளையாது. மரமில்லாவிடின் வித்துண்டாகாது. அதைபோல், தேகமுன்னென்றும் கன்மமுன்னென்றும் சொல்வதற்கியலாது. பிரவாகநாதியாய் தேகமும் கன்மமும் மாறிமாறி வந்துகொண்டிருக்கும்.

## சிவஞானசித்தியார்.

உடற்செயல் கன்ம மிந்த வுடல்வந்த வாறே தென்னின்
விடப்படு முன்னுடம்பின் வினையிந்த வுடல்வி ளைக்கும்
தொடர்ச்சியா லொன்றுக் கொன்று தொன்றுதொட் டனாதி வித்தி
னிடத்தினின் மரம ரத்தின் வித்தும்வந் திடையு மாபோல்

என்பதினுணர்க.

வினு-ஐயா! மாயாமலமும் கன்மமலமுந்தான் ஆன்மாவிற்குத் தேகமாயும், தொழிலாயு மிருக்கிறதென்றீர். ஆணவமலம் அவ்வான் மாவிற்கு என்னபயனைத் தருகின்றது.

விடை-அவ்வாணவ மலந்தான், ஆன்மாவிற்கு மூலமலமெ ன்று பெயர். அது செம்பிற்காளிதம் போலவும், அரிசியிற்றவிடு போலவு மெந்நாளு மிடைவிடாது தானின்றேனென்பதும், தனக்குத் தலைவனொருவ னிருக்கின்றானென்பதும் தோற்றாமல், தன்னறிவு முழுவது மறைத்துக்கொண் டிருக்கும். இவ்வாணவமல மொன்றால் தான் மாயாமலமுங் கன்மமலமும் வந்துகூடின. இவ்வாணவ மலத் திற்குச் சகசமலமென்றும், மற்றிரண்டு மலங்களுக்கு ஆகந்துகமல மென்றுங் கூறுவர்கள். (சகசம் கூட விருப்பது) (ஆகந்துகம் மத் தியில் வந்துபொருந்துவது) காளிதம் செம்பினுடன் சகசமாயி ருந்தும் இரசகுளிகையாற்றீருப. அரிசியுடன் தவிடு சகசமாயி ருந்தும் தீட்டினால் தீரும். செம்பும் அரிசியும், இரசகுளிகையா லும் தீட்டுதலாலும், காளிதமும் தவிடும் நீங்குதல்போல் சகச மாகிய ஆணவமலமானது சிவசத்திபதியுங் காலையில் விட்டுப்போக ஆன்மாவானது சிவானந்தத்திற் பதியும். அவ்வாணவமல நீங்குவ தற்குச் சிவனருட்சத்தியே காரணமாம். ஆணவமலம் அநாதிகாலத் திலேயே ஆன்மாவை முற்றுமறைத்து நிற்பதாதலால், அதற்குச் சகசமலமென்று பெயர். இம்மலந்தான் மற்றமலங்களைக் காட்டிலும் மிகவுங் கொடிது கொடிது.

வினு-ஐயா! கன்மத்தாற் கிடைத்த தேகத்தின் வரலாற்றை முறையாக அடியேனுக்கருளிச் செய்யவேண்டும்.

விடை-அப்பா சுந்தரம்! தேகம் இருவகைப்படும அதாவது தூலதேகம் சூக்குமதேகம். இவற்றில், தூலதேகத்திற்குச் சூக்கும தேகமுதலாகும். சூக்கும தேகத்திற்கு முதல மூலப்பிரகிருதியாகிய ஆன்மதத்துவம். அதற்கு முதல் வித்தியாதத்துவம். அதற்கு முதல் சிவதத்துவம். சிவதத்துவமானது, வித்தியாதத்துவத்தைப் பிரேரே பிக்க அவ்வித்தியா தத்துவமானது ஆன்மதத்துவத்தைப் பிரேரேபி க்க அவ்வான்மதத்துவம் சூக்குமதேகத்தைப் பிரேரேபிக்க அச்சூக்

குமதேகம் தூலதேகத்தைப் பிரேரேபிக்கும். இவைகள் ஒவ்வொன்றும் தான்தானே முதலாய்ப் பிரேரேபிக்குமோவெனில், அவைகளாகப் பிரேரேபித்துக் கொள்ளாது. இவைகளையெல்லாம் அநாதி மலமுத்தனாகிய சிவபிரான் தமது காருண்ணிய சத்தியால் பிரேரேபிக்க அவைகள் பிரேரேபிக்கும்.

சிவஞான சித்தியார்.

தூலமா முருவினுக்குச் சூக்கும முதல தற்கு
மூலமா னதற்கு மூல மோகினி யதன்மு தற்றான்
மேலதாம் விந்து சத்தி சிவமிசை யாமெல்லாஞ்
சாலவின் னுருவா மாச் சிவத்தினைச் சார்ந்த போது.

இத்தேகத்தைப் பரமபதியாகிய சிவபெருமான் உனக்கருளியது யாதுக்கெனில், தேகமன்றி அபயகரனைப் போற்றித் துதிசெய்து முத்திநிலையடையக் கூடாதாகலால் நீயாகிய ஆத்மாவானது கடைத்தேறுவதற்குத் தந்ததன்றி நீவினைகளைச்செய்து துன்பப்படுதற்கன்று.

ஐயா தேசிகோத்தமராகிய புண்ணியரே! தாமுரைத்த உபதேச வாக்கியங்களையெல்லாம் நான் செய்த அரிய மாதவப்பேற்றால் எனது செவியாரக் கேட்டுப் பிரம்மானந்த சாகரத்திலாழ்ந்தவைதப்போற் களிப்புற்றனன். இனி அடியேன் கடைத்தேறுவதற்கு நடந்துகொள்ள வேண்டிய விஷயங்களை அருளிச்செய்யின் நடந்துகொள்வேன்.

இவ்வண்ணந் தமது சந்நிதானத்தில் விண்ணப்பஞ்செய்துகொண்ட சிஷியனாகிய எனது பக்குவத்தை நோக்கி ஞானோபதேச மருளிச்செய்தனர் என்று சொன்னான்.

இந்த ஞானோபதேசஞ் செய்த மகானிருப்பது எவ்விடமென்று நான் கேட்டேன். அதற்குச் சோமசுந்தரம் இந்த வேதாந்த சபையில் வசிப்பவரென்று சொன்னான். ஆதலால் அவரைக்கண்டு தரிசித்துப்போகலாமென்று வந்தேனென்று அச்சிவநேசர் சொன்னார்.

## பிரம லக்ஷணத்தைப்பற்றி ஒரு ஞானவானுக்கும் ஒரு அரசனுக்கும் நடந்ததைக் கூறும் ஓர் இதிகாசம்.



பூமிதேவிக்குத் திருமுகமபோற் சிறந்து விளங்குகின்ற இப் பரத கண்டத்திலுள்ள நாடுகள் பலவற்றினு மேற்பட்ட விதர்ப்ப தேசத்தை யரசாண்ட வீரப்பிரதாப சீலனென்று பெயர் வாய்ந்த அரசனொருவ னிருந்தான்.

அவன் பூர்வஜன்ம புண்ணிய பரிபாகத்தினாலும், இச்சன்மத்திற் செய்த சற்சங்கத்தின் மூலமாயச் சமபவித்த புண்ணியக் கிரியைகளினாலேயும், இம்மையினி லிருவினைக்கிடாகவெடுதத மலசலங்கள்பாயும் புழுக்கூடாகிய இந்த யாக்கையைச் சுமந்துகொணடு திரிநது அதனாலுண்டாகும் ஜனனமரணப் பிரவாகமான சம்சாரத்திற்குப் பீஜமாயுள்ள அவித்தையாகிய கர்மமென்கிற பீடையையுதறி யெறிநதுவிடவெண்ணிய திபசுபாசப்பகுப்புணாத்துநாலும, மற்றுளகலையுமயக்கறவுணர்நதவனாயு மிருந்தான. இதனால மானிடராகப் பிறந்தவர்களில் சமுத்திரத்தை யொதத சதுரங்கசேனா பலத்தையுடைய வரசாகளாயிருந்தாலும, மாயையினா லுண்டாகு மறைப்பினால் பிராணனுக் தேகமுங் கூடினதால தேகத்தினிடததுத் தோன்றிய சைதன்யத்தினால் அவித்தையாற் கலப்பிக்கப்பட்ட ஜரை—மரணம்-பசி-தாகம்-சோகம்-மோகம் என்கின்ற சட்பாவ விகாரமுள்ளதாயும், நீர்க்குமிழிபோலே நசித்துப் போகததக்க தாயு மிராநின்ற தானல்லாத இச்சரீரத்தைத் தானாக எண்ணி கும்பிக்கிரைதேடி ஆசைவலைப் பட்டு ஐந்துபொறி வழிபோயலையும் பாழ்மனதை அதுபோன வழியே விஷயங்களில் செல்லவிட்டு சல்லாபலீலையிலே பேய்க் கூத்தாடி மனமகிழ்ந்து தீத்தொழில்களையும் அடாத காரியங்களையுஞ் செய்து இலகானில் இறக்கிறதும் பின்பு பிறக்கிறதுமா யிருப்பதற்கு ஆளாயிருப்பதையும், இப்பொய் வாழ்க்கையிலுண்டாகு போகபோகங்களையனுபவித்து வருமின்பம் முள்ளிப்பூவின தேனையுண்ணும் ஈயின் களிப்புக்கும், பிணத்தைப் பிடுங்கித்தின்னுங் கழுகின் களிப்புக்கும்,

சுணங்கன் தன் வாயிலிருந்து வருமுதிரத்தை யவ்வெலும்பினின்றும் வருகிறதாக எண்ணிக்கொண்டு அதையுங் களிப்புக்கும் ஒக்குமென்றுணர்ந்து, இப்படியாயிருக்கும் அன்பவலையாசத் தொடக்கையறுத்து மெய்யஞ்சோதி வடிவமாகிய பரமாத்மாவான நடேசப் பெருமானிடத்தில் பக்தியைச் செலுத்தவேண்டுமென்றும், பூர்வாய பிறப்பிலும் சிவபிரானைத் தொழுது போற்றுவது நலமாயிருக்குமென்றுமெண்ணித் தன்மனத்தை இடைவிடாமல் பரமத்தியானத்தைச் செலுத்திவந்தான். அன்றுமுதல் அட்டமூர்த்த வடிவமாகிய நடேசப் பெருமானுடைய ஆலயத்துக்குப்போய் அவர் திருவுருவத்தைத் தரித்துப் பூசித்துத்தொழுது வந்தான்.

இப்படியிருக்கு நாளில் ஒருநாள் வேதாந்த சித்தாந்த ஞான நூல்களை இயற்றினவராயும், அநேகதவ ஞானநிஷ்டானத்திலேயெப்போதும் பயிற்சித்து வருபவராயும், தேவாம்சத் திவ்விய திருமங்கள ரூபத்தை யுடையவராயுமிருந்த மந்திரப் பருஷராகிய ஞானவான் இவ்வரசனிடம் வந்தார். அவரை அரசன் கண்டு வணங்கி அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரத்துடன் வந்தனங்கள் செய்து உபசரித்து அவர் தன்னிடம் வந்தது தான்செய்த மாதவத்தின் பலனென்றும், மகான்களுடைய நேசமும் விசுவாசமுங் கிடைத்தால் அதுவே ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரத்தை யுடைத்தாயிருக்கிற ஆத்மாவாகிய ஜீவனுக்குண்டான பந்தத்துவத்தை நீக்கி மாறிமாறிவரும் பஞ்சகோசத்தாலாகிய ஜனனமரணப் பிரவாகத்தினின்றுங் கரையேறப்படுமென்று மெண்ணங்கொண்டு ஞானாப்பியாச சாதனங்களைச் செய்வதற்கு அவரைத் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டிருந்தான்.

இந்த ஞானவான் அவ்வரசன் பக்திமானும், குணசாந்தனுயும்,வேதவேதாந்தமான உபநிடதமுதலாகிய நூல்களை நன்காராய்ந்தவனும், குரல்நெரிய நால்வேதங் கூப்பிட்டுங் காணாத துரியாதீதத்திற் பரசாக்ஷி மாத்திரமாயிருக்கின்ற சித்தாநந்தப் பொருளாகியும், பன்றிவடிவெடுத்துப் பாரிடந்த மால்காணாத சிவபிரானது திருவடியை யடையப் பேராசை கொண்டவனுமாயிருப்பதைக் கண்டு அவ

னுக்கு மேலான தத்பதார்த்தப் பொருளையும், மகா வாக்கியத்தையும் சிரவணாதிகளால் அநுக்கிரகம் பண்ணவேணு மென்பதாய்க் கிருபையுற்று ஞானசம்பந்தமான விஷயங்களைப்பற்றிப் போதிக்க வாரம்பித்தனர்.

அரசே! பிருதிவி தத்துவமுதல் நாதத்தத்துவ மீறாயுள்ள முப்பத்தாறு தத்துவங்களையு நீயதீகளைந்து அகன்மீதுள்ள பரப்பிரமத்தை யடைந்து பேரின்பானந்தத்தைப் பெறுதற்குரிய மகாவாக்கிய முதற் பொருளாகிய தத்துவமசியென்கிற ஒருவாக்கியமுண்டு. அது தத்பதமென்றும், தொம்பதமென்றும், அசிபதமென்றும் மூவகைப்படும். அவற்றின் முக்கியமானபொருள் யாதெனில்? அது நீயாவாய் என்னும் அருத்த முடையதாம். அதை நீ அடையவேண்டுவதானால் அருவாகி யுருவாகி யாதியந்த மாகியும், பார்த்தவிடமெங்கும் தானாகவிளங்கும் வஸ்துவுமாகிய பிரமத்தை நிர்க்குணோபாசனையாகத் தியானஞ்செய்து வரவேண்டியதென்றும், மானிட ஜென்மமடைந்தவர்கள் இந்தச்சென்மத்திலேயே நற்கதியையடையப் பிரயத்தனஞ் செய்யவேண்டியது அவசியமான காரியமென்றும், அப்படிச் செய்யாதவர்கள் பிறந்திறந்துகொண் டிருப்பார்களென்றும் பலதடவைகளில் போதித்துவந்தனர். அரசனோ அவர் உபதேசப்படி அத்துவித ஞானத்தையடையு மார்க்கத்தின காரியங்களாகிய நிர்க்குணோபாசனையை விசேஷமாயக் கவனிக்காது அசிரத்தையுடையவனாயிருந்தான்.

அப்படியிருக்க ஞானவான் அரசனுடைய கருத்தை யறிந்து ஒருநாள் அரசனை நோக்கி, ஏமன்னவா? நாம்சொல்லும் ஞானநெறியை யநுஷ்டித்து உள்ளும் புறம்பும் ஒத்திருக்கும் பரப்பிரமத்தை இந்திரிய நிக்கிரகத்தால் ஏகமனதாய் ஸ்மரித்து ஆனந்திக்க முயற்சி செய்யாமல், சாமானியர்களைப்போல ஆலயத்துக்கு மாத்திரமபோய் பிறவிக் கேதுவாகிய பகிர்முகத்திருஷ்டியால் சகள வடிவாகிய விக்கிரகமூர்த்தியை ஆராதனைசெய்து அதையே தொழுது வருவது சரியல்ல.

அப்படி நீ தொழுதுவருவதினாலே சாலோக பதவியாதி முப்பதவிகளில் ஏதாவதொன்று கிடைக்குமே தவிர சாயுச்சியமாகிய ஞானபதவி கிடைக்கமாட்டாது.

ஓ அரசனே! ஆவரணசக்தியான அவித்யா சம்பந்தமுடைய கிஞ்சிஞ்ஞரான ஜீவர்களில் எவர்கள் புலன்படிந்துண்ணும் போகத்தில் விழுந்து தடுமாறாமல் ஆத்மானாத்ம விவேகத்தை விளக்கும் ஞானசாஸ்திரங்களை ஆராய்ந்தறிந்து ஜனனமரணங்களுக் கேதுவாகிய பாசவிக்ரஹங்களைவிட்டு முத்திக்கு வித்தாகிய சத்தியஞானத்தையடைய அபேக்ஷிக்கிறார்களோ? அப்படிப்பட்டவர்கள் பிருதிவி முதலாய் நாதமீறான தத்துவங்களையும் பஞ்சமலங்களையும் போக்கிச் சாதனசதுஷ்டயங்களை யடைந்து பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தைக் கைப்பற்றிச் சாயுச்சிய பதவியையடைந்து மேலாகிய ஞானம் பிரகாசிக்கத்தக்க பரமானந்த சொரூபமாகிய மாளிகையில் புகுந்து மீளாத ஞானவாழ்வில் வாழ்ந்துகொண் டிருப்பார்கள். இதைத்தான் சாயுச்சிய பதவியென்றும் மேலான முத்திப்பதமென்றும் வேதவேதாந்தத்திலும் சாஸ்திரமும் பிரபலதொனிகொண்டு கூறப்படுகின்றது. இதுதான் ஆன்மாவும் சிவமும் வேறற நிற்குமிடம். இதைத்தான் பரமதுரியஞானமே பிரகாசிக்குமிடமென்று உபநிடதங்கள் கூறுவது. இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த நான்காம் பதவியாகிய சாயுஜ்யமென்னுஞ் சிங்காதனத்திலேறிய பாக்கியவான்களின் பெருமையை என்னவென்று கூறுவது.

இவர்கள் பதி பசு பாசமென்று சொல்லப்பட்ட இம்மூன்று பொருளையுங் கண்டு உட்கொண்டவர்கள். இவர்கள் தத்துவாதீதமாய்ப் பரிபூரண ஞானானந்தரமணீகரமாய் நிற்பவர்கள். இவர்கள் மலபரிபாகம் வாய்ந்தவர்கள் இவர்களே யெப்போதும் எல்லாப்பொருள்களையும் உணர்ந்த ஞானவான்களாயும், சாபாநுக்ரஹசாமர்த்தியமுடையவர்களாயு மிருப்பார்கள். இவர்களே ஞானத்தாலே சிவத்தைக் கூடிச் சிவசொரூபமா யிருக்கும் மெய்ஞ்ஞானிகள். இஃதிப்படிநிற்க.

இல்லறத்திலே யிருந்து மேலான எக்கியாதி முதலான கன்மங்களைச் செய்து வருபவர்கள் பலருளர். அவர்கள் சுவர்க்காதி போகங்களை அடைகிறதாயிருந்தாலும், அது அநுபவித்துத் தீர்ந்தபின் அவர்களை ஜனனமரணம்விடாது. ஆத்மபோதம் நசிக்கும் வரையிலும் சுகதுக்க நீங்காது.

சிவஞானசித்தியார்.

தானமியாகந்தீர்த்த மாச்சிரமந் தவங்கள் சாந்திவிர தங்கன்ம யோகங்கள் சரித்தோர், ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வரீசனியோ கக்கிரியா சரியையினி னின்றோர், ஊனமிலா முத்தி பதம் பெற்றுலக மெல்லா மொடுங்கும்போ தரன்முனிலா தொழியி னுற் பவித்து, ஞானநெறி யடைந்தடைவா சிவனையங்கு நாதனே முன்னிறகி னணுகுவர்நற் றூயோர்.

அதுவரைக்கும் எத்தனைகோடிதாய், எத்தனைகோடி தந்தை, எத்தனைரூபம், எத்தனைநாமம், எத்தனை யெத்தனையென் றியம்புவது.

(பட்டினத்தடிகள்.)

அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ
அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ
பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
முன்னை யெத்தனை யெத்தனை ஜென்மமோ
மூடனாயடி யேனு மறிந்திலேன்
இன்னமெத்தனை யெத்தனை ஜென்மமோ
என்செய்வேன் கச்சி யேகம்ப நாதனே.

மேற்கூறப்பட்டிருக்கிற சாயுச்சியபதவியைத்தான் வேதாகமபுராணவிதிகாசங்கள் பெரிதாகப் புகழ்ந்து பேசுவது. இந்தப்பதவியின் சொரூபமாயிருக்கும் பிரமம் ஞாதுருஞான ஞேயங்களுக்கப் பாற்பட்டிருப்பதாயும், இன்பமெல்லாம் விளைகிற ஞானபூமியாயும், எல்லாஉயிர்கட்கும் இன்பங் கொடுப்பதாயும், எங்கும்சர்வமங்களவடிவாயிருப்பதாயும், அந்தந்த அறிவிலே நான் நானென்று கூறும்

வஸ்துவாயும்,ஆத்மாவுக்குள்ளேசிவமாயும்,சிவத்துக்குள்ளே பரமாத்மாவாயும் விளங்கும் வஸ்துவாகியும்,வேதவேதாந்த வேத்திய வேத மகாவாக்கியங்கள் முதலியன புகழ்ந்துபேசும் பிரமமாயும், பனிநீரிலிருந்து பனிக்கட்டியுண்டானதுபோல இந்தப்பிரமத்தினிடமிருந்து சகளீகரித்து சகளவடிவாய் நடேசரென்னு நாமத்தைத்தரித்து விளங்கப்படுவதாயிருப்பது இந்தப்பிரமந் தானென்றும், சொற்சொரூபம் பரசொரூபம் புருடார்த்த சொரூபம் உபாய சொரூபம் விரோதிசொரூபமாய விளங்கும் வஸ்து இந்தப் பிரமந்தானென்றும் ஞான நூல்கள் பேசுகின்றன. இந்தப பிரமமேசிவம். இதுவே நித்தியம். இதேதெய்வம். இந்தப்பிரமந்தான் பிரமன் விஷ்ணு உருத்திரன் முதலான ஜங்கமரூபங்களாயும், அண்டரண்ட பகிரண்ட அகிலாண்டகோடிபிரமாண்டநாயகமாயநிற்பதும் இந்தப்பிரமந்தான். பூலோக கயிலாசமென்று புகழ்ந்திடுந் தில்லைச்சிற்றம்பலத்தில் மாணிக்கங்களிழைத்தும் மரகதங்களை பதித்தும் வயிரத்துண்டுகள் பொருந்தின செவ்வியகொடிப் பவளங்கள் பந்தித்துள்ள உருக்கிய பசும்பொன்னால்அழுத்தினதுமானசபையில்சகளவடிவாய் பரமானந்தரூபியாய், நிர்விகாரியாய் ஆனந்தக்கூத்தாடும் புனிதனாகிய நடேசப்பெருமானையும், பரநாத பரவிந்து நிலையைகடந்த பொருளாயும் விளங்குவதாகிய அப்பிரமத்தின் பெருமையைப்பற்றிப் பெரியோர்கள் கூறிய செய்யுள்களாலுங் கூறுகிறேன்.

## மகாவாக்கியம்.

உலகமுதற பொருளையும்பர்க் குணர்வரிதாம் பொருளை யோதியவே தாகமத்தி னுச்சியினுட் பொருளைப்,பலகலையின் பொருண் முடிவின் முடிவான பொருளைப் பற்றறப்பற் றியபெரியோர் பரவிய வான் பொருளை, யலைதிவலை நுரைகடலி னுதித்தொடுங்கு மாபோல கிலாண்ட முதித்தொடுங்கு மதன்மூலப் பொருளை, யிலகியசற் குருவாகி யானுகும் பொருளை யெங்குமாம் பரம்பொருளை யாமும்வணங் குதுமே.

## பதிவிளக்கம்.

'ஒன்றாயும் பலவாயு முருவாயு மருவாயுங்
குன்றாயு மணுவாயுங் குணமாயுங் குணியாயு

நன்றாயுந் தீதாயு நானாயுந் தானாயு
மின்றாயு முளதாயு மிருக்குமந்தப் பரமசிவம்.

### வள்ளலார்சாத்திரம்

ஈசனாய்ப் பரம தத்துவனாகி யிறுதியை முதலில னாகி, யேசறு மணியா யெவைக்குமா தார மாகியே யனைத்தய லிலையாய்ப், பாசமோ சகனு யனாதிமுத் தனுமாய்ப் பகருஞா னானந்தக் கடலா, யாசையாற் காண்போ தக்கற்பக வடிவா மம்பிகா பதியினைப் பணிவாம்.

ஒன்றாகிப் பரவெளியா யுருவருவ மிலதாகிக்
குன்றாத பரப்பிரமங் குன்கயி நாகு மனந்தவிளக்கி
னின்றாரு மிதயக்குகை நாமதுவே யையமிலை
கன்றாத நின்மொழியான் மெய்ஞ்ஞானத் தண்டப் பிடித்தேனே.

### கைவல்லிய நவநீதம்.

என்றளித்த தமிழ்க்குள், செய்கைக் கேதார மயனாய மாலாய்
ஆன்றவி சனுமாயத் தானே யனைத்துமாகி யுமாய்ப் பிறக்கும்
மூன்றமுத் தனுமாயின்பப் புணரியா குவனாய் நாளுந்
தோன்றிய விமல போத சொரூபனைப் பணிகின் றேனே.

இவ்வண்ணம் யாதுமொரு தன்மையதாயும், எங்கும் நிறைந்துள்ள ஞானப்பிரகாசமாயும், இரண்டென்னுங் காரணகாரியப் பாகுபாடின்றி யேக சொரூபமாயும் விளங்கும். இந்தப் பிரமத்தினிடத்தில் மெய்போலத் தோற்றும் பஞ்சபூதமும், அவற்றின் விகாரமாகிய அண்டாண்டகோடி சராசரங்களுங் கற்பித்ததாற் செனித்ததென்றறிக.

அது எப்படியெனில் பாம்பு கள்ளன் முதலிய பிராந்தி தோற்றத்திற்கு ஆதாரம் பழுதை கட்டை முதலியவை யாயினாற்போலச் சகமுதலிய திரிபதார்த்த பிராந்தி தோற்றத்திற்குப் பிரமமென்பது ஆதாரமென விளங்கும். இந்தப் பிரமத்தைச் சத்து-சித்து-ஆனந்தம்-சமம்-திடம் - சாக்ஷி-ஏகம் - நித்தியம்-வியாபி—பூரணம் என்று கூறப்படும்.

இந்தப் பிரமத்தை யடைவதற்குச் சரியை கிரியை யோகமென்னு மூவகை யநுஷ்டானத்திற்கு மேற்பட்ட ஞானாநுஷ்டானம் பெற்றவர்கள் மாத்திரம் அடையக்கூடும். அந்நாற் பாதங்களின் வரலாற்றைக் கூறுவோம்.

அரசனே! சரியை யநுஷ்டித்தோர்க்குச் சாலோக பதவியும், கிரியை யநுஷ்டித்தோர்க்குச் சாமீப பதவியும், யோகமனுஷ்டித்தோர்க்குச் சாரூப பதவியும், ஞானமனுஷ்டித்தோர்க்குச் சாயுச்சிய பதவியும் கிடைக்குமென்று வேதாகமங்கள் கூறுகின்றன.

இவற்றில் சரியையநுஷ்டான மென்பது யாதென்னில், சிவபிரானுடைய திருக்கோயிலைப் பந்தசல மெழுக்குடன் அலகிடவு ஞ்சகுத் திருநந்தவனம் வைத்து அதின் மலர்களை யெடுத்துத் தொடுத்துக் கொடுத்தல், சிவனடியார்களைக் காணின் அவர்களைப் பணிந்து அவரேவின் பணிவிடைகளைச் செய்தலாதியவைகளாம். இதை யநுஷ்டித்தோர்கள் சிவலோகத்தெல்லையை யடைவார்கள்.

கிரியாநுஷ்டான மென்பது யாதெனனில், பத்திர புஷ்பம் தூபதீபம் திருமஞ்சனம் திருவமுதுமுதலிய பூசோபகரணங்களெல்லாந் தேடி யமைத்து ஸ்தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி பூதசுத்தி இலிங்கசுத்தி செய்து பரஞ்சோதியைப் பாவனைசெய்து ஆவாகனம்பண்ணிப் பூசைசெய்து நித்தியாக்கினி வளர்த்தலாதிய இக்கிரியையை அநுஷ்டித்தோர்கள் சிவசாமீபத்தை அடைவார்கள்.

யோகாநுஷ்டான மென்பது யாதென்னில் பிராணவாயுவை உச்சுவாசம் நிச்சுவாசம் செய்யாமலடக்கிச் சுழுமுனை மார்க்கத்தில் சலிப்பற நிறுத்தி மனத்தை உள்ளஸ்தானத்தி லடக்கி, முக்கோணம் சதுரமுதலிய வடிவினவாகிய மூலாதாரம் சுவாதிட்டான மாதிய ஆறாதாரங்களின் அந்தர்மாதிரு காகரமத்தை உணர்ந்து அவ்வாதாரங்களின் அதிதேவதைகளைத் தியானித்து அவ்வாறாதாரங்களினும் அசபாசத்தி சிவான்மிகையாய் நிற்குமுறைமையினை நோக்கி மூலாதாரந் தொடங்கி விநாயகர்முதலிய தேவதைகளைப் பொருந்தி மேலாகிய பிரமரந்திரமளவும் அசபாசத்தியுடன் சென்றணைந்து அப்

பிரமரந்திரத்தின் கண்ணதாகிய தாமரைமுகையை அலர்வித்துஅதன் கேசராக்கிரத்திலுள்ள சந்திரமண்டலத்தை மூலாக்கினியினால் இளகச்செய்து அவ்வழியாக ஒழுகும் அமுர்தத்தைத்தேகமுழுவதுநிரப்பிப்பரிபூரணமாகியபரப்பிரமப பிரகாசத்தைத்தியானிருதலுடன்அட்டாங்கயோகத்தால் அருவத்திருமேனியை வழிபடுதலாகிய இவ்வியோகாநுஷ்டானத்தை அநுஷ்டித்தவர்கள் சிவரூபமாகிய பதவியைப்பெறுவார்கள்.

ஞானாநுஷ்டான மென்பது யாதென்னில், எல்லாக்கலை ஞானங்களும் புராணங்களும வேதசிவாகமங்களு மற்றைச்சமய சாத்திரஙகளுமுணர்ந்து அப்பொருள்களை யெல்லாங் கீழெனக்கண்டு கழித்து மேலாய பதி பசு பாசமென்னு முப்பொருளையும் தடத்தலக்கணத்தின் வைத்து வகுத்துணர்த்தி அம்மூன்றனுள் பதிப்பொருள் மற்றைப்பாசப்பொருள் பசுப்பொருளுக்கு மேலாதல் இனிதுவிளங்கச் சொரூப லக்ஷணத்தில் வைத்துணர்த்துதலாகிய நல்வழிக்கேதுவான ஞானகாண்டத்தை ஆராய்ந்து, புறத்தொழில் அகத்தொழிலிரண்டுமின்றி அறிவுத்தொழின மாத்திரையானே அம்மூன்று திருமேனிக்கு மேலாய் ஞாதுரு ஞானம் ஞேயம்ஆகிய இவற்றின் பகுப்பின்றி அத்துவிதமா யிமைக்க அகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகி நிறைந்து நிறகின்ற சிவமாகிய பரப்பிரமத்தினிடத்திற் செய்யும் வழிபாடாகும்.

இம்மகிமை பொருந்திய ஞானாநுஷ்டானத்தை யநுஷ்டித்தோர்கள் அப்பரப்பிரமத்தோ டிரண்டறக் கலத்தலாகிய சிவசாயுச்சியமாகிய முத்தியைப் பெறுவார்கள்.

சிவஞான சித்தியார்.

தாதமார்க் சஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற்
றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணிப்
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்

தித்திரு விளக்கிடுதல் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு
மியற்றுவது சரியைசெய்வோ ரீசனுல கிருப்பர்.

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானாஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினா லருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடு மெரியில்வருங் காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்கள்
நின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே.

சகமார்க்கம் புலனொடுக்கித் தந்துவழி பிராணன்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்க
ளகமார்க்க மறிந்தவற்றி னருட்பொருள்க ளுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க வமுதுடலம் முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்த னுதலாக வினைக
ளுகமார்க்க அட்டாங்க யோக முற்று
முழுதுஞ்செய் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்.

சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்க ளாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடைமை பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

அமுர்தம்போலுஞ் சொல்லையுடைய வேதமுடியிற் சொல்லப்பட்ட ஒரேபொருளாகியபிரமத்தின்லக்ஷணத்தைப் பற்றிக் கூறுகிறதானால் கோட்டுப்பூவினின்று மொழுகுகிற தேனை ஒருவன் நுகர்வதுபோல் பலநூல்களைக் கற்று, அமிர்தம்போன்ற நாலுவேதங்களையும் அவற்றின் பொருட்சாரங்களையு மறிந்துணர்ந்த மகான்கள் மாத்திரம் கேட்டு ஆனந்தங் கொள்ளுவார்களே யல்லது ஏனையோர் அதைக்கேட்ட போதிலும் அதில் இன்பங் கொள்ளார்கள்.

அப்படி யின்பங்கொள்ளாத மானிடர்கள் எப்போப்பட்டவர்களென்றால், பஞ்சபூதங்களும், அவற்றைப் பற்றிய சராசரங்களும், நிற்குநிலைகுலைந்து போகிறதாயிருந்தாலும், அதைச்சற்றேனுங்கவனிக்காதவர்களா யிருப்பார்கள். இவர்களுடைய மனமானது உன்மத்தங்கொண்டு பேய்த்தேர்போலும் பொய்யாகிய உலகவியாபாரத்தில் விருத்தியடைந்து நிற்கும். ஞானத்தை யறியாமலும், பாலசந்திரனைச்சூடிய பரமசிவனிடத்தில் பக்தியில்லாமலுமிருக்கு பாவிகளை இந்தவையகம் சுமப்பது வம்புவம்பு. கடவுளிடத்தில் அன்பில்லாத மானிடன் தோற்பாவைக்குச் சமானமெனறுபாவிக்கப்படும். அவன் உலகிலிருந்தும் பிரேதமே இறந்தும்பிரேதமே.

திருக்குறள்.

நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

வினா—அரசனே! மேற்கூறிய காரணங்களை முன்னிட்டுத்தான் நாம் உனக்கு நிஷ்கள வடிவத்தைத் தொழுதுவா வென்றுகூறியது. அப்படியிருக்க, நீயதைக் கவனியாமலிருப்பதற்கு முகாந்திரமென்னவென்று ஒருநாள் சிவயோகி அரசனைப் பிரசினைசெய்தார்.

விடை—ஐயா! தங்கள் கட்டளைப்படிக்கு சிலசமயம் நிஷ்களவடிவத்தைத்தொழுது வருகிறதாயிருந்தாலும், எங்குமவன் வியாபித்திருத்தலால் ஆலயத்துக்கும்போய் விக்கிரக பிம்பத்தைச் சகளவடிவாய்த் தொழுது வருவதுண்டு.

வினா—நல்லது அரசே! நீ சகளவடிவாய்த் தொழுது வருகின்றாயே அந்தக்கடவுளை நீ அழைத்தால் வருவாரா?

விடை—எனக்குச் சிவபுண்ணியமிருப்பதாலும், அவருக்கு நான் தொண்டனாயிருப்பதாலும் வருவார்.

வினா—வேந்தனே! அக்கடவுளை அழைத்து அவர் வாராவிட்டால் உன்னை என்னசெய்கிறது?

விடை—அவர் வாராவிட்டால் தன்னைப் பிரம்பினால் நூறடியடிப்பதென்றும், வந்தால் அதன்மீது நடத்தும் காரியத்தைத் தேவரீரே யோசிக்க வேண்டுமென்றும் அரசன் சொல்லினான்.

அதற்கு ஞானவான் நீயழைத்து அக்கடவுள் வந்தால், என்னை அப்பிரம்பினால் நூறடியடிக்கிறதென்றுங் கூறினார்.

இப்படியாக இவ்விருவரும் ஒருவருக்கொருவர் பிரதிக்கினை செய்துகொண்டபின்பு ஆலயத்துக்குப்போய் சுவாமிக்கு அபிஷேகமுதலியன செய்துவைத்து அவர் சந்நிதானத்தில் கைகூப்பிநின்றனர்கள்.

அப்போது இவ்வைபவத்தைக்காண தேவர்களெல்லாங் ககனத்தில்வந்து கூடினார்கள். அந்நகரத்துப் பிரஜைகள் நடக்குங் காரியங்களைப் பார்க்கலாமென்று, அவ்வாலயமுழுதுஞ் சூழ்ந்து கும்பலாய்க் கூடி நின்றார்கள். அச்சமயத்தில் ஞானவான் அரசனைப் பார்த்து ஓ அரசனே! நீ சொன்ன சபதப்படி பரமசிவத்தை அழையென்று ஆஞ்ஞாபித்தார்.

அப்போது அரசன் இரண்டு கரங்களையுஞ் சிரசின்மேற் குவித்துப்பணிந்து ஹர ஹர சம்போ சங்கராவென்று அவருடைய புகழை அளவுக்கடங்காத பக்தியுடன் திரிகரணசுத்தியாய்ப் போற்றத் தொடங்கினான்.

பித்தா பிறைசூடிய பெருமானே சரணம்; பேராயிரமுள்ளவனே சரணம்; முக்கட்சிவனே சரணம்; பார்வதியென்னும் பச்சைக் கொடிபடர்ந்த பவளமலைபோன்ற பரமசிவனே! நித்தியமாயும், நிட்களமாயும், நிர்விட்சேபமாயிருக்கின்ற சொரூபமாயும், சர்வ

வியாபகமாயும், சர்வகாரணமாயும், சர்வாத்மகமாயுமிருக்கின்ற கடவுளே! என்னையனே! பூதநாதனே! பாவநாசனே! எம்பெருமானே! எந்த எந்தப்பொருளோ அவையெல்லாந் தானாயிருக்கும் நடேசப்பெருமானே! சாம்பசிவனே! அகிலலோக நாயகனே! தண்புனலும வெண்மதியுந் தாங்கிய செஞ்சடையானே! தேனே! இன்னமுதே! தில்லையில் திருநடனஞ்செய்யுஞ் சிவனே! நெறியே! நின்மலனே! நெடுமாலயன்போற்றி செய்யும் ஐயனே! அற்புதகுண சீலனாகிய பரஞ்சுடரே! தீனதயாபர மூர்த்தியே! ஐயனே! பக்தர்கள் பணியும் பாதாம்புயனே! அளவிறந்த விளையாட்டையுடைய அத்தனே! சிற்சொரூப வஸ்துவாகிய தேவாதி தேவனே! நாதாந்த ரூபியே! கிரௌஞ்ச கிரியைப்பிளந்த குமாரனாகிய சண்முகனை யீன்றருளிய தேவனே! பூரணனே! துவம்பதமாகிய ஜீவவுபாதிக்குச் சாட்சியாய் நிற்பவனே! தற்பரமாகிய பரவுபாதிக்கு அற்புத வஸ்துவான ஆதிமூர்த்தியே! தேகேந்திரியம மனது பிராணன் அகங்காரம இவைகளுக்கு விலட்சணமாய், சாட்சியாய் விளங்குந தெய்வமே! பாவத்துக்கும அபாவத்துக்கும் அதீதமாய் விளங்கும் வஸ்துவே! மான் - மழு - சதுர்புயம் - காளகண்டம - திரிநேத்திரம - சூலம்-தமருகம-கபாலம இவைகளையுடையவராயிருக்கும் சிவபிரானே! உலகில சகளமயமபோல்தங்கித் திருவம்பலத்தே ஞான மயமாய் அநந்ததிருநடஞ் செய்தருளுகின்றநடேசனே! சங்கு-சக்கரம்-தண்டு-வில-வாள் இவைகளையணிந்து திரிலோகங்களை அளந்ததிருமாலாகியநாராயணனுக்குமைத்துனனாயிருப்பவனே! நெருப்புதங்கிய கண்களையுடையஅரனே! தில்லைநாயகனே! தற்பரவஸ்துவே! சொற்பதப்பொருளே! நீலகண்டனே! பொன்னாற்செய்த மதில்களும், கோபுரங்களும, ஆயிரககால்மண்டபங்களும, சித்திரமண்டபங்களுஞ் சூழ்ந்து நான்குவேதங்கள் கோஷித்துக கொண்டிருக்கும மஹாஸ்தலமாகிய தில்லையில்வாழும்நடேசமூர்த்தியே! பரப்பிரம்ம சொரூபியே! பூமியில் அடியேனை ஒருபொருளாகமதித்து அஞ்ஞான மயக்கத்தினாலுண்டான பழைமைகர்மங்களை வேரறுத்து செந்தாமரை மலரின்மூலம் விளங்குகின்ற உன் திருவடிகளை அடியேனுடைய சென்னிமீது இருபாதங்கள்வைத்து தரிக்கும் எம்பெருமானே! குளிர்ச்சி பொருந்திய அழகிய அம்மையுடைமலரி லிருப்பவர்களாகியபிரமர்களுடைய சிரங்களை மாலையாகத்தரித்த பரமசிவனே! நிஷ்களங்கமான மனதுடன்

அரகராசம்பு சங்கரா! சாம்பசிவனே! மகாதேவனே என்று துதிக் கப்படும் முக்கண்ணுடைய தில்லைநாயகனே! அரகர சிவசிவசிவசிவ வென்று உண்மையான பக்தியுடன் போற்றித் தொழுபவர்களிடத் தில் நேயமாயிருப்பவனே! பதினாயிர மாற்றுள்ள ஸ்வர்ணத்தை யொத்த பரஞ்சோதியானே! சூலபாணியனே! சாமகானவிலோல வநிதகுஞ்சித பிரதாபனே! என்னை ஆதரிக்கும் கைலாசவாசனே! அற்புதப் பரஞ்சோதியே! அஷ்டமூர்த்த வடிவமாயுள்ள ஐயனே! பகவானே பூர்வத்திற் பரனாகிய வுனக்கு மாயனாகியதிருமால் தாம ரைமலரோ ராயிரத்தை அர்ச்சனை செய்யுங்காலத்தில் அதில் ஒரு மலர் குறைந்திருக்கக் கண்ணைத் தோண்டிச் சாத்திடச் சூரியனை நிகர்த்த சக்கரத்தைக் கொடுத்த பாவனாவாகிய அரசனே! தற்பரமா கிய முதற்பொருளே! ஸர்வாந்தரியாமியாகிய சம்புவான நடேசப் பெருமானே! போர்செய்வதற்குரியபாசுபதாஸ்திரத்தை விசயனுக்கு அநுக்கிரகஞ்செய்தவனே! யானைத்தோலை போர்த்தவனே! மதயா னைபோ லடங்காதுழலும் அசுத்த மனத்தைத் தன்வயப்படுத்தி மாயையென்பதை வேரோடுகளைந்து ஞானத்தையடைந்து வேதங்க ளாற் சொல்லப்பட்ட அரியபரம்பொருளான திருவடியை யடைய விரும்பும் மெய்யடியார்களின் உள்ளத்திற் குடிகொண்டிருப்பவனே! நாதாந்த நாட்டுக்கு நாயகனே!தத்துவாதீதப்பொருளே!மன்னுசிற்ற மபலத்திலாடுகின்ற ஐயனே! சிந்தை மயங்கித் தியங்குகின்ற பேயேனைக்காக்குமஐயனே! அண்ணுமலையானே! கிருபாமூர்த்தியாகிய நடேசனே! அடியேன்பேரில் கிருபைவைத்து வாராயோ! காமாந்த காரமெனுங் கள்ளுண்டுதடுமாறும பேயனாகிய நாயேனைக் காக்க வாராயோ! கோதிலாதகுணப்பெருங் குன்றே! மாசிலாதமணியே! சர்வபரிபூரண கருணாநந்தசாகரனே! சச்சிதானந்த ஓம் பரப்பிரம்ம மூர்த்தியாகிய சிவபிரானே! யார் சுரோத்ராதி இந்திரியங்களுடன் கூடின சரீரத்தின் பேரிலுள்ள அஞ்ஞானத்தையுடைய புத்தியை விட்டுப் பரமானந்தத்தை விளைவிக்கு முக்கண்ணனாகிய நடேசப் பெருமானான உன்னுடைய திருவடியையடைய அகங்கார மமகா ரங்களைத்தொலைத்து உன்னைச்சுத்தமனத்துடன் போற்றித்தொழுது வருகிறார்களோ அவர்களைமோக்ஷமடையும்படிச் செய்யுந்தம்பிரானே! ஞானநாயகனே!பேதமா முருவாயருவாய் நிறைந்திருக்கும் பரனே!

அகண்ட சச்சிதானந்த தனிபூதராய்விளங்கும் இறைவனே! தத்பதார்த்தப்பொருளின்பன்னும் வாக்கியப் பொருளென்றகொண்டாடப்பட்ட நடேசப் பெருமானே! ஆங்காரமென்கிற மதயானைவந்து தொடாதபடிக்கும், மனமென்கிற மிருகம் கொண்டோடிப்போகாதபடிக்கும், மாயையின் காரியங்க ளண்டாதபடிக்கும், ஞானமென்கிற சிங்கத்தின்மேல் அடியேனை யேறும்படி கிருபை செய்யுமையா நடேசனே! எம்பிரானே! ஒன்றுமாய், பலவுமாய், உருவுமாய, அருவுமாய், தூரமுமாய், சமீபமுமாய், நிர்மலமுமாய, வையம பிரகாசமுமாய், ஆனந்தசொரூபமுமாய விளங்கும் பரமே! முதுமறைக்கு மெட்டாத முதற்குன்றப் பெருமானே!

தத்துவாதீதனாய்! தத்துவசொரூபனாய்! ஆக்கல் காத்தலஅழித்தல் என்னுமுத்தொழிலைநடத்துபவனாய் நின்றிடும் சிவபெருமானே!

இப்படியாக அரசன் பக்தியுடன் பலவாக ஏத்திப்போற்றி வாழ்த்தித்தோத்திரித்து, நடேசப்பெருமானே! ஐயனே! அண்ணலே! அடியேனுடைய பிரதிக்கினை நிறைவேறும்படி சுவாமி! வாருமென்று அழைத்தான். அவ்வழைத்தலுக்குப பரமபதியாகிய கடவுள் அரசன்மீது கிருபாநோக்கம் வைத்து, நாமிங்குளோம் இதோ இந்த ஆலயத்தி லிருக்கிறோமென்று ஒரு உரத்தசபதம் யாவரும் கேட்கத்தக்கதா யுண்டாயிற்று.

அப்போது ககனமார்க்கத்தில மேகமானது மழையை வருஷிப்பதுபோலப் புஷ்பமாரி பொழிந்தது. பஞ்சவாத்தியங்களும் கணகணவென்று முழங்கின. இதைக்கண்டு அரசன் ஆனந்தங்கொண்டு அடியிற்கண்ட பாசுரங்களாற் கடவுளைப்போற்றினான்.

## திருத்தாண்டகம்.

ஐயன்காண் குமரன்கா ணாதியான்கா ணடன்மழுவா டாளென்று பியன்மே லேந்து, கையன்காண் கடற்பூதப் படையான்காண் கண்ணெரியா லேங்கனையோ னுடல்காய்ந் தான்காண், வெய்யவன்காண் தண்புனல்சூழ் செஞ்சடையான் காண் வெண்ணீற்றன் காண் விசயற் கருள்செய் தான்காண், செய்யவன்காண் கரியன்காண் வெளியோன் றன்காண் டிருவாரூ ரான்காணென் சிந்தையானே.

பாட்டுக்கு மாட்டுக்கும் பண்பா போற்றி பல்லூழியாய்ப் படைத்தாய் போற்றி, யோட்டகத்தே யூணா வுகந்தாய் போற்றி யுள்குவாருள்ளத் துறைவாய் போற்றி, காட்டகத்தே யாடல் மகிழ்ந்தாய்போற்றி கார்மேக மன்ன மிடற்றாய் போற்றி, யாட்டுவதோர் நாக மசைத்தாய் போற்றி யலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி.

முக்கணா போற்றி முதல்வா போற்றி முருகவே டன்னைப் பயந்தாய் போற்றி, தக்கணா போற்றி தருமா போற்றி தத்துவனே போற்றி யென்றாதாய் போற்றி, தொக்கணா வென்றிவர் தோள் கைகள் கூப்பத் துளங்கா நெரிசுடராய் நின்றாய் போற்றி, யெக்கண்ணுங் கண்ணிலே னெந்தாய் போற்றி யெறிகெடில வீரட்டத் தீசா போற்றி.

இவ்வித சம்பவத்தைக்கண்ட ஞானவான் அரசனைநோக்கி மன்னவா! நீபூலோகத்தில் செங்கோல் செலுத்திக்கொண்டு பூமியிலுள்ள பேர்கள் வணங்கத்தக்கராய்க் கண்டனை தெண்டனை செய்துகொண்டு லவுகிகத் தொழிலிலிருப்பதால கடவுளை அழைத்தால் அவர் வாராரென்று நினைத்துச் சொன்னோம்! நீ செங்கோல் செலுத்தும் தொழிலிலிருப்பதில் அக்கிரமங்களைச் செய்பவர்களைத் தெண்டித்துச் சிறைச்சாலையிற் போட்டு அடக்குவதுபோல் ஜனனமாகிய கொடியின் வேரை அறுப்பதற்கு மனத்துடன் ஐம்புலன்களையும் விஷய சேஷ்டைகளைச் செய்யவிடாம லடக்கிப் பெருமையாகிய தரும சாஸ்திரத்தில எட்டாதவனையும், எட்டினவனையும், ஆத்ம கோடிகள் தோறும் கிட்டினவனையும், கிட்டாதவனையும், ஓரிடத்துந்தட்டாதவனையும், தன்னைத் தானறிந்த தலைவராற்காணப்படும் தலைவனையும், ஆணவப்பேய் கொண்டலைவார்க்குக் காணக்கிடையாத அருமையானபொருளாயும், எல்லாவற்றிலும்பாலில் நெய்போலவிளங்கிப் பிரதிபலித்துக்கொண் டிருக்கும் வஸ்துவாயும், நீர் தீ காற்று ஆகாயம் சூரியன் சந்திரன் ஆன்மா இந்திரியங்கள் தூல சூக்கும பூதங்கள் தன்மாத்திரைகள் ஆகிய இவைகளைக் காட்டி நடாத்து மாயாவடிவை யுடையவஸ்துவாயும், ஆன்மாக்கட்குப் பேரின்ப வீடளிக்கவிரும்பும் விருப்பமெனப்படும் இச்சாசத்தியையும், அதற்கு வேண்டுவனவற்றை அறியும் அறிவெனப்படும் ஞானசத்தியையும் அறிந்து செய்

யும் செயல் எனப்படும் கிரியாசத்தியையும் உடையவஸ்துவாயும், நாத மய ஸ்வரூபமாயும், சங்கற்ப விகற்பமாகிய மனோதத்துவத்தை நடாத்துங் குணவயமுடையவனாயும், ஆன்மாக்களைப்பந்தித்த பாசங் களைச் சங்கரித்துக் காப்பவனாயும், ஆன்மாக்களின் கன்மங்களுக்கீடா கப் போகமுத்தி என்பவைகளை அளிப்பவனாயும், போகத்தானமாகிய சாதாக்கியதத்துவத்தை யடைபவர்குச் சனனபயத்தைப் போக்கிப் பேரானந்தவெள்ளத்தில் அழுத்துவோனாயும், வேதனையைத் தரு கின்ற ரௌரவம் - மகாரௌரவம் - சீதோஷ்ணம் - மஹாபிலம் - குசிமுகம் - கும்பிபாகம் - தப்தலோஹம் - அஸிதபங்கம் - கிருமி - பூதிமாங்கம் - ரிதுபங் கம் இவைகள் முதலான நரகங்களில்பாபாத்துமாக்களைக்குடியேறும் படிசெய்விப்பவனாகியு மிருக்குங்கடவுளாயும், இதனைத்தருகின்ற சிவகாமியம்மையோடுகூடி உயிரும் உடம்பும்போல பலவகைப்பட்ட எல்லாவுலகங்களிலும் நிறைந்து சோதிசொரூபமாய் விளங்குகின்ற சிவபிரானிடத்தில் பக்தி செலுத்திச் சிவானந்த வாழ்வையடைய மெய்யன்பனாயிருப்பதை இப்பால் நாமறிந்து கொண்டோம். இனி நீ அப்பெரிய பொருளின் திருவடியை யடைவாயென்பதில் ஐய மில்லை. இவை இப்படியிருக்க நமமிருவரும் செய்துகொண்ட சபதத் தில் நீ கெலிப்புக்கொண்டாய்; நாம் அபஜெயங்கொண்டோம். ஆகை யால் சபதப்படிக்கு ஓ மன்னனே! நம்மைப் பிரம்பினாலோரடி யடி யுமென்று கேட்டுக்கொண்டார். அதைக்கேட்ட அரசன் யபரிபா கம் வாய்ந்த ஓ மகாநுபாவரே! வேண்டாம். அப்படியடிக்கவேண்டியது அவசியமில்லை என்றுகூறினான். கடைசியாக ஞானவானுடைய கட டாயத்தின்பேரில் அரசன் அவரைப் பிரம்பினால் ஓரடி யடித்தான்.

இந்தச் சம்பவத்தைக்கண்ட ஞானவான் இதென்ன ஆச்சரியமா யிருக்கிறது. வேதங்களாலும் வாக்கு மனத்தாலும் ஆய்ந்தறியக் கூடாத பரம்பொருளை இல்லறத்திலிருந்துகொண்டு பெண்பிள்ளை பதார்த்தங்களின்மேல் இச்சை கொண்டவனாயும், இராசனாயிருந்து சகல செல்வச்செருக்கிலே கிடந்தழுந்துபவனாயுமிருக்கும் இந்த ராஜனைப் போலொத்த ஒருவன் பரமாத்துமாவாகிய சிவபெருமானை வரமாட்டாரென்பதாக எண்ணங்கொண்டு நாம் பிரதிக்கினை பண் ணினதேயன்றி வேறல்ல. ஆயினும், நிஷ்கள நிலைமையிலிருக்கிறதிக்கு

ணத்தையுடையபிரமவஸ்துவையடையசமர்த்தராகி நற்குணங்களை யுடையசாதன சதுஷ்டய சம்பன்னனாயிருந்தும் நிர்க்குணத்தியானாப்பியாசத்தைக் கைப்பற்றிவரும்படியாயும். சகுணத்தியானத்தில் மனதைச் செலுத்தக்கூடா தென்றும், நாம இவ்வரசனுக்குப்பல முறைஅறியப்படுத்தி யிருந்தும், அதையவன் கவனியாமற் போனதினால், இனி அவனிடம் இருக்கலாகாதென்று மனக்கவலைகொண்டு தென்றிசை நோக்கிப் புறப்பட்டுப் போயினர்

அப்படிப்போகுமார்க்கத்தில், அசரீரிவாக்குண்டாயிற்று அதாவது,ஓ ஞானவானே!இராஜனனுனது புத்திரனாயிருப்பதனாலேயும்,நம்முடைய ஆலயத்திற்கு அடிக்கடி வந்து பூஜாகாரியங்கள்முதலியவை சரியாய்நடந்து வருகின்றதா வென்பதை விசாரணை செய்யப்பட்டவனாயிருப்பதனாலேயும், மெய்யடியார்கள் விரும்புவதை நாம் கொடுப்பது நாரத இயல்பாயுள்ள தன்மையா யிருப்பதனாலேயும், அந்தராஜனை கூப்பிட்டபோது நாம அருகிலிருப்பதாகக் கூறும்படி நேரிட்டது.

நீ அதற்காகவும், பிரமபர வடிவுபாட்டுக்காகவும ஆயாசப்பட்டு அவ்வரசனிடத்தினின்றும் நீங்கி வெளிப்பட்டு வந்துவிட்டது உசிதமாயிருக்கவில்லை. நிர்க்குணத்தியானாப்பியாசத்திற்கு அரசன் அருகனல்லன சீவாத்மா பரமாத்மாக்களுக்குண்டான கிஞ்ஞித்வ சர்வத்வபேதங்களை அறிந்து ஆத்மஸ்வரூப லக்ஷணத்தையும், ஆத்மாவுக்கு வேறாகப் பிராந்தியினாலே தோன்றுகின்ற தேகாதி யுபாதித்வங்களையும்,சிரவண மனன நிதித்யாசனாதி மார்க்கங்களையும்,விதேக கைவல்ய லக்ஷணத்தையுமறிந்திருக்கும பக்குவர்களா யிருப்பவர்களுக்கல்லது,மற்றவர்கள் நிர்க்குண உபாசனை செய்ய அருகரல்லர். அரசனை அவனுடைய பக்குவத்துக்குத் தக்கபடி ஞான அப்பியாசம் செய்ய அவனுக்கு நீ போதிக்க வேண்டியதா யிருந்ததே தவிர அத்வைத பரமானந்த சுகத புத்த முத்தஸ்வரூப வியாபக [illegible] அபரிச்சின்ன பிரமத்தை நிஷ்கள வடிவாயத் தியானித்து [illegible] போதித்தது சரியல்ல: ஏன் சரியல்ல வெனில், அநாதியாய் [illegible] பித்திருக்கும ஆணவமலமாகிய அந்தகாரத்தை நீக்கும் [illegible]

நெற்றிக்கண்ணனாகிய சிவபிரானை சகளவடிவமாக அடியார்கள் தியானித்து வரவேண்டியது அவசியமானதா யிருக்கிறது. அதை நீ அறியாயோ?

நீ அவ்வரசனால் பிரம்படிபட்டது அவமானமான காரியமாயிருப்பதாக நினைக்கிறதானால், நாம வைகையாற்றின் கரையடைக்க மண்வெட்டியுடன் கூடையும எடுத்துக்கொண்டு கூலியாளாய் வந்தபோது பாண்டியனுடைய பிரமபடி நம்மீது தழும்பேறும்படி நாம பட்டுக்கொண்டதை நீ அறிந்திலையா?

பாசுபதாஸ்திரம் வேண்டித் தவமியற்றும விஜயனைக் கொல்ல வந்த மூகாசுரனாகிய பன்றியைத் துரத்திக்கொண்டு நாம் வேடுவருபங்கொண்டு வந்தசமயம அவனுடன அமர செய்தபோது அவனது காண்டீபத்தால் நாமடிபட்டதும, சாக்கியநாயனாரெறிந்த கல்லாலடிபட்டதும, நூலின் துவாரமாகவேனும நீ அறிந்துகொள்ளவில்லையா?

அப்படியிருக்க மேற்கண்டபடி உனக்கு நேரிட்டிருக்குஞ் சமபவ நிமித்தமாக நீ ஆயாசப்படுவது சரியலவென்று மேற்படி அசரீரிகூறிற்று. அதனால ஞானவான மனக்கவலைநீங்கி, சிற்சபையில மங்கை மாதுமையுடன் ஆனந்ததாண்டவமாடும நடேசபெருமான் வாசமாயிருக்கும தில்லைபபதியடைந்து அத்தலத்திலேயே வாசமாயிருந்தனர்.

பிறகு அரசன், ஞானவான் மனஸதாபத்தால் தன்னைவிட்டுநீங்கிப் போய்விட்டதை அறிந்து, அந்த ஞானவானைத் தேடிக்கண்டு பிடித்து அழைத்து வரும்படி நாற்புறமுந தூதர்களை அனுபபினன். அவ்வண்ணமவர்களாலழைத்து வந்த ஞானவானுக்குப பிரியவசனத்துடன் உபசாரணைகள்செய்து நிக்குணோபாசனைக்குரிய சாதன சதுஷ்டயம் வாய்ந்து சாயுச்சிய பதவியடைவதற்கு அருகனாகும் விதத்தை அந்த ஞானவானால உபதேசமபெற்றுக் கொண்டானென்பதாக இதிகாசங் கூறுகின்றதென்றுசொல்லி, அக்காசி மடாதிபதி தன்னிடம் வந்த சிவயோகிக்குப பின்னுமொருகதை சொலலத் தொடங்கினர்.

பிரமலக்ஷணம் - முற்றிற்று.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஆத்மபோதப்பிரசங்காமிர்தம்.



## நான்காவது பிரகரணம்.

## ஞானிகளின் மகிமை.



### ஓர் ஞானமாதினால் அஞ்ஞானிமெய்ஞ்ஞானியாயினகதை.

பரதகண்டத்தில் கோசலதேசத்தை யரசாண்டுவந்த வேந்தனிடத்தில் சிவவேடம்பூண்ட ஒருவன் சிவயோகி என்றுசொல்லி வந்திருந்தான். அவன் ஒருநாள் காலையில் பீதாம்பரமுதலியஉயர்ந்த ஆடைஆபரணங்களை அணிந்துகொண்டும், மிகுந்த பரிமளத்துடன் கூடிய சந்தனமுதலிய வாசனாத திரவியங்களைப் பூசிக்கொண்டும், வெகுஜனங்கள் புடைசூழ டலவிக வாத்திய கோஷங்களுடன் அரசனுடைய பட்டத்து யானையின்மேலேறி ஊர்க்கோலம் வந்துகொண்டிருந்தான். அப்படிக்கு அவன்வருவதைக் கொத்துக்கொத்தாய் விளங்குங் கொன்றைமாலை யணிந்த சடாடவியினையுடைய சிவபெருமானையும், எல்லாவற்றினும் சைதன்னியஸ்வரூபமாயுமிருக்கின்ற நடேசப்பெருமானிடத்தில் அன்புள்ளவளாயும், புன்செய்கையையுடைய புண்ணியவதியாயும், மாயமயக்கை விலக்கினவளாயுமுள்ள அமுர்தமென்கிற பேருடைய ஒருமாது இச்சிவயோகியைப் பார்த்து நகைத்துக் காறியுமிழ்ந்து துர்ப் பாஷையாயேசினாள்.

சிவயோகியானவன் ஊர்க்கோல முடிந்து தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தபின்பு அந்தமாது ஏசியதைக் கேள்வியுற்று சினங்கொண்டு அன்றிரவில் மாறுவேடம்பூண்டு, அந்தமாதினுடைய இல்லிடத்துக்குச் சென்று, அம்மாதைக்கண்டு, அம்மாதாயே! எனக்குப்

பசியாயிருக்கிறது; கொஞ்சம் அன்னங் கொடு என்று ஏழையாள்போல வருந்திக்கேட்டான். அந்தப்படி அந்தமாதானவள் அன்னங்கொண்டுவந்து கொடுத்தாள். அதைச்சிவயோகி உண்ணுமல் அவளைநோக்கி, அம்மா! இன்றுகாலையில் யானையின்மேலேறிப் பவனிவந்த சிவயோகியாகியமகானைப்பார்த்து நீ பழித்ததாகத் தெரியவருகிறதே சிவானந்தமுத்திக்குச் சாதனமாகிய சிவயோகத்தினிடத்தே ஏககாலமும் மனவெழுச்சியுடைய பெரியோராயிருப்பவரை நிந்திக்கலாமா? அவர்கோபித்துச் சபித்தால் உனக்குக் கெடுதி நேரிடுமேயென்றான். அதற்கு அந்தமாதானவள் அவனைநோக்கி அடமூடா! அடவம்பா! அடயாசகா! அதைப்பற்றி உனக்காக வேண்டிய தென்னடா! நீ வந்த வேலையைப் பார்த்துக்கொண்டு போடா! அந்தச் சிவயோகி வந்து கேட்டால் சொல்லுகிறே னென்றாள். அதற்கு நான்தான் அந்தச்சிவயோகி யென்றான்.

அந்தமாதானவள் அவனைநோக்கி, வாரும் சிவயோகியாரே! ஸ்தூல சூக்ஷ்ம காரண மென்கின்ற மூன்றுவகைச் சரீரங்களுடன் கூடிய ஜீவன் உலகத்தின்கண் மனவாக்குக் காயங்களாலே செய்யப்பட்ட பாவங்களின் பலனுக்காக ஜனன மரணப் பிரவாகமான துக்கசமுத்திரத்தில் மூழ்கித் துன்பப் படுவதையும், மாயா காரியமாகிய இந்தச் சரீரம் நீர்க்குமிழிபோல நிலையில்லாமல் அழிந்து போகத் தக்கதென்பதையும் யோசித்து, யாம் பிறவிக் கடலைக் கடந்து சிவசாயுஜ்ஜிய முத்திக்கரை சேர்வதற்குப் பரமபதியாகிய சிவபெருமானுடைய திருவடித் தெப்பத்தை யடைய வேண்டு மென்பதாக அபேக்ஷிக்கிறார்களோ? அப்படிப்பட்டவர்கள் ஏஷணாத்திரயாதிகளை யொழித்து யான் எனது என்கின்ற அபிமானத்தை விடுத்து, ஐம்பொறிச் சேட்டையும் அடக்கி, காமக்குரோ தாதிகளை நீக்கி, தத்துவ விசாரம் பண்ணி, அவைகளை நவநவமாகப் பிரித்து, ராகத்வேஷ நிவர்த்தம் சர்வதூாகருணை நிவர்த்தகம் செய்து, நிராபிமானம் நிராசை இவைகளைக் கைப்பற்றிக்கொண்டு, மலைகளிலாவது அதன்குகைகளிலாவது அல்லது, ஏகாந்தஸ்தானத்தி லாவதிருந்து அகோர தவஞ்செய்து ஞானயோகத்தைச் சாதிப்பவர்கள் நற்கதியை யடைவார்க ளென்பதாக சிவாகமங்கள் முதலிய கிரந்தங்களில் கூறப்பட்

டிருக்கின்றதை சிவயோகியென்று சொல்லிக்கொள்ளுநீர் அறிந்திரா? அல்லது கேள்விப்படவாவதில்லையா?

விஷயங்க ளிப்படியிருக்க, இந்தக்கரும பூமியில் சிலர் வயிறு வளர்க்கும் பொருட்டு சிவவேடம்பூண்டு சகலவேத ஆகம இதிகாச புராண சாஸ்திரமுழுதும் முணர்ந்த பேர்ந்தவர்கள்போல தாங்கள் கற்றுக்கொண்ட சில ஞானசம்பந்தமான பாடல்களைப் பாடிக்கொண்டும், தற்போதமொழிந்த சிவனடியார்களைப்போல சச்சிதானந்த சொரூபநிலையைப்பற்றிப் பேசிக்கொண்டும் திரிந்து, பின்பு அரசர் முதலானவர்களிடம் வந்துசேர்ந்து தேகத்தைப்போஷித்துக்கொண்டும், சங்கற்ப விகற்பங்களையுடைய மனோஸ்திதியை விபரீதபாவனையில்விட்டும், அனேக பாபகாரியங்களைக் குட்படுத்தும்விஷமகிருத்தியங்களைச் செய்துகொண்டு மிருப்பார்கள். இப்படிப்பட்டவர்கள் சிவவேடம்பூண்டு சிவனடியார்களென்று சொல்லிய பேர்வைத்துக்கொண்டிருந்தாலும், பிரபஞ்சவாசனையைக் கைப்பற்றிக்கொண்டு, மனுதினான்குடன்கூடி விஷயங்களில் உலாவிக்கொண்டு, உயிரைவருத்துகின்ற புலன்களுக்கு அடிமையாகி, ஆசைவலையி லகப்பட்டுக் கடைசியாய் எமகிங்கிலியர்களால் துன்பப்படுவார்கள்.

மேலும் இப்படிக் கபடப் பொய்யாகிய சிவவேடம்பூண்டு மோசக்காரர்களாகியிருப்பதைப்பார்க்கிலும்வீடுவீடாய்ப்பிச்சையெடுத்துண்பதே பெருவாழ்வென்று கூறப்படும். ஓ சிவயோகியே! நாம் சொல்லுவதைக் கவனத்துடன் கேளும்: பிரமஞானத்தை யடையவேணுமென்கிற உண்மையான விருப்பத்தையுடையவன் வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களின் சமரசநிலையை யாராய்ச்சிசெய்து, சிவபேத சிவபேதப்பகுப்புணர்ந்து, ஆசாபாசத்தையும், மனமாயையும், மலமூத்திர முதலிய அசுத்தங்கள் பொருந்திய புழுக்குரம்பையாகிய யாக்கையென்னுந் தேகத்தினிடத் துண்டான அபிமானத்தையும் விட்டு, சகல அஞ்ஞானங்களையும் ஞானக்கினியாலே சுட்டுப்போட்டு, களிப்புற்று சிவயோகத்திலிருந்து, சிவஞானியென்று ஒட்டியாணம்பூண்டு, ஆனந்தமென்னும் ஞானமிர்தத்தை யருந்தி, ஓம் நமாவென்னும் [illegible] திரையைப்பெற்று அழியாப் பதவியாகிய மோட்ச [illegible]

தை யடைய அருகரா யிருப்பவர்களை மாத்திரம் சிவஞானச்செல்வ கனென் றழைக்கப்படும்.

இப்படியாகச் சொல்லியபின்பு அநதமாதானவள் தன்னுடைய சரீரத்திலுள்ள அவயவங்கள் வெளிப்படையாய்த் தோற்றும்படியாகத் தானுடுத்தியிருந்த ஆடையை அவிழ்த்தெறிந்துவிட்டு நிர்வாணமாய் நின்றாள். அப்போது அநதச் சிவயோகி அந்தமாதினைப் பாராமல் தன்முகத்தைப் பின்புறமாகத் திருப்பிககொண்டு அசைவற்று நின்றான். அந்தமாது ஆடையைத் தரித்துக்கொண்டு சிவயோகியை நோக்கி, ஓ சிவயோகியே! நான் வெட்கம் மானம் இவைகளைவிட்டு நிர்வாணமாயிருந்தபோது நீர் என்னைப் பாராமல முகத்தை மறுபுறமாய்த் திருப்பிக் கொளவானேன்? கிரகாசிரமத்தி லிருக்கும் சமுசாரிக ளல்லவோ அப்படிச் செய்யவேண்டியது. உம்மைப் பார்த்தால் மோகத்தை யுண்டாக்கும் சிற்றின்பத்தில ஆசைபபட்டவராய்க் காணப்படுகிறது. ஆகம ஞானத்தைக் கைப்பற்றிப் பிரமநிர்ணயத்தை அறிந்துகொள்ள ஆசை கொள்ளுபவர்கள் தேக அபிமானம் ஆங்கார முதலியவற்றைத் தொலைத்து, ஐம்புலனையுஞ் சுட்டறுத்து, நிரகாசசிவயோக நித்திரை கொள்பவரா யிருக்க வேண்டிய தாச்சுதே? அப்படியிருக்க உமக்கு ஆண் பெண் என்கிற உடற்பேததிருஷ்டி ஏது? மாமிச ரூபமாக அமைந்திருக்கும் உபஸ்த விந்திரியங்கள் முதலியன தோலேயன்றோ? அவைகளைப் பார்க்கிறதானால், உமக்கு அருவருப்பு உண்டாவானேன்? உண்டாகி முகத்தைத் திருப்பிக்கொள்வானேன்? நீர் உண்மையான சிவநேசரா யிருந்தால் மானம்வந்தாலும், அவமானம் வந்தாலும், சுகம்வந்தாலும், துக்கம்வந்தாலும சமமாய், ஏகரூபமான மனதோடு கூடிய பொறுமை யடைந்தவனாய், அந்தர்முகத்தில் மனதைச் செலுத்தி சர்வஜீவதயாபர மூர்த்தியே! சத்துச்சித்தானந்த தற்பர நாதா! சாம்பசிவாவென்று ஆத்மத்தியானத்தி லிருக்கவேண்டியவனாயிருக்க, அப்படிக்கில்லாமல் அரசனிடம் வந்து சேர்ந்து பெருந் தீண்டிகளைத் தின்று காலங்கழிப்பதுடன் யானையின்பேரிலே றிக்கொண்டு பவனிவருவதும், பின்பு மாறுவேடம்பூண்டு இரவில் என்னுடைய இல்லத்திலுக்கு வந்து பித்தனைப்போல் என்னைப்பார்

த்து சிவயோகியை நீ நிந்திக்கலாமாவென்று கேட்பதும், இதுதானு உம்முடைய ஞானவிருத்தி? இதற்குத்தானு நீர்காத்தவராயன் கறுப் பண்ணன் பிடித்திருக்கும் கடிமாடுகளைப் போல் தாடி மீசை முதலியவற்றை வளர்த்துக்கொண்டு சிவவேடம்பூண்டு திரிவது? இது உமக்கு அழகோ? சிவாநந்தப்பெருவாழ்வை விரும்பு மெய்யடியார் களிப்படி செய்வார்களா? செய்யார்கள். பசிக்கின்றது அன்னம் போடென்பதாகப்பொய்சொல்லலாமா? கடவுளை நினையாமல் உயிர்ச் சார்பாயுள்ள குடும்பமுதலாகிய பலவகைப்பட்டிருக்கின்ற தேகாதிப் பிரபஞ்ச வாழ்வுகளைத்தும நித்தியமென்றெண்ணி வாழ்நாள்களைக் கழிப்பவர்க ளல்லவோ பொயசொல்லுவது; சிவவேடம்பூண்ட நீர் பொய்சொல்லலாமா? சிவவேடம பூண்டதற்கு முந்தி தத்துவலக்ஷ ணம் இன்னதென்றும், சிவபேதமென்பது யாதென்றும், இவைமுத லியவற்றை எப்போது கழிககந்தக்கதா யிருக்குமென்பதும் தெரிந் துகொள்ளவேண்டியது உசிதமாயிருகக, நீர் அப்படி தெரிந்துகொள் ளாமல், இவ்வர்த்தராத்திரியில மாறுவேடமபூண்டு இங்குவந்து அன் னங்கேட்பதைப்போல் பாசாங்குசெய்து, நான்வைதவிஷயத்தைப் பற்றிக்கேட்டீரே? உமது யோக்கியதையை யோசித்துப் பார்க்கில பரநதுவநிலையைக் கைப்பற்றும்பொருட்டு ஞானநுஷ் டானத்திற குரிய தத்துவவிசாரணைகூட செய்தவராக எனக்குத் தோற்றவில்லை. ஆகிலும், தத்துவ லக்ஷணத்தைப்பற்றி நான் சங்கி ரகமாயச் சிலவற்றைக் கூறுகிறேன் கேளும். தேகத்துக்கு அன்னிய மாக ஆத்துமா ஒன்றுண்டு அதைத்தான் சிவனென்றுகூறுவது, அத் தேகத்துக்கு முப்பத்தாறு தத்துவங்களுண்டு; இந்த முப்பத்தாறு தத்துவமும ஆன்மா புசிக்கைக்குத் துணைக்காரணமா யிருப்பதுடன் தூலருக்குக்காரணமாக நிற்கும். இந்தத்தத்துவம் முப்பத்தாறுக்கும் விபரம்,

| | |
|---|---|
| ஆன்ம தத்துவம் | உ௰௪. |
| வித்தியாதத்துவம் | எ. |
| சிவதத்துவம | ரு. |
| ஆ | ௩௰௬. |

மேற்கூறிய ஆன்மதத்துவம் உயசல், பூதம் ரு. புலன் ரு. ஞானேந்திரியம் ரு. கன்மேந்திரியம் ரு. அந்தக்கரணம் ச. ஆ உயச.

வித்தியா தத்துவமாவன, காலம்-நியதி-கலை - வித்தை-இராகம்-புருடன்-மாயை. ஆ எ.

சிவதத்துவமாவன, சுத்த வித்தை - ஈஸ்வரம் - சாதாக்கியம் - சத்தி - சிவம். ஆ ரு.

இந்த முப்பத்தாறு தத்துவங்களையும் தனித்தனியே ஆராய்ச்சி செய்து பார்க்குமிடத்தில் நடேசர் அகண்டமாந்துரியமாய் விளங்குவது மன்றி, தொம்பதம் தத்பதம் அசிபதப்பொருளாயும், பரிபூரணமாயும், அறிவுக்கறிவாயும், நின்மலமாயும், உயிருக்குயிராயும், குறியுங்குணமு மில்லாததாயும், அருவம் உருவம் அருவுருவமாயும், அகண்டிதமாயும், ஆனந்தமாயும், சர்வமுந்தானாயும், தானேசர்வமுமாயும், எல்லாமாயும், அல்லவுமாயும், குருதுரிய சம்பூரண மௌனானந்த சுவாநுபூதி சாக்ஷாத்கார வஸ்துவாயும் விளங்குவர்.

பரமஞான விளக்கம்.

அறிவில்லாத் தத்து வங்க ளனைத்தையு மடங்க நீக்கி
யறிபவன் றன்னைக் காணி லகண்டமாந துரிய மாகும்
அறியுமவ் வறிவு தானு யறிவிக்கு மறிவோ டொன்றி
அறிவொடா னந்த மாகி யதீதமாய் நின்ற தன்றே.

மலர்கள் நிறைந்து குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த தில்லைநகரில் எழுந்தருளி யிருக்கும் நடேசப்பெருமானை யார் வேதாகமவாக்கியங்களினாற் போற்றித் தத்துவ முப்பத்தாறையும் ஆராய்ச்சி செய்தவர்களா யிருக்கிறார்களோ அப்படிப்பட்ட மகான்கள் பிரமசொரூபமாகிய அச்சபாநாயகரை ஞானக்கண்ணினாற்காண அருகராயிருப்பார்கள். அப்படிக் காண்பவர்கள் சுத்தமெய்ஞ் ஞானமேனிச் சோதிதானாய் விளங்குவார்.

பதிபசுபாச விளக்கம்.

தத்துவ முப்பத் தாறுந் தனித்தனி கழிந்து நீக்கின்
மெய்த்திருள் மூடி மத்தை முன்னவ னருளால் வீட்டின்

மெய்த்தகன் னுருவ நன்றாய் விளங்குறு மதற்கப் பாலே
சுத்தமெய்ஞ் ஞான மேனிச சோதிதா னயி ருப்பன்.

யார் ஆத்மவிசாரணையில் மிகவும் அபிலாஷை யுடையவர்களா யிருக்கிறார்களோ அப்படிப்பட்டவர்கள் உலகவிஷயங்களி லாசையைவிட்டு இந்திரிய நிக்கிரகஞ்செய்து, மனதைச் சுவாதீனப்படுத்திக்கொண்டு தத்துவவிசாரணை செய்யவேண்டியதில் முயற்சிகொள்பவரா யிருப்பார்கள். இப்படிப்பட்டவர்கள் தங்களைச் சிவனடியார்களென்றும், தங்களுடைய உடைமைகளெல்லாம் சிவனுடைமைகளென்றும், தங்கள் செயலெல்லாம் சிவன் செயலென்றுங் கருதி, சனகமகாராஜன் முதலிய மகான்களைப்போல வாழ்ந்து, பிராரத்துவம் நீங்கும்வரையில் ஆன்மாவைத் தாங்கிய தேகசுமையினைப் பராமுகமாய்த் தாங்கிக்கொண்டு, ஞானவான்களாய்ச் சஞ்சரித்து, சீவகரணங்களெல்லாஞ் சிவகரணங்களாகவாய்ந்து, அந்தர்முகத்தி னிலைநின்று, செம்பொன்னம்பலவனாகிய நடேசபெருமான் குஞ்சிதபாதத்தை ஸ்மரித்துக்கொண்டு ததேகசுகியான சாதனங்களைச் செய்துகொண் டிருப்பார்கள்.

தங்களைச் சிவனடியார்களென்றும், தங்களுடைமைகள் சிவனுடைமைகளென்றும், தங்கள் செயல்கள் சிவன்செயல்களென்றும் கருதியிருப்பதற்குப் பிரமாணம்.

தாயுமானவர்.

எல்லாமுன் னடிமையே யெல்லாமுன் னுடைமையே யெல்லாமுன் னுடைய செயலே, யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென் றிருக்காதி வேத மெல்லாஞ்; சொல்லொன் முழக்கியது மிக்க வுபகாரமாய்ச் சொல்லிறந் தவரும் விண்டு, சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந் தொகுத்தநெறி தானு மிவையே; யல்லாம லில்லை யெனநன்றா வறிந்தே னறிந்தபடி நின்று சுகநா, னாகாத வண்ணமே யிவ்வண்ண மாயினே னதுவுநின தருளென் னவே, கல்லாத வஞ்ஞனுக் குள்ளே யுணர்த்தினை கதிக்குவகை யேது புகலாய், கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு கருணா கரக்கடவுளே.

மேற்கண்டபடி தநேகக்கியானத்தி லிருந்து நிஷ்காம கர்மங்களைச் சாதிக்கும் வைராக்கியர்கள் சர்வபரிபூரணமாய், எல்லாவற்றினுஞ் சைதன்ய ஸ்வரூபமாய், சொல்லிலும் சொல்லின்முடிவிலும் வேதச்சுருதியிலும் அன்பரிடத்திலும மற்றெங்குமாய் விளங்கும் நடேசப்பெருமான் பாதாமபுஜத்தை யடைவார்களென்பதாக ஞான நூல்கள் பேசுகின்றன.

திருத்தாண்டகம்.

சொல்லானைப் பொருளானைச் சுருதியானைச் சுடராழி நெடுமாலுக் கருள்செய் தானை, யல்லானைப் பகலானை யரியான்றன்னை யடியார்கட் கெளியானை யரண்மூன் றெய்த, வில்லானைச் சரம்விசயற் கருள்செய் தானை வெங்கதிரோன் மாமுனிவர் விரும்பி யேத்து, நல்லானைத் தியாடு நம்பன்றன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேனானே.

இவ்வண்ணம் அம்மாதானவள் போதிக்க சிவஞானசமபந்தமாகிய விஷயங்களைக் கள்ளமே குடிகொண்ட நெஞ்சினையுடைய சிவயோகி கேட்டு, அடியில்கண்டபடி வினவினன்.

வினா—ஓ அம்மா தாயே! ஒருவன் தத்துவவிசாரணை செய்வதினாலேயே தில்லைச்சிற்றம்பலத்தில் நடனஞ்செய்யும் பொருளாகிய நடேசமூர்த்தியைக் காணக்கூடுமோ?

விடை—பிரமன் விஷ்ணுமுதல் கிருமியீறாக வுள்ளவர்கள் ஆணவம் கன்மம் மாயை யெனனு மூன்றுமலங்களை யுடையவர்கள். இவர்களுக்குப் பிரகிருதி தத்துவம் தநுகரண புவனபோகங்களா யிருக்கும். அத்தத்துவங்கள் தூலமாகவும் சூக்ஷுமமாகவும் காரணமாகவுமிருக்கும். சந்திரனைத் தெரியவொட்டாமல மேகம் மறைத்திருப்பதுபோல்மாயாசம்பந்தத்தாலாகிய அந்தக்கரணமுதலிய தத்துவங்கள்சிவத்தையும் ஆன்மாவையும் மறைத் திருபபதால், அதனது லக்ஷணமின்னதென்பதையும், பரமாத்துமாவி னிலக்ஷணமின்னதென்பதையுமறிந்துகொள்ளக் கூடாமலிருக்கிறது. வாழைத்தண்டை அடுபே யுதண்டபட்டைகளை ஒன்றொன்று யுரித்துக்கொண்டு [illegible]தண்டைக் காண்பதுபோல் குருஉபதேசத்தால்,

இந்த முப்பத்தாறு தத்துவங்களையு மொன்றொன்றா யாராய்ந்து அதுநானல்ல இதுநானல்ல வென்று நியதிகழித்து நாதத்துவபம் வரையினுங் கடந்தால் ஜீவாத்மாவின் சொரூபலக்ஷணமின்னதென்று தெரியும். அங்கும் பகலிலேற்றிய விளக்குப்போல் தற்போதச் சேட்டையடங்கி அறிவுமயமாயிறங்கில், அவ்வறிவுதானே சிவமென்னும் யதார்த்தஞானமவாயந் தின்புற்று விளங்குகிறான்.

### சிவப்பிரகாசம்.

தத்துவ மானவற்றின் தன்மைக ணணுகுங் காலை
வுய்த்தறிந் திடவுதிப்ப தொளிவளா ஞான மாகும்
அந்தன்மை யறியுமாறு மகன்றிட வதுவா யான்மாச
சுத்தமாஞ் சுத்த ஞானத் தொடர்முத தோன்று மன்றே.

### கைவல்யம்.

தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேக மும்போய்
அத்துவி தந்தா னுதய வபரோக்ஷ ஞான மாகுஞ்
கர்த்தனுஞ் சீவபேதங் கழிவதே துக்கம் போதன்
முத்தனு மெல்லாஞ் செய்து முடிந்ததா னந்த மாகும்.

மேற்கண்டபடி அம்மாது கூறியதெல்லாம் இந்தச் சிவயோகி கேட்டு மனக்கவலையுற்று, தான் சிவவேடம் பூண்டவனாயிருந்தும் வேதாகம வழியிலே நடவாமல் அதற்குவிரோதமாய் நடந்துவந்தது பிசகென்றும், இனி அப்படி நடவாமல் தனது நடவடிக்கையைச்சீர்ப்படுத்திக் கொள்ளவேண்டுமென்றும் எண்ணி அம்மாதை நோக்கி அடியிற்கண்டபடி கூறத்தொடங்கினான்.

ஓ அம்மணி! ஓ பிராட்டியே! வேதாகமங்களை யுணர்ந்த சாது சங்கப் பழக்கத்தையுடையவராயிருந்த என் பிதாவானவர் ஒரு தினம் என்னை அழைத்து, அப்பா குமாரனே! இந்தச்சரீ[illegible] னுக்கு மாயா சம்பந்தத்தினாலுண்டானதென்றும், அது [illegible] பிணிகளா லுண்டாகிய புலால் நாற்றத்தை யுடைய [illegible] எந்தக்கணம் இருக்குமோ எந்தக்கணம் போகுமோ [illegible]

யக்கூடாம லிருப்பதென்றும், அந்தத் தேகத்தினுள் வாசமாயிருக்கும ஜீவன் பஞ்சேந்திரிய வேடர்களின் சூழலிலகப்பட்டு, உணாவழிந்து சத்தாதி விடயங்களாகிய நாய்களால வேட்டை யாடப்பட்டு, இச்சை முதலியவைகளாலே பழுதுபட்டு, அகமபாவமென்னும் பசாசுடன் விளையாடி, சந்தோஷத்தைத் தருகின்ற மாயாகாரியங்களை நானுவிதமாக நடத்தி, அதனுல், எண்ணிக்கை யிலலாத உபாதிகளை யடைந்து, பாபிகளாகி நரகவேதனைக்கு ஆளாவாாகளென்றும்; இபபடிப்பட்டவர்கள புராந்தகனுகிய நடேசப பெருமானைத தொழாத பிரஷ்டாகளா யிருபபாாகளென்றும; பேய்த்தோபோல் நிலையில்லாமலழிநது போகும பிரபஞசவாழ்க்கையில் உலாவிககொண்டு துன்பக்கடலில்மூழ்கிககிடக்குமபிரஷ்டாகளைபபோலநீயும இராமல, சம்சார பநதத்தைவிட்டு இனிபபிறவா நெறியை யடையுமபொருட்டு வைதிகசைவ சனமாாககததைக காட்டும ஞான நூலாராய்ச்சியும், சிவததியானமுஞ செய்து நறகதியையடைய முயறசிசெய்ய வேண்டியதென்றும; யாாசபாநாயகரைப போறறி நதொழாமலிருக்கிறார்களோ அபபடிபபட்டவாகள பெருப வனததில் வாசஞ்செய்யும் புன்குரங்குகளுக்குச சமானமானவாகளென்றும பிரபுலிங்கலீலையிலிருக்கும செய்யுளொன்றை யெடுததுச சொல்லினா.

அதாவது.

பூசனை செயாததகை புராநதகனபுகழ
பேசுத லிலாதவாய பெற்றுழனறிடும
நீசரா னவாதமில நெடுவனததினிடை
கூசுத லிலாதபுன குரங்குகனறரோ.

இப்படியாக எனது தந்தை எனக்குப் போதிததனபேரில நான் வைராக்கிய சதகம் வைராக்கிய தீபமுதலிய ஞான நூல்களை வாசித்து வந்ததில, மாமிச பிண்டமாயும், ஆபாசமானதாயும, நிலையில்லாததாயுமுள்ள இந்தத் தேகத்தினிடத்தில அபிமானம வைத்து அதைப போஷிக்கும் பொருட்டுப் பணத்தையும் பூமியையும் சம்பாதிப்பதில சதாதிருஷ்டி. யுள்ளவனு யிருந்து சமுசாரக் கடலில்மூழ்கி ஆகாரம் நித்திரை பயம மைதுனமுதலிய விஷயங்களா லுண்டாகும் பலவித துக்கங்களுக்கு ஆளாகிப்

போவதைப் பார்க்கிலும், துறவியாகி நற்கதி யடைவது நலமா யிருக்கு மென்பதாக எண்ணி இல்லறத்தை விட்டுச் சிவ வேடம்பூண்டு வெளிப்பட்டுப் பலதிவ்ய க்ஷேத்திரங்களுக்குப்போய் சிவதரிசனஞ் செய்து சிவநேசர்களைக்கண்டு சேவித்துக்கொண்டு வந் தேன். அப்படியிருக்க, ஒருசந்நியாசி என்னிடம்வந்து எனக்கு நேசனாயிருந்தான். இவன் மந்திரவாதியா யிருந்ததால் அவன் என் அறிவைக்கெடுத்து மாந்திரீகம் கற்றுக்கொள்ளும்படி செய்தான். நான் அந்தப்படி கற்றுக்கொண்ட பின்பு அவனுக்கும் எனக்கும் பகையுண்டாயதில் நான் அவனைவிட்டு நீங்கி இத்தேசத்து அரசனி டம் வந்து சேரும்படி நேரிட்டது. இந்த அரசனிடத்தில் நான் கற் றுக்கொண்ட மாந்திரீக வித்தையில் சிலவற்றைக் காட்டியதில், அவைகள் மிகவும் அற்புதமா யிருந்ததால் நான் உண்மையான ஞானவானென்று கருதி என்னை மிகவும் பெருமையாகப் பா ராட்டி வந்தான். அந்தப் பெருமையானது நான் உன்னைக்கண்டு வார்த்தை யாடியதில ஊழிக்காற்றி லகப்பட்ட இலவம் பஞ் சுபோற பறந்துபோய் விட்டது. என் பொய்வேடத்தை இன் றோடே விட்டுவிட்டேன். இனி அரசனிடத்தும் போகமாட்டேன். உன்இலைத்திலேயே இருந்து நீ சொல்லு ஞானமார்க்கப்படிநடந்து கொளளுகிறேனென்றான்.

இது இப்படியிருக்க, அந்தமாது எழுந்து ஸ்நானஞ்செய்து, பூசையில் உட்கார்ந்து அடியில் கண்டபடிக்குச் சிவபிரானாகிய நடே சப்பெருமானைத் தோத்திரஞ் செய்தனள்.

ஸ்ரீகண்டத்தையுடைய வேதியராகிய நடேசப் பெருமானே! கடாசலவுரிப் போர்வையைப் போர்த்தவனே! அனந்த பிரம்மானந்த பிரவாக அநுபவக்கடலாகிய நடேசப் பெருமானே! சர்வவியாபக நிராகுல கோலாகலனாகிய சபாநாயகனே! சுபகுண பரிபூரணஞான பரமபுருஷனே! சர்வலோக பதியாகிய சாம்பசிவனே! சந்த்ரசேகர னே! சிவபெருமானே! கங்கைச்சடையானே! கருணைப்பிரவாகனே! சிவஞான போதனே! ஏகனே! அநேகனே! ஞானாகரனே! தாரதல முழுதுந்தானாய் நிறைந்தவனே! ஓதவடங்காத தாண்டவனே! மணி வாசகரின்பொருட்டு நரிகளை யெல்லாம் பெரியகுதிரைகளாகச் செய்

தவனே! வேதக்குதிரையின் மேல்வந்தவிகிர்தனே! வேதவேதியனே! ஆவரண சத்தியைக்கடந்த அறிவுடையோர்கள் தேடுகின்ற முக்கட்பிரானே! பாசபந்த மற்றவர்களுக்குத் தனதுபதத்தைத் தந்தருளுந் தயாபரனே! சுத்த நிராகருணமாகிய பராபரனே! என் தெய்வமே! கருணைப் பிரவாகனே! தத்பதாதீதனே! சதாசிவத்து ஆனந்தமான சதாசிவனே! வாக்குமனாதீதகோசரமாகிய பராபர வஸ்துவான பரதேவதையே! சாவஜீவ தயாபர மூர்த்தியாகிய சங்கரனே! மெய்யடியார்களுடைய அஞ்ஞான அழுக்கைமாற்றிப் பசுபோதத்தைநீக்கிச் சிவபோத முண்டாகும்படி செயயுமையனே! ஞானமயமாகிய திருச்சிற்றம்பலத்தில அனவரதமும் ஆனந்தத தாண்டவம் இயற்றியருளும் திரிபுரதகனராகிய நடேசப்பெருமானே! திருமாலறியாத தெய்வமலர்த் தாளிணையை அடியேனுக்குத் தந்தருளுமையா சிவபிரானே! கணபண கஙகண மணியணி திகழ்பெறு கவுரிமனோகரனே! குணமிகுசிந்தூர பணிமுக வல்லபை கொஞ்சுமனோகரனே! கோடியண்டங்களைத் தன்னகத்தே யடக்கிவைத்திருக்கும் பரனே!

இவ்வண்ணம் அம்மாதானவள் தோத்திரம் செய்வதைக் கேட்டிருந்த சிவயோகியானவன் தானும அநதபடி திரிநேத்திரதாரியாகிய பரமசிவனைத் தோத்திரம் செய்து வந்தான. அல்லாமலும், அம்மாது முன்னிலையில் ஞானநூலகளை ஆராயசசிசெயதுகொண்டு வந்தான். அப்படியிருக்க ஒருதினம் அமமாது தனது ஞானகுருவைக காணும்பொருட்டு இச்சிவயோகியுடன் அவருடைய ஆசிரமத்துககுச்சென்று அவரைக்கண்டார்கள். அவர் சிவயோகியைப பார்தது, நீயாரென்றுவினவினர். அவன் அவருடைய திருவடிக்குத்திர்க்கதெண்டன் சமர்ப்பித்துத் தன்வரலாற்றைககூறி ஒசுவாமி! அடியேன்பிறவிசாகரத்தைக் கடக்கு மார்க்கத்தை யறியாது மூன்றுவேதாகம வரயைபைக் கடந்து பவநெறியை முக்கியமாகத் தொடர்ந்து தீவினையிற படர்ந்தலைந்து மயங்குகின்றேன். தேவரீா அனதத் திருவுளத்திறகொண்டு அடியேன்பேரில் கிருபைவைதது வேதாகம வாக்கியங்களால் ஞானலக்ஷணங்களைப் போதித்து, என் பாசபந்த உபாதியை நீக்கி அடியேன் சந்திரஜடாமண்டலதாரியாகிய சதாசிவத்தின் மௌனமந்திரத்தை உபதேசித்து அந்தக் கடவுளின் திருவடியாகிய மோக்ஷத்தை அடையும்படி செய்யுமையா பிரபுவே என்றான்.

ஓ ஆடவனே! ஞானபாஷையைத் தெரிந்துகொண்டு தந்நியனாகி ஞானோதயமடைந்து மோக்ஷமாகிய விண்ணாட்டினை யடையும் பொருட்டு வேதாந்த வாக்கியங்களால் அத்வைத வஸ்துவின் இலக்கணங்களை விவரித்து உரைக்கும்படி கேட்டுக் கொண்டாயல்லவா? அதைப்பற்றி நாம் சிலவற்றைக் கூறுகிறோம் கேள்.

பவநெறியை முக்கியமாகத் தொடராது மயங்கும் தீமையைத் தொலைக்கக் கூற்றினையுதைத்த ஐயனையும், நினைப்பவர்களின் பழைய வினைகளைத் தீர்ப்பவனையும், விலையில்லா மாணிக்கமாயும், பஞ்சகிருத்தியங்களை நடத்தும் சர்வேசுவரனையும், சகலவேதாகம ஸ்வரூபனையும் விளங்கும் தில்லைநாயகனுடைய பாதாம்புஜத்தை யடையவிரும்பும் அறிவுடையோர்கள் குணசாந்தராயும், வேதவேதாந்தமான உபநிடத முதலாகிய வேதாகமங்களை நன்காராய்ந்துணர்ந்தவர்களாயும், சாத்துவிசம்—இராசதம்—தாமசம் என்னும் இம்மூன்று குணங்களையுங் கெடுத்தவர்களாயும், சிவாலய திருப்பணி திருஉற்சவமுதலிய பதிபுண்ணிய தருமத்தைச் செய்பவர்களாயும், சித்தசுத்தி யுண்டாவதற்குச் சாதன சதுஷ்டய நிஷ்காமிய கர்மத்தைச் செய்பவர்களாயும், பெரியோர்களுக்கு உதவி செய்பவர்களாயும், பதிபசுபாச லக்ஷணங்களை இன்னதென்று அறிந்தவர்களாயும், இது தர்மம் இது அதர்மம் என்று தெரிந்துகொண்டு சகல காரியங்களை நடத்துபவர்களாயும், நன்மையுந் தீமையும், சுகமும் துக்கமும், இன்பமுந் துன்பமும், வாழ்வுந் தாழ்வும், வறுமையுஞ் செல்வமும், பெருமையுஞ் சிறுமையும், சமமென்று பாராட்டி, எல்லாமரன் செயலென்று சிவத்தியானத்தைக் கைவிடாமல் அநுஷ்டித்து வருபவர்களாயும், மாயாப்பிரபஞ்ச மயக்கத்தை யறுப்பவர்களாயும், மனதை விஷயங்களில் செல்லாமல் நிறுத்தி சலிக்காமல் சிவபிரானைத் தியானித்து வருபவர்களுமாகிய புண்ணியவான்களா யிருப்பவர்கள் யாரோ அவர்கள் தாம் மெய்ஞ்ஞானியராவார்கள் என்று அறிக.

அப்படிக்குச் செய்யாமல், ஆசாபாசத்தி லகப்பட்டுக் கெட்டலையுங் கருமிகளாயிருக்கும் பேதைகள் சந்திரனைத் திருமுடியி லணிந்தருளும் சிவபிரானாகிய நடேசமூர்த்தியை யொருபோதும் நினையாமல், ஆகாரம்—நித்திரை—மைதுனங்களை மாத்திரஞ் செய்துகொண்

டும், மரணம் நிச்சயமென்பதை நினையாமலும், எல்லாரும் தங்களைச் செல்வந்தர்களென்றும்பிரபுக்களென்றும்நினைக்கும்படி ஆசைகொண்டும்,மனை-வீடு-தோட்டம்-தூரவு-ஆபரணங்கள்-ஆடைகள்-போதுமான திரவியங்கள் இவைகளை ஆர்ச்சித்து, குடும்பங்களைக் காப்பாற்றி, அந்தத் திரவியங்களைக் குடும்பத்தில் நடக்கும் கலியாண காரியங்களிலும்,மற்றவிஷயங்களிலும் செலவுசெய்து, மீதிபணத்தைத்திருடர்கள் கொள்ளையடிக்கக் கொடுத்தும், அதுபோக மீதி யேதாவதிருந்தால அதைககெட்ட வழியிலும் உபயோகப்படுத்துவார்கள். இவர்கள் கர்மங்களைப் பலாபேக்ஷையுடன் செய்து பிறப்பிறப்புள்ள வழியாக நடப்பதற்குப பிரயத்தினபபட்டு இந்தத தேகமழிந்த பின்பு இழிவான நிலையை யடைவார்கள். இப்படியாகப் பசுககளாகிய நரர்கள் தாங்கள் செய்யுங்காரியங்களானவை தங்களைப பாபிகளாக்கிவிடுமென்பதையும, இவர்கள் இவ்வுலகத்தில் பாவஞ்செய்வதைப் பார்க்கிலும் வேறே சிரேஷ்டமான திருக்கிறதென்பதையும் அறியார்கள்.

ஓ அன்பனே! நீ என்ன ஞானநூல்களைக கற்றுமென்று நாம வினவியதற்கு வயிராககியசதக முதலியவற்றை என்தகப்பனார எனககுக் கற்பித்ததாகக் கூறினாய்; நீ புத்தகத்தைப படித்து அதன் சபதார்த்தத்தைப்படித்தவனாய்க்காண்கிறதேயல்லது,அதன்அன்வயத்திலடங்கிய மெய்பபொருளை யடையும்பொருட்டு சாஸ்திரங்கள் முறையிடுகின்றபடிசிரவணமனனஞ்செயது தத்துவஙகளையுணர்ந்து, தன்னையறிந்துகொண்டு,ஞானானந்த சுகத்தையேநித்திய நிலையெனறுணர்ந்து அதைஅடையும்படிக்குமுயறசிசெய்தவனாய்க்காணப்படவில்லை.பணஅபேக்ஷையுடையவன்அதை அடையாமல் பணமபணமென்றுவெறுமையாக வாயினாற் சொல்லிக்கொண்டே யிருந்தால் அதிலென்பலன். புத்தகத்தை வாசித்து ஞானசாதகஞ்செய்துகொண்டுவந்தாலலலவோ அப்பொருளை அடையக்கூடும். அப்படியன்றிக் காக்கை கத்துவதுபோல் புத்தகங்களை வாசித்துக்கூச்சலிட்டு மெய்பபொருளினிலைமையின்னதென்றறியாமல் குதர்க்கஞ் செய்வதனால் என்ன பயனை அடையக்கூடும். பூமியிற் புதைத்திருக்கும புதையலை வெளிப்படுத்தவதானால் அப்பூமியைத் தோண்டியல்லவோ அபபொருளை அடை

யவேண்டும். அதைப்போல் உண்மைப்பொருளை அடையவிரும்புபவன் [ஞானாசாரியனை யடைந்து சாது சங்கப்பயிற்சி செய்து, சித்தசுத்தி யடைந்து, உபதேசக்கிரம சாதகத்தின் பயனாலல்லவோ அப்பொருளை அநுபவிக்கக் கூடும்.

நாம் மேற்கூறிய விஷயங்களை யார் கவனிப்பார்களென்றால், எவர்கள் வேதாகமவழியை அநுஷ்டித்து நற்கதியை யடையவேணுமென்பதாகச்சதாகாலமும் பர்வதராஜ புத்திரிக்கு நாயகனாகிய பரமசிவனைப்போற்றித் தொழுகிறார்களோ அப்படிப்பட்டவர்கள்தாம் கவனிப்பார்கள்.

எவர்கள் பொய்வாழ்வில் நடந்து இங்குமங்கும் இச்சைகொண்டலைந்து பாவங்களைச் செய்துமதங்கொண்டலைக்கு ஆளாகிறார்களோ அப்படிப்பட்டவர்கள் கவனியார்கள். அவர்களுக்கு ஆதிசேஷனும் சரஸ்வதியும் வந்துசொல்லிய போதிலுங் காது கொடுத்துக் கேளார்கள். இப்படியென்று அந்தப் பரமாசாரியார் சொல்லியபோது சிவயோகியானவன் அவரை வணங்கி அடியிற்கண்டபடி கேட்கலுற்றனன்.

ஐயா! யார் ஞானசாதகஞ்செய்ய முயல்கிறார்களோ அவர்கள் துவக்கத்தில் பதிபசுபாசத்தின் லக்ஷணங்களை இன்னவென்று தெரிந்துகொள்ள வேண்டுமென்று அருளிச்செய்தீர அதனிலக்கணம் யாது?

இப்படியாகப் பதிபசுபாசமென்னுந் திரிபதார்த்த லக்ஷணங்களை அறிவிக்கவேண்டுமென்று கேட்ட சிவயோகியின் நிலையை அந்த ஞானாசாரியார் உணர்ந்து, இவன் உலகநாட்டத்தை விடுத்து ஆத்மநெறி-பத்திநெறி - வேதநெறி ஆகிய இந்நெறிகளை அநுஷ்டிக்காதவனும், பசுக்களின் பாசங்களைக் கெடுக்கும் பரமசிவனிடத்து உண்மையான பக்தியில்லாதவனும், சிலபுத்தகங்களை மாத்திரம் வாசித்தவனுய்க் காலம் படுகிறதே யன்றி ஓர் குருவினிடம் இருந்து யாதொரு ஞான சாதகங்களைக்கைப்பற்றி அப்பியசித்துச் சித்தசுத்தி யடைந்தவனு யிருப்பதாகக் காணப்படாமையால் இன்னுஞ் சிலநாள் கழிந்தபிறகுதான் இவன் வினவிய வினாவிற்கும், மற்றும் இவன் தெரிந்துகொள்ள விரும்பும் விஷயங்களுக்கும் விடைதருவோமென் றெண்ணினவராய், அவனைத் தன்னிடத்திலேயே

சிலகாலம் வைத்திருந்து, ஆத்மானாத்ம விவேகத்தை விளைவிக்கும் ஞானநூல்களில் விசேஷமானதை ஆராய்ச்சி செய்வித்து, ஞானசாதகங்களை அநுஷ்டித்துவரும்படி செய்து, பிறகு அவன் கேட்டிருந்த கேள்விகளுக்கு விடைசொல்லத் தொடங்கினர்.

ஞானாசாரியர் சிவயோகியை நோக்கி, அன்பனே! நீ கேட்ட முப்பொருளில் முதற்பொருளாகிய பதியாவது எத்தன்மைத்தெனில், பதியாவது பசுவாகிய ஆன்மாவிற்கும், பாசமாகிய ஆணவாதி மும்மலங்களுக்கும், தத்துவக் குழாங்களுக்கும் மேலதாய், முக்குணங்களும் ஒரடையாளமு மில்லாததாய், மலரகிதமாய், எல்லாவற்றிற்கு முதலாய், பிரமானந்த சாக்ஷாத்கார ஸ்வயம்பிரகாச சைதன்ய பரமாத்மஸ்வருபமாய், நிராகாரமாய், நிர்விகாரமாய், சதானந்த சொரூபமாய், வெண்மையான பனிக்கட்டியைப்போல மிகவும் சுத்தமாய, அவித்தியா ஸ்வரூபமான எல்லாவற்றிற்கும் வேறானதாய், ஜெகஜ்ஜோதி ஸ்வரூபமாய், மங்களாகர பிரமமாய் இப்படிப்பட்ட தன்மையை யுடையதாயிருக்கும்.

சிவப்பிரகாசம்.

பலகலையா கமவேத மியாவையினுங் கருத்துப
  பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதான
நிலவுமரு வுருவன்றி குணங்குறிக ளின்றி
  நின்மலமா யேகமாய் நித்தமாகி
அலகிலுயிர்க் குணர்வாகி யசலமாகி
  யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாயத்
  திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்த நூலோர்.

இனி பசுவாவது எத்தன்மைத்தெனில், எண்ணிக்கை யிடுவதற்கு அளவுபடாததாய், அழியாததாய, ஆணவமலத்தாலே மறைப்புண்டு அந்தமலம் பக்குவமாவதற்குப் புண்ணியபாவங்களுக் கிடான வுடம்பைக் கர்த்தாவின் காருண்யத்தாலே பொருந்தி அஃறிணை உயர்திணைகளாய், அவ்வுடம்பினாலே புண்ணியபாவம் புரிந்து எண்ணிறந்த போகங்களைப் புசிக்கின்ற வழியாலே மீண்டும் புண்ணியபாவங்

களை ஆர்ச்சித்து இறக்கல் பிறக்கல்களையுடையதாய், அநாதியிலேயே தாமிரகாளிதம்போலப் பொருந்திய மலத்துக்குப் பக்குவம் வந்தவுடனே ஆசாரியனுடைய தீக்ஷா ஞானு நுக்கிரகத்தினாலே மலங்களைக் கழன்று கர்த்தாவின் திருவடியைப் பொருந்துமியல்புடையது.

௨௭ சிவப்பிரகாசம்.

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி லழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
யண்ணலரு ளானண்ணி யவையவரா யதனா
லெகினிகழ் போகங்க ளருந்துமா றருளாற்
புண்ணியபா வம்புரிந்து போகத்தா லுடைத்தாய
புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளா
லுண்ணிலவு பொளியதனா லிருளகற்றிப் பாதம்
முறுவிக்கும் பசுவர்க்க மெனவுரைப்ப ருணர்ந்தோர்.

பாசமாவது எந்தன்மைத்தென்றால், மாயாகாரியமாகிய பௌதிக தூலசரீரத்தை ஆதாரமாகக்கொண்டு, அஞ்ஞானத்தினாலேபிரபஞ்ச சம்பந்தமான பாபகாரியங்களைச் செய்விக்கும். அதனாலே சிவஞானத்திற் பின்னப்பட்டு ஆத்மசக்தியாய துக்கவியல்பாகிய போகத்தைச் சுகமென்று அநுபவித்துக்கொண்டு, ஜனனமரணசஞ்சாரப் பிரவிஷ்டனாய்ப் போகிறான். பிறவிக்குருடனை ஒருவர் கொடுக்கும் ஊன்றுகோல்பற்றி வழிநடக்கும் தன்மைபோல் பாசபந்தமானது ஜீவாத்மாவைக் காமவெகுளிமயக்கத்தின் வசத்தாய் நடத்திக்கொண்டுபோவதினாலே, ஜீவாத்துமா தான் இன்னதென்றும், தன்னுடைய சுபாவநிலைமை இன்னதென்றும், அறிந்துகொள்ள அசக்தனாய், சிறைச்சாலையிலடைபட்டிருக்கும் குற்றவாளியைப்போல ஜீவன் அஞ்ஞானச்சிறையிலடைபட்டு காலங்கழித்திறக்கிறான். பின்பு கர்மபலனுக்குத்தக்கபடி பலவிதயோனிகளிற் பிறந்து பிறந்து இறக்கிறான். ஜீவன் சரீரத்தினிடத்தில் உண்டாகிய அபிமானாதி பேதத்தாலதான் மேற்கண்டபடி தன்னைத் தெரிந்துகொள்ளக்கூடாதவனாயிருக்கிறான்.

வினா—ஐயா! ஜீவன் பரமாத்துமாவினுடைய அம்சத்தில் உண்டானவனென்று வேதங்கள் கூறுகின்றனவே. அப்படியானால், ஜீவன் பரமாத்துமாவைப்போல் அகண்டபூரணமாயிருக்க வேண்டியவனாயிற்றே அப்படியன்றி மோகத்திலழுந்திப் புருஷத்வரூபமா[illegible] பத்தில் தடுமாறுவானேன்?

விடை—தாயினிடமாயிருந்த குழந்தை தவறிப்போய்ச் சேற்றுக்குழியில்விழுந்து துக்கப்படுவதுபோல ஜீவாத்துமா தனதுநிலைகெட்டு பாசத்தாலேயே பந்தமான தேகத்துடன்கூடி, அதனாற் கட்டுப்பட்டு, மறைப்புண்டு, கேவலப்பட்டு, சரீரத்தினிடத்திலுண்டாகிய அபிமானோபாதியினாலே மனமுதலியவற்றைத் துணையாகக் கொண்டு போக போக்கியத்தி லழுந்தித் தடுமாறும்படி நேரிடுகிறதென்றறிக.

மேற்கூறப்பட்ட அம்சங்கள், பாசத்தின் துஷ்டகுணத்தினாலே ஜீவனுக்குண்டாகுந் துன்பத்தை உணர்த்தற்கு வெளிவாய்த் தெரியப்படுத்துமென்று நம்புகிறேன். இந்தப் பாசத்தினாலுண்டாகும் அஞ்ஞானமானது ஜீவனுக்குப் பசுத்துவமுண்டாக்கி அதனாலே, பலபோகத்துக்குள்ளாகிய பலவிதப்பிறப்புக்களில் துன்பப்படும்படிச் செய்யும்.

பதிபசுபாசவிளக்கம்

பாசமுறு பசுவாகிய பலபல பிறப்பிற் சென்று
பாசத்தாற் பிறந்திறந்து பலபல போகந் துய்த்துப்
பாசத்தைத் தாளாற் போக்கிய பதிசத்துவப் பதியா நாதன்
பாதத்தை நினையுந் தோறும் பசுத்துவங் கழலு மன்றே.

இப்படிப் பலபலவாகக் கூறியபின்பு ஞானாசாரியராகிய சிவயோகி அவனைப் பசுத்துவத்திற்குத் தப்பும்படி ஞானசாதகமாகியவுபதேசங்களைச் செய்து அவனைப் பரிபக்குவனாம்படிச் செய்தார்.

இவன் அந்த ஞானாசாரியரிடத்தில் அதிக அன்புடையவனாய் அவர் குறிப்பின் வழியே பணிவிடைகளைச் செய்து ஞானநடை வாய்ந்து ஒழுக்கந்தவறா திருந்தபடியால், அவனுக்கு அந்தப் பரமாசாரியர் மெய்ஞ்ஞானோபதேசஞ் செய்தனர். அதனாலே அவன் நற்கதிக்காளாகினன். ஞானத்தை யநுஷ்டித்தோர்கள் நன்மையையும், அஞ்ஞானத்தை யநுஷ்டித்தோர்கள் தீமையையும் அநுபவிப்பார்கள்,

ஞானநூலை அநுசரிக்காதவர்களும், சிவபத்தர்களாகிய மகான்களுக்குப் பொல்லாங்கு செய்பவர்களும் இயமதண்டனைக்காளாகி நரகவேதனையை யநுபவிப்பார்கள். இதற்குத் திருஷ்டாந்தம் பின் தொடர்ந்துவரு மிதிகாசத்திற் காணலாம்.

# ஞானவானுக்குத் தீமைபுரிந்த

## ஒரு பாதகன் கதை.

பூமியிடத்தில் தக்ஷிண திசையிலுள்ள பொதியமாமலைக்கு அருகிலேயுள்ள ஒருகிராமத்தில் வைத்தியலிங்கராசு என்னும் பேருடைய வைத்தியனொருவனிருந்தான். இவன் ஞானநூலை ஆராய்ச்சி செய்பவனும் சிவபக்தனுமாயிருந்தபடியால், சாவதாய் ஸ்ரீகண்டத்தையுடைய சிவபிரானையும், திரிபுரங்களை நகைத்தெரித்த இறைவனையும், வேதாகமங்களையுணர்ந்த மெய்ஞ்ஞானிகள் புகழ்ந்து பேசும் தில்லையிலெழுந்தருளிய நடேசப்பெருமானுமாகிய பரமேஸ்வரனை அடிபிற கண்டபடி வணங்கிப் புகழ்ந்து தோத்திரஞ்செய்து கொண்டிருப்பான். இளஞ்சந்திரனையும் அறுகையும் கங்கையையும் பாம்பையும் சடாமுடியிலணிந்த சிவபெருமானே! ஓ ஐயனே! எப்பொழுதும் எவ்விடத்திலும் நன்மையாய் சத்தாய இருக்கின்ற தெய்வமே! மெய்ஞ்ஞான சொரூபம் வாய்ந்தபிரணவத்தினுள்ளொளியே! மனதைக்கலக்கும் சேற்கண்டைபோன்ற இரண்டு கண்களையுடைய பெண்களது வஞ்சமவாய்ந்த புணர்ச்சியை மெய்யென்று கருதி நடமாறு நாயேன் உன் திருவடியைப் பெறும்படியான மார்க்கத்தைநீ கிருபைசெய்யுமையா நடேசப்பெருமானே! அம்பலத்தரசே! ஆனந்தகூத்தனே! எவ்விடத்தும் தத்பதசொரூபமாகியும், மலரகிதமாகியும், பிரமமாகியும் பிரகாசிக்கின்ற நடேசப்பெருமானே! பரிபாகம்வாய்ந்த அடியார்களது இருதய கமலத்தினின்று நீங்காதவனுயும், என்னையும் ஒருபொருளாயெண்ணி அடிமை கொள்ளும்படி நான் கேட்பதற்கிரங்கியருளு மையனுமிராநின்ற சபாநாயகனே! ஆணவம்-மாயை-கன்மம் என்னும் மும்மலமாகிய இருளையோட்டுகின்ற ஞானசூரியனும்,எனது கண்மணியாயும் விளங்குமையனே! உபநிடத வாக்கியத்தின் உட்கிடைப்பொருளாயும், முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்தவிடத்து மேலிடுந்திருவருளாயும், முப்பாழுக்கப்பால் முதற்பாழும் பாழாகவும் விளங்கும் பராபரவஸ்துவே!

மாயாபிறவியாகிய கூரைவீட்டில் வாசமாயிருக்கும் பேய்களாகிய ஐம்புலத்திருட்டுப்பயல்கள் மருள்வடிவத்தைநானென்றுஅபிமானித்திருக்கும் ஜீவனாகிய என்னை ஆசையாகிய கயிற்றாலகட்டி, விஷயங்களாகிய உணவைத் தின்னும்படிச்செய்து, தீமையாகிய காரியங்களைச் செய்யச்செய்து, நரகப்பிராப்திக்கு ஆளாக்கவிடுவதாயிருப்பதால், உனது அருளாகிய மந்திரத்தால் எனது பேய்த்தன்மையாகிய பாபத்தைப்போக்கிக் கிருதார்த்தனாகச்செய்து, இனிப்பிறவித்துன்பம் அணுகாமல ஆண்டருளுமையா ஈசபெருமானே!

இவ்வண்ணம வைத்தியநாதன் எமது பகவானாகிய ஸ்ரீபரமேஸ்வரனை சதாகாலமும் தியானித்து, சற்சங்க சகவாசம் செய்துகொண்டு, தேகப்பிணியினால் தன்பால வந்தவர்கட்கு அரியமருந்துகள் கொடுத்து ஆதரித்துவருவான்.

இது இப்படியிருக்க, இந்த வைத்தியநாதன் அவிழ்தம் ஒன்று செய்யவேண்டியதற்காக சிலபச்சிலை வேண்டியிருந்தபடியால, ஒருமலையின் அருகாமையிலிருக்கும ஓர் பெருங்காட்டுக்குப் போனான். அப்படிப்போகும்போது துணைக்காகத் தடிமாடமுனியனென்னும் பேருடைய ஒருவனைககூடஅழைத்துக்கொண்டு காட்டுக்குப்போய்ச் சேர்ந்தபின் பச்சிலையைத் தேடிக்கொண்டு வைத்தியன ஒருதிக்கும், தடிமாடமுனியன் ஒருதிக்குமாய்ப் பிரிந்துபோய், பச்சிலையைத் தேடிக்கொண்டு வருகையில், ஒருமரத்தின புதரின்கீழ் தவஞ்செய்துகொண்டிருந்த ஒருபெரியவரை முனியன்கண்டான்.

அந்த முனியன் மாயாப்பிரபஞ்ச மயக்க வாழ்க்கையிலழுந்திப் பொல்லாங்குகளையே நாள்தோறும் செய்கின்ற தீமையையுடைய கீழ்மக்களின் சம்பந்தங் கொண்டவனாயிருந்தபடியால், அப்பெரியவரிடத்தில் ஏதாவது துணிமணி துட்டுதுக்காணியிருந்தால் அதைப்பிடுங்கிக் கொள்ளலாமென்று எண்ணி, அவரைக் கூப்பிட்டுப் பார்த்தும், அசைத்துப பார்த்தும, அவர் சிவஞானயோகநிஷ்டையிலிருந்தபடியால் அவர் பேசாதிருந்ததை நோக்கி, குடிகேடியினால் முனியன் அவரைக்கண்டபடி வைது அந்த மரத்

தின்பேரில் ஏறி ஒருபெரிய கிளையைவளைத்து அதில்தவசியினுடைய சடைகளைப் பிடித்துக்கட்டிக் கிளையைமேலே விட்டுவிட்டான். அது தபசியைமேலே தூக்கிக்கொண்டு போய்த் தொங்கலாடும்படிச்செய் தது. அப்போது அவரெதிரில் நின்றுகொண்டு நகைத்துக் கைதட்டி அடா கள்ளத்தபசியே! நீஎங்கள் கிராமத்துப்போக்கிரி சுப்பாரெட் டிக்குத் தமயியல்லவா? நீ மூன்று ஆண்டுகளுக்கு முன் சில திருடர் களைச் சேர்த்துக் கூட்டிக்கொண்டு என்மாமனார் வீட்டுக்குவந்து பொருள்களை யெல்லாங் கொள்ளை யடித்துக்கொண்டுபோய் விட்டா யல்லவா? உன்னைப்பிடிக்கப போலீசார் எங்கும் தேடிக்கொண்டி ருந்தார்கள். நீ அகப்படாததின் பேரில் உன்னைப்பிடிக்க உத்திரவு பிறந்திருக்கிறது. நீ இப்போது என்னிடத்தில் அகப்பட்டுக்கொ ண்டாய். உன்னை நான் விடப்போகிறதில்லை. உன்னைப்பிடித்துக் கொண்டுபோய் இராஜாங்கத்தில் ஒப்புவித்துப பதினைலுவருஷம்கடி ன காவலாகிய தண்டனையை அடையும்படிச் செய்விக்கிறேன். அல்லா மலும்,மெய்-வாய்-கண்-மூக்கு-செவியென்னும்ஐம் பொறிகளின் வழி யடைத்து மனதை ஏகாக்கிரசித்தமாக்கி நிலைநிறுத்திய ஞானவான் களென்கிற கள்ளபபேரை வைத்துக்கொண்டு பயிரங்கமாய்த் திரி ந்து உன்னுடன் கூடிக்கொள்ளையடிசகும் கள்ளர்களையும் பிடித் துக் கடினமான சிக்ஷை செயவிக்கிறேன் பாரென்று சபதம் கூறின துந்தவிர, தபசியைக் கண்டபடி இழிவான வார்த்தைகளால் ஏசி, கல்லாலும் கட்டியாலும் அடித்தான். அந்த உபத்திரவம்பொறுக்க மாட்டாமல் அவர் நிஷ்டை கலைந்து கண்ணைத்திறந்து பார்த்து அட! அடா! இவனோர் கொடும்பாவியா யிருக்கிறான், நம்முடைய தவத்துக்கு விக்கினஞ் செய்ததுந்தவிர மண்ணாங் கட்டிகளாலும் கல் முதலான வைகளாலும் அடித்துத் துன்பப்படுத்துகிறா னென்றெண்ணித் தமது பூர்வகன்ம சஞ்சிதத்தை நினைத்து வருத்தப்பட்டார். இஃதிப்படி யிருக்க, பச்சிலைக்காக மற்றோர் திக்குசென்ற வைத்தியன் முனிய னைத்தேடிக்கொண்டு அவ்வழியாக வருகையில் ஒரு தபசியானவர் பெரியமரத்தின் கிளையில் தொங்குவதையும் முனியன் கீழிருந்து அவர்பேரில் கல்லெறிந்து கொண்டிருப்பதையுங் கண்டு, கவலைகொ ண்டு அம்முனியனைப் பார்த்து, அடபாதகா! அடசண்டாளா! அநீதி யாயுள்ளமுப்மலங்களையும் அடியோடொழித்துச் சர்வசங்கபரித்தியா

கஞ்செய்து பிரபஞ்சத்திலுள்ள பாவனைகளை யொழித்து பாவனாதீதத்தில் நின்று, வேதங்களாலும் அளவிட்டுரைக்கப்படாத மெய்ப்பொருளை அபயமென்று சரணமடைகின்ற சீவர்களுக்கிரங்கி பயப்படாதேயென்று அவர்களுக்கு ஆநபசித்தாந்த வேதாந்த மார்க்கங்களைத் தெரிவித்துப் பின்பு உபநிடதங்களிற் கூறப்படுகின்ற சுத்தாத்துவிதமாகிய அசிபதமார்க்கத்தையே அநுக்கிரகஞ்செய்யும் அண்ணலாகிய நடேசபெருமானை நோக்கி நிர்விகற்ப நிஷ்டைசெய்து கொண்டிருக்கும் புண்ணிய சொரூபியாகிய ஞானவானுக்கு நீ இப்படிப்பட்ட தீங்குசெய்யலாமா? இந்தப்பாதகம் எங்கேபோனாலும் ஒழியாதே. கோடிகாலம் நரகத்திலே விழுந்து கிடந்தாலும் தீராதே யென்று சொல்லி, தானே அந்தமரத்தின் மேலேறிக் கிளையைவளைத்து, தவசியின் சடையை அவிழ்த்துவிட்டு, அவரைச் சரணமடைந்து, அவர் திருவடிகளில் தனதுமுடிகள் பொருந்த வணங்கி எழுந்திருந்தான். அப்போது அந்தப்பெரியவர் வைத்தியநாதன் செய்த நற்செய்கைக்குச் சந்தோஷமும், முனியன் செய்த தீச்செய்கைக்கு வருத்தமுங்கொண்டனர். வைத்தியநாதனானவன் அம்மகானை மறுபடியும் வணங்கி, ஐயனே! சுகர்-வேதவியாசர்-பராசரர்-கௌதமர்-நாரதர்-அகஸ்தியர்-காசிபர்-புசுண்டர்-வசிஷ்டர்-விஸ்வாமித்திரர் இவர்களுக்குச் சமானமான தேவரீரை அடியேன் கண்டு தெரிசிக்கும்படி நேரிட்ட பாக்கியத்துக்காக நான் பூர்வத்தில் என்னதவஞ் செய்திருந்தேனோ வென்று, பலவாறாகப் போற்றிப் புகழ்ந்து துதித்ததுந்தவிர, ஓ சுவாமி! அடியேன் ஆசையின் பாசத்தினாற் கட்டுண்டு, சம்சாரத்திலுண்டாகும் போகதடியால் மொத்துண்டு, தாபத்திரயங்களாகிய ஈ எறும்பு கொசுகு மோட்டுப்பூச்சி ஆகிய இவைகளால் கடியுண்டு, துன்பமென்னும் பெருஞ்சுமையைச் சுமந்துகொண்டு, ஜனனமரணமென்னும் பெருங்குழியில் அடிக்கடிவிழுந்து துன்பப்படும் அடியேன் இந்தச்சரீரத்துடனே பிறப்பறு மோக்ஷானந்தத்தைப் பெறும்படி அநுக்கிரகஞ் செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான்.

இவன் களங்கமில்லாத முத்திவீட்டையுடைய உயர்வாகிய சாதன சதுஷ்டயமடைந்து, பூரணபக்குவமாகும் பொருட்டு, ஞானோபதே

சம்பெற்றுக்கொள்ள அருகனாக்குவதற்காக அவனைச் சிலகாலம் தமது சந்நிதானத்தி லிருக்கும்படி செய்தருளிப் பாவ தியான யோகங்களினால் அவன் சித்தத்தை நிர்மலம்பண்ணிப் பரிபாகப்படுத்தி அத்தியாரோப அபவாத யுக்திகளையும், அத்துவாவிருத்தி லக்ஷணம் தடத்தலக்ஷணம் சொரூபலக்ஷணம் ஆகிய லக்ஷணத்திரயங்களையும், கிரமமாக அவனுக்கெடுத்துப் போதித்துத் தேகாதியனாத்ம புத்திகளை நிவர்த்திப்பித்து, சரீரமும் இந்திரியமும் அந்தக்கரணமும் ஜீவனுமாக மாறுகின்ற மருள்மயமாகிய வடிவத்தை யடியோடு கழித்து, ஆத்மபோதமின்னதென் றறியச்செய்து, பதிஞானமவாயந் திரைபுறத்துக்கு சஞ்சிதகன்மமெல்லா மறும்படி ஆமைபோல திருவுள்ளத்தில் சிந்தித்து, ஆகாமிய கன்மமெல்லாம் நீங்கும்படி மீனைப்போல கிருபாதிருஷ்டிவைத்து பிராரத்தகன்மம் போம்படி பறவைபோல் அஸ்தமஸ்தக சையோகம் செய்து, பிரணவோச்சாரண மகாவாக்கியார்த்தத்தை அவனுக்கு உபதேசஞ்செய்தருளினர். இவ்வண்ணம் உபதேசித்த ஞானவானாகிய ஆசாரியரை வைத்தியநாத னடிபணிந்து தோத்திரஞ்செய்தனன்.

## திருவாசகம்.

பாசவேரறுக்கும் பழம்பொருடன்னைப் பற்றுமா றடியனேற் கருளிப், பூசனையுகந்தென் சிந்தையுட் புகுந்து பூங்கழல் காட்டிய பொருளே, தேசுடைவிளக்கே செழுஞ்சுடர் மூர்த்தி செல்வமே சிவபெருமானே, யீசனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தே னெங்கெழுந் தருளுவ தினியே.

என்று தோத்திரஞ் செய்ததற்கு ஆசாரியரானவர் மனநெகிழ்ந்து பிரணவ நிலையிலிருந்து, அன்னமும், பாலும், சருக்கரையும், கற்கண்டும், முப்பழவகைகளும், தேனும் ஆகிய இவைகளை ஒன்றுபடக்கலந்த சுவையிலும் அதிக சுவையாயிருப்பதாகிய பிரணவாகாரப்பொருளின் அருளமுர்தத்தைப் புசிப்பித்து அருண்மய மேனியாக்கி, அந்த நிலையிலாகிய பரமுத்தியில் சித்துக்கங்கமாகிய நிலையில் மன்னுவித்து, சாமவேத மகாவாக்கியத்தின் கண்ணுள்ள அசிபதப் பொருளையும் விளக்குவித்து, இதுவே சுத்தாத்துவித உண்மையென் றருளிச்செய்தனர்.

இது இப்படியிருக்க தீயகருமங்களைச்செய்துபாபங்களைச்சுமந்
துகொண்டு சுகதுக்கவிருத்தி ரூபமான மனமாகிய குரங்கைக் கரும
மாகிய கயிற்றால் கட்டிப்பிடித்துக்கொண்டுதிரிந்துகாலத்தைப்போக்
கும் பாதகனாகிய முனியன்மேரில் அந்தப்பெரியவர் கொண்டகோ
பமானது அவனுக்குக்குஷ்டவியாதியாகமூண்டு அதனாலவன் படாத
கஷ்டங்களெல்லாம்பட்டு சிலநாளில் அதிக துன்பங்களெல்லா மநுப
வித்து ஒரு மரத்தில கயிற்றைக்கட்டி அதைத் தன்கழுத்தில் மாட்
டிக்கொண்டுதொங்கி உயிரைவிட்டதில, அவனுயிர் அநேகநாள் பிசா
சத்வமடைந்து கடைசியாக நரகவேதனையையடைய எமலோகம
போய்ச்சேர்ந்தது.

இன்னும இதேமாதிரியாக ஒர மகானுபாவனுக்குத் தீமைவிளை
த்த ஒர்பாதகன் கதையை இதற்குப பின்பு கூறப்படும.



# ஞானவானுக்குத் தீமைபுரிந்த

## ஒரு மகம்மதியன் கதை.



சீகாழியென்னும நகரில் வசிப்பவனாகிய காதாமோதீன் சாயப்
என்னும பேருடைய மகம்மதியனொருவனிருந்தான். அவன் சொந்த
அலுவலாய் சிதம்பரம் போகும்படி நேரிட்டதில நூறுரூபாய்முடிப
பொன்றைஎடுத்துக்கொண்டுகுதிரையின்மேலேறிவருகையிலவெய்யி
லினால் களைத்துப் பாட்டைக்கு அருகிலிருக்கும ஒருதோப்பிலிறங்
கி ஒருமரத்தினடியில் உட்கார்ந்தான். அப்போது அவனுக்குண்டா
யிருந்த ஆயாசத்தால் நித்திரைமயக்கம மேறகொண்டது. படுத்து
நித்திரைசெய்கிறதானால் பணத்தை யாராகிலும களவுசெய்து
கொண்டுபோய்விடுவார்களென்பதாக எண்ணி அந்த மரத்தினடியில்
ஒருசிறியகுழிதோண்டி அதிலந்தப்பணமுடிப்பைவைத்து அதுஒருவ
ருக்கும் தென்படாம லிருக்கும்படி மேலே மண்ணைப்போட்டு மூடி
மறைத்துப் பின்பு படுத்து நித்திரைபோய விட்டான். நித்திரையினி

ருந்து விழித்துக்கொண்டபோது பணத்தின ஞாபகமில்லாமலே குதிரையின்மேலேறிக்கொண்டு போய்விட்டான். அவன் சிலதூரம் போனபின்பாசவசத்தனாகிய அவிவேகியானபாட்டைசாரியொருவன் அந்தமரத்தினடியிலவந்து உட்கார்ந்தான். அவன் தனக்குச்சமீபத்தில ஒருகுழி தோண்டப்பட்டுப் புதுமண் மூடியிருப்பதைக்கண்டு அதைத்தோண்டிப் பார்த்ததில அதில பணமுடிப்பு ஒன்று இருந்ததைக்கண்டு களிப்புற்று, அதையெடுத்துக கொண்டுபோய்விட்டான். அவன் போனவுடனே அத்துவிதவுண்மையென்னு நூலின் அனுபூதியில வல்லமையுடைய பெரியவராகியும், எங்கெங்கேமனது நாடுன்று வருமோ அங்கங்கே அப்போதைக்கப்போது அதைத் தடுத்து பரிசுத்தமாகிய பஞ்சகிருத்தியங்களை நடத்திவரும் பார்வதி பாகனாகிய பரமசிவன் திருவடியில செலுத்தும் அப்பியாசத்தையு டையவராகியு மிருந்த ஒருவயோதிகர் திருவெண்ணீறணிந்து, அக்க மாலைசூடி, கந்தைக்கோவணமுடுத்தி, கையில்கமண்டலம்-தண்டு-பிட்சாபாத்திரம் - தாங்கினவராய், பணமிருந்து எடுக்கப்பட்டுப் போன இடத்திற்குச் சமீபத்திலவந்து உட்கார்ந்துகொண்டு வாக்கு மனாதீதமாகிய சிவபெருமானுக்கு உரிய திருப்பெயராகிய ஸ்ரீபஞ்சா க்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு ஆணவமலத்தைப்போக்கி எனனை அடிமைகொள்ளுடையாயென்றும இன்னும பலவாகப் போற்றித் தொழுதுகொண் டிருந்தார்.

இதுஇப்படியிருக்க, போனதுலுக்கன் தொலைதூரம்போனபின்பு தன்மடியைப் பார்த்ததில் பணமில்லாதிருப்பதைக்கண்டு மறதியால் பணத்தையெடாமல் வந்துவிட்டதாக அறிந்து பணம்வைத்த இடத் துக்குத் திரும்பிவந்து குழியைத்தோண்டிப்பார்க்க அதில்பணமில் லாதிருப்பதையும அதனருகாமை ஒருவயோதிகர் உட்கார்ந்திருப் பதையுங்கண்டு, இவர்தான் பணத்தையெடுத்திருப்பாரென்று துலுக் கன் உத்தேசித்து, அவரைநோக்கி, அடாசந்நியாசியே! இதோ இருக்குங்குழியில் புதைத்துவைத்திருந்த பணமெங்கேயடாவென்று மிகுந்தகோபத்துடன் கேட்டான். வயோதிகர் ஐயா சாயப்பே! பணத்தை நான் பார்த்ததுமில்லை; எடுத்ததுமில்லை யென்றார். அதன் பேரில் துலுக்கன் கோபித்து, பெரியவரை ஒரு [illegible]

டன் சேர்த்துப் பின்கட்டாய்க்கட்டி, குதிரைச் சவுக்கால் உதிரம் ஒழுகும்படி அடித்து, கடுஞ் சொற்களால் வைது, பின்பு ஓர் மரத்தினடியிலேபோய் உட்காரந் திருந்தான். சிவவேடம்பூண்ட பெரியவர் அடிபொறுக்காமல் நடேசப் பெருமானை ஸ்மரித்துத் தோத்திரம்செய்ய ஆரம்பித்தார்.

சாமவேதகீதப்பிரியனே! சர்வகாருணியனாகிய அய்யனே! என்விழிமணியே! பிரகிருதிமுதலை முப்பத்தாறென்று சொல்லப்படும் தத்துவங்களின் ஈற்றினின்ற தத்துவத்தினுச்சியில் ஞானநடனஞ் செய்கின்ற சபாநாயகனே! ஆதிநாதனே! நிரவயவஸ்வரூபியாயிருக்கிற வஸ்துவே! சகலவேதாகமஸ்வரூபனாகிய சிவபிரானே! ஹிமாத்கிரியினுடைய குமாரத்தியான மங்கையின்பங்கனாகிய சிவபெருமானே! இடபவாகனத்தையுடையஇறைவனே! அடியாரிதயகமலத்தின்கண் பொருந்தியிருக்கும் தேன்பெருக்கே! கருணையே! பாதகனாகிய வெள்ளைமூஞ்சித்தாடி முரட்டுத்துலுக்கன் என்னைப்படுத்தும் துன்பத்தை என்னால் சகிக்ககூடவில்லையே! இதென்ன இப்படியாக நேரிட்டதே: ஐயனே! விண்ணுலகிலுள்ள செல்வம்போல மிக்கசெல்வம்பொருந்திய தில்லையிலெழுந்தருளியிருக்கும் பெருமைபொருந்திய சபாநாயகனே! திருமால் மருகனாகியும் உமது இளையபுத்திரனுமாகிய முருகக்கடவுள் நடத்திய அற்புதச்செய்கைகளைக்கண்டு மகிழ்ச்சியடைந்த அய்யனே!

அனந்தமூர்த்தியுமாயும், இன்னுமனேக வடிவங்களாயும், ஆனந்தசமுத்திரத்தி லுதயஞ்செய்து அடியார்களின் பவவிருளையோட்டும்படி அருளென்னுங் கிரணங்களைப் பொழியும் ஞானசூரியனாயும், எப்போதும மாறுதலின்றி விளங்கும் பராபர வஸ்துவுமாகிய நடேசப்பெருமானே! மெய்ஞ்ஞானிகளுக்கு அளவுபடாத இன்பத்தைப பெருகச்செயயும் ஆனந்தவாரியே! தற்போதமிழந்தவர்கள் துதிக்கும் ஞானக்கடலே! தாய் தன்னையடைந்த தன்புதல்வனைத தள்ளாது காப்பாற்றுவதுபோல தேவரீரையடைந்து உனகருத்தொண்டனாயிருக்கமுயற்சிசெய்யும் அடியேனாகிய என்னை இந்தச்சண்டாளனாகிய துலுக்கனுடையசித்திரவே

கனையிலிருந்து நீக்கிக்காத்தருளுமையா நடேசப்பெருமானே! சரீரமும், இந்திரியமும, அந்தக்கரணமும், சீவனுமாக மாறுபடுகின்ற மருள்மயமாகிய வடிவத்தை அடியோடுகழித்துக் காத்தருளுமையா சிவபிரானே! ஒருநாயை வளர்த்தோன் அதனைக்கைவிடாததுபோல அடியேன் உன்னிடத்தில் உண்மையான பக்தியில்லாதவனு யிருந்தாலும், என்னைக்கைவிடாது உன்தொண்டனாக்கி ஆட்கொள்ளுமையா நடேசனே! வேதங்களினாலும், பிரமாணங்களினாலும் அளவிடுதற்கரிதாகிய புலியூராகிய அம்பலத்தின்கண் என்றும் ஆனந்தவடிவாய் நடனஞ்செய்கின்ற மாமணியாகிய நடேசப்பெருமானே! அடியேன் உனக்குமெய்யன்பனாயிராமலிருப்பதால் பிரஷ்டனாகியதுலுக்கன்கையில அகப்பட்டுக்கொண்டு இஞ்சிதின்ற குரங்குபோல பசபசவென்று விழித்துக்கொண் டிருக்கிறேன். இவ்விதமாகிய துன்பத்தையடைய பூர்வ ஜன்மத்தில என்னபாபம் பண்ணினேனோ தெரியவில்லை. தேகம இருக்கிறவரைக்கும் அதுசிவபெருமானாகிய உனது கைங்கரியத்துக்கு விநியோகமாகும்படி அதையான் ஆதரித்துவருவதா யிருக்க, அதைப்பிரஷ்டனாகிய துலுக்கனடித்து இம்சைபடுத்துவது நியாயமா? அய்யனே! என் தெய்வமே! இதனால் அடியேன் உனக்கு மெய்யன்ப னல்லவென்று ஏற்படுகின்றதே. "தாயினுநல்ல சங்கரனுக்கன்ப, ராயவுள்ளத் தழுதருந்தப்பெறா, பேயர்பேய்முலை யுண்டுயிர்போக்கிய, மாயன்மாயத்துட் பட்டமனத்தரே". என்று திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தில் கூறியிருக்கும்பாசுரம் அடியேனுக்கு உபயோகப்பட்டதாயிருப்பதால் அடியேனுக்குஇப்படிப்பட்டதுன்பமநேரிட்டதென்பதாய் நினைக்கிறேன். நாயிற்கடைப்பட்ட பேதையாகிய அடியேனை இகழாது காத்து அடிமைகொள்ளுமையா ஞானபூபதியே! தேவர்களும் முனிவர்களும் உலகினர்களும் வணங்குந் திருவடியையுடைய கருணாநாயகனே! பரிபூரணசுகமே! தில்லையிலெழுந்தருளிய இறைவனே!

இப்படியாக சுயஞ்சைதன்னியமாகிய பரமாத்துமாவை பெரியவர் தியானித்துக்கொண்டிருக்கையில், அதைக்கேட்டுக்கொண்டிருந்த சண்டாளனாகிய துலுக்கன் எழுந்து ஓடிவந்து மறுபடிஅவரை

உதாசினமாகிய பழிப்புவார்த்தைகளால் வைது குதிரைச்சவுக்கா லடித்தான். அந்தஅடி அவர்பொறுக்காமல் உரத்தகூச்சலிடத் தொடங்கினார். அத்தருவாயில் அநதமார்க்கமாய்ப் போய்க்கொண்டிருந்த அடுத்தகிராம அதிகாரி அசகூச்சலைக்கேட்டு அந்தத்தோப்புக்கு வந்து பார்க்கையில பெரியவரைமரத்துடன் சேர்த்துக்கட்டியிருபபதையும்,அவரைத்துலுக்கன சவுக்காலடிப்பதையும கண்டு, அவரைக கட்டியிருந்தகட்டை அவிழ்த்துவிட்டு, நடந்த வர்த்தமானத்தைக்கேட்டு, பெரியவர் நிர்த்தோஷியென்று அறிந்து, அஞ்ஞானமாகிய இருளை அடைந்திருக்கின்ற மனமும், சிங்ககதை யொப்பான பார்வையும், இராட்சசவிருத்தியை யுடையதாகிய அதிக உணவும், இக்குணங்களிற் பிரதிபிம்பித்த கடுங்கோபமும் ஆகிய இத்துற்குணங்களையுடைய துலுக்கன்பெரியவரைசெய்த தீங்கைக்கேட்டு விசனமுங்கோபமுங்கொண்டு,அதிகாரி துலுக்கனைபபிடித்துத்தொழுககட்டையிற்போட்டு, தன் இருப்பிடத்துக்கு அழைத்துக்கொண்டு போய்தண்டனைசெயதான். பிறகு அததுலுககனுக்குச் சிலநாள்பொறுத்துப் பாரிசவாய்வுகண்டு வாய்கோணி கால்கைவிழுத்துக்கொண்டமையால் உபாதிபொறுக்காமல இறந்தான். இவன் இறந்தபின் பெரியவரைச்செய்ததீய செயலுக்காக எமதண்டனையாகியவாதனைக்கு ஆளானான்.

இது இபபடியிருக்க பெரியவர் அந்தத்தோப்பைவிட்டு வெளிப்பட்டுபபோய் வேறொருஸ்தானத்தில் தங்கிஇருந்தார். அப்படியாக இருக்கும்போது ஒருதினம் அவரிடத்துக்கு வேதப்பொருளினுறைந்து மறைந்திருக்கும் மகத்துவங்களையும, தருமமுதலிய நீதிகளெல்லாவற்றையும் குறைவில்லாமல் நிறைவாக அறிந்துணர்ந்த முனிவரொருவர் கையில் ஒருஏட்டுப்புத்தகத்துடன் மேற்படிபெரியவரிடத்துக்கு வந்தார். அவரைப் பெரியவர்நோக்கி, தத்துவக்கியானமுள்ள முனிவரே! மகானுபாவரே! தேவரீரெங்கேயிருப்பது? கையிலிருக்கும்புத்தகம் என்னவிஷயததைப்பற்றிப் பேசுகின்றது? இங்கேவருவதற்குக் காரணம்யாது? என்றுவினவினர். அதற்குமுனிவர் கூறியதாவது, நாமிருப்பது பாண்டியதேசம் ஸ்ரீசிதமபரத்தில் பொற்சபையில் திருநடனஞ்செய்கின்ற பிநாகபாணியாகிய நடேசரைக்கண்டு

தெரிசனஞ்செய்துவிட்டு காசிப்பதிக்கு இந்தமார்க்கமாய்ப் போகிறோம். தொலைதூரம் நடந்துவந்ததில் ஆயாசங்கொண்டிருப்பதால் மிகவும் குளிர்ச்சியாயிருக்கும் இந்தத்தோப்பில்படுத்து இளைப்பாறிப்போகலாமென்பதாக இங்கே வந்தோமென்று கூறினார். நம்முடைய கையிலிருக்கும் புத்தகத்தின்பெயர் ஞானானந்த அமிர்தமென்று சொல்லப்படும். அது எதைப்பற்றிப் பேசுகிறதென்றால் எந்த வஸ்துவானது பஞ்சபூதமாயும், பிராணமயகோசம் - அன்னமயகோசம் - மனோமயகோசம் ஆனந்தமயகோசம் என்னும் பஞ்சகோசங்களாயும், ஞானேந்திரியங்களாயும், கர்மேந்திரியங்களாயும், அறிவாயும், அவ்வறிவுக் கறிவாயும், எங்கும் நிறைந்து இருக்கின்ற காத்தவ்யமாகிய சாக்ஷியாயும், ஞானஞ்ஞானமாயும், விஞ்ஞானபதமாயும், பாபவிநாச னாகிய பரமபத நாதனாயும், நான்கு வேதத்தின் முடிவில் விளங்கும் பரமகருணாநிதியாயும், பலபுவனமும் சகலசராசரமும் அண்டாண்ட பிரம்மாண்டசொரூபமாயும், மும்மூர்த்திகளாயும், பலபல பேதாபேதமான சில்லரைத்தெய்வங்களாயும், முப்பத்து முக்கோடிதேவர்களாயும், தும்புருநாரதாதி நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளாயும், ஏகாதசருத்திரர்களாயும், துவாதசாதித்தர்களாயும், அஷ்டவசுக்களாயும், திக்குப்பாலர்களாயும், சப்தசமுத்திரங்களாயும், சக்ரவாளகிரியாயும், மகமேருமுதலிய குலாசலங்களாயும், கைலாயம்-பரமபதம்—சத்தியலோகம் ஆகிய பதங்களாயும், மூன்று கோடியறுபதினாயிரம் புண்ணிய தீர்த்தங்களாயும், அநேகங்கோடி பர்வதங்களாயும், விளங்குகின்றதோ அந்தப் பரமாத்துமாவின் லக்ஷணத்தைப்பற்றிப் பேசுகின்றது.

வினா —ஐயா முனீஸ்வரரே! உம்முடைய கையிலிருக்கும் புஸ்தகம் மேற்கூறிய விஷயத்தைத்தவிர வேறே எவ்விதமாகவாவது பரமாத்துமாவைப்பற்றிப் பேசுவதுண்டா?

விடை —ஆம் பேசுவதுண்டு; அதுயாதெனில், பிரஞ்ஞான பிரமமென்று இருக்குவேத மகாவாக்கியங்கூறுகின்ற பரமாத்துமாவாகிய பிரமமானது சலக்ஷணமாகவும் விலக்ஷணமாகவும் விளங்கப்படு

இன்றதென்பதையும், கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற ஜீவனுக்கும் சர்வக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற ஈஸ்வரனுக்கும் உண்டாகும ஐக்கியம் இன்னதென்பதையும், ஆன்மதத்துவமுதலிய பாசமானகருவிகள்முற்றும சடமென்பதையும, பசுஞானமும் பாசஞானமுமாகிய இவ்விரண்டுங் கழன்றப்பாறபட்டஇடத்தில்பதியொன்றுமே காணப்படும் பொருளென்றும், மாயாமோகத்தால் காணப்படுகிற ஸ்தூல சூட்சும பிரபஞ்சத்தில் வினைவசத்தால் அஞ்ஞான போகங்களை அநுபவிக்கும்ஜீவர்கள் ஜீவன் முத்திநிலையையடையு மார்க்கத்தையும எடுத்துரைக்கும்.

வினா.—ஐயா! பசுவாகிய ஜீவனுக்கு அஞ்ஞானத்தன்மை எப்படியுண்டாயிற்று? அந்த அஞ்ஞானத்துக்கு வடிவமுண்டா?

விடை.—அஞ்ஞானத்திற்கு இயல்பான வடிவம் கிடையாது. ஆனால் அதற்கு விஷயங்களின் சையோகமே பிரதியக்ஷத் தோற்றமென்றுசொல்லப்படும். எந்தநரன் தானல்லாத உடமபை நானென்றும், தன்னோடு உரிமையல்லாதவைவாய் சூழ்வு பொருந்திய எல்லாப்பொருளையுமனதென்று ஜீவிக்கிறானோ அப்படிப்பட்டவன் அம்மாயையின் காரியமான அஞ்ஞானத்தினுடையமயக்கமாகியகால சக்கரத்தி லகப்பட்டுக்கொண்டு சங்கற்ப விகற்பத்தினால் வருகின்ற ஆசையாகிய விடயங்களிற் சுழன்று அதனால் துயரப்படுவான். ஒருவனைப்பார்த்து அடா ராமா ஏண்டா கொலை செய்தாயென்று கேட்டால் தெரியாமையாற் செய்தேனென்கிறான். தெரியாமை என்பதே அஞ்ஞானமாகும் தனதெதார்த்த சொரூபத்தைச் சிதாபாசனாகிய ஜீவனென்று மாறுகத் தானறிவது அஞ்ஞானமாகும். தற்பதத்தைப் பிரமமென்று திடமாய்த் தானறிவதே ஞானமாகும். அப்போது முற்பவத் தொடர்பாகிய விஷயமும், பிரகிருதி உறவும, ஜகத்பந்தத்தினாலுண்டாகும் வாசனையும், அடியோடு ஒழிந்துபோம. சிதாபாசனுடைய பசுகரணங்களாகிய குரங்குகள் எதுவரையில் தூர்க்குணம் பொருந்திய மோகாந்த காரமான பிரபஞ்சமாகிய வனத்தில்உலாவிக்கொண்டு விஷயமாகிய கனிகளைப் பறித்துத் தின்றுகொண்டுதிரிகின்றனவோ அதுவரையில்அஞ்ஞானம்ஜீவனைவிட்டுநீங்காது.உலகத்தில்

வேதாந்த சாஸ்திராப் பியாசம்பண்ணி அக்கியான கேவலத்தினின்று நீங்கி விஞ்ஞான மென்னும் பாட்டையை யடைந்து சனன மரண துக்கத்தைத் தொலைக்காமலும், தத்துவங்களின் தோற்றம்-திதி-ஒடுக்கம் இவற்றின்பாகுபாடுகளை அறியாமலும், நித்தியாநித்திய வஸ்து விவேகம் - இகமுத்திரார்த்த பலபோக விராகம - சமாதிசட்கசம்பத்து—முமூக்ஷுத்துவம - இவைகளி னிலட்சணத்தை ஆராயாமலும், பரமாத்துமாவாகிய சுத்தப்பிரமத்தை சிரவணமனனஞ்செய்து நிதித்யாசனிக்காமலும், ஞானமென்பதை இன்னதென்று தெரிந்துகொள்ளாமலும், சில பசுநூல்களைக்கற்றுக்கொண்டு சிவநேசர்களைத் தூஷித்து ஒருவருக் கொருவர் சண்டை யுண்டாக்கி வேடிக்கை பார்த்துக்கொண்டு களிப்புக் கொள்ளுபவர்களுமாயிருக்கின்றமூடர்களை அஞ்ஞானமாகியபேய் ஜன்ம ஜன்மங்களாய் இழுத்துக்கொண்டு போய்த் துக்கங்களை அனுபவிக்கச்செய்து பாபிகளாக்கிக் கடைசியாய் நரககுழிக்குப் போய்ச்சேர ஆளாக்கிவிடும்.

வினா.—ஐயா முனீஸ்வரரே! மேற்படி புத்தகத்தில் இன்னும் ஏதாகிலும் விசேஷமாய்ச் சொல்லப்படுகிறதா?

விடை.—ஆம சொல்லப்படுகிறது. அதாவது யாதெனில், பிரபஞ்சம் பிரத்தியக்ஷமாகத் தோற்றிக்கொண்டிருக்க அதை மித்தையென்று சொல்லுங்காரணம், அம்மித்தையாந்தோஷத்தை நிவர்த்திசெய்யும்வகை, ஆன்மாக்களுக்குத் தூலசூக்கும காரணமென்னுஞ் சரீரத்திரயங்களினுற்பத்தி, அச்சரீரத்தில் அகக்கருவி புறக்கருவியென்னும் தத்துவங்களின் சேட்டை, சரீரமும் சரீரியும் எவ்விதமாய்க்கூடியது, ஆன்மாவென்பதுயாது, சித்தெது, சடமெது, பந்தமெது, வீடெது, ஆன்மாக்களை மாயவாழ்க்கையாகிய சநியன் பிடித்து அலட்டுதற்குக்காரணம்யாது, மனதின்வியாபாரம்தொலையும் வழி, மனம் பஞ்சேந்திரியங்களின் வழியாகச் செல்லுவதை அறிவினுற்றடுத்து நடேசப்பெருமானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடியிற்செலுத்தும்வகை, ஆன்மா காணங்களைக்கூடி விஷயங்களை நுகர்ந்து அலைவதினாலுண்டாகும் தீமை, ஆணவமலம் ஆன்மாவைச்செய்யும் போராட்டம், அவ்வாணவமலத்தை நீக்கும்வழி, எங்கும் பூரணமாய்ப்பெருகிய ஞானாகாசமாகிய நடேசப்பெருமா

னுடைய திருவடியை அடையுமார்க்கம், ஆமையானது தனதுறுப்புகளை அடக்குதல்போல் புலன்வழிச்செல்லும் இந்திரியங்களை மனத்தின்வழி நிற்கும்படிச்செய்ய யோகாநுஷ்டானங்களைச்செய்யவேண்டியவகை இவைமுதலிய விஷயங்களைப்பற்றி மேற்படி நூல் உரைக்கின்றன. மும்மலமும், முக்குணமும, முப்பிணியுமற்றவராகிய முனீஸ்வரர், இவ்வண்ணம் தன்னிடத்திலிருந்தபுத்தகத்திற்கண்டவிஷயங்களிற் சிலவற்றையெடுத்து நவின்றதுமன்றி, ஆகமம்—வேதம்—உபநிஷத் என்னும் இம்மூன்றிலும் பிரதிபாதிக்கும் பொருளின் தாற்பரியத்தையும் தெரிவித்து, யார் தத்துவ ஆராய்ச்சி செய்து ஆசாரியன் உபதேசத்தைப்பெறுகிறார்களோ அவர்கள் தானெனனுஞ் சீவபோதங்கழிந்து விலக்ஷணமாகிய சுத்தாத்துமாவாய்ப்பிரகாசிக்குமுடிவாகிய ஆனந்தபோதத்தைப் பெற்று அநுபவிப்பார்களென்றும், இப்படிப்பட்ட பெரும்பாக்கியத்தை அடைகிற பகான்களைத்தான் புண்ணியவான்களென்றும், அப்படிக்கல்லாமல் சிவத்தியானத்தைக் கைப்பற்றாது பாபத்திற்குட்பட்டு துக்கங்களை அநுபவிக்கும் அஞ்ஞானிகள் மனத்தின் வல்லபத்தால் காமமென்னு மோகப்படுகுழியாகிய பிறவிக்கடலில் முழுகிக்கிடப்பார்களென்றுங்கூறி இன்னுஞ்சொல்கின்றார்.

பெரியவரே! நீர்மாயையும அதனுல்விளையும்அஞ்ஞானத்தையும் விலக்கி ஆசாரியன் அநுக்கிரகத்தால் பிரமஞானத்தைப பெறுவீராகில் உமது சுபாவநிலையை அடைகுவீர். அங்ஙனமடையவே பேசும்படியான ஈசனும் நீராகவேயிருப்பீர்.

சிவவாக்கியர் பாடல்.

பேசுவானு மீசனே பிரம்மஞான மும்முளே
ஆசையான ஐவரும் அலைஞ்சலைச்சற படுகிறீர்
ஆசையான ஐவரை யடக்கியோ ரிடத்திலே,
பேசிடா திருந்திரானு லீசன்வந்து பேசுமே.

ஓ பெரியவரே! ஆத்துமஞான விஷயங்களிப்படியிருக்க, சிதாபாசனுகிய சீவனுனவன் சிவரூபமாகிய தனதுஎதார்த்த சொரூப சுபாவநிலையை அறிகிறானில்லை. அதேனெனில், ஜீவன் அஞ்ஞானத்

தாலமறைப்புண்டு, துன்பமாகிய மாயாவலைப் பாசத்திற்கட்டுப் பட்டு, தன்னைத்தானமறந்து, காமவெகுளியில் மயக்குண்டு, பஞ்சபூத விகாரமான பௌதிகசரீரத்தைத் தானென்றுகருதி, அதனிடத்தில் அபிமானமவைத்து, துன்பமுள்ள போகங்களை அநுபவித்துக்கொண்டு, தேகமெடுத்த காலமுதல் இதுவரைக்கும் நற்கருமங்களைச்சிந்தையில் நினையாமலும், ஆகமவேதபுராணாதி கலைஞானங்களிலுள்ள பொருள்களை யறிந்துகொள்ள எத்தனப்படாமலும், மெய்யன்பர் நேசமடையாமலும், கரும்பினுமினிய மொழியும் காமவேள் கணையினுங்கூரிய விழிகளுமுடைய மாதர்களின் போகமே பெரிதென்று எண்ணி அதில் மகிழ்ந்தாடும் அஞ்ஞானியா யிருப்பதால், தனதுசொரூப நிலைமையை அறிய அசக்தனாயிருக்கிறான்.

செய்யுள்.

மனமிருந்துளகோலு மென்புனரிமு
மானவுடலிதுசிவருபமா மிதனை தெளியாமல
ஊனுடலுாக்கிரைதேடி யுழன்றுலகிறப்பொறி
மாநரகிறபுகும்பேதை மாயைவலைப்படுவார்கள்.

அந்தச்சீவன் ஆசாரியனுடைய அநுக்கிரகத்தால் பஞ்சமலங்களையும் பந்தபாசங்களையும் விலக்கிக்கொள்வானாகில், பதிநிலைமையை யடைகுவான். அது எப்படியெனில், புழுவானது குளவிரூபத்தை அடைவதுபோல ஜீவன் சிவரூபத்தை அடைவான்.

சிவவாக்கியர் பாடல்.

பச்சைமண்புதுப்பிலே புழுப்பொதிந்த வேட்டுவன்
நித்தமுநினையவே யநேகபேதசித்தமாய்ப்
பச்சைவண்ணநிலமாயப் பறந்துதும்பியானதும்
பித்தர்காளறிகிலீர் பிரானிருந்தகோலமே.

சாயுச்சியம்.

முன்னேயென்றனது முதிரொளிஞானம
அறியாப்பச்சை சிறுபுழுக்கவாந்த

வண்டென வுயிரைக் கொண்டிடுமுயிரது
தன்னைநோக்கித் தானதுவாகி
ஐவகைத் தொழிலு மெய்வகை யுணர்வும்
பிரியாவாறு பெற்றுத் திரியாப
பெரியோர் திரட்சி தான்சேர்ந்திடுமே.

இப்படியாக நரர்களாகிய பசுக்களில் எவர்களாகிலும் ஜனனமரண துக்கங்களைப் போக்கிக்கொள்ள ஆத்துமபோத மென்கிற வேதாந்த நூலிலே சொல்லுகிறபடி பரத்தின்விஷயமா யறியவேண்டியதை யறிந்து தேசிகோத்தமரின் ஞானோபதேசத்தால் அருமையான நிஷ்டையிலிருந்து ஆத்தும தீர்த்தத்தில ஸ்நானம்பண்ணி, நித்தியானந்த ஸ்வரூபராக விருமபுவரா யிருந்தாலும், அப்படிக்குப பெரும் பதத்தை யடையச் செயயு முயறசிக்குச் சுத்தமனததைக் கைவசப்படுத்த வேண்டியது அவசியமானதா யிருக்கும். மனம்பெருமையையும், சிறுமையையுப, சுத்தத்தையும், அசுத்தத்தையு முடையது. காமியாயும் மோசக்காரியாயு மிருக்கும் வனிதை சிவனேசர்களையும் மயக்குவதுபோல் கெட்ட மனமானது மோனஞானியையும் மோசம்போகச செயயும. சங்கறப வடிவமான மனத்தைக் கெடுத்தால ஞானமயமாக விளங்கும. அசுததமான மனது சிதாபாசர்களாகிய ஜீவர்களைச் செய்யும் பொல்லாங்குகள் எதற்குச் சமானமாயிருக்குமெனில் வஞ்சகமும், பொய்யும், மோசமும், காமமும் மிக்கவர்களாகிய சோரஸ்திரீகள் தமது புருஷர்களுக்குச் செய்யும பொல்லாங்குக்கு நிகராக விருக்கும். இதற்குத் திருஷ்டாந்தமாக இதனடியில் கெட்டநடவடிக்கையை யுடைய ஒரு ஸ்திரியைபபற்றிக் கதை யொன்று கூறுகிறோம் கேளுமென்று தோப்பிலிருந்த பெரியவர்க்கு வழிப்போக்கராய் வந்தஞானவான் சொல்லியபடி காசிமடாதிபதியானவர் தம்மிடம்வந்த சிவநேசருக்குக் கூறலுற்றனர்.

ஞானிகளின்மகிமை முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

# ஆத்மபோதப்பிரசங்காமிர்தம்.

## ஐந்தாவது பிரகரணம்.

## புருஷத்துரோக மாதர்களின்கதை.

### க - வது, சூர்ப்பநகை.

பிரமபுரமென்கிற கிராமத்தில் சுப்பிரமணிய னென்கிற பேருடைய ஒருகுடியானவ னிருந்தான். அவன் ஒருநாள் மதுரைக்குப் போய் சொக்கலிங்கக்கடவுளைத் தெரிசனம் செய்துவிட்டு மீனாக்ஷியம்மன் கோவில்மார்க்கமாய் வருகையில் அவ்விடத்தில் ஓர் ஆலமரத்தினடியில் தத்துவங்களின்னதென்றுதெரிந்துகொண்டு ஜீவாத்மாவாயிருக்கின்ற தனது நிலையை அறிந்து அதைக்கெடுத்துப்பரமாத்தும நிலையை அடையும்பொருட்டு ஒருபெரியவர் நிஷ்டையில் உட்கார்ந்திருந்தார். அவர் அருகில் இந்தச்சுப்பிரமணியன்வந்துஉட்கார்ந்தான். அவர் கண்விழித்துப்பார்த்தார். அப்போது சுப்பிரமணியன்எழுந்து அவரைவணங்காமல் தடிமாட்டைப்போல அசைவற்றுஉட்கார்ந்திருந்தான். அதைக்கண்ட பெரியவர் ஓஓ" இவன் கேவலம் அக்கியான சொரூபியாயிருப்பவனும், சகல பிரமாண்ட பிண்டங்களிலும் தானாய்விளங்காநின்றபிரமமாகியும்,சகலஆத்துமாக்களையும் இரக்ஷிக்கப்பட்டஜெகதீஸ்வரனாகியுமிராநின்றநடேசப்பெருமானைச்சற்றேனும்நினையாதவனும், சிவன் - விஷ்ணு - பிரமன் — கணபதி - சுப்பிரமணியராதி தேவர்களைப பணியப்பட்ட அடியார்களுக்குத் தொண்டு செய்யாதவனும், பழிபாவத்தைஉண்டாக்கும்பொல்லாங்கையே செய்து விடயானந்தமென்னும் விடத்தை அமிர்தமென்று அதைபபுசிக்கும் பாபிகள் கூட்டத்திற்குத் தலைவனுமாயிருப்பதாக வெண்ணி இவன் மூடத்தனத்திற்காக இரங்கி இவனை அஞ்ஞானச் சிறையினின்று நீங்கி புனிதனாகும் பொருட்டு இந்தத் தியானம் செய்யும்படி செய்வித்து இவனைக்கிருதார்த்தனாக்கும்படிக்

செய்ய வேணுமென்பதாகவெண்ணி, அடா சிதாபாச ஜீவனாகிய ஆட வனே! நீ உன்னூருக்குப்போய், சிவனடியார்களை அநுசரித்து, அவர் களால் ஞானநூல்களிற் கூறும் மெய்ப்பொருளின் லக்ஷணத்தை அறிந்துகொண்டு, அரகர சிவசிவவென்று சிவத்தியானஞ்செய்து, பர தத்துவம் பரவெளி பரமாத்விதமான பராபரனது பூங்கழல்களா கிய திருவடிகளை அடையும் மார்க்கத்தைத் தேடிக்கொள்ளுவாயென் று கட்டளையிட்டார்.

சுப்பிரமணியன் பெரியவரைப் பார்த்து எனக்கு வேளாண் மைத் தொழில் விசேஷமாயிருப்பதால் நான் அரகர சிவசிவவென்று சொல்ல என்னாலாகாது, ஊரிலமழைபெயது எல்லாருடைய நிலங்க ளும் உழப்பட்டுவருகிறது. என்னுடைய நிலமாத்திரம் தரு சாய்க் கிடக்கிறது. நான் ஊருக்குப்போகவேண்டும். சுவாமியை நினைக்க என்னாலாகாது. எனக்குச் சாகவாசமுங் கிடை யாது என்றான். அதற்குப் பெரியவர் அடடா மூடா! ஓர் மடத்தில் ஒரு சுயம்பாகி சொன்னதுபோல் நீயும் சொல்கிறாயே இதென்ன விந்தையா யிருக்கிறது என்று சொன்னார். அதற்குச் சுப்பிரமணியன் பெரியவரை நோக்கி, அந்தச் சுயம்பாகியார்? அவன் வரலாறு யாது? அதைக் கூறுமென்றான். அதற்குப் பெரியவர் சொல்லியதாவது, இராமேசுரத்தில் ஓர்மடத்தில் ஒருவன் சம்பளத் திற்குத்தவசுபிள்ளை வேலைசெய்துகொண்டிருந்தான். அப்படியிருக்க அவன்செய்ததப்புக்காக அவனை அந்தமடத்துக் காருபாரி, வேலையி லிருந்து நீக்கிப்போட்டான். இதற்கு இரண்டு மாதங் கழிந்தபின் அவன்மடத்துக்குவந்துமடாதிபதியைக்கண்டுவணங்கிக்கும்பிடுபோ ட்டு, சுவாமி! வேலையில்லாமல் அன்ன பஞ்சத்துக்கு அதிக கஷ்டப்படுகி றேன், என் வேலையை எனக்குக் கொடுக்க உத்திரவாகவேண்டு மென்று கேட்டுக் கொண்டான். அதன்பேரில், அவனை வேலையை விட்டு நீக்கியதற்கு உண்டான காரணத்தை மடாதிபதி தெரிந்து கொண்டு காருபாரியை நோக்கி, அவன்வேலை செய்யவேண்டிய அவ சியமில்லை, அவனை மடத்திலேயே வைத்துக்கொண்டு சவரக்ஷணை செய்ய வேண்டுமென்றும்; ஆனால் அவனுக்குச் சுகமுண் டாகத் தக்கதாக மனோராச்சியம் செய்யாமல் சார்வதாய் அரகர

சிவ சிவ வென்று சொல்லும்படி செய்விக்க வேண்டு மென்றும் கட்டளை யிட்டார். அந்தப்படிக்கு அந்தச் சுயம்பாகி இரண்டு மாதகால பரியந்தம் மடத்தி லிருந்து ஜனன மரணத்தைப் போக்கும் பின்ஞகன் திருவடியை நினைத்து அரகரசிவசிவவென்று சொல்லிக் கொண்டிருந்தான். அப்படி சொல்வதில் அவன் வெறுப் புற்று, ஒருநாள் மடாதிபதியின் முன்வந்துநின்று அவரைவணங்கி, ஓ சுவாமி! ஊரில என்புத்திரமித்திர களத்திராதிகளைவிட்டு நானிங்கிருப் பதில் அவர்கள் அன்னபானாதிகளில்லாமல் அவதிப்படுகிறார்கள். ஆடு மாடுகள் அலைந்துபோகிறது. வீடுவாசல் பாழாய்ப்போகிறது. என் குக்ஷிபாதைக்காக நான்மடத்தி லிருந்துகொண்டு அரகர சிவசிவ வென்று சொல்லுகிறதானால் எனக்கு நாவெழும்பவில்லை. என்கியா பகமெல்லாம் என்பெண்சாதி பிள்ளைகளின்பேரிலேயே இருக்கிறது. அரகரசிவசிவவென்று சொல்லும்படி நாயனார் எந்நேரமும் உபத்திர வப்படுத்துகிறான். வயிற்றுச்சோற்றுக்காக நான் அவன் சொல்கிற படி நடக்கவேண்டியதா யிருக்கிறது. ஆகையால், என்னையூருக்குப் போம்படி உத்தரவுகொடுக்கவேண்டும் சுவாமியென்றுகேட்டு சுவாமி க்கு நாலைந்து கும்பிடுபோட்டான். ஓ ஓ!!யார் அஞ்ஞானமும், அஞ் ஞானத்திலுள்ள இயல்பும், தேகேந்திரியாதி ஜெகத்தும், அதிலு ள்ளபொருள்களும், மித்தையாப்பிரபஞ்சத்தையும்மெய்யென்றுகருதி மேதகமே நாடினவகின்ற விபரீதபாவனையுங் கொள்கிறார்களோ அப் படிப்பட்டவர்களுடைய தேஜஸும், ஆயுசும், செல்வமும், கல்வி யும், புத்திரபாக்கியமும், மனைவாழ்க்கையும், வாகனபோகமும் நாசம டைந்துபோவார்களென்பதையும், இன்பதுன்பத்திற்கேதுவாகஎடுத்த உடல சூத்திரக் கயிற்றினாலாடும் பொம்மைபோல விளங்குவதனா லே அது எத்தனைநாளாக விருந்தாலும் இறப்பதேயன்றி நெடுநாளிரா தென்பதையும், இவன் தெரிந்துகொள்ளாமல், சிவபத்தியும் தவமு மில்லாமல் பொய் சூது வாது பேசிக்கொண்டு, பாவம் மோசம் கபடம் முதலிய பாதகங்களை யெல்லாம் தங்களுடலாகிய இல்லத்தில் குடி வைத்துக்கொண்டிருக்கும் பிரஷ்டர்களில் இவனொருவனா யிருப்ப தாகஎண்ணி, அவனைநோக்கி, அடா சுயம்பாகி! ஊருக்குப்போகாதே இங்கேயேயிருந்து இருக்காதி நான்கு வேதத்தினந்தமாகிய உபநிட தத்திலுரைக்கும் வாக்கியமாகிய அரகர சிவசிவவென்பதைச் சொல்

விக்கொண்டிருஉனக்குவேண்டியஉதவிசெய்கிறேமென்றுதம்பிரான் உரைத்தார். அதற்குச்சுயம்பாகி நான்தங்களுத்திரவுபடிக்குமடத்தி லிருக்கிறதாயிருந்தாலும் அரகரசிவசிவவென்றுமாத்திரம் உச்சரிக் கமாட்டேன். உங்களுக்கும் உங்கள் சிஷர்களுக்கும் வேண்டியதா யிருந்தால் சொல்லிக்கொள்ளுங்கள்; நான்உச்சரிக்கவே மாட்டேன் என்றான். மறுபடியும் ஏதாகிலும் இதைப்பற்றிச் சொல்லுவோ மானல், அனுக்குக் கோபம வருதுவிடுமென்று எண்ணி மடாதிபதி பேசாமல் மௌனமா யிருந்துவிட்டார். இது இப்படியிருக்க அந்தச் சுயம்பாகியாகிய அஞ்ஞானி அன்றிராத்திரி மடத்திலிருந்து ஒருவருக்குந் தெரியாமல ஓடிபபோய்விட்டான்.

பெரியவர்களா யிருக்கிற மகான்கள் மூடர்களாகிய அஞ்ஞானி களுக்குப் புகலும் சத்கர்ம விஷயங்களை அவர்கள் கேளாரக ளென் பதற்கு இந்தச சுயம்பாகியின் சரித்திரமே ஒரு திருஷ்டாந்தமா யிருக்கிறது.

திருடர்களுடன் உறவாடினுலும் மூடர்களுடன் உறவாடலா காதென்று சொல்லும் பழமொழி உண்மையென்பதாக இந்தக் கதையினுல் தெரிந்து கொள்ளலாம்.

இப்படியாக மேற்கண்டபடி பெரியவர் சுப்பிர மணியனுக்கு எடுத்துரைக்கவே சுப்பிரமணியன் உலகவாழ்வு பொய் யென்றும், தேகம் நீர்க்குமிழிபோல் நிலையிலலாம லழிந்துபோ மென்றும், இல் வாழ்க்கையிலிருநது தேகத்தை அபிமானித்துச் சிவபெருமானைத் தொழாமல் தப்பிப போவதானுல, அது ஆத்ம துரோகம் செய்த தாகு மென்றும், அதனுல் எமதண்டனை கிடைக்கு மென்றும் எண்ணி தன்னூருக்குப் போய் பெரியவர்களாகிய மகான்களைக் கண்டு ஞான நூல்களைப் பாடங்கேட்டு ஞான சாதக வழியில் நின்று சிவத்தியானஞ் செய்து ஞான சாதகத்தை அனுஷ் டித்து வந்ததும் தவிர, இல்லறத்துக்குரிய பயிர் வேலையும் பார்த்துக் கொண் டிருந்தான்.

சுப்பிரமணியன் விருத்தாந்தம்இப்படியிருக்க, அவனுக்குச் சுந் தரி யென்னும் பேருடைய ஒரு ஸ்திரீமனைவியா யிருந்தாள். அவள்

பாவசிந்தனையுள்ளவளாயும், இரக்கமில்லாததாமஸ குணத்தையுடையவளாயும், அந்நியநாயகர்களை அணையும்பெருமையில் மகிழ்ந்தாடுபவளாயும், தண்டு பஜாரியாயும், சாந்தமொழி யற்றவளாயும், சண்டைமொழிகற்றவளாயும், வியபிசாரிகளுக்குச் சிநேகிதியாயும், பழிபாவங்களைச் செய்கிற பாவிகளாகிய ஸ்திரீகளின் கூட்டத்தில்பாவப்பங்கு வைத் திருப்பவளாயு மிருந்தாள். இப்படி யிருந்தாலும் கொஞ்சம் வாசித்தவளாயும், காளகண்டனென்கிற பரமசிவனடியாரிடத்திலும், கோதண்டபாணியாகிய மகாவிஷ்ணுவினடியாரிடத்திலும்கொஞ்சம் விஸ்வாசமுள்ளவளாயுமஇருந்தாள். இவளைப்போல பாவஉருவங்கொண்ட வேறொரு ஸ்திரீயை உலகததில் காண்பது அரிதாயிருக்கும்.

இது இப்படியிருக்க, அந்த மாதானவள் தன் இல்லத்திற்குச் சமீபமாய் இருக்கும காளியம்மன ஆலயத்திற்குச் சிலநாள்தினந்தோறும் காலைமாலை இரண்டுவேளையும போய் அந்த அம்மன் எதிரில் நின்றுகொணடு தோததிரம செய்வாள.

ஓ லோகமாதாவே! சையமாலவரை குமாரியே! திரிபுராந்தகியே! ஓ பஞ்சாக்ஷரசொரூபியே! சர்வபீஜாக்ஷர சொரூபியே! கற்பகவல்லியே! ஓ நாத நாதாந்தரூபியே! கோடிசூரியப்பிரகாசியே! அமூர்தநாதாந்தரூபியே! ஆதிசத்தி வலலியே! ஜகன்மோகினியே! சர்வபூதசொரூபியே! ஜகத்ரட்சகியே! ஓ ஜயஜநநியே! ஓ காளி! கங்காளி! சாமுண்டீ! இரணபத்திரகாளி! ஏகரி! வீரி! ராஜராஜேஸ்வரி! பாலதிரிபுரசுந்தரி! சூலி! எண்டோளி! தாரகாசூரசம்மாரி! மாதரி! கௌரி! திரியம்பகி! ஆனந்தபைரவி! கௌமாரி! சண்டிகை! யோகினி! வேதாளி! யாமளை! மாகாளி! பகவதி! சவுந்தரி! அர்த்தநாரீஸ்வரி! அம்மா தாயே! என்கணவன்கண்களிரண்டும்இழந்துகுருடாயப்போகும்படி அநுக்கிரகம்செய்யுமம்மா தாயே! உன்னைநமபி வந்தேன். சித்தமதிரங்கி என்கோரிக்கைகூடும்படி செய்யுமம்மா தாயே என்று கேட்டுக் கொண்டாள். இந்தப்படிக்கு மேற்படி சூர்ப்பநகி இரண்டு மாதகால பரியந்தம் பிரதிதினமும் காளியம்மன் ஆலயத்துக்குப்போய வேண்டிக்கொண்டிருந்தாள். இப்படியாக இவள் ஆலயத்துக்குப்போய் வருவதைக்கண்டு [illegible] கணவன், அவள் ஆலயத்துக்குப்போய்வரும் [illegible]

தெரிந்து கொள்ளும்பொருட்டு ஒருதினம் அவள் ஆலயத்திற்குப் போகு முன்னிட்டே தான் அந்த ஆலயத்திற்குச் சென்று அம் மனுடைய பின்புறமாய் மறைவாக உட்கார்ந்து கொண்டிருந் தான். இதற்குப் பின் அரைநாழிகை பொறுத்து தன்மனைவி ஆலயத் திற்குவந்து காளியம்மனை நோக்கி, ஓ தாயே! என் கணவனுடைய கண்களிரண்டுங்கெட்டு அவன் அந்தகனாகப்போகும்படிச்செய்விக்க வேண்டியதாய்ப் பலதடவைகளில் நான் உன்னைக்கேட்டுக்கொண்டி ருந்தும், என்பிரார்த்தனைக்கு நீஇரங்கவில்லையே! தாயே! என்பேரில் உனக்குக்கோபமா? கிருபைவரவில்லையா? மாதங்கி புவனேஸ்வரி சுந்தராங்கி மாகாளி கொற்றவை ஐயை கார்த்திகை கௌரி துர்க்கை சூலி மகிடாசூரசம்மாரி நீலி விந்தை சயமகள் இருங்கலையூர்தி சிங் கவாகனி விசயைஅந்தரி மாலுக்கிளையாள்சக்கராயுதி பாலைக்கிழத்தி பண்ணம்பணத்தி நாராயணி கன்னி குமரி என்னும இத்திருநாமங்க ளைச்சொல்லிப் போற்றித் துதிசெய்து, அம்மணி! என்கோரிக்கை நிறைவேறினால் உனக்குப் பொங்கலிட்டுப் பெரும்பூசைபோட்டு ஆறுகால்ஜீவன் ஒன்று பலிகொடுக்கிறேனென்று உரத்தசத்தத்து டன் கூவிச்சொல்லினாள். அதைக்கேட்டிருந்த அவள் கணவன் அவள்கொடூரஎண்ணத்திற்கு மனங்கலங்கிக் கவலையுற்று, ஒருவாறு மனோதிடங்கொண்டு காளியம்மன் சொல்லுவதைப்போல் ஓ சூர்ப் பநகி! உன்கோரிக்கையின்படி இன்றுமுதல் உன்புருஷனுக்குக்கண்க ளிரண்டுங் கெட்டுப்போய் விடுமென்பதாகச சொல்லினான். இதை அந்தச்சண்டாள சூர்ப்பநகையானவள் கேட்டு மகாசந்தோ ஷப்பட்டு, இன்றுதான் சுபதினம் இப்படிப்பட்ட வரம்பெற நான் என்னமாதவம் செய்தேனோவென்று களிப்படைந்து தன்கிரகத்திற் குச்சென்றாள்.

சுப்பிரமணியன் அன்றுசாயந்திரம் வீட்டுக்குவந்து வாசற் படிக்குச் சமீபத்தில் நின்றுகொண்டு தன்மனைவியைக் கூச்சலிட்டு அழைத்து, அடிபெண்ணே! எனக்குக் கண்பார்வை தெரியவில்லை யென்று மாறுபாடாய்க்கூறினான். இதைக்கேட்ட மனைவியாகிய சூர்ப்பநகியானவள் மனதில் அடங்காச்சந்தோஷங்கொண்டுமேலுக் கு விம்மிவிம்மி அழுது கீழேவிழுந்துபுரண்டு, கிண்கிண்என்ற வாத்

தியநாதம்-சங்கநாதம்-வீணாநாதம் - பேரிகைநாதம் - மிருதங்கநாதம் வேதகோஷம் - பிரணவோச்சாரணதொனி இவைமுதலிய ஓசைகள் எப்பொழுதும் இடைவிடாது ஒலிக்கும்படியாக தில்லைச்சிற்சபையில் நவரத்தினங்கள் பதித்த பீடத்தின்மேல் திருநடனஞ் செய்கின்ற பரமசிவனே! எனது நாயகனுக்கு நேத்திரங்கள் போய்விட்டதே! இனிநானெப்படி ஜீவிப்பேன், என்னசெய்வேன், என்கெதி இப்படியாச்சுதே என்று பொய்யாகப் புலம்பி பித்துப்பிடித்தவள் போல் பலருமறியும்படி கண்ணீர்விட்டுக் கீழேவிழுந்து புரண்டு புரண்டு ஓ வென்று அழுதாள்.

மறுநாள் சூர்ப்பநகி உதயத்திலெழுந்திருந்து ஸ்நானபானஞ் செய்து, தான்காளியம்மனுக்குச் செய்திருந்த பிரார்த்தனையை நிறைவேற்றும்பொருட்டு அரைரூபாய் எடுத்துக்கொண்டு கடைத்தெருவுக்குப்போய்,அவல்-கடலை-பட்டாணி—எள்ளுருண்டை-பொரி யுருண்டை-பொங்கலிடுவதற்காக வேண்டிய சாமகிரயங்களையும் வாங்கிக்கொண்டு ஆலயத்துக்குப்போய் பொங்கலிட்டு பிரார்த்தனைப்படி ஆறுகால் ஜீவனாகிய ஒரு ஈயைப்பிடித்து அதன் தலையைக்கிள்ளி காளியம்மன் முன்னே போட்டு, பொங்கலை நைவேத்தியஞ்செய்து, தூபதீபங்கொடுத்து, கற்பூரதீபாராதனை செய்து காளியம்மன் முன் நின்று தோத்திரஞ்செய்ய ஆரம்பித்தாள்.

ஓ பராசத்தி! சாம்பவி! சற்குணி! நிர்க்குணி! சம்பூரணி! கிருபாகரி! அஷ்டாக்ஷரி! சடாக்ஷரி! பஞ்சாக்ஷரி! சதுர்த்தாக்ஷரி! திரியாக்ஷரி! துவாக்ஷரி! ஏகாக்ஷரி! திரியம்பகி! திரிசூலி! பரம்பரி! சடாதரி! என்றும், இன்னும் பலவிதமாகவும் தோத்திரஞ்செய்து போற்றித்தொழுது தாயே! என்பிரார்த்தனையை நிறைவேற்றி விட்டேன். இனிநான் என்கிரகத்துக்குப் போகும்படி விடையளிக்கவேண்டுமென்றுகேட்டுக் கைகூப்பிக் கும்பிட்டு நின்றாள். அப்போது சூர்ப்பநகி, காளியம்மை மூக்கில் தரித்திருக்கும் மூக்குத்தி திரிநேத்திரத்தையுடைய பரமசிவனது தோழனாகிய குபேரன் தன்னுடைமை தரித்துக்கொண் டிருப்பதற்குச் சமானமானதென்று எண்ணி, அதைத் தான் மோசமார்க்கமாய் அபகரித்துக்கொள்ள வேண்டுமென்

பதாக ஆசைகொண்டு அம்மா தாயே! இந்த மூக்குத்தி நீயணிந்து கொள்வதால் உனக்கு என்னபெருமைவரும். நீதான் சிறைச்சாலையிலடைக்கப் பட்டிருக்கும் குற்றவாளியைப்போல் கோயிலாகிய சிறைக்கூடத்தி லகப்பட்டிருக்கிறாயே! அதுஎனக்குக் கிடைத்து நானணிந்துகொண்டால் நான் பலவிடங்களுக்குப் போகும்போது எல்லாரும் பார்த்துச் சந்தோஷப்படுவார்கள். ஆகையால், அதை எனக்குக்கொடு தாயே! என்றுகேட்டு நின்றனள். அப்போது காளிகாதேவியானவள் மறுமொழி கூறாமலிருப்பதைக்கண்டு, நானந்த ஆபரணத்தை அணிந்துகொள்ளுவதில் அம்மனுக்குச் சந்தோஷந்தானென்று எண்ணி, அம்மன் மூக்கிலிருந்த மூக்குத்தியையும் இன்னுமசில ரத்தினுபரணங்களையும் கழற்றித் தன்மடியில் வைத்துக்கொண்டுபோய் விட்டாள். இவளுடைய ஆண்மைக்கும் தைரியத்துக்கும் அம்மன்ஆச்சரியப்பட்டுத் தன்கைவிரலைதன்மூக்கின்மேல்வைத்துக்கொண்டாள். இப்படி மூக்கின்மேல்விரலைவைத்துக்கொண்டது ஆச்சரியக் குறியாகும்.

சூர்ப்பநகி ஆலயத்திலிருந்து தன்கிரகத்துக்கு வந்தபின், அவள் அன்னமும் சகல பதார்த்தங்களும் சமைத்துச் சாயங்காலம் ஐந்து மணிக்குக்குளித்து மஞ்சள் பூசிக்கொண்டு கலைவாரி கொண்டையில் தாழம்பூமுடித்துக்கொண்டு குங்குமப்பொட்டிட்டு நல்லஆடை தரித்தவளாய், தன் புருஷனிடம்வந்து அவன்கையில் ஒருகோலைக்கொடுத்து, தான்வெளியில் சிலரைக்காணப் போவதாயும், தான் வருகிற வரையில் வீட்டுக்குள் நாய்முதலியவைகள் நுழையாமல்பத்திரமாய் வீட்டைக்காவல் காத்துக்கொண்டிருக்கும்படி திட்டம்செய்துபோனள். அப்படி அவள் போனபின் அவள் புருஷனுகிய பாசாங்குகுருடன் வீட்டுக்குள் நுழைந்து சுற்றிப் பார்க்கையில் பாகசாலையில் அன்னமும், வடை - தோசை - ஆமவடை-பணியாரம்-சுகியம் இன்னும்பலவித சிற்றுண்டிகள் முதலானவைகளும் செய்து வைக்கப்பட் டிருந்தது; அது அல்லாமலும், ஒரு மாடத்தில் ஒரு வெண்கலப் பாத்திரத்தில் அன்னமும், கறியும் வைக்கப்பட் டிருந்ததுடன் அதற்குச் சமீபத்தில் சுண்டைக்காய் பிரமாணம் ஒரு பாஷாண உண்டை வைத்திருப்பதையும் கண்டான்.

இதைக்கண்ட சுபபிரமணியன், ஓ ஓ இநதப் பாபியாகிய சண்டாளஸதிரீ நமமைக கொல்லும்படியாகப் பாஷாணத்தைச் சேகரித்து வைததிருககும் கொடுஞ் செயகைக்காக இவளை ஆத்மகோடிகளைத் தெண்டிக்கின்ற அந்தகன் தெண்டிககாமல விட்டுவிட மாட்டானென்று சொல்லி சமயல் செயதிருநத அனைத்திலும பதார்த்தத்திலும தனக்கு வேண்டிய அளவு சாப்பிட்டுவிட்டு மீதி அன்னம் முதலியவற்றில் மேறபடி பாஷாணக் கட்டியைத் தண்ணீரில் கரைத்தும தெளிததுவிட்டு தன் வீட்டுத் தெருத்திண்ணையில் முன்போல வேவநது உட்காாநதுகொண்டு, தன் மனைவியாகிய சண்டாளியினது செய்கையை நினைதது அரகர சிவசிவ சங்கரனே! மங்கை பஙகனே! கஙகை முடியனே! நமசிவாயனே! அகண்ட பரிபூரண சசசிதானநத பிரமமாகிய நடேசனே! வடிவுடை மங்கை யாம் பார்வதியைபபாகம வைசதவனே! பித்தா பிறைசூடிய பெருமானே! மறை முதலவனே! புலிததோ லுடையோனே! வந்தியென்னும் பிட்டு வாணிசசியாருக்குக் கூலியாளாகவநத பரமசிவனே! ஆதியந்தமில்லாத பரமபொருளாகிய நடேசப பெருமானே! ஆகாமிய பிராரதத கன்மஙகளுக் கேதுவாகிய சஞ்சித வினைகளை அடியேன் எபபடி நீககிக கொளளுவேனையனே! அடியேன் துன்மார்க்கியாகிய இந்த மாதினிடதது அகபபட்டுக்கொண்டு துக்கமாகிய காற்றிலசுழலும துரும்புபோல சுழன்று தடுமாறுகிறேனே: அந்தக ஞனவன் இதுமேடு இது பள்ளம இது நல்லவழி கெட்டவழி யென்று தெரிந்துகொள்ளாமல துன்புறுவதைப்போல்வருந்துகின்ற என் துன்பத்தை நீககி இன்பததைததரும் உன்திருவடியையடைய உபாயம் தெரியாமையினால வெய்யற புழுப்போல் வருந்துகின்றேனே: சுவாமி! நானென்ன செய்வேன்; உன்திருவடியையடைய எனக்கு நல்வழி காட்டி யருள்செய்ய வேண்டுமென்று நடேசப் பெருமானை ஸ்தவுத்தியஞ்செயது சிநதித்துக் கொண்டிருந்தான்.

இஃது இப்படியிருக்க வெளியே போயிருந்த தன் மனைவி அவள் சோர நாயகன்மார்களைக் கண்டு தன் புருஷனுக்கு நேத்திரம் புழுதான சங்கதியைத் தெரியப்படுத்தி மங்களம் கொண்டாடி உங்களுக்கு விருந்துசெய்யப் போகிறேன்; ஆதலால், இன்றிராத்திரிக்கு

நீங்கள் என் கிரகத்துக்கு வரவேண்டுமென்று சொலலித் தன்வீட்டு க்கு வந்துவிட்டனள். அந்தப்படியே அவர்களெல்லாம் அன்றிராத் திரி எட்டுமணிக்கு அவள் மனைக்குவந்து சேர்ந்தார்கள் அப்படிக்கு வந்த சோர நாயகர்கள் மூன்று பேராம்.

தன்வீட்டிற்குவநத சோர நாயகர்களுக்குச் சூர்ப்பநகி சோட சோபசாரம் செய்து அன்னம் படைத்தாள். அவாகள் பாஷாணங் கலந்த அன்னத்தை உண்டபடியால போசனமான உடனே விஷம் தலைக்கேறி எமதாம ராஜனைக் கண்டு தரிசனம் பண்ண வேண்டுமென்பதாகப் பித்தர்களைப்போல் உளறிக்கொண்டு எமலோ கத்திற்குப் பயணப்பட்டுப்போய் விட்டார்கள். சூர்ப்பநகி சோர மாப்பிள்ளைகள் மரணமடைந்ததற்கு விசனப்படாமல் அவர்களு டைய மூன்றுசவத்தையும் எப்படி வெளிப்படுத்தி எங்கேகொண்டு போய்ப் போடுகிறதென்கிற சஞ்சலத்தைக் கைப்பற்றினவளாய் இந்தச்சஞ்சலத்தை நிவர்த்திசெய்யு மார்க்கத்தையோசித்துக்கொண டிருந்தாள்.

இப்படியாக மரணசம்பவம் நேரிட்டதினம் தனுர்மாசத்திலொ ருதினமாக விருந்தபடியால், அன்று விடியறகாலையில் ஒருபண்டார மாகிய ஜங்கமன் சேமக்கல மடித்துப் பம்பம்மென்று சங்கத் தொனி செய்துகொண்டு அடியிற்கண்டபடிக்கு அகண்ட பரிபூர ணமாயிருக்குஞ் சச்சிதானந்த சாக்ஷாத்காரமாகிய பரமசிவனுக்குப பிரீதியாயிருக்கும் பாட்டுக்களைப் பாடிக்கொண்டு தெருவின்மார்கக மாய்ப் போகிறவன் சூர்ப்பநகியின் வீட்டுக்கு அருகாமையில் வந்து கொண்டிருந்தான்.

## பண்டாரம்பாடிய பாடல்கள்.

### ஞானவாசிட்டம்.

இருளன்றி யொளியன்றி யளவன்றி
யலைவன்றி யியல்பொன் றின்றிப்
பொருகின்ற பூதங்கள் பலபொருள்க
ளன்றிநிறை புரண மாகி

யுருவன்றி யருவன்றி யுளதன்றி
யுண்டில்லை யன்றி யொன்றாய்
வருகின்ற திரிபுடியி னடுத்தோன்று
மறவாது மதித்துக் கொள்வாய்.

சோரூபசாரம்.

சிற்சொரூபந் தானே செகரூபமானவெலாம்
தற்சொரூப சாரமாய்ச் சாற்றவே—பொற்சொரூப
மசசுருவாம் போல வதுவதுவாய்த் தோற்றுமொரு
சொற்சொரூபந் தானே துணை.

அருணாசலபுராணம்.

ஒருமானைக் கரத்தினிலவைத தொருமானைச்
சிரததினிலவைத் துலக மேழுந்
தருமானை யிடததினில்வைத் தருள்வானைப
பவளநெடுஞ சயிலமை போல
வருமானை முகத்தானை யளித்தானைப்
பெருமானை மகிழ வேறும்
பெருமானை யருணகிரிப் பெமமானை
யடிபணிநது பிறவி தீர்ப்பாம.

விருத்தாசல புராணம்.

பாய காலவகைப் பாலுள பசுக்களைப் படைத்து
மேய பாசமோ ரைநதினால் விழைவுறத் தளைத்துத்
தூய பூமியுஞ் சுவர்க்கமு நரகமு மேய்த்துச்
சாயுஞ் சாலையிற் கட்டிய பசுபதி சரணம்.

அநாதியனும், நித்தியனும், கிர்தகிர்த்தியனும், அண்டரண்டபிரமாண்ட திரிகண்டனும், பிரணவகுண்டல மண்டலமாகிய புருவத்தில் சகஸ்திரதள கமலத்தில் அணுச்சொரூபமுடைய அம்பலவீதியில் பிரணவாகாரமா யிருப்பவனாகிய நடேசப்பெருமானே!

பாட்டு.

முந்துசஞ் சிதங்க டைர மும்மலக் கங்குல் பாற்
அந்தியும் பகலு மில்லா வாதித்த னகத்திற் றோன்ற
இந்தியம் புலன்கள் மாய வின்பவா ருதியின் மூழ்கச்
சுந்தர நடேச னெம்மான் றுணையடி சிரமேல் வைப்பாம்.

சர்வஜீவதயாபர சச்சிதானந்த ஓம் பரப்பிரம்ம மூர்த்தியே! அகஸ்தியர்-வசிஷ்டர் - முதலிய இருடிகள் போற்றித்தொழும்படி தேனைச் சிந்துகின்ற கடம்பவனத்தில் வாசஞ்செய்கின்ற சிவபெருமானே! அஷ்டமூர்த்தியானவனே! தருமசொரூபியாகிய பார்வதி தேவிக்கு நாயகராகிய கடவுளே! முற்காலத்தில் பன்றிக்குட்டிகளுக்குத் தாயாய்வந்து முலைப்பால் கொடுத்தவனே!

காருண்ணிய சொரூபியாகிய பரமசிவனே! மூவர்க்கு முதல்வனாய், மூவராலுமறியொணா முதலாய், சகுணநிர்க்குண பரவஸ்துவாய், முழுமுதற் கடவுளாய் விளங்கும நடேசப்பெருமானே! பரம்பொருளே! அரியபொருளே! மஹேஸ்வரனே! மஹாதேவனே! பசுபதியே!அத்வைதமாய, அகண்டாகாரமாய், நித்தியவியாபகமாய், சச்சிதானந்தப் பிழம்பாய், நிறைவாய, தன்மயமாய், தத்துவமசியென்னும் மகாவாக்கியத்தில கூறப்படும் பொருளாய விளங்குநடேசப் பெருமானே! பிரபஞ்சமெல்லாம தன்வடிவாய்க்கொண்டருளிய அட்டமூர்த்தமும ரூபாரூபமுமாகிய சதாசிவனே! இப்படிப் பண்டாரம பாடிக்கொண்டு அம்பலத்துளாடுகின்ற ஐயனைத் தோத்திரஞ்செய்துகொண்டு வருகையில், யாதொரு விஷயங்களிலுங் கற்பனைசெய்வதில் சமர்த்தளாகிய சூர்ப்பநகி தன்வீட்டிலிருந்து வெளியே வந்து பண்டாரத்தை வீட்டுக்குள் அழைத்துப்போய், அவனுடன் மாறுபாடாய்ச் சொல்லத்தொடங்கினாள். அதாவது,

ஓ பண்டாரமே! பத்துநாளைக்குமுன் திவ்விய சொரூபசுந்தர மங்களரூபமுள்ள ஒருமகாபுருஷர் என்வீடுதிக்கு வந்தார். அவர் ஆசாபாசங்களை விட்டு நீங்கினவராயும், பொன்னம்பலத்தின்கண் ஆனந்தநடனஞ் செய்யும் கொன்றை மாலைசூடிய சடைமுடியையுடைய பரமேஸ்வரனாகிய இறைவனை மெய்யன்புடன் போற்றியவரா

யுமிருப்பதாகக் காணப்பட்டார். அவர் அப்பியாசயோகமும்-ஞான யோகமும்செய்ய வேண்டியிருப்பதாயும், அதற்காக என்னைவிட்டுத்தோட்டத்திலிருக்குங் கட்டடத்தில் ஒரு அறைவிடவேண்டியதாயுங்கேட்டுக் கொண்டார். இப்படிப்பட்ட மார்க்கங்கள் கேட்பவர்க்கு இல்லையென்று கொடுப்பதால் நான்செய்திருந்த சகலபாவங்களும் என்னைவிட்டு நீங்குமென்பதாக எண்ணி ஒரு அறைவிட்டேன். அவர் யோகம்செய்வதாகக் கூறியபடியால், நான் யோகமென்பது யாது? அதுசெய்வதினாலென்ன பிரயோசனமுண்டாகும்? இவைமுதலிய விபரத்தை அடியேனுக்கு அநுக்கிரகஞ்செய்யும்படி கேட்டுக்கொண்டேன். அதற்குஅவர் கூறியதாவது, யோகத்தை விரும்புவோர்கள் மரணத்துக்குச் சமானமாகிய மனதையடக்கி ஞானப்பிரகாசமாய இதயபுண்டரீகமத்தியி லுதித் தெழுந்த சோதியாய் விளங்குகின்ற சிற்பரசுவாமியை ஏகாக்கிரசித்தராய், நாபியினின்றுந் தியானித்து வரவேண்டியது; அப்படிச் செய்வதற்கு அசபாயோகமென்று சொல்லப்படும். இதனால்மனம் கைவசமாகும். அப்படி கைவசப்படுங்காலத்தில் நல்வினை தீவினை என்னும் இருவினைகளும் சமமாய், உயிர்ப்பிணியாகிய ஆணவமலமும், உடற்பிணியாகிய கன்மமலமும், மனத்தின்பிணியாகிய மாயாமலமும் ஆகிய இம்மூவகைப் பெந்தங்களும் மாறும். அதுமாறவே அடிக்கடி யோனிவழி வரும்படி செய்விப்பதாகிய அஞ்ஞானஇருள் அகன்றுவிடும். யோகத்தில் பலவிதமுண்டு. அதில் முக்கியமானதைக் கூறுகிறேன் கேள் என்று சொல்லத் தொடங்கினார்.

அதாவது, தாரகயோகம் - அமனஸ்கயோகம் - ராஜயோகம் என்று இப்படியாகப் பலவிதயோகமுண்டு.

தாரகயோகத்தைச் செய்பவர்கள் பிரமஹத்தியாதி தோஷங்கள் செய்திருந்தாலும் அவைகள் தொலைவதுந்தவிர, காம க்குரோத லோப மோக மத மாச்சரியங்களும் நசித்துப்போகும். மேலும் பிறப்பு இறப்பு என்னும் சமுசாரமாகிய நதியைத் தாண்டும்படி செய்வித்துப் பிரமா விஷ்ணு ருத்திரன் முதலியவர்களால் புகழும்படிச் செய்விக்கும். அமனஸ்கயோகம் நீயே பிரமமென்று தெரிவிக்கும். ராஜயோகம் அப்பியாசஞ்செய்பவர்கள் அகம்பிரமாஸ்மி யென்கிற

ஞானம் உண்டாய் ஜெனனமரணமென்கிற துக்கத்திலிருந்து விடுபடுவர்களாவார்கள் என்று துறவியாகிய பெரியவர் கூறினார். ஆதலால் அந்த மகானுபாவர் ரமதுகிரகத்திலிருந்து யோகஞ்செய்வாராகில் நாம்செய்த பாவங்களெல்லாம் தொலையுமென்றெண்ணிச் சந்தோஷங்கொண்டு பிரதிதினமும் அவர் அகமுகநோக்கத்திலிருந்து யோகஞ்செய்தானவுடன் புறமுகநோக்கமாகக் கண்விழிக்கும்போது அவருக்குப் பால் பழம் கொடுத்து வேண்டிய உபசரணை செய்துவந்தேன். இப்படியிருக்க இன்றையதினம் சாயுங்காலம் அவருக்குத் திடீரென்று மாரடைப்புகண்டு கீழேவிழுந்து பிராணனை விட்டார். அவர் மகாபுருஷரானதால் அவருடைய பிரேதத்தைத் தொலைவாக நீ எடுத்துப்போய் குழி வெட்டிச் சமாதியில் வைத்துவிடுவையாகில் உனக்குப் பெரும் புண்ணியமும் ஆதமலாபமு முண்டாகும். நீ இப்படிச்செய்வதினு லுண்டாகும் சிரமத்துக்காக உனக்குரூபாய் ஐந்து வெகுமதிகொடுக்கிறேனென்றாள். அதற்குப்பண்டாரம்அகமகிழ்ந்து நல்லதென்று ஒப்புக் கொண்டான். சூர்ப்பநகி சவத்தை ஒரு கூடையொன்றில் போட்டுக் குழிவெட்ட ஒருமண் வெட்டியும் அந்தக்கூடையில் வைத்துக் கூடையைப்பண்டாரத்தின் தலைமேலேற்றிவிட்டாள்.

பண்டாரம் பிரேதத்தை எடுத்துப்போய் ஒரு குளத்திற் போட்டுவிட்டு சூர்ப்பநகியிடம்வந்து பணம் கேட்டான். இவன் வருவதற்குமுந்தி சூர்ப்பநகியானவள் இரண்டாவது பிரேதத்தை யெடுத்துத் துணியால் மூடித் தயாராய் வைத்திருந்தாள். பண்டாரம்வந்து பணம் கேட்கும்போது, ஓ பண்டாரமே! நீ பிணத்தைக் கொஞ்சதூரம் எடுத்துப்போய் அதன் பளுவைச் சுமக்கமாட்டாமல் மறுபடியும் இங்கே கொண்டுவந்து போட்டுவிட்டு பணம் கேட்கிறாயே இது நியாயமா வென்று கேட்டாள். பண்டாரம் இதென்ன டா வம்பா யிருக்கிறது இந்தக் காரியத்தில் நாமேன் பிரவேசித்தோ மென்று தன்னைத் தான் நிந்தித்துக்கொண்டு வருத்தப்பட்டுச் சூர்ப்பநகி சொற்படி அந்த இரண்டாவது பிரேதத்தை எடுத்துக்கொண்டு மயானத்திற்குச் சமீபமாய்ப் போய் எறிந்துவிட்டு வந்து சூர்ப்பநகையைப் பணம் கேட்டான். அவள் அதற்குள் மூன்றாவது பிணத்தை எடுத்துத் தோட்டத்தில் வைத்தி

ருந்தாள். அவள் பண்டாரத்தைக்கண்டவுடன் நல்லபாம்புபோல்சீறி நீ என்னமோசக்காரனு யிருக்கிறாய், என்னைஏமாற்றிப்பணத்தைவாங்கிக்கொண்டுபோய் விடலாமென்கிற கெட்டஎண்ணம் கொண்டிருக்கிறாய, நீ எடுத்துப்போன சவம் இதோ இருக்கிறதேபாரென்று காட்டினாள். அதற்குப்பண்டாரம் இதென்னடா கொண்டுபோயெறிந்துவிட்டபிரேதம் மறுபடியும் மறுபடியும்வந்துவிடுகிறதேயென்று ஆச்சரியப்பட்டு, நல்லதுபிணத்தை எடுத்துப்போய்மறுபடியும் வராமலிருக்கும்படியான ஏற்பாடு செய்யவேண்டியதாயெண்ணி கூடையிற்போட்டிருக்கும்மண்வெட்டியுடன்பிரேதத்தைத்தூலாகக்கொண்டுபோகையில்மனவருத்தத்தால் பிணத்தையும்ஞாபகத்தையையும்தூப்பாஷையாய வைத்துக்கொண்டுபோய அதை ஓர்கிணற்றிற்போட்டுவிட்டுச்சமீபத்தில ஒருமரத்தினடியில நின்றுகொண்டு பிரேதம்கிணற்றைவிட்டு வெளியேவந்தால கையிலிருக்கும மண்வெட்டியால் இரண்டு துண்டாய் வெட்டிப்போடலாமென்று காத்துக்கொண்டிருந்தான்.

பண்டாரம் பிரேதத்தைப் போட்டகிணற்றில் ஒரு கோயிலர்ச்சகன் தனுர்மாசமாகையாலவிடியற்காலத்திலிறங்கி ஸ்நானம்செய்து சந்தியாவந்தனம செய்து கொண்டிருந்தான். அவன் பண்டாரம் கிணற்றிற்போட்டபிணம் பொத்தென்று விழுந்த சத்தம்கேட்டுத் திடுக்கிட்டுப்பயந்து ஓஓ!! இது பிசாசோ? பூதமோ? முனியோ? இன்னுமென்னமோவென்று அச்சப்பட்டு இனிஇவ்விடத்திலிருக்கலாகாதென்று எண்ணிக்கிணற்றைவிட்டு வெளியேவந்துநின்றான். அப்போது மரத்தடியிலநின்றுகொண்டிருந்தபண்டாரம் இந்தப்பிராமணனைப்பார்த்து, கிணற்றிற்போட்ட பிணமென்று எண்ணி அடாசவமே! கிணற்றைவிட்டு வெளியேவந்து எட்டிப்பார்க்கிறாயா? மறுபடியும் சூர்ப்பநகைவீட்டிற்குப் போகப்பார்க்கிறாயோ? நல்லது நீ எப்படிப்போவாய் நான்பார்க்கிறேன், உன்னை அடிக்கடி சுமக்கும்படியான தொந்தரவு எனக்குக் கொடுக்கிறாயல்லவா? ஆகையால என்கையிலிருக்கும் இந்த மண்வெட்டியால இரண்டு துண்டாய்வெட்டி இதோஇருக்கும் காளியம்மனுக்குப் பொலிபோடுகிறேன். நீஞானல[illegible] [illegible] அறிந்து பரிபூரணஞானியென்றும், மகாதவமுடையவனென்[illegible] [illegible]ந்தச் செல்வத்தை யுடையவனென்றும், சாப்பா[illegible]

மாயையென்கிற மதுபானத்தையூட்டி, காமமென்கிற கிரஹத்தில் குடியேற்றி வைத்திருப்பவனே! நான்யாது குற்றஞ்செய்தேன். என்னபாவம் செய்தேனோ? எனக்குத் தப்பேயிருக்கும்படியாக வந்துவிட்டதே: இதோ அந்தச் சண்டாளப்பய கையில் மண்வெட்டியொன்றை வைத்துக்கொண்டு நிற்கின்றதே: ஓ செல்வநாயகனே! நரிகளைப் பரிகளாக்கினவனே! பிட்டுக்கு மண்சுமந்த பெருமானே! ஸ்ரீ சிதம்பரேசனே'

## தேவாரம்.

விரிசடையாய் வேதியனே வேதகீதா விரிபொழில்சூழ் வெண்காட்டாய் மீயச்சூராய், திரிபுரங்களெரிசெய்த தேவதேவே திருவாரூர்த் திருமூலத் தானமேயாய், பருவினியார் மனத்துள்ளாய் மாகாளத்தாய் வலஞ்சுழியாய் மாமறைக்காட்டெந்தாயென்றும், புரிசடையாயுன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

துன்னஞ்சேர் கோவணத்தாய் தூயநீற்றாய் துதைந்திலங்கும் வெண்மழுவாள் கைபேந்தி, தன்னணையுந் தண்மதியும் பாம்பு நீருஞ் சடைமுடிமேல் வைத்துகந்த தன்மையானே, யன்னநடை மடவாள் பாகத்தானே யக்காரமபூண்டானே யாதியானே, பொன்னங் கழலடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

## சூதசங்கிதை.

எல்லா வுயிர்க்கு மருளிச்சை யிரிக்குமிச்சை யுடைய னெவன்
பொல்லா வறிவு முழுதொழிக்கும் புகரிலாவொள் ளறிவ னெவன்
மல்லார் மனுக்கள் யாவுமாய் வயங்கு மனுச்சொ ரூப னெவன்
அல்லார் கண்டத் தவனடிகள் யானும் போற்றித் துதிக்கின்றேன்.

வானு தியவைம் பூதங்கள் வகுத்துக் காத்து மற்றவைக்கண்
மானு வருளி னுயிர்கடொழின் மருவப்புணர்த்து மறிவ னெவ
னூனார் தருமவுயிர்க்குயிரா யுணர்வாய் நிற்கு மொருவ னெவ
னூனார் கொடிய பரம்பொருளை யானும் போற்றித் துதிக்கின்றேன்.

என்று இப்படியாகச் சொல்லிக்கொண்டு ஓட்டம்பிடித்தான். பண்டாரம் பின்தொடர்ந்து ஓ சவமே ஓடாதே ஓடாதே: நில் நில்: அரகராசிவசிவா சம்போவென்று சொல்லாதே: ஓ சவமே சவமே:என்றுசொல்லிப்பார்ப்பான் பின்பண்டாரம்ஓட்டமாயோடிக் கடைசியாய் அவனைப்பிடிக்கச் சக்தியில்லாமல் பண்டாரம் கீழே விழுந்துவிட்டான். அப்படி விழுந்துவிட்டவன் இனிச் சூர்ப்பநகை யினிடம் போகலாகாது.போனால் மறுபடியும் பிரேதத்தை எடுத்துக் கொண்டு போகச் சொல்லுவாள். அதன்பளுவைச் சுமக்க நம்மா லாகாதென்று சொல்லி அவளிடமாகத் தான்வைத்துவிட்டுவந்த சங்கு சேமக்கலம் முதலான வற்றை மீளவும் போய் வாங்கிக் கொண்டு போகாமல் தன் கையிலிருந்த மண்வெட்டியையும் கூடை யையும் எடுத்துக்கொண்டு தன் இல்லிடம்போய்ச் சேர்ந்தான்.

இது இப்படியிருக்க அம்மன்மூக்கின்மேல் விரலைவைத்துக்கொ ண்டிருப்பதையும், அவள் தரித்துக்கொண்டிருக்கு மூக்குத்தி முத லிய ஆபரணங்கள் களவுபோயிருப்பதையும், கோவில் அர்ச்சகன் கிராம முனிசீப்புக்குத் தெரியப்படுத்தியதின்பேரில், யாவரும்வந்து அம்மனைப் பார்த்து அத்திக கட்டையால் செய்துவைத்த விக்கிர கத்துக்கு மூக்கின்பேரி லெப்படி விரல் வந்தது? இது விந்தையாயி ருக்கிறது. இவ்வித ஆச்சரியத்தை எங்கும் கண்டதில்லை. ஓ ஓ!! இதென்ன அற்புதமாயிருக்கிறதென்று பார்த்தவர்களயாரும் சொல் லிக்கொண்டு போவார்கள்.

இது இப்படியிருக்க சூர்ப்பநகையின் கணவனாகிய சுப்பிரமணியன் நடந்தசங்கதியெல்லாம்தெரிந்தவனாயிருந்தபடியால்தன் மனைவிசெய்த அக்கிரமங்களைப்பற்றிஅவளுக்குத்தகுந்த தண்டனைசெய்விக்கவேண் டுமென்பதாக எண்ணங்கொண்டு தனக்குக் கண்கள் தெரிவதாய் வீட் டைவிட்டு வெளியேபோய் தன் பாரியாள் துன்மார்க்க நடவடிக் கைகள் யாவற்றையும் கிராம முனுசீப்பி னிடத்தில் தெரியப்படுத்த அவன் தலையாரியைவிட்டு சூர்ப்பநகியைப் பிடித்துக்கொண்டு வரச் சொல்லி, அவள் வந்தபின் அவளைப் பாராவில் வைக்கும்படி செய் தான். அதற்கு இரண்டு நாள் கழிந்தபின்பு சூர்ப்பநகி கிராமமுனி சீப்பைப்பார்த்து நான்மூன்று புருஷர்களைக்கொலைசெய்திருக்கின்

கணவன்என்மேல் சூதாகதிரங்கொண்டு அநியாயமாகக்குற்றம் சாட்டி னதினால் நீங்கள்என்னைப்பிடித்துக் குற்றவாளியாக்கிச்சிறையில்வைத் துப்புலவிதஉபத்திரவஞ்செய்தீர்கள். அத்தகைய செய்கைகள்யாதொ ன்றும் நான் செய்ததில்லை. என புருஷன் விரோதத்தினால் இப்படி யாகக்குற்றம சாட்டியதேயல்லது வேறில்லை. நான்சோரபுருஷர்களை வைத்திருந்தது மில்லை. நான்பதிவிரதை.என்பதி விரதத்தன்மையை நீங்கள் அறிநதுகொள்ள வேண்டுமானால், காளியம்மன் மூக்கின் பேரில வைததிருக்கிற விரலை எடுத்துப் போடும்படிச்செய்விப்பேன். அபபோதாவது எனபதிவிரதத தன்மையை நீங்கள் அறிந்து கொள ளுங்களென்று கூறினாள். அதன்பேரில் முனிஷீப முதலானவர்கள் இவளை அழைததுககொண்டு காளியம்மன் ஆலயத்தண்டை விட்டார கள். அப்போது அவள மாத்திரம் கோவிலுக்குள் போய்க் கதவைச் சாத்திக்கொண்டு தன் ஆடையை அவிழ்த் தெறிந்துவிட்டு நிர்வா ணமாய அம்மன் எதிரில் நின்றுகொண்டு, இரண்டு கரங்களையுங் குவித்துப்பணிந்து ஓ தாயே! நான் விபசாரம் செய்ததற்காக என்னை வெளியில் இழுத்து விட்டாயே? உலகில விபசாரம் செய்கிறவர்கள் அநேகர் இருக்க, அவாகளுக கெல்லாம் இபபடிக்கு யாதொன்றும் நேரிட்ட தில்லையே; நலல திருக்கட்டும். இப்போது உன் மூக்கின் பேரில இருக்கிற விரலை எடுக்கிறாயா? அலலது உன்னைக் கட்டிக் கொண்டு உன கை கால் உடையும்படி கிழே தள்ளட்டுமா என்றாள். அதறகு அமமன் இந்தப் பிரஷ்டையின் தேகஸ்பரிசம் நம்முடைய பேரில் தாக்குவதைப் பார்க்கிலும் நாம் விரலை எடுத்துக் கொள்வது நலமென் றெண்ணி மூக்கின்பேரில் வைத்த விரலை எடுத்துக் கொண்டாள். பின்பு சூர்ப்பநகி தன் புடவையை உடுத்திக்கொண்டு வெளியேவந்து காளியம்மனைப் பார்க்கும்படி அங்குவந்திருந்த பிர ஜைகள் யாவத்திரானையும் கேட்டுக்கொண்டாள். அந்தப்படிக்கு அவர்களெல்லாம் வநதுபார்த்து,அம்மனுக்கு மூக்கின்மேல் விரலில் லாதிருப்பதைக்கண்டு ஆச்சரியப்பட்டு, சூர்ப்பநகி மகாபதிவிரதை

என்று அவளைப்புகழ்ந்து, அவளுக்குவேண்டிய மரியாதை செய்தார்கள். இந்தச்சூர்ப்பநகியின் பேரில் இப்படி நியமசொன்ன அவள கணவனைப்பிடித்து நியாயஸ்தலத்தில் கொண்டுபோய் விசாரணை செய்து, ஆறுமாதகாலம் கடுஞ்சிறையி லிருக்கும்படி செய்வித்தார்கள்.

இதற்காக சுப்பிரமணியன் தன்னை ஏழரைநாட்டுச்சனியன்பிடித்திருப்பதாக எண்ணி விசனப்பட்டான். ஆகிலும் இப்படிநேரிட்ட வினையானது பசுபதியின் செயலென்றெண்ணி துக்கப்படாமல், சுகமும், துக்கமும், இன்பமும், துன்பமும்,வாழ்வும், தாழ்வும், வறுமையும்,சிறுமையும்,சமமென்று பாராட்டி சிவதியானஞ்செய்துகொண்டிருந்தான்.

நிர்த்தோஷியாயிருந்த சூர்ப்பநகியின் புருஷன் இப்படியாகச் சிறைக்கூடமடைந்ததற்குக் காரணமாயிருந்த சண்டாள சூர்ப்பநகைக்கு ஏதாகிலும் தண்டனைகிடைத்ததா வென்று கேட்கில், மேற்கூறிய அநர்த்தங்கள் நேரிட்ட சிலதினங்கள் கழிந்தபின் சூர்ப்பநகைக்குக் கருங்குஷ்டம் கண்டு கைவிரல் காலவிரல் அழுகி அற்று அற்று விழுந்து கண்கள் பார்வையற்று பலதுன்பங்களை அடைந்து இறந்தனள்.

இப்படி கொடும்பாவியாகிய சூர்ப்பநகியின் துன்மார்க்க நடவடிக்கைக்கு ஏறக்குறையசசமானமான மற்றொருமாதின் துன்மார்க்கச் செய்கையின் வரலாற்றைப்பற்றிக் கூறுகின்றோம். அதைக் கேளுமென்றுதோப்பிலிருந்த பெரியவர்க்கு வழிப்போக்கராய்வந்த மகானவர் சொல்லினார். அதையும் சொல்கிறோம் கேளுமென்று காசிமடாதிபதியானவர் சிவநேசருக்குச் சொல்லவாரம்பித்தனர்.

யறியாத சிதாபாசர்கள் அடைதற்கரிய மானிடதேகத்தை யடைந்தும் ஞானமார்க்கத்தை அநுசரிக்காமல் உதரபோஷணார்த்த நிமித்தமாக லோகவிஷய வியாபாரங்களை விர்த்திசெய்துகொண் டிருப்பதினாலே, தேள்கொட்டிய ஒருவன்படும் துயரத்தைப்போல் காமாதி முதலிய பலவிததுன்பங்களை அநுபவிக்கும்படி நேரிடுகிறது. அப்படி துன்பங்களை அநுபவிப்பதற்கு மனத்தின் செயலே காரணமாயிருக்கிறது. அலைகின்ற மனதை உள்ளமாகிய அறையில் நிலைநிறுத்துபவனே விவேகி; அவனே சரியை முதலியவற்றைக் கடந்தவனாவான். மனங்குவிந்து நின்றவிடமே தெய்வஸ்தலங்களாயும் முத்திப்பதமாயுமுள்ள ஸ்தானமாம்.

நரர்களில் காமியமனதுடையவர்களென்றும், நிஷ்காமிய மனதுடையவர்களென்று மிருவகையாயிருப்பார்கள். இவர்களில் காமியமனதுடையவர்கள் வெறிகொண்ட குரங்கானது அறிவை மயக்குகின்ற கள்ளைக்குடித்துத் தன்வழிதப்பி அலைவதுபோல் நிமிஷமாத்திரம் நிலைபடாது துன்மார்க்கவழியிற் சென்று உலக விஷயங்களிற் கூத்தாடிக்கொண்டு நரகப்பிராப்தியையடைய ஆளாவார்கள். நிஷ்காமிய மனதுடையவர்கள் பஞ்சகிருத பஞ்சமகா பூதத்தினின்று முண்டாயும் காமசஞ்சிதமாயும் சுகதுக்கங்களுக்கிடமாயுமிருக்கின்ற தூலசரீரத்தினிடமாயிருந்த அபிமானத்தை நீக்கி, தங்கள் மனதைச் சமாதியென்னுங் கயிற்றாற்கட்டத் தக்கவர்களாயிருப்பார்கள். இப்படி இருவகையா யிருக்கும் மனதுடையவர்களைச் சுத்தமன முடையவர்களென்றும், அசுத்தமன முடையவர்களென்றும் அழைக்கப்படும். நிஷ்காமாநுஷ்டானத்தினால் மனோலயமடைந்தவர்கள் சரியை முதலிய நான்குபாதத்துக்குரிய அதிகாரிகளாவார்கள்.

பாட்டு.

அலையு மனத்தை யகத்தடக்கு மவனே சரியை கடந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே கிரியை முடிந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே யோக தற்பரனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே ஞானி யதிகுரனும்

## தேவிகாலோத்திரம்.

அறிவுகில தவமடக்கம புண்ணியந்தா னகுணங்க
ணெறியுடைய முத்திநெறி முத்தியுபா யமமினை யென
மறுக்குமவழி யன்னயமன மடங்குவதன் றியாததுவே
யறிவுடையோ ரிவையனைத்து மாமென்றே யறைகுவரால்.

## தேவாரம்.

வெள்ளத்தார்விஞ்சையாகளி நமபவே
வெள்ளத்தைச்சடைவைத்தவிகிர்தரா
கள்ளத்தைக்கழியமனமொன்றிநின
றுள்ளத்திலொளியைக்கண்டுளளம.

## தேவிகாலோத்திரம்.

மந்திரஞ் செபாதி யானம பூசனை வணக்கம வேண்டாம்
அநதமி லாத முத்திக் குபாயமே யறிதல் வேண்டுஞ்
சிநதனை புறமே செல்லிற றுயரமே திரியு மீட்கிற
பநதமாந் துன்ப நீங்கிப பாமான விடமே சேரவாய்.

## பிரபுலிங்கலீலை.

மனமொ ருததன் வசபபடு மேலவன்
பினனவ ருததம பிறபபை யடைநதிடான்
மனமொ ருத்தன வசபபடா தோடுமே
னனிபி றபபிடை நாளுஞ சுழலுமே.

கெடுக்க வல்லதுங் கெட்டவா தஙகளை
யெடுகக வல்லது மிமமன மென்றதை
யடக்க வல்லவ னையப வக்கடல்
கடக்க வல்லவ னுவன் கடிதரோ.

[illegible]னுகாமவெகுளிமயக்கமென்
[illegible]கூடியெறிவளிமுற்சுட

சொன்னவா பேரின்பமனாதிமனந்
தன்னையாருந்தொடச்சராசராதரா.

இது விஷயங்களை யப்பாக அஞ்ஞானிகளாகிய பிரபஞ்ச காமாநுஷ்டானங்களை விட்டவர்கள். அப்படிவிட்டவர்கள் பிரகிருதியினாலுண்டாகும் புத்தியின் சகிதமாய், ஆத்துமக்கியானமில்லாமலும், பூர்வசன்மாந்தரங்களிற்செய்த காமாநுஷ்டானங்களினாலும், அசத்தியமான தேகத்தைச் சத்தியமானதென்றும், அநித்தியமான வஸ்துக்களை நித்தியமென்றும் சொல்லிக்கொண்டு காலத்தைக் கழிப்பார்களென்று நூல்களால் பிரமாணங்களாலுங் கூறப்படுகிறதென்று பட்டாதிபதியார் அனைவருமுலகுக்குச் சொல்லினர்.

வினா.—ஐயா! ஞானநூல்களை வாசிப்பதினால் அது என்ன பலனைக் கொடுக்கிறதாயிருக்கிறது.

விடை.—ஞானநூல்கள் நிரூபிக்கும் லக்ஷணங்களை அப்பியசித்து அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தை யுண்டாக்கி அநேக சன்மங்களாய்த் தொடர்ந்துவருகிற கன்மங்களை நசிக்கச்செய்து, சிவபெருமான திருவடியாகிய, பரமானந்த சாந்த நிலையில் இனிப்பிறவி யில்லாதபடி நித்தியசுக வாழ்வு திருத்தம்படிசெய்விக்கும்.

அது எப்படி ஐயமேனென்று பிரசினை செய்கின்ற உனக்கு அதைப்பற்றிக் கூறுகிறோம் கேள்; அந்த ஞானநூல் பரமானந்த ஸ்வயம் பிரகாசனாகிய சிவபிரானுடைய லக்ஷணங்களைப்பற்றிப் பேசுகின்ற துவிதம் அத்துவிதம் எனனும் இரண்டுமார்க்கங்களில் துவிதமே அத்துவிதத்திற்கு முதற்காரணமாகி யுள்ளதாய பதி பசு பாச லக்ஷணங்களைத் தெரிந்துகொள்ளும் விஷயங்களையெடுத்துப் பேசுமென்றும், பரம சகளவடிவான அருட்டிருமேனிகொண்டு மரகத ரத்தினம்போன்ற திருவுருவமும், பூரணசந்திரன் போன்ற திருமுகமும், புஷ்பமாலைகளை யணிந்த அளகபாரமும், புன்சிரிப்பும், கைத்தாமரைகளும், கிருபைமிகுந்த நேத்திரங்களும், செவ்வாயும், கச்சணிந்த ஸ்தனங்களும், நூல்போன்ற மருங்கு

வலும் தன்னமும் விகார, மேற்றலில தாயொளிரும் சிவச்சுடரை யென்னாளு மிறைஞ்சி வாழ்வாம.

இப்படி நிஷ்களமாய் விளங்கும் பரம்பொருளை அடைய யார் அருகரா யிருப்பார்க ளென்னில், எந்தப் புருஷன் விஷயகாமிய கர்மத்தை இச்சியாமல் குருகுல வாசஞ்செய்து சுருதி வசனங்களின்பேரில நம்பிக்கையும் குருவாக்கியத்தில் சிரத்தையும் பக்தியும் விசுவாசமுஞ்செலுத்தி அக்குரு முகமாய்த்தத்துவவிசாரணைசெய்து சங்கற்ப விகற்பங்களோடுகூடிய மனதைக்கெடுத்துஇந்திரியங்களின் கூட்டத்தால் நிறைந்திருக்கிற சரீராபிமானத்தினு லுண்டாகும் நானென்கிற அகங்கார முதலியவற்றைத்தொலைத்து குரு உபதேசத்தால யோக நிஷ்டையிருந்து சாதிக்கும விவேகசாலிகளாகிய மகாபுருஷர்கள் மாத்திரம் சகலத்திற்கும் சகலரூபமாய்விளங்கும் நிஷ்கள சொரூபமாகியபிரமத்தை யடைகுவா ரென்பதாக சுருதி மிருதிகள் கோஷிக்கின்றன. இதைப்புண்ணியவான்கள் மாத்திரம நிச்சயமென்று நம்புவார்கள். ஆனல் அஞ்ஞானிகள் நமபார்கள். இப்படியென்று அண்ணாமலைக்கு மடாதிபதி யெடுத்துக்கூறி அவனைச சிரத்தா பக்தியுடன் ஞானசாதகத்தில முயலும்படி செயதனா.

இந்த அண்ணாமலையின் நிலைமை இப்படியிருக்க அவனுடைய மனைவியாகிய அமுர்தமென்பவள் இராக்ஷஸ குணமுள்ளவளாயும், வன்னெஞ்சக் கள்வியாயும், பெரும்பாதகியாயும, துஷ்டசிகாமணியாயும், சகலபாவங்களுந் திரண்டு பெண்ணுருவமான சண்டாளியாயும், ஸ்திரீசாதி நால்வகையில சித்தினிஜாதியானவளாயும், அளவிட்டுச் சொல்லக்கூடாத காமப்பெருக்க முடையவளாயும், விடபுருஷர்களுடன் முத்துமுத்தாய்ப் பேசிக் கொஞ்சி அப்புருஷர்களைக் காமவிகாரங் கொண்டு மயக்கமுறச்செய்து இவள் காலடியே தமக்குக்கெதியென்று சிந்திக்கும்படி செய்பவளாயும், அவள் நெஞ்சிலடக்கியிருக்கும் வஞ்சகத்தை ஒருவருமறிய வொட்டாமல் மறைத்திருப்பவளாயும், கண்கொட்டிச் சிலபுருஷர்களை மயக்கித் தன்மோகவலையிற் சிக்கும்படிசெய்து பேயாக்கி அவர்களைத் துக்கசாகரத்தில் கற்பாந்த பரியந்தம் மூழ்கும்படிச் செய்பவள்

யும், பொய்யைச சோத்து மூட்டைகட்டிப் பத்திரமாய் வைத்தி ருபபவளாயும், அநநிய நாயகர்களை அணையும் இச்சையை எப்போ தும கைபபற்றுபவளாயும், விபசாரத்தொழில் நடத்துவதில் தனக் குச சமானமானவர்களொருவருமிலலாதவளாய் எநதச் சாதியான வனாயிருந்தாலும அவனைத்தன்காமவலையிற் சிக்கும்படிச்செய்து தன் னையே அவன்குலதெய்வமாகநினைக்குமபடி செய்பவளாயுமிருநதாள். உலகில் புண்ணியவதியாகிய பதிவிரதையின் கணவன் அவளுடன் சையோக சமபந்ததனதை அடைவதினாலே அவன் ஏதாகிலும் பாவங கனைச் செய்திருநதாலும அதுதொலைநது புண்ணியத்தை உண்டாக் குவதுபோல, வியபிசாரத தனமையுடையவளாகிய ஒருஸ்திரீயி னிடத்தில சையோகம செயபவன் புண்ணியவநதனா யிருந்தாலும், அச்சையோகபலன் அவன புண்ணியததைநத தொலைத்து அவனைப் பாவியாக்கி விடுவதாயிருசகும.

அப்படியிருக்க ஒருநாள் அண்ணாமலை, சொந்த அலுவ லாய் வெளியே போயிருநத காலத்தில இவன் மனைவியாகிய அமுாதமென்பவளுடைய சோரநாயகா அநேகர்களில், ஒருவன் நல்லசரிகைவஸ்திரம உடுத்தி, சிவபபு மொட்டைக் குல்லா ஒன்று தலையிற் போடடு, கையில் சவுக்கொன்று பிடித் துககொண்டு மன்மத விநோதமாய அமுர்தத்தின் வீட்டுக்கு வநதான். அப்போது அமுாதமென்பவள் குனிநது வீட்டுவாசலைப் பெருக்கிக்கொண்டிருநதாள. வநதசோரபுருஷன் அவள் முதுகின் பேரில் குதிரையின்பேரி லேறிக்கொளளுபவனைப்போல ஏறி உட் காாநதுகொண்டு அவள் தலைமயிரை லகான்போலக் கையிற் பிடித் துககொணடு குதிரையைத தட்டி நடத்துவதைப்போல் அய் அய் யென்று அதட்டிக்கொண்டு சந்தோஷப்பட்டுககொண் டிருந்தான்.

அந்தச சமயத்தில வெளியே போயிருந்த அண்ணாமலை தன் வீட்டுக்குத் திருமபிவந்தபோது அமுர்த மென்னுந் தன்மனைவி யிருக்கு நிலைமையைக் கண்டு சினங்கொண்டு தடி ஒன்றைக் கையி லெடுத்து சிவப்பு மொட்டைக்குல்லாக்காரனை அடிக்கப்போயினான். [illegible] அமுர்தம் தனது நாயகனைப் பார்த்து, ஓ மூடா! உன்னை [illegible]கம செயது கொண்டபடியால் எனக்கு இப்படிப்

பட்ட அவமானம் நேரிட்டது. நீ எனக்குப் பகைவனு யிருக்கிறாய். நான் பதிவிரதை. என்னை ஒருவன் மானபங்கஞ் செய்வதை நீ பார்த்துக்கொண் டிருக்கிறா யல்லவா? நான் பொட்டைக் குல்லாக் காரனை யெந்நேரம் சுமந்துகொண் டிருப்பேன். இடுப்பு முறிந்து போகிறது. பிராண ஹானி நேரிடும்போ லிருக்கிறதே யென்று பரிதாபகரமாகக்கூறி ஓவென்றழுதாள். அப்போது அண்ணாமலை தன்மனைவியைநோக்கி, அடி பெண்ணே! சிவப்பு பொட்டைக் குல்லாக்காரன் யார்? அவன் ஏன் உன்பேரில் குந்தி ஏறிக்கொண் டிருக்கிறானென்று வினவினன். இராஜாங்கத்தார் எல்லா வீட்டிற்கும் இந்த வருஷத்தில் நூதனமாக வரி போட்டிருப்பதாகவும், அந்த வரியைச் செலுத்த தவறிப்போனவர்களுடைய மனைவிகளின்பேரில் இந்தப்படிக்குச் சேவகன் வந்து ஏறிக்கொண்டு வரியை வசூல்செய்வதாகவும், அதுபோலவே இந்தச் சிவப்பு குல்லாக்காரனாகிய சேவகன் என்பேரில்வந்து உட்கார்ந்துகொண்டு வரி செலுத்தும்படி பயங்கரத் தொனியுடன் கேட்கிறானென்றும் சொன்னாள். அண்ணாமலை இதை மெய்யென்றுநம்பி அண்டை அயல் வீட்டுக்காரர்களுக்குத் தன் மனைவி சொன்ன சங்கதியைத் தெரியப்படுத்திச் சிவப்பு பொட்டைக் குல்லாக்காரன்வந்து உங்கள் பெண் சாதிகளின் பேரில் ஏறிக்கொண்டு வரி கேட்பதுண்டா வென்று வினவினன். அதற்குள்ளாக பொட்டைக் குல்லாக்காரன் அமுரத்தினிடமிருந்து வெளியே ஓடிப்போய் விட்டான். இந்த அண்ணாமலை என்னடா வெறியனைப்போல் இப்படி உளறுகிறான்; இராஜாங்கத்தார் வரி போட்டிருந்தால் இப்படியும் நடத்துவார்களாவென்று சொல்லிக்கொண்டு அண்டைஅயலார் ஒருவர்முகத்தை ஒருவர் பார்த்து எல்லாருங் கும்புகூடி அண்ணாமலை சொல்லினது உண்மையாவென்று அறியும்பொருட்டு அவன் விடுதிக்குவந்து பார்த்ததில் சிவப்புமொட்டைக் குல்லாக்காரனில்லாம லிருப்பதைக்கண்டு அவர்கள் அமுர்தத்தைஎன்னநடந்ததென்று கேட்டார்கள். அவள் தன்புருஷனுக்குச் சிலநாளாகப் பைத்தியம் பிடித்திருப்பதாயும், அதனால் அவன் தன்னை அடிக்கடி தடியாலடித்துத் தன்மயிரைப்பிடித்து இழுத்துக்கீழே தள்ளிக்காலா லுதைத்துத் துன்பப்படுத்துவதாயும், அதனால் தான்படும் சங்கடத்தைச் சொல்லி முடியாதென்றும், இப்படிப்பட்ட

இம்சைபடுவதைப் பார்க்கிலும் தான் இந்தவீட்டைவிட்டுத் தேசாந்திரம போகலாமென்பதாக யோசிப்பதாயும், தன்புருஷனுக்கு இதற்குமுன் ஆறுமாசகாலம் பைத்தியம் பிடித்துப் பின்பு அனுகூலமானதாயும்,இப்போது மறுபடியும பைத்தியம் கண்டிருப்பதாயும் சொல்லித்தேம்பித்தேம்பி அழுதாள். அதை அவர்கள் நிசமென்றெண்ணி அதின்பேரில் அவன் இனி அமுர்தத்தைத் தொந்தரவு செய்யாமலிருக்கும்படிக்கு அவனைஒருகொட்டடியில் அடைத்து வைத்தார்கள். அப்படி அவன் அதிலிருக்கையில் சிவப்பு மொட்டைக் குல்லாக்காரன் இதைத்தெரிந்துகொண்டு அமிர்தத்துடன் போகிக்க அடிக்கடி அவள்வீட்டிற்குத் தாராளமாய் வந்து கேளிவிலாசமாயிருந்து போவான். இதை அவனுமதை கண்டு மொட்டைக் குல்லாக்காரன் இதோவந்து விட்டான் அதோபோகிறானென்று பெருங்கூச்சல் போடுவான். அபபோது அவன் மனைவியும சிவப்புமொட்டைக் குல்லாக்காரனும சோநதுவநது அவனைக்கூச்சல போடாதே கூச்சல்போடாதே யென்று மிதமிலலாமல் அடிப்பார்கள், அந்த அடி உபத்திரவம பொறுக்கமாட்டாமல் எல்லாருடைய இருதயத்திலு மிராநின்ற நடேசப்பெருமானை நினைத்துத் தோத்திரஞ் செய்வான்.

ஐயனே! முன்னம என்பிதா எனக்குத்தெரிவித்திருந்ததாவது, பயத்தையுண்டாக்கும சம்சாரமாகியகாட்டில்வாசம்செய்துகொண்டு விபசாரம்செய்யும் மனைவியோடு கூடிக்கொண்டு அவள் போகத்தைப் பெரிதாகநினைத்து சுகதுக்கபயமானஜீவனும், அந்த ஜீவனுக்குக்கருவியா யிருக்கும ஐவரும இருந்து வாழும் இந்தவுடலை மெய்யென்று நம்பியும், ஆகமநூற் பகுதியும் பல சாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்து சமம்தமமாதி குணங்களையும் சற்குருவையும் அடைந்து,அக்குருவுக்குச் சுச்ருஷைசெய்து அவரால் உபதேசம் பெற்று, அதன் மூலமாய் ஸ்ரீசாம்ப நடேசமூர்த்தியின் பாதாம்புஜத்தையடைய எத்தனப்படாமலும்,பெரியோர்களை அன்புடன். மதிக்காமலும் அசட்டைசெய்பவர்கள் பெரும் துன்பத்தை அடைவார்க ளென்பதாக என்பிதா சொல்லியிருந்தது வாஸ்தவமென்று இபபால் என் பாரியாளின் துர்நடத்தையால் நான் தெரிந்துகொண்டேன்.

இப்படி தெரிந்து கொண்ட அடியேன் பந்தகாமியம் பந்தசஞ்சிதமூழ்விய துக்கங்களினின்று நீங்கி உன் திருவடிகளுக்கு எப்படி ஆளாகுவேன். நான் பூர்வத்திலசெய்த கர்மத்தினாலே என்மனைவியினால் நான்படும்பெரும் துயரத்தைப பார்க்கிலும் மலத்திடையே புழுத்த சிறுபுழுக்களிலும் கடைகெட்டவனாய்ப் பிறந்திருந்தாலும நலமாயிருக்கும்.

ஏகமாயும், உள்ளும் புறமும் இடையும் பூரணசச்சிதானந்த சொரூபமாயு மிலங்கும தெய்வமே! பரிசுத்தமாகிய நெஞ்சுடையார் செய்யும் பிரார்த்தனையல்லது சமுசாரபந்தமாகிய கூவத்திலவிழுந்து ஆசையென்கிற சேற்றில அழுந்தியிருக்கும் தூர்த்தனாகிய அடியேனைப் போன்றவர்கள செய்யும பிரார்த்தனை தேவரீர் செவியில் ஏறப்போகிறதா? எமகிங்கிலியர்கள் செய்யும பொல்லாங்குக்குச் சமானமாக என் மனைவியானவள் செய்யுங் கொடுமையிலிருந்தும் கோரமான சமுசாரபந்தத்திலிருந்தும் நான் விடுபடப் போகிறேனா? பார்வதிபதியே! தில்லையம்பலத்தில் திருநடம்புரியும பரசிவனை பசுபதியே! பரமபதியே! சர்வபூபதியே! நீலகண்ட உமாபதியே! பினாகபாணியே! பிரணவசொரூபமாய, சராங்ககோசரமாய், தொம்பத தற்பத அசிபதப பொருளாய விளங்கும் சபாநாயகனே! சுரவடிவாகிய வேதமானது ஆதியும் நடுவும அந்தமும கண்டறியக் கூடாத பரம்பொருளே! நடேசப்பெருமானே! ஆத்மபோதத்துங் கெட்டாத மெய்ப்பொருளே! நானாவிதபோக போக்கியங்களைத் தரும் கிரியாசத்தியை யுடைய சர்வேசுவரனே!

சராசரங்களுக்குத் தேவனாய் விளங்குபவனே! சுராமுனிவர்கள பணியாத சுகசொரூபனே! ஓம் பரபிரமமாகிய சிதம்பரநாதனே! ஞானானந்த எதார்த்த சம்பத்துபாவானுபவனே! ஓம் சுத்தஞான சம்சாரி யானுபவஸ்தாபன சர்வேஸ்வரனான நடேசப்பெருமானே! நிறைந்தவருட்பெருஞ் சோதியனே! சப்தரூபானந்த ஞானசொரூபனே! சர்வபாலமான ரூபமாயு விளங்குபவனே! அஞ்ஞானத்தை யொழித்த மெய்ஞ்ஞானிகள் துதிக்கு மாசிலாதமணியே!

நித்திய நிர்மல நிஷ்பிரபஞ்ச நிராமய நித்தியனாய் விளங்கும் சங்கரனே! பாசாங்குசதரமஹா தேவனே! பார்வதிநாதனே! ஆதியனே

விழைவிற் பரந்த விடய
மயமா முலகந் தோன்றுமற
பிறவித் துயர்க்கடல் கடந்து
பேரின்பஞ் சார்குவ ரன்பிற.

சங்கரன் தாயினுமிக்க அன்புடையர் சங்கர னென்பதற்குப் பிரமாணம்.

தேவாரம்

தாயினு நல்ல சங்கர னுக் கன்பர்
புள்ளத் கழுதருந்தப் பெருமா
வுள்ள மெய்யர் பேய்ப் புலை யுண்டயிர்
போங்கிய மாயன மயத்துட்பட்ட பனாந்தரே.

என்னும் அப்பர் வாக்கா லுணர்க.

மெய்யடியார்களுக்கு நல்ல சங்கரனாயிருந்து அவர்களை மோனமான பேரின்ப வாரியில் மூழ்கவைத்துச் சிவானந்த வாழ்வில் இருக்கச்செய்யும் அய்யனே!

ஓ மனமே! உலகின்கண் கிடைப்பதற்கரிய பிறப்பினை வாய்ந்த மானிடர்களில் அந்தக் கேடாகப் பிறந்தவர்களைப்போல யானிராமல் முக்கணீசனுக்கு ஆளாகும்படியான இச்சைகொண்டவனா யிருக்க எனக்கு அக்கடவுளிடத்து மெய்யன்பு உண்டாகாத விதமாக நீ விஷயங்களிற்சென்று என்னை ஏன அவமாக்கி விடுகிறாய் இது உனக்குத் தர்மமா?

வள்ளலார் சாத்திரம்.

மக்களாக்கையிற் பிறத்தலேயரிது மற்றதிலும்
தக்ககூன் குருடின்மையிற் பிறத்தலு மரிது
நற்குலத் திடைவருதலு மரிது ஞானத்தால்
முக்கணீசனைக் கிட்டப்படல் முற்றிலு மரிதே.

ஆகையால் ஓ மனமே! பூதம் புலன் பொறிகள் கரணங் குணம் பகுதி தூல பூதங்களும் சூக்கும பூதங்களும், ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களும், அந்தக் கரணங்களும், முக்குணங்களும், மூலப் பிரகிருதியும், புகலருகலாதி சுத்தம், பொருவு இல இருமாயையும் சொல்லுதற்கரிய கலைமுதலிய சுத்தா சுத்த தத்துவங்களேழும் நாத முதலிய சுத்த தத்துவங்களைந்துமாகிய வொப்பில்லாத சுத்தா சுத்த மாயையும், சுத்தமாயையும், கரணங்கள் ஆணவம் பொங்கு இருளும் கண்களுக்குப் புலப்படா தென்றும ஆணவமென்னும மிக்கவிருளும், ஊடுருவியே ஆகிய இவற்றைக் கடந்து பேதமகளாந்த உயிர்பேதம கலந்து கலைபேச வொண்ணாத நேர்மை வெளியாய யானெனதென்னும் பேதமகளாந்து ஆகமவறவையாய் அளவறுக்க வொண்ணாத சிதா காசரூபமாய பே ஆயிரங்கோடி சூரியருமடங்கவிழுங்கி எழும்ஞா னவொளியாய் ஒருசேர வுதித்த பெருமைவாய்ந்த ஒளிவீசுமமெய்ஞ்ஞான வொளியாய்ப்பேரின்பபரிபூரணமாய விளங்கு மெய்ஞ்ஞானவீரனாகிய நடேசபெருமானை அடியேன் சதாகாலமும அன்போடுபோற்றித் தொழுவதில் நீயாதொருதடையும செய்யாமல் நீ எனக்கு உதவி செய்வது நலமாயிருக்கும்.

மனமே அண்டசராசரங்களெல்லாந் தமமிடத்திற் றோன்றி யழிந்தாலும தாமெப்போது மழியாமல் சமரசமுமதாமாயுந்தாமல்ல வாயும் விளங்குகின்ற தில்லைத்தாண்டவராயனைப் போற்றித் தொழ யாதொருதடையுஞ் செய்யாமல் இருக்கும்படி யுன்னைக் கேழ்ப்பதா லல் நீ அப்படிச்செய்வதற்கு விஷயவியாபாரங்களிற்செல்லுவதற்கு தடையாயிருக்குமென்று நினையாதே கழைக்கூத்தனும் [illegible] உடல் காப்பாலும்அவனது செய்கைகூத்தினிடத்தும்எப்படி வைக் கப்பட்டிருக்குமோ அதுபோலவும் கள்ளக்காதலனிடத்தன்பு பூண் டொழுகுவாள் தன்னாயகனுக்கு செய்யுந் தொழிலில் குறைபாடி ன்றி நடந்துகொள்வதுபோலும் மனமே நீ [illegible] கலமும் பிரமானந் சாக்ஷாத்காரமாக விளங்கும் பரமாகிய [illegible] யவனாயிருந்து உனது செய்கையை [illegible] துவையாகில் அது ஜீவனாகிய என்னை [illegible]

நீ அப்படி செய்யாவிடில் ஜீவனாகிய யான் குடும்பபாரத்தை விட்டு நீங்கி பவப்பிணியை விலக்கிக்கொள்ள அசக்தனாகிவிடுவேன்.

இதற்குப்பிரமாணம்.

உலகநெருப்பைக்கடந்தொழியஞானவுததிமடுப்பேனோ
விலகுகுடும்பத்துயர்நீங்கியெந்நாட்டுறவியாவேனோ
திலகமறையின்பொருளிதெனத்தேறாறுங்குரவன்காண்பேனோ
கலகவுடற்பிணிகடந்துகடவுளையான்காண்பேனோ.

கள்ளக்காதலனிடத்தன்புகலந்துவைத்தொழுகு
முள்ளக்காரிகைமடந்தைபோலும்பரைக்காப்பாள்
பள்ளக்காரியமுண்டவனிடத்துள்ளன்புபதிந்து
கொள்ளக்காவலனிடைப்புறத்தொழிலுமுட்கொண்டா.

சோரமனையாட்டிசோரபிரான்மேன்மனமாய்ச்
சேரத்தொழில்செய்யுந்திட்டம்போற—பேர்பெரியர்
அந்தனடிமேன்மனத்தையான்றுவைத்துகந்து
மெத்தொழிலுஞ்செய்வரிசைந்து.

ஓ மனமேநீ எனக்கு வசப்படுவாயாகில் என்னைவருத்தும்பிறவி த்துன்பத்தை விட்டு நீங்கி நான் சிவபெருமானது திருவடியை அடைய ஏதுவாகும் அப்படி நீ எனக்கு வசப்படாவிடில் எக்காலமும் நான் பிறவிக் கடலாகிய துன்பத்தை விட்டு நீங்க முடியாததாகும்.

இதற்குப்பிரமாணம்.

மனமெப்பொருத்தன்வசப்படுமேலவன்
பிணிவருத்தும்பிறப்பையடைந்திடான்
மனமெப்பொருத்தன்வசப்படாதோடுமே
னனிபிறப்பிடைநாளுஞ்சுழலுமே.

நீ வசப்படாவிடில் பிறப்பிடை நாளுஞ் சுழலும்படி [illegible] நீ ஒருகணமேனும் நில்லாது விஷ

யங்களிற்சென்று மாயையின்வல்லபத்தால் அனேக விகாரங்களை வருவித்து பின்பு நானெனும் மமதையையும் பலபிறப்பையும் உண்டாக்கி ஜீவனாகிய என்னைத்துன்பப்படுத்துகிறாய்.

இதற்குப்பிரமாணம்.

வினையினால விகாரமுண்டாம் விகாரத்தால விருப்புண்டாகு
முனையுறும் விருப்பினால் விதவுலகங்க ளுண்டா
நனியுலகத் தான்மெலல நானெனு மகமுண்டாகுந
துனிவுடை யகங்காரத்தாற றுஞ்சலும பிறப்புமுண்டாம.

இனி யான் பிறவித்துன்பத்தி லாழாதவண்ணம் எனது பாசம் ஐந்தையும் நீக்கி அறிவுதானெனக் காட்டி எனக்கு ஆசாரியனாய் எழுந்தருளி வந்து ஆண்டருளும் ஐயனாகிய தில்லைக்கூத்தனை தினம் பணியும் பொருட்டு எனக்கு நீ வுதவிசெய்வையானால உனக்கு நன்றியுள்ளவனாக விருப்பேன.

பாசமைந்தையும தனித்தனிப் பரிந்திட நீக்கி
ரோசமாகிய வறிவுருநீ யெனக் காட்டிப்
பேசுமேழ வகைபபிறப் புனக்கில்லை யெனப்பேசி
தூசுநீக்கிய சுயம்பிரகாசனைத் தொழுவாம.

மனோவிலக்ஷணம் முற்றிற்று.



ஆத்மபோதப் பிரசங்காமிர்தம்.

முற்றுப்பெற்றது.



யும் அநாதியனும் கோடிபானு சொரூபனும் விளங்கும் பரனே! அடியேன் மாயைக்குச் சகோதரியாகிய என்மனைவியின் கபடச்செய்கையாகிய வலையிலகப்பட்டுக்கொண்டு தடுமாறுகின்ற பேதையேனாயிருக்கின்றேனே? வேதமுடிவினின்று விளையாடும் வேதியனாகிய உன திருவடியையடைவேனோ? அஞ்ஞானமாகிய பேய்பிடித்திருக்கும் தீதாகிய நெஞ்சுடையார்க்குச் சிவத்தினருள் கிடையாதென்று வேதாகம புராண இதிகாசமாதி நூல்கள் விளம்புகின்றபடியால் தீமைமிக்க நெஞ்சுடையேனுக்கு உமது திருவருள் எப்படி கிடைக்கப்போகிறது

சிவனே! சங்கரனே! சோமசூரியாக்கினியாகிய லோசனனே! சதாசிவனே! பாசவிமோசனனே! பக்தவத்சலனே! கயிலாசவாசனே! திரிபுராந்தகனே! புஜங்க பூஷணனே! அனேக ஆத்துமாவாயிருப்பவனே! பரமேஸ்வரனே! சர்வலோகத்துக்கும் பிதாவானவனே!

நீலகண்ட உமாபதியான சிவபெருமானே! கங்காதரனே! ஞான நூல்களைப் பூரணமாய்க்கேட்டுப் பதிப்பொருளின் மகத்துவத்தைத் தெரிந்துகொண்டுநாடோறும் நாவில் நழுவாப் பொருந்தும்வண்ணம் பத்தியோடு நிரந்தரமுத்தியாய்த்தொழுத அடியராகிய மார்க்கண்ட முனிவருக்கு நிறைந்த ஆயுளைத்தந்ததில்லையின்கண்மேவியநாயகனே.

இவ்வண்ணம் அண்ணாமலை அவன்மனைவியாலடையும் வேதனையைச் சகிக்காதவனாய்ச்சிவத்தியானம் செய்துவரும் நாட்களில் ஒரு நாளிரவில் அவன்கனவில் ஒருமகாபுருஷர் தோன்றி அவனைப் புலியூராகிய தில்லைக்கு வந்து சேரும்படி கட்டளையிட்டு மறைந்தார். அன்றுவிடியற் காலையில் அண்ணாமலை தன்னைப்போட்டுச் சாத்தியிருந்தஅறையின் கதவு திறந்திருப்பதைக் கண்டு கனவில்வந்தவர் கயிலாசபதியாயிருக்கவேண்டுமென்பதாக எண்ணி, உடனே புறப்பட்டுச் சிதம்பரம்போய்ச் சேர்ந்தான். அவ்விடத்தில் அவன் சிலநாளிருக்கையில் பூர்வஜன்மாந்தரத்திற்செய்த நிஷ்காம கர்மங்களினால் சுத்தசித்தர்களாகி வைராக்கியத்தை யடைந்து ஆத்மவிசாரணையினால் உண்டானஞானசாதகத்திறமையையுடையவர்களாகியஅடியார்கூட்டங்களில் அவன்சேர்ந்து ஆத்மசம்பந்தமான விஷயத்தைப்பற்றிப்

## ௩-வது மோகனாங்கி

சிவஸ்தலங்களெல்லாவற்றுள்ளும் மஹா பெருமை பொருந்திய சிதம்பரமென்னும் பதிக்குச் சமீபமாயிருக்கும் ஆகரமென்னும் கிராமத்தில், சங்கரன் என்று பேருடைய ஒரு வேளாளனிருந்தான்.

அவித்தியா சொரூபமான நாடகசாலையாகிய இவ்வுலக வாழ்க்கையை வெறுத்து, தேகஅபிமானத்தையும் நீக்கி, உயர்ந்த சம்பத்தின்கணின்று அந்நிலைக்குத் தவறுவராது அதன்கட்கருத்தைத்தைவைத்து த்தியாகிலைப்புகழ்தன்முதலிய நோகருவிகலைகளைப் பழக்கத்தாற் காயத்திற்காட்டுதல் செய்யும் கூத்தரைப்போலவும், பரபுருஷனை நேசிய ஓர்நாரி அவன்மேற் கருத்தைவைத்துத் தன்புருஷனுக்குப் பழக்கத்தால் இவனது ஏவற்றொழில்களைச் செய்தல்போலவும், ஐம்பொறிகள் விஷயங்களைப்பற்றினும் அவற்றின்கண் ஆசையுறாது அரிதாகிய வீட்டை யடையவேணுமென்கிற ஆசையால், புலியூர்ச்சிற்றம்பலவனுடைய அழகிய திருவடிகளையும், மகாமாயா ஜகத்காரணச் சச்சிதானந்த ரூபிணியாய் ராஜராஜேஸ்வரியாய ஜகன்மாதாவாயிருக்கின்றபராசக்தியினுடைய திருவடிகளையும் சதாகாலமும் மெய்யன்புடன்போற்றித்தொழுபவர்களாயும், சிலசமயங்களில் ஞானநிஷ்டையிலிருந்து காலம் கழிப்பவர்களாயுமிருக்கும் சில அடியார்களை அச்சங்கரன்தன்வீடுதிக்கு அருகாமையிருக்கும் ஒருவாசஸ்தலத்தில் கொண்டுவந்து சேர்த்து அவர்களுக்கு வேண்டுவனவற்றைக் கொடுத்து உதவிசெய்து அவர்கள் மனதிற் கிசைந்தபடி நடந்து வந்தான்.

இப்படி இருக்க மேற்படி அடியார்கள் சித்தாந்த சங்கமென்று சபையொன்று ஸ்தாபித்து வேதாந்த சித்தாந்தத்தைப்பற்றியும், அவைகளின் சமரசங்களின் நிலைமையைப்பற்றியும், தத்துவங்களைக் கடந்த நின்மலப் பிரமமாகிய நடேசப் பெருமானுடைய லக்ஷணத்தைப்பற்றியும் பிரசங்கம் செய்துகொண்டு வந்தார்கள்.

இப்படியிருக்க ஞானத்துக் கேதுவான குணங்களையும், பத்தி வயிராக்கியங்களையும், சிவசின்னங்களையும் உடையவர்களாயிருந்த மேற்கூறிய அடியார்களில் மிகவும் சிறந்தவராயிருந்த ஒருவர், இங்

தர் சங்கரனானவன் அடியார்களுக்கு உதவிசெய்வதே தவிர ஆத்துமக்கியானத்திற் பற்றில்லாத அவிவேகியா யிருப்பதைக் கண்டு அவனுக்கு ஞானசொரூப மின்னதெனத் தெரிந்து கொள்ளும் வித்தையைக் கற்பிக்க வேண்டியதாய் எண்ணங்கொண்டு, அவனை நானாசீவவாதக் கட்டளை - வைராக்கியசதகம் - வைராக்கியதீபம் - சசிவர்ணபோதம் - பிரபுலிங்கலீலை - பகவற்கீதை - பிரமகீதை - கைவல்யம்- ஞானவாசிட்டம் - தேவாரம் - திருவாசகம் - தாயுமானவர் பாடல்- ஒழிவிலொடுக்கம் - பஞ்சதசப்பிரகரணம் - நிஷ்டானுபூதி முதலிய ஞானநூல்களை வாசிக்கும்படி கட்டளை இட்டார். அவன் அந்தப்படி அவைகளை வாசித்துவரும்நாளில் ஒருநாள் அந்த அடியார் சங்கரனை நோக்கிக் கூறலுற்றதாவது,

ஓ! பிள்ளாய் நாம் சொல்லப்போவதைக் காதுகொடுத்துக்கேள். யார் பகவத் விசாரணை செய்யாமலும், நான்கு வேதங்களிற் சொல்லப்பட்ட உபநிஷத் வாக்கியங்களின் முடிவில் விளங்கும் மாதுபாகனாகிய நடேசப் பெருமானை வருந்தி வாழ்த்தி இறைஞ்சிப் போற்றாமலும், அவர் திருவடியை அடைவதற்குச் சாதனங்களான தத்துவங்களைத் தெரிந்துகொள்ள எத்தனப்படாமலிருப்பது தப்பென்றுஉணராமலும், உனக்குப்பலபிறவித்துன்பங்களைத் தருகின்ற சத்துருவாகிய அஞ்ஞானத்தையொழிக்குமார்க்கத்தைத்தேடிக்கொள்ளாமலும், இந்தவுயிரைக் கொண்டுபோகின்ற காலனுக்குத் தப்பிச் செல்லு நெறியை அறிந்து கொள்ளாமலும், ஸ்திரீ புருஷர்களுடைய மைதுனத்தி லுண்டாகிக் கருப்பாசயக் குகையிற் கட்டுண்டு வெளிப்பட்ட மாமிச பிண்டமான இந்தச் சடவஸ்து மலத்தினால விளையும் புழுப்பொதிந் தழுத்துச் சரியும் பொய்க்கூரை யாகியும், ஒன்பது ஓட்டையை யுடைய சூஸ்திரப்பாவை யாகியும், மலமும் மூத்திரமு நிறைந்த பாண்டமாகியும், ஐம்புலவேடர் வாழும் பெருங்காடாயும், மேகத்தின்கண் தோன்றி நின்று அழியும் மின்னல்போல மாயையின்கண்தோன்றிக் கணகாலத்து அழிவதாயும், ஜலசந்திரன்போற் கற்பித பிரதிபிம்பமாயிருக்கும் இம்மானிட தேகத்தை மெய்யென்று கருதி அந்தச் சமர்ந்துகொண்டு காமக் கடலில் விழுந்து, மூழ்கி மூழ்கி, எழுந்து எழுந்து, பல்லை இளித்துக்கொண்டு, பலவித துன்பங்களில் மொத்

தூண்டு, எவர்கள் தடுமாறுகிறார்களோ அப்படிப்பட்டவர்கள் மாளுந்த காலத்திற்குப்பின் யமதண்டனையும் நரகப் பிராப்தியுமடைவார்கள்.

அப்பா சங்கரா! அநித்திய சொரூபமாகிய இவ்வுலகத்தில் பஞ்சபூத சேர்க்கையா லுண்டான ஞானகர்மேந்திரிய அந்தக்கரணங்களையுடைய துக்க சொரூபமான இச்சரீரத்தைப் பற்றியும், இதற்குள் வாசமாயிருக்குஞ் சிதாபாசனாகிய ஜீவனைப் பற்றியும், அம்பலவாணன் பெருமையினைப் பற்றியும் லக்ஷணங்களையும் அறிந்துகொள்ளவேண்டியது அவசியமானதாயிருக்கின்றது. இதை அறிந்துகொள்ளவேண்டியதாயிருந்தால் பக்தான்சனை யடைந்து பிரமவிசாரணை செய்து தெரிந்துகொள்ள வேண்டியது. சிதாபாசனாகிய ஜீவனுக்கு மாயாகாரியமாகிய இந்தத்தனுவைச் சிவபெருமான் இரவலாகக்கொடுத்திருக்கிறார். அப்படிக் கொடுத்ததுயாதுக்கென்னில், இத்தநுவைக்கொண்டிடவுளாகிய தன்னைத் தொழுதுபோற்றி நற்கதி யடைவதற்காகக்கொடுக்கப்பட்டிருக்கிறதேயல்லது வேறொன்றுக்கல்ல.

சிவஞானசித்தியார்

மானிடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூமர் ஒன்றையு முணரா ரந்தோ.

இப்படியாகச் சிவபெருமானைத்தொழ இரவலாகக் கொடுக்கப்பட்டிருக்கிற தென்பதை ஜீவன் அஞ்ஞானத்தினாலே மறந்து சரீரத்தைத் தாமாகவும், தமது சொந்தமாகவும், பாலியம் யௌவனம் மூப்பு என்னும் பருவங்களினாலும், வனிதையர் போகமாதி ஆசைகளினாலும் உண்டாகும் துன்பத்தை இன்பமெனக்கருதி அதில் மூழ்கி அவதிப்பட்டு அவலமாய்ப்போகிறார்கள். இப்படிப் பசுக்களாகிய ஜீவர்கள் சரீரத்தில் சுதந்தரத்தையும் அபிமானத்தையும் செலுத்திப் பாராட்டிவருவதுந்தவிர, தங்கள் மனைவிமக்களுக்குத் தங்களைவிட வேறு துணையில்லை யென்பதாக நினைத்துக் கவலையுற்றுச் சிவனடியை மறந்து காலத்தைக் கழிக்குங் காலையில் அவர்களையாவது இவர்

களையாவது இயமன்கொண்டுபோய் விடுவானாகில் அப்போது இவர்கள் யாது செய்வார்கள்.

வைராக்கியசதகம்.

நவில்வினிமையனை மக்களுந் தொந்தனை
நாமல கிலேயென்றோ
கவலேயுற்றான் முணமற்ற கனையுனைக்
காலனொடு போயிற
தவலடக்கத்தடைந் திவணைநா டொறும்புரந்
திடுவையோ குழந்தைகாள்
சவலே நெஞ்சமே சிவனலா துயிர்க்குயிர்
தானு மோதுணை யாமே.

ஜீவர்கள் இரவலாகப்பெற்ற தேகத்தை இரவலாகக் கொடுத்தவன் கொண்டுபோய் விடுவானென்பதையோசித்து, பஞ்சபூதத்தின் விகாரங்களையும் தத்துவங்களின் விகாரங்களையும், உற்பத்திதிரையமுதலியவைகளையும் போக்கி, அசத்தாகிய அனித்தியப்பொருள்களைக்கைவிட்டு, அமராகோஷ்டியிந்தேவேந்திரனும் மற்றவர்களும் போற்றித்தொழும் சர்வவியாபகமானபரமாத்துமாவாயும், பரமபொருளாகிய பிரானின்றசங்கரனைப் பூஜித்து மற்றும் ஞானசாதகங்களைச் செய்து பேரின்பநிலையையடைய முயற்சி செய்யாமற்றவறி அத்தேகத்தைத் தன சொந்தமென்றுபாராட்டிச் சங்கற்பருபமாகவிளையும் மனத்தை விஷயங்களிற்போன வழியேவிட்டு அதனசேஷ்டையால் அடாதகாரியங்களைச்செய்து பிரஷ்டர்களாய்ப்போகிறார்கள்.

சிவதருமோத்தரம்.

அரிய மானிட யாக்கை யடைந்தபின்
பரம லோக பலத்தினைப் பற்றவும்
ஒருவி யேபுல னுஞ்சிவந் தோன்றவும்
மருளை நீக்கவு மெண்ணில னென்கொலோ.

இருவினையின் வழியாய்வந்து பொருந்திய ஜீவர்கள் தத்தம் [illegible]இன்பமேவடிவாகியும், சத்தோதயபாயவினைக்கும் [illegible]சோ

தியாகியும், பிரகாசிக்கும் பராபரவஸ்துவாகியும், அகிலாண்டகோடிகளைத் திருமேனியாகக்கொண்ட ஞானப்பிரகாச பதியாகியும்,பிரம விஷ்ணுக்களாகியஇருவரும் தேடிக்காணப்படாத தேவதேவ மகாதேவனுகியும், இமையோர்தொழு மீசனுயும், பன்னகபூஷணனுமாயுள்ள சங்கரன்திருவடியை மறந்து, சோற்றைத்தின்று வளர்க்குஞ் சுமையாகிய இந்த உடலைக் கடைசியாக எமனுக்குக் கொடுத்து அவமாகச் செய்துகொள்ளுகிறார்கள்.

இப்படியாகக் காலனுனவன் அநேக உயிர்களைக் கொண்டு போனதைப் பார்த்தும், கொண்டுபோவதைப் பார்த்துக்கொண்டுமிருக்கிற யல்லவா? ஜீவர்கள் ஆணவமலத்தால் மறைப்புண்டு ஆசையே ஸ்வரூபமான மாயையாகிய வனத்தில் திரிந்துகொண்டு காமிகளா யிருப்பதால், நித்திய ஞானனந்த நிருமலனுயும், மலயத்துவசன் வளர்த்த பசுங்கிளியும் திருமாலின் தங்கையு மாகிய கௌரியை ஒரு பாகத்தில வைத்திருபபவனுயுமுள்ள சிவபிரானைக் கும்பிட்டுத் தொழாமலும், மஹேஸ்வரியாபாரத்தை விர்த்திசெய்வதில் முயற்சித்தும், அணுவளவேனும் நன்மையில்லாத பொல்லாங்காகிய தீமைகளைச் செய்துகொண்டும, தத்துவ ஞானத்தை உபதேசிக்கும் சிவனடியார்களின் நேசத்தைக்கைப்பற்றாலும்,அரிய வேதாகமசாஸ்திரபுராணங்களை ஓதியுணராமலும்,செந்தாமரைப்புஷ்பத்தினிடத்திலிருக்கும் பிரமதேவனுல் உண்டாக்கிய அஞ்ஞான இருள்நிறைந்த ஆக்கையை மெய்யென்று நம்பி அதைச் சுமந்துகொண்டு வன்னெஞ்சக் கள்வராய்ப் போவதினுலே இவர்களுடைய யாதனு சரீரத்தை அம்மறலி கொண்டுபோய் தண்டனைசெய்து வாள்கொண்டறுத்தும், சிவபிரானைக்கண்டு தெரிசிக்காத கண்களைப் பிடுங்கியும், சிவபிரான் திருப்புகழை நித்தியம் புகழ்ந்துபேசாது பொய்சொல்லிக்கொண்டிருக்கின்ற நாவையும், சிவாலயம் செல்லாத கால்களையும், மெய்யடியார்களுக்குத் தொண்டு செய்யாத கைகளையும் துண்டு துண்டாய் வெட்டிஎறிந்தும், இப்படியாகப் பலவகையான அளவுக்கடங்காத வேதனையுடன் அமுற்பிரவையாகிய மாபூதியென்னும் நரகத்திலுண்டாகும்துன்பத்தையும் அநுபவிக்கும்படி செய்விக்கின்ருன்.

மேற்கண்ட சரீரத்தை இரவலாகப்பெற்ற மானிடன் தான் இன்னானென்பதைத் தெரிந்துகொள்ளாமற் போவது விசனகரமாயிருக்கிறது. அகோ! இப்படியாகச் செய்துகொள்வது ஆச்சரியம். அப்பா சங்கரா! இச்சரீரத்தை இரவலாக நீ பெற்றவனாயிருந்தும், உன்னை நீ இன்னானெனபதாகத் தெரிந்து கொண்டவனா யில்லை. நீ இன்னானென்பதை நாம் தெரிவிக்கிறோம்கேள். நீ இப்போது ஜீவனாயிருக்கிறாய். உன் ஜீவபோதம் நஷ்டமானால் சிவமயமாய்ப் போகுவாய்.

பிரபுலிங்கலீலை.

பூதம் நீயலை பொறிகளும் நீயலை புந்தி
யேது நீயலை யிவற்றினை யயங்கியா னென்னும்
போத நீயலை யென்றிவை யனைத்தையும் போக்கிச்
சோதி யாகிய பிரமமே நீயெனச் சொலலி.

தேகபோகத்தால் நிகழும் யானெனதென்னும் அகம்பாவத்தால் நான்நானென்று சொலலிக்கொண்டு மம்மதையடைகின்ற ஜீவபோதமானது உனக்கு நீங்குமாகில் அப்போது நீ சிவனாய்விடுவாய். அதனால் தேகமமுதலியவைகளெல்லாம் பொய்யாய்ப் போகும்.

மேற்கண்டபடி சரீரத்தை இரவலாகப் பெற்ற மானிடர்களில் யார சனனசாகரத்தில் நின்று வெளிப்படும் பொருட்டு வேதமுதலாகிய கலைகளாலும் காண்பதற் கரிய சிவபிரான் திருவடியை யடைய விரும்புகிறார்களோ அப்படிப்பட்டவர்கள் பொய்யுடன் கலந்த மாறுபாடுகளையும் தேக அபிமானத்தையும் பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தங்களில் செலுத்தும் யான் எனது என்கிற அபிமானத்தையும் விட்டுவிட முயற்சிசெய்யவேண்டியது அவசியமாயிருக்கும். அப்படி நீக்குபவர்களுக்கு உலகத்தில் பெருமையும், சிறுமையும், விருப்பும், வெறுப்பும், இருதயத்தில் போர்செய்யும் சங்கற்ப விகற்பமும் நீங்கி மனம் பரிசுத்த நிலையை யடையும்.

இப்படிப்பட்டவர்கள் நினைவானது, சுத்தப்பிரமம் பரமாத்மாவாகியும் யதார்த்தமாயும் பிரகிருதிமுதலிய சர்வ வியாபி

யங்களாயும் இருக்கிறதென்கிற எண்ணத்தை யுடையவர்களாதலால் அவர்களுடைய மனோவிருத்தி அணுவாயும் அறிவு அகண்டாகார சொரூபமாயு மிருக்கும். ஆனால் சொரூபவிசாரணை பண்ணாத அஞ்ஞானிகளுடைய அறிவு அணுவாகவும் மனோவிருத்தி அகண்டாகாரமாகவும் பெற்றுத் தமக்குத்தக்க பிராரத்துவவசத்தராய் சனன மரணத்தில் அழுந்தி வருந்துவார்கள். எந்தச்சிதாபாசன் தெளிந்த அறிவை அகண்டமாயக் கைப்பற்றுகின்றானோ! அப்படிப்பட்டவன் தீங்குசெய்யும் ஆசையாகிய துஷ்டப்பேய்களை விரட்டியோட்டுபவனாயும், சங்கற்ப விகற்பக்கூட்டங்களைத் துரத்தி அதம்பண்ணுபவனாயும், மாயையாலுண்டாகும் அஞ்ஞானத்துடன் போர்செய்து அதை வெற்றி கொள்பவனாயும், பக்தியுடன் வாழ்ந்து சிவனது அடியார்களுக்கு அடியானாயிருந்து வேண்டிய பணிவிடைகளைச்செய்து விபூதியைத் தேகத்தில் நிறையப் புனைந்து உருத்திராக்ஷங்களைச் சிரசாதிஸ்தானங்களில் தரித்து இறப்புப் பிறப்பாகிய பிணியை மாற்றும் சிவபெருமானது திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் சதா செபித்து ஏகனாயும அநேகனாயு மிருக்கின்ற பசுபதியாகிய நடேச மூர்த்தியைப் போற்றித் தொழுபவனாயு மிருப்பான்.

வின.—ஐயனே! நடேசபெருமான் ஏகனாயிருப்பதாக நூல்கள்கூறப்படுகின்றதே அப்படியானால் உபாதிததிரையர்களாகிய சீவர்கள் வெவ்வேறாக இருக்க, இவர்களையே அந்த ஏகனாகிய கடவுளாயிருப்பதாய் எப்படி சொல்லக்கூடும். அப்படி பரமாகிய வஸ்து ஏகமாயிருக்கிறதாயிருந்தாலது பலவாகப் பின்னப்பட்டிருப்பானேன்?

விடை.—நிர்விகாரராயும் நித்தியராயும் அகண்டிதராயும் இன்னும் அனந்த இலக்கணங்களை யுடையவராயுமிராநின்ற சிவபிரான் ஒருவனாக விருந்தாலும், பலபிம்பங்களாகவுந் தோன்றுவார். அது எப்படியெனில், ஆகாய சூரியனொன்றே நீர்க்குடங்கள்தோறும் தனித்தனி சூரியர்களாகத் தோன்றுவதுபோலவும், அநேக துண்டுகளாக உடைந்த ஒரு பெரிய கண்ணாடியின் எதிரில் ஒருமனிதன் நிற்பானாகில தான் ஒருவனே அநேக பிரதிபிம்பங்களாகத் தோன்றுவான்போலவும் காணப்படும். அப்படித்தோன்றின போதிலும், தோன்றும் பிரதிபிம்பங்கள் சூரியனையும், தன்

ளையுந் தவிர வேறல்லவென்றும், தோன்றும்பொருளொன்றே சத்தியமென்றும் சொல்லப்படும்.

தங்கமானது அநேக நாமரூபங்களையுடைய நகைகளானபோதிலும் தங்கத்திற்கு ஹானி இல்லையாம். நகைகளாகிய பொருளும் ரூபங்களும் போனபோதிலும் தங்கமாத்திரம் எப்படி யழியாதிருக்கின்றதோ அதுபோல் பிரமமாகியபரமொன்றே பலவுயிர்களோடுங் கலந்து தோன்றும் அகண்ட வடிவான பொருளாயிருக்கும். சொரூபத்தை மறைத்த மாயையானது அஞ்ஞானவடிவாய்த் தோற்றியதில் பிரபஞ்சமாயும் தேகமாயும் எதிர்பட்டதால் அப்பரம்பலவாகத் தோன்றுகின்றது. தன்னைத் தானறிந்து பார்க்கில், தன்னைத் தவிர அன்னியமாக வேறொன்றும் இருப்பதாகத் தோற்றாது. தன்னையும் பிரபஞ்சத்தினையும் உள்ளபடி விசாரித்துப் பார்க்கில் அப்போது பரமபிரமமுதல் பிபீலிகாந்த பரியந்தம் பூரண அத்துவிதமாகிய சைதன்னியமாக விளங்குவதாய் ஏற்படும். அது சுகசொரூபமாயும், எல்லா வடிவங்களுந் தானாயுமிருக்கும். அப்படியிருந்தாலும் அந்த அந்த ஆத்மாக்களின் கன்மத்துக்கீடாக நல்லதும் பொல்லாததுமாகத் தோற்றப்படும்.

இப்படி அவ்வஸ்து ஏகமாயும், உபாதி சகிதமாகநின்றுநிகழும் எண்ணரிய உயிர்களது உளங்களில் வாசமாயும், எங்குமாயும், எங்கும் நிறைந்த முழு முதலாயும் விளங்கிநிற்கிறதென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தால், சுருதி யுத்தி அநுபோகங்களுடன் கூடிய விசாரணையினாலே தெரிந்துகொள்ள வேண்டியது.

சமுசார வாரியிற் படிந்து கிடப்பவனாகிய ஒருவன் சாராயம் கள்ளு அபினி கஞ்சா முதலியவைகளை நன்றாய்ச்சாப்பிட்டுப்போதை கொண்டவனாயிருக்கையில் உலக லீலாவிநோத விஷயங்களைப்பற்றி அவனுக்குத்தெரிந்ததைப் பேசுவானானால், அவன் எவ்வளவு ஆனந்தமாய்ப் பேசுவானோ அதுபோல, உலக விவகாரங்களை மறந்து ஐம்புலக் காட்சி முதலானவைகளைத் தொலைத்து ஏகபாவனாதீதர்களாய் நின்று பிரமானந்த அநுபோகத்தில் போதைகொண்டு களித்திருக்கு மெய்ஞ்ஞானிகள் அந்தப் பரம் ஏக மென்பதையும் அதன் மகிமையை

யும்பற்றிப் பேசுகிறதானால் மிகவும் பெருமையாய்ப் புகழ்ந்துபேசு வார்கள்.

அக்ஷரங்கள் தோறும் அகரவுயிரானது சென்று அவ்வவ் வக்ஷரங்களை இயக்குவிப்பதுபோல, பரமான்மாவாகிய சிவ மொன்றே சகலான்ம கோடிக ளிடத்திலும் அந்தராத்மாவாக நின்று அவ்வவ்வான்மாக்களை இயக்குவிக்குப.

சிவஞானசித்தியார்.

ஒன்றென மறைக ளெல்லா முரைத்திட வுயிர்க ளொன்றி
நின்றன வென்று பன்மை நிகழ்த்தவ தென்னை யென்னி
னன்றவை பதிதா னொன்றென் றறையுமக் காங்க டோறும்
சென்றிடு மகரம போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே.

பிரமமானது பலவடிவமா யிருக்கு மென்பதற்குப் பிரமாணம்.

திருவாசகம்.

நிலநீர் நெருப்பு நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ.

பிரமமானது பலகோடி அண்டங்களாகவும், திசைகளாகவும், தேவர்களாகவும், உடல்களாகவும், தத்துவங்களாகவும், இன்னும் பலவாகவு மிருக்கும்.

திருமந்திரம்.

தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே யுடலுக் தத்துவமாய் நிற்கும்
தானே கடல்மலை யாதியுமாய் நிற்கும்
தானே யுலகில் தலைவனு மாமே.

### தாயுமானவர்.

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறா
யமர்ந்தெனவ கிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல தாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம்.

### இதுவுமது.

ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
வொளியாகி வெளியாகி யுருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுட னுற்பத்தி நண்ணு தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
வெந்தையே யெம்மானே யென்றே னேங்கிக்
கன்றாகிக் கதறினாற் குரைசே தாவாகிக்
கடிதினில்வந் தருள்கூருங் கருணை விண்ணே.

### திருவிளையாடற் புராணம்.

மண்ணாயப் புனலாயக் கனலாய் வளியாகி
விண்ணா யிருசுடரா யித்தனையும் வேறாகிப்
பண்ணா யிசையாயப் பனுவலா யெங்கண்ணுங்
கண்ணாளு மென்னுறுகண் காணுவா றென்கொல்லோ.

இப்படியாக அந்த அடியார் சங்கரனுக்கு உபநிஷத மகா வாக்கியங்களின் போதனையைச்செய்ய, சங்கரனானவன் சதா சிவத்தியானஞ் செய்யும் அப்பியாசத்தைக் கைப்பற்றி ஞானத்துக்கேதுவான குணங்களையும் சிவசின்னங்களையும் உடையவனாயிருக்கும்போது, மோகனாங்கி என்கிறபேருடைய அவன்

மனைவி ரூபவதியாயும் சோரத்துவ ஞ்செய்வதில் சிறந்தவளா யுமிருந்தாள். இப்படி இருக்க சச்சிதானந்தசுயம்பிரகாசமாய் விளங் காநின்ற சகளவடிவான நடேசரிடத்தில் அதிகபக்தியுடைய இரண்டு அடியார்கள் பழனிஆண்டவரைத் தெரிசனஞ்செய்வதற்குப் புறப் பட்டுப் பழனிக்குப்போகையில் அவர்களுடன் சங்கானும் கூடிக் கொண்டுபோனான். அதற்குப்பின் இரண்டு மாசங்கழித்து அவன் தன்னூருக்குத் திரும்பிவந்தான். அப்படி வந்தவன் தன் இல்லத்துக் குப்போகாமலே அவன் ஊரைவிட்டுப் போகும்போது தான் பயிர் செய்திருந்த கம்பங்கொல்லை என்னமாயிருக்கிறதென்று பார்க்க மேற்படி கொல்லைக்கு நேராய்ப்போனான். விளைச்சற் காலத்தில் பற வைகள் தானியத்தைத் தின்று அழித்துப் போடாமல் அவைகளை ஓட்டுவதற்காகக் கொல்லையின்மத்தியிற் கட்டியிருந்த பரணின்மே ரில் தன்மனைவி ஒரு சோரநாயகனுடன்கூடி இருந்ததைக்கண்டு சினங்கொண்டு அவர்களை அடித்துத் துன்பப்படுத்தும்படி தரையிற் கிடந்த கற்களைப்பொறுக்கி மடியிலவைத்துக்கொண்டான். இதைக் கண்ட அவன்மனைவி பயங்கொண்டு ஆ! ஆ! இந்த அபாயத்திலிருந்து தப்பித்துக்கொள்ள உபாயம் யாதென்று யோசித்து மோகனுங்கியா னவள் தன் சோரநாயகனைப் பார்த்துச்சொல்லுவதாவது, ஓ எனது பிரிய காதலனே! என் புருஷன் இதோ வருகிறான். நானதலைமயிரை அவிழ்த்துவிட்டு இந்தப்பரணின்பேரிலிருந்து கீழே தொபவென்று குதிக்கிறேன். இதோ பரணின்பேரிலிருக்கும் கறுப்புக் கம்பளி யைப் போர்த்துக்கொண்டு தடியைக் கையிற் பிடித்துக்கொண்டு நீயும் என்பின்னால் குதி. அப்போது நான் ஓட்டம்பிடிக்கிறேன். நீ என்னைப்பின்தொடர்ந்து துரத்திக்கொண்டு கையிலிருக்கும் தடியால் ஓங்கி மெதுவாய் என்னை ஓர் அடி அடி. நான் கீழேவிழுந்து மூர்ச்சை போனவள்போலப் பாசாங்கு போட்டுக் கொள்ளு கிறேன். நீ கொஞ்ச தூரம் போனபின் இரண்டு கல்லை எடுத்து என் புருஷன்பேரில் எறிந்துவிட்டு ஓட்டம்பிடி. பின்பு அவன் இவை களை என்னவென்று வினவுவானாகில் நான் சொல்லும் விதமாகச் சொல்லிக்கொள்ளுகிறேனென்றாள், பிறகு இருவரும் மேற்கூறிய படி செய்தார்கள்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஆத்மபோதப்பிரசங்காமிர்தம்.



## ஆறாவது பிரகரணம்.

## மநோவிலக்ஷணம்.



சீகாழியென்னும் பதியில் சற்றேறக்குறைய நூறு ஆண்டுகளுக்குமுன் விஸ்வநாதன் என்னும் பேருடைய ஒருவனிருந்தான். இவனிடத்தில், வேதாகமசாஸ்திரபுராணஞானங்களையெல்லாம்ஓதியுணர்ந்தவராயும், தூயமனத்தையுடையவராயுமிருந்த சிவநேசராகிய ஒருபெரியவர் வந்திருந்தார். அவர் விஸவநாதனைநோக்கிக் கூறியதாவது, அகண்டாகார ஞானத்தினுல் ஜீவசாக்ஷியாயிருக்கும் கூடஸ்தனை மறைத்திருக்கும்மாயா காரியத்தாலுண்டானபசுக்களாகியசிதாபாசர்கள் ஐம்புலவடிவத்தாலான சரீரத்தை அடைந்து மோகவிஷய இச்சையால் வேடன்விடுத்த வலையிலகப்பட்ட பேதையான்போல் வார்தாங்கும் கொங்கையர்களுடன் கூடிவாழ்ந்து அதில்மகிழ்ந்து ஸ்ரீஅகிலாண்டகோடி பிரமாண்டநாயகராயும் ஜகதீஸவரராயும் வேதங்கள் வேதாந்தங்கள் ஸ்மிருதிகள் இதிகாசங்கள் புராணங்கள்பெருமையாகக்கொண்டாடிப்பேசும் சர்வகாரணமானநிர்ச்சலப் பிரமமாகியஉமாதேவிபங்களை ஸ்மரிக்காமல் பாவிகளாய்ஜனனமரணத்தையடைந்து துன்பப்படும்படிநேரிடுவதாயும், ஆனல் யார்ஆணவம்காமியம்மாயை என்னும் பக்ஷிகளைஓட்டி அஞ்ஞானத்தைப் போக்கிக்கொள்ள முயற்சிசெய்கிறார்களோ? அப்படிப்பட்டவர்கள் மலத்திரயங்களைப் போக்கி, சித்தசுத்தியாகிய தூயகுணத்தையுடையஅடியார்க[illegible]

ரிகளெல்லாம் பாலிக்குங்குருபர, வேதசிகாமணியாய், இச்சையை யொழித்தவர்களுக்கு யெப்போதும் துணையாயிருப்பவராய், நான்கு வேதங்களின் பொருளாகிய உபநிஷத்வாக்கியங்களினுடைய முடி வில் விளங்கும் இரகசியப்பொருளாய், இந்திரியகோசரமா யிருக்கும் பிரபஞ்சமெல்லாமறைந்தன்னிய விவர்த்தமாக விளங்கும்வஸ்துவாகியு மிருக்கின்ற சிவபெருமானுடைய அடியார்களைநேசித்து ஞானநூல் களைவாசித்துப்பயிற்சிசெய்து வந்தால் அஞ்ஞான இருள்நீங்கி "அவ னன்றியோரணுவு மசையாதெனும்" பழமொழிக்கிணங்க ஆன்ம கோடிகட்குப் போகத்தினை யூட்டி வைப்பான்கருதி அவர்களையசை விப்பான் அருட்பெருஞ் சபையில் திருநடம்புரியும் அருட்பெ ருஞ் சோதியாகிய நடேசபெருமானுடைய பாததாமரையாகிய திருவடியையடையத்தக்கதா யிருக்குமென்று அந்தச்சிவநேசர்கூறி னார். இப்படியாகச் சிவநேசர் கூறியதைக்கேட்ட விஸ்வநாதன் அவ் வூரிலிருக்கும் ஓர் பெரிய மடத்திற்குஅடிக்கடிபோய்வேதப்பொருளை பெறக்கொண்ட பல நூல்களையும் ஆராய்ந்து, சைவசித்தாந்த நெறித் தலைவராயும் நிமிஷமாத்திரம் நிலைபடாது அலைகின்ற மனத்தைச் சிவசாதகமாகிய கயிற்றாற்கட்டி, ஒருநிலையில் நிறுத்தி, தூலமுதலி யனவாகிய உபாதித்திரயங்களை நானென்றழுந்தி யிருக்கும் மயக்க மான ஜீவபோதத்தைக் கெடுத்து, சித்தசுத்தியால் ஆத்மசொரூபமே நித்தியமென்றுணர்ந்து, ஆத்மஞானசாட்சாத்காரஸ்வரூபத்தை நிரு விகற்பாங்க நிட்டையினாலுஞ் சோபாதிக நிட்டையினாலும் சலட் சண விலட்சணவிதமாக வுபாசனைசெய்து, அந்தகைய நிட்டைகூடா தவழி பஞ்சாக்கரத்தில யகாராதி நகாராந்தம் பீஜமாக ஈசானாதி மந்திரங்களை யங்குஷ்டாதி கநிஷ்டாந்தமாகவும் ஹரஸ்வப் பிரண வாதி யகாராந்தம் பீசமாக இருதயாதி மந்திரங்களை கநிஷ்டாதி யங் குஷ்டமாகவும் நியசித்து, சிரசுமுதல் பாதாந்தம் இருதயாதி அஸ்தி ராந்தம் அந்தப்படியே நியசித்து, பஞ்சாக்ஷரத்தினாலே பஸ்மீகரணம் பண்ணி, இருதய கமலத்தினடுவே ஆன்மலிங்கத்திலே பஞ்சப்பிரம ஷடங்கமூர்த்தியாகிய சதாசிவ தேவரைப் பூஜைபண்ணி, குண் டலிமஸ்தகத்தில் நாபிகுண்டத்தில் வைந்தவாக்கினியிலே சந்திரமஞ் [illegible]த்தி லமிர்தங்கொண்டு ஓமம்பண்ணி, புருவமத்தியத்தில் மூலாக் [illegible]யெழுப்பி, வாயுவனிபீசத்தையுச்சரித்து, சமாதியடைந்து,

ஆஞ்ஞாசத்தி பிரேரிக்கச் சிவானுபவம்பெற்றுத் தன்னையறிந்து, பரனையுணர்ந்தவராயுமிருந்த அந்தமடத்துக்குத் தலைவராகிய மகானைக்கண்டு வணங்கி பாதம்பணிந்து எழுந்து அவர்முன் கைகூப்பி வணங்கிநிற்பான். அவ்விடத்தில் நடக்கும் பிரசங்கத்தைக் கேட்டுப் போவான். அவன் சிலநாளாய்மடத்துக்குவராமலிருந்தான் அப்படியிருக்க ஒருநாள்மடத்துக்குவந்தவனை அம்மடாதிபதிநோக்கிஅப்பா தம்பி! விஸ்வநாதா! நீ முன்செய்தமாதவத்தால அடிக்கடி இம்மடத்துக்கு வந்து பிரமத்திற்கு அபின்னமாயிருக்கின்ற பரையசைவான பரையைவிற்றோற்றிய பிரபஞ்சத்தில சகலகேவலமெனனும் இரண்டவத்தைகளோடும் சோந்துவசிக்கும் சீவர்களுக்குண்டாயிருக்கும் உபாதியைபபற்றியும், சுத்தபிரமம மாயாசமபந்தத்தாலே ஈஸ்வரனென்றும் அவித்யாசமபந்தத்தாலே ஜீவனென்றும் விவகரிக்கப் படுகின்றதையும, பசுபாசஙகட்கு முதன்மையாகவிருக்கும் பதியினிலக்கணத்தைபபற்றியும,அப்பதிசெய்யாநின்ற பஞ்சகிருத்திய விலக்கணத்தைபபற்றியும, அப்பஞ்சகிருத்தியத்தால உண்டாகும்சாக்கிராதிய பஞசாவததைகளின இலககணததைபபற்றியும், சிவன் என்னுந்திருநாமம இன்னது என்பதைப்பற்றியும, அந்த கடவுளுக்காந்தன்மையையும,அககடவுளாகிய சிவத்தினதுதிருவடித் தெப்பமே சனனசாகரத்தைக கடபித்து முத்தியெனனும்பேரின்ப நிலைக்கரையில் உய்விக்கும பாரகத்தைபபற்றியும், அத்தெப்பத்தையடையுஞ் சமயம் வைதிக சைவசுத்தாத்துவித சித்தாந்த சமயமாம் என்பதைப்பற்றியும், அச்சமயம சரியை முதலாகிய நானகு மார்க்கங்களைக் காட்டும என்பதைபபற்றியும், இவை முதலிய இலக்கணங்களைப் பற்றி நடக்கும் ஞானப்பிரசஙகத்தையும, வேதங்கட்குச் சிரங்களாகிய வுபநிடதஙகளுடைய சாரமான ஆகமத்தினுண்டாகும் ரகசியப பொருளையும், வேதாந்த மகாவாக்கியத்தாலுண்டான வேதரகசியத்தின் பொருளையும் கேட்டுக்கொண்டு போகப்பட்டவனுயும, சாதுசங்கம் சாத்திராராய்ச்சிபழக்கத்தில் பிரீதியுள்ளவனுயும், சதா ஈஸ்வரபக்தியையும், குருபக்தியையும் கைப்பற்றினவனுயும், வேதாகமங்களிற் கூறியநெறிசெல்லாக்குப்பிறப்பிறப்பு நீங்காதென்பதையும், சிவனடித்திருவடியை மறவாது சரியைகிரியைகளைச்செய்கின்ற சீவர்களிடம் கொடிதாகிய கூற்றன்வாக்கு [illegible]

னென்பதையும்பற்றி, நம்மால்பலதடவைகளில் எடுத்துக்கூறப்பட்டிருப்பதை அடிக்கடி கேள்வியுற்றுப்போகின்றவனுயிருந்த நீ இப்பால சிலமாதங்களாய் மடத்திலநடந்துவரும பிரசங்கத்துக்குவராமல் தவறிப்போனதற்குக்காரணமயாதென்று வினவினர். அதற்கு விஸ்வநாதன், ஐயா மடாதிபதியாகிய அண்ணலே! அடியேன் வியாபாரமூலமாயக் கப்பல யாத்திரை போயிருந்து ஊருக்குவந்து இரண்டுமாதமாகிறது. வியாபாரவிஷயத்தில அதிகசங்கடம் நேரிட்டிருந்தமையால் அடியேன்தங்களைவந்து கண்டுதெரிசிக்கக் கூடாமையாய்ப் போய்விட்டது என்றனன்.

விஸ்வநாதா! இதற்குமுன்னபோதே வேதங்களையுணர்ந்தசிவனடியார்சேவை-சிவாலயசேவை-சிவசின்னதாரணம-சிவலிங்கதரிசனம் சிவதிருப்பணி-சிவசரித்திரபாராயணம-சிவபுண்ணியசாதனம்இவைகளைசசெய்து தங்களைப்பற்றிய அநாதிமலசத்தியையும் அதனலுண்டாகும் மாயைபுமபோகத்தி நித்தியானந்த பெருவாழ்வைஅடையமுயற்சிசெய்யாமல் அதனறு அறிவைக்கெடுக்கும் மும்மலங்களை நிலையாகப் பிடித்துக்கொண்டு பிரபஞ்சவாசனையா லுண்டாகும் அஞ்ஞான சமசாரிகளாயிருப்பவாகள போகவைஸ்வரியங்களை அடைவதற்கு அனேககரும பேதங்களாகிய கிருஷிகளையே செய்துகொண்டிருப்பதன்றி, பாபபுண்ணியங்கள் இன்னதென்பதையும், ஆத்மாநாத்மவிலக்ஷணம இன்னதென்பதையும் தெரிந்துகொள்ளாமல், அஞ்ஞானத்தால மனேசங்கற்பம விரியபபெற்ற வற்பவறிவையுடையவர்களா யிருப்பாாகள். இதனாலேயே இவாகள் அநாதியாயுள்ள பதிபசு பாசமென்னு முப்பொருள்களுள் பசுபதியைநோக்காது பாசத்தையே கைப்பற்றிக்கொண்டிருப்பதில் மரணநிச்சயமென்பதை யறியாமலும், உலகத்திலுள்ள ஞான நூல்களைப் படித்தாலும் அவற்றினதுபொருள்களை ஆராய்ந்து அறிந்து கொள்ளாமலும், உலகாசார வழக்கத்தில் ஓரணுவளவாயினும் துறந்து உள்துறவு கொள்ளாமலும் போவதினலே எமன் இவர்களைவிடாமல் பிடித்து இழுத்துக் [illegible]மலோகம் கொண்டுபோய் அவ்விடத்தில் கோல்கொண்டு வாளாலறுத்தும், சூலத்தாற்குத்தியும், நெருப்பு ஆற் [illegible]த்தும் ஆகியஇவ்வேதனைகளைச் செய்வானென்ப

தையும், பின்பு மிருகசண்டாளமாகிய கர்த்தபத்திற்கும் கீழாகிய சந்துக்களினிடமாகப் பிறந்து துன்பப்படுவோ மென்பதையும் அறிந்துகொள்ளாமல் இவர்கள் மோகமயமான பாசத்தால் அனுக்ர சம்பந்தமான விஷயபோகமெனும் பெருங்காட்டில் உலாவும் தேகத்துக் குரித்தான விடயவாசனைக் குள்ளாகி, சனனத்தைத் பாருமல் நிலைபெறச்செய்யும்பொருட்டு அஞ்ஞானத்தினுலும் பாபத்தினுலும் பிராரத்தகர்மத்தினுலும் அப்படிசெய்துகொள்ளுகிறார்கள்.

வின. ஐயா! பிராரத்தகர்மமென்று சொல்லப்படுவது யாது?

விடை. பிராரத்த கருமம்யாதெனின், சீவர்கள் முன்ஜனனங்களில்செய்த இருவினைகளின் பலனென்றுசொல்லப்படும்.

வின. ஐயா! மானிடவுடலையெடுத்த கிஞ்சிக்ஞர்களாகிய சிதாபாசர்கள் பிரதிஜன்மங்களிலும்செய்யும் பாபங்களுக்காக மரணந்த காலத்தில் காலன்அவர்கள் உயிரைப்பாசக்கயிறுற்பிணித்துவருத்தி எமலோகத்திற்குக் கொண்டுபோய் பலவித தண்டனைக்குட்படுத்துவதாயும், அதனாலந்தப் பாபிகள் பாபக்குற்றத்தினின்று விலக்கப்படுகிறார்களென்பதாகவும்சொல்லப்படுகிறதே அப்படியிருக்கப் பிராரத்த கருமம் மீண்டும் உண்டாவதற்குக்காரணம் யாது?

விடை. பாபஜீவாத்மாக்களா யிருப்பவர்கள் மாயாப்பிரபஞ்ச வாழ்க்கையிலிருக்கும்போது தருமார்த்தகாமமாகிய அபரபுருடார்த்தமூன்றைச்சொல்லும் வேதத்தின் கன்மபத்திகாண்டத்துக்குங் காமிகமாதியாகமத்துக்கு மேலான மோட்சமாகிய பரபுருடார்த்தத்தைச்சொல்லும் ஞானகாண்டமாகிய வுபநிடதத்தில் விளங்காநின்ற மகாவாக்கியார்த்த சொரூபனாகிய நடேசப்பெருமானைப் போற்றித் தொழாத தப்பிதத்துக்காகவும், இன்னும் அநேக ஆடாத காரியங்களின் செய்கையா லுண்டாகும் தீமைக்காகவும், அவர்களுக்கு எமலோகத்தில் முழுத்தண்டனை விதிக்கப்படாமல் பாவத்தின்பிரமாணத்தில் ஒரு சிறுபாகத்துக்கு மாத்திரம் தண்டிக்கப்படுவதாயும், முழுத்தண்டனை செய்கிறதானால் அதை அந்த ஆத்மாக்கள் சகிக்க வல்லமை யுடையரா யிராவென்பதாக வெண்ணிப் பாபத்தின் [illegible]

பாகத்தைக் குற்றத்தினின்று நீக்கி விசேஷதாயிருப்பதினாலே சேட யாக நின்றபாபமானது பிராரத்தகருமமாக நிற்கும்படி நேரிடுவதாகச் சொல்லப்படுகிறது அன்றியும், பிராரத்துவமனுபவிக்கையில் நேர்ந்த போகங்களைச் செயல்வகையாகக்கொள்ளாது கருத்துவகையாகக் கொள்ளுதலின் அக்கருத்து அச்சென்மத்திலேயே ஆகாமியமாக விளைந்து அவ்வாகாமியம் பிராரத்துவமாகிச் சென்மங்கள்தோறும் தொடருமாகலின் எவ்வாறு சென்மத்திலும் பிராரத்துவமுண்டாம்.

இப்படியாக அஞ்ஞானம் ஆணவம் விட்டசேயம் மாயைநல்வினை தீவினை பிராரத்தகாமியமாகிய பாபவினை இவைகளால் கிடைத்த புழுக்களும் மலங்களும் நிறைந்த நவத்துவாரங்களையுடைய பஞ்சகோசமாகிய பயனற்ற இந்தச் சோற்றுமயமான உடலை எடுத்துக்கொண்டு இவ்வுலகத்துக்கு வந்து தோற்றிய பரவாசகங்களில் சம்பந்தப்பட்ட அவித்தியாசக்திதரராகிய சிதாபாசர்கள் இவ்வுலகத்துக்கு வரும்போது யாதொருபொருளையும் கொண்டு வந்தவர்களல்லர். அவர்களால் ஆர்ச்சிக்கப்பட்டுப் பத்திரமாகச் சேமம் செய்துவைத்திருந்த பொருளை அவர்களுயிர் உடலைவிட்டுப் போகையில் அப்பொருள்களைக் கூடக்கொண்டுபோவார்களல்லர். அவர்கள் இவ்வுலகத்தில் நெடுநாள் நீடித்து இருப்பவர்களுமல்லர் இவர்கள் மீண்டு மீண்டெடுத்த உடல்களையும் அவர்களுடைய பாலியம் கனாக்குப்பாரங்களில் நாலுயிர்களைத்துக் குட மேலனகாரிருக்கும்.

சிவசங்கரசுவாமிகள்.

எடுத்தசனனங்க டொறு மீன்றெடுத்ததாயமார்
கொடுத்தமுலைப்பாலனைத்துங் கூட்டி - லெடுத்துவளர்
பைங்காகனைத்துயிலும் பாலாழியுஞ் சிறிதாம்
மனஞ்சிதப்பார்த்த வா.

ஞானவாசிட்டம்.

கையினு லறையுண்ணும் பந்துபோல் காலினுலறையுண்டு கணக்கிலாத, மெய்யிலே புகுந்திளைத்தும் விவேகம்பெற்றுமே விரகிலார் சிலர் பிறப்பின் மீளவிழ்ந்தார், மையினுன்மூனறுல்குற பண

திசெய்து வருகிற்கும்போயாகி வளர்ந்து வாளா, பொய்யினுன்மிக
விரியும் வேலையூடேபொருதிணைபோற்பாபகுதந்தேபுரிந்தாய்மற்றும.

ஜீவர்கள் அஞ்ஞான நிலையில் சிவாசத்துவமுதற் பிருதிவி
தத்துவ மீறாக உத தத்துவதாத்துவிகளாய் நின்று அவன்
அவள் அதுவெனச் சுட்டி யுணரப்படும் சடசுவாதி பாகியேந்
திரிய கோசரமாய்க்காணும பிரபஞ்சவாசனையில முயன்று மாயா
ரூபமான சங்கற்பவிகற்பங்களிலுலே சொடிய மனோவிருததியைக்
கடாதிவிளைய அஞ்ஞானத்தில் செலுத்தி காமக்குரோதலோபமோ
கமதமாச்சரியங்களின்வலைப்பட்டதால் தூரசகிருத்தியாதிகளைச்செய்து
வாளுளை வீணுக்கழித்து அவமாயப்போகிறார்கள். இசசிதாபாசர்
கள் அஞ்ஞானத்தைப்போக்கி மெய்ஞ்ஞானத்தை அடைய ஆத்ம
சொரூபத்தை யபரிவிக்கும் நூல்களை யாராயாச்செய்து தத்துவவி
சாரஞ்செய்து அததத்துவங்களை நகளைந்து சிரவணமனன நிதித்தியா
சனபலத்தினுல வஸ்துநிணயம் பண்ணி சாஸ்திரார்த்தங்களையு
ணர்ந்த சிவனடியார்களுடைய சகாயம்பெற்றுச சகலமும் பிரமார்ப
பணம்பண்ணி யான் எனது எனனும செருககறுத்துச் சிவபிரானைச
சலனமற்ற மனத்துடன் அனவரதப்போற்றித தொழுது தத்துவஞா
னம்பெற்றுப் பாவனுதீதமான துரியாமபத்தை அடைய முயற்சி
செய்யாமல், அஞ்ஞானமாகிய சக்கரத்தில உடகாருந்து ஊசலாடிக்
கொண்டு சாயையென்னும் குடும்பத்தின் துக்கத்தைச் சுமந்துகொண்டு
யானென்றும் எனதென்றும் அபிமானிக்கப்படும் பொருளாயுள்ள
தனுவாதிகளைத் தன்னுடைமைகளாக அபிமானிக்கும் அகம்பாவத்
தால் மயங்கி யார் தடுமாறிமயங்குகிறார்களோ அப்படிப்பட்டவர்க
ளைச் சிவத்துரோகிகளென்றும், ஆத்துமத்துரோகிகளென்றும்,
பஞ்சமகாபாதகர்களென்றும், அஞ்ஞானப் பிரஷ்டர்களென்றுங்
கூறப்படும். ஆகையால், இராமா இராவணசங்காரம்செய்து செயங்
கொண்டதுபோல் யார்மனமுதலிய தத்துவங்களாகியசேனைகளுடன்
அமர்செய்து அவைகளைசசெயித்து சுவாதீனப்படுத்திக் கொள்ளுகி
றார்களோ அவர்களை விவேகத்தில் பெரியவர்களென்றும், மகான்க
ளென்றும், விடயமெனும் பகையை யெளிதில்வெல்லும் சூராதிசூரர்
களென்றும் கூறப்படும்.

ஏகதுக்கத்துக்குப் பிரசாரப்பிறவியாகிய பட்டிக்கிரியாநின்ற கள்ளமனத்தைச் சுவாதீனப்படுத்திக் கொள்வதனாலே உண்டாகும் பலத்தை இவ்வளவென்று சொல்ல அசாத்தியமான காரியமாயிருக்கும். மனமுருநாசமாகின் சீவன் முத்தியும், அருவநாசமாகின் விதேக முத்தியுமாமெனக் கூறப்படும். துன்பமாகிய மனம் நசிக்கில் பிரபஞ்சாயாசபோகானுபவத்திலே மனமொருஞானதசையிலே உலோகவிவகாரங்களைப் பற்றியதாயும், மூடதசை சரவணாதி விவகாரங்களைப் பற்றியதாயும், முத்திதசையில் துரியமான பிரமவிலாசத்தைப் பற்றியதாயுமாகிய நிலைபெற்றிருக்கும்.

வினா—ஐயா! மனத்தைக் கள்ளமனமென்கிறீரதை யெப்படி சொல்லவேணும்.

விடை—ஓரிடத்தில் நில்லாமல் பலவாய இந்திரியங்களின் வழியே ஓடுகிறதும் கள்ளமனமானது சகமுகமாகிக் கண்ட கண்டபொருள்களோடிக் களிப்படைந்து பிரபஞ்சத்தைப் பொருளென்று சூதுவாது பிதற்றல் நாட்டம் பூட்டி விடாப்பிடி கூடச்செய்கை குயுக்தி சோரம் புணர்ச்சி கருவம் இடும்பு அகங்காரம் செருக்கு யடாதை அகந்தை மூர்க்கத்தனம் பாராமுகம் கள்ளஉறவாடி மோசம் செய்தல் ஆசைகாட்டிமயக்குதல் நன்றிதனை உண்டுபண்ணுதல் அந்நியனைப் பழித்தல் தீங்குசெய்தல் நன்றிமறத்தல் துரியாதீதநிலையில் கோடிசூரியபிரகாசமாய் விளங்கும் நடேசப்பெருமானை நினையாதிருத்தல் இவை முதலிய துர்க்குணங்களை யுடையதாயும் வஞ்சமுதலிய தீயகுணங்களை மறைத்துக்கொண்டு வெளிக்குச் சிநேகிதர் போல அபிநயித்துப் பேராசையுள்ள நீசசெயலைச் செய்துகொண்டிருப்பதனாலே மனத்தைக் கள்ளமனமென்று சொல்லப்பட்டது. அஞ்ஞானம் இம்மனத்துக்குத் தோழியாகவு மிருக்கும். இம்மனம் அளவில்லாத பேத அத்தியாசங்களை யுண்டுபண்ணி ஒன்றைவிட்டொன்றுபற்றி ஒன்றினும் இறையளவேனும் நிலைபடாது சஞ்சரித்துத் தீங்குசெய்து கொண்டிருக்கும். இம்மனம் வேதாகம வழியில் [illegible]வாமல் குடிலகாம்பீர வளப்பத்தையுடைய குடும்பமாயா கற்பி[illegible]உண்டாகும் பொய்ச்சாலமாகிய சம்சார சாகரத்திலழுந்திக் [illegible] தாபசர்களைத் தேனில்விழுந்து வருந்தும் ஈயைப்போல் [illegible] மூலமாதர்தம் நயனக்கொள்ளைச் சுழலில் அகப்பட்

டுக்கொண் டுழலும்படியாகச் செய்து துன்பப்படுத்தும். இம்மனத்துக்கு வடிவம் சங்கற்ப ரூபமாகையால் அச்சங்கற்பத்தில் அம்மனம் பாவமே ரூபமாகிய விடயவஸ்துக்களில் மோகரூபமாய்ச் சஞ்சரிப்பதால் சகலத்தையும் கற்பனைசெய்து அளவிலாத பொல்லாங்காகிய தீங்குகளைச் செய்து வருவதே அதற்குச் சுபாவமான தொழிலாயிருக்கின்றது. சங்கற்பரூபமாகிய மனம் எந்தெந்த விஷயங்களிற் செல்லுகின்றதோ அந்த அந்த விஷயங்களிலிருந்து அதற்குத் தக்கபடி நடத்துவிக்கும். ஆகையால்தான் மனத்தைக் கள்ளமனமென்று கூறப்படுகிறது.

வினா—ஐயா! மனத்துக்கு ரூபமுண்டா? அப்படியுண்டாயிருந்தால் அதின் சொரூபம் இன்னதென்பதாகத் தெரிந்துகொள்ளக் கூடுமோ?

விடை—ரூபமில்லை. ஆனால் ஜீவசாக்ஷாத்காரமான வாத்மபரணமாகிய மனத்துக்கு அபிமானம் சங்கற்பவடிவமாய் விஷயங்களிற் பொருந்துவதே அதற்கு வடிவம். இம்மனத்திற்குத் தொழிலியாதென்னில், நாயானது சோறுபோட்டவன் பின்தொடர்ந்து செல்வதுபோல் விஷயங்களின் பின்சென்று போவதே உரியதொழிலாகும். மனமென்னும் பேய் ஆசை என்கிற அடைமையைத் தரித்துக்கொண்டு சோரத்தொழில்களையெல்லாம் செய்து மகிழ்ச்சியினாலே சிற்றின்பத்தில் சொக்கட்டானாடிக்கொண்டு களிப்புற்றிருக்கும், இந்தக்கள்ளமனத்தை இப்படியாகப் பிரேரேபிக்கச் செய்வது மாயையென்று ஒருபொருள் இருக்கிறதல்லவா? அந்த மாயை எங்கேபிறந்ததென்று வினவில், அந்த மனோசங்கற்பத்திலே பிறந்தது. மாயை என்பதேமனம். இந்தமாயையினாலே அண்டபிண்டம் அரிகரப்பிரமாதி ரூபபேதமுண்டாகிறது. அறிவாய் நின்றால் மனமில்லை, மனமாய் நின்றாலறிவில்லை அறிவே சிவம். சிவமே அறிவு. மனோபாவமே பிரபஞ்சம். பிரபஞ்சமே சரீரம். சரீரமே தத்துவம். தத்துவமே விந்து. விந்துவே நாதமாகும்.

வினா—ஐயா! இந்தமனத்தின் வியாபாரச்சேட்டை எப்போது நாசமடையும்?

விடை—ஜீவனுக்குப் போகசாதனமாயும், மேகத்தின்கண் தோன்றிநின்று அழியும் மின்னல்போல மாயையின்கண் தோன்றி அழியத்தக்கதாயும் இராநின்ற இந்தச்சரீரத்திலுண்டான அபிமானத்தை அந்தச்சீவன் விட்டுவிட்டால் விடயவாசனாமயமான மனோவியாபாரநாசமடையும். அப்போது மனம் சித்திறகளைந்து அச்சித்தின்மயமாய்ப் பிரகாசிக்கிறதாயிருக்கும். இப்போது மலமானது சீவாத்மாவின் ஆத்மசொரூபத்தைமறைத்திருப்பதால் அம்மலத்தினைய நீங்காதவரையில் விடயவாசனாமயமாகிய மனோவியாபாரம்நாசமாகாது. மனநாசத்தை யடையவேண்டுமாயின் வெளிமுக வியாபாரத்தினை யொழித்து அகமுகமாய்நின்று குருநாதரகளாய் ஆனந்தசபேசன் திருவடியிலன்புபூண்டு ஆனந்தானுபவமாயிருக்கின்றகாலத்து மனோவியாபாரமின்றாம். அதுஎங்ஙனமெனின், மனமானது சார்ந்தவண்ணம் விளங்குந் தன்மைத்தாகலின் அம்மனத்தினை வெளிமுகவியாபாரத்தில்விடாது அகமுகத்தில் நிறுத்தி அறிவின்மயமாக விருந்துவாழுதலேயாம். இப்படிப்பட்டவன் தநு கரண புவன போகங்களில் சிறிதேனும் பற்றின்றி உள்ளும் புறமும் நிராசையுள்ளதுறவை யடையவேண்டியது அவசியமானதாயிருக்கும்.

ஒருவன் ஜனனமரணச் சிறையினின்றுநீங்கித் தன்னைக்காத்துக்கொள்ளும்பொருட்டுத் துவம்பதமாகிய ஜீவஉபாதிக்கும் தத்பதமாகிய பரஉபாதிக்கும் சாட்சியாய் நிற்பவனாகிய சிவபிரான் திருவடியை யடையவிரும்பினால் அவன் மனதை முக்கியமாகச்சுவாதீனப்படுத்திக் கொள்ளவேண்டியது.

ஓமனமே! நான் லௌகிக காரியங்களைமேற்கொள்ளாமல் பகவத்பக்திசெய்து ஜனனமரணத்தைப் போக்கிக்கொள்ள வேணுமென்பதாக ஆவல்கொண்டிருப்பதால் நீ எனக்குத் தோழனாயிருந்து நான் பேரின்பத்தை அடையும்படி உதவிசெய்யவேண்டியதாய் உன்னை வருந்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். நீ சூதுவழியேசென்று என்னை விடாதெப்போதுந் துன்பப்படுத்திக்கொண்டுவருகிறாய். பேய்பிடித்த ஒருவன் தன் அறிவின் நிலைமையையிழந்துகெட்டலைவதுபோல் என்னை நீ மோகமாகிய காமக்குழியில் தள்ளி விஷயவாசனையைக்கைப்பற்றப்பித்தனைப்போலாக்கி இடைவிடாது துன்பப்படுத்துகிறாய். நீஇனி அப்படிசெய்யாதே! உனக்குவந்தனம்செய்கிறேன். நான் பேரின்

பத்தையடைய முயற்சிசெய்து அதை அடையாமற் போவேனாகில் நான் சிவபிரானுக்கு அபராதியாயும் துரோகியாயும் எமவாதனைக் காளாயும் போய்விடுவேன். ஓ மனமே! நீ எனக்கு உதவிசெய்யாவிடில் காக்கையும், நாயும் பிடுங்கித்தின்னும் பிணத்துக்குச் சமான மானவனாய் விடுவேன்.

கவலைதரும் விஷயகாட்டில் அலையும் ஓ மனமே! நான் மாயாப் பிரபஞ்சமான இல்வாழ்க்கையில் விளையும் காம போகங்களையே கைப்பற்றிக்கொண்டு உன்னுடன் உறவாடிக்கொண்டிருந்தால் மெய் யடியார்கள் என்னைக்கண்டு வசைர்களா? நகையார்களா? என்னைமதிப் பார்களா? வறியனொருவன் தன் வறுமையையொழித்துக் கொள்ளப் பொருளுடையோன்பால் சென்று அப்பொருளை வேண்டுதல்போல், என்னை இல்வாழ்க்கையில் கலக்கவிட்டு மயங்கும்படி செய்யவிடாமல் எப்போதும் ஞானவைராக்கியங்கொண்டு சிவத்தியானஞ் செய்யும்படி யாகிய சுதந்தரத்தை எனக்குநீ அருள்செய்ய வேண்டியதாய் நான் உன்னை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஓமனமே! என் கோரிக்கைக்கு நீயிரங்காவிடில சத்தாகியசிவத் திற்கும் சித்தாகிய சத்திக்கும் இடையே நின்று விளங்கும் பேரானந் தந்தரும் பெருமானாகிய நடேசப் பிரானுடைய பாத தாமரைகளைப் போற்றி நான் பத்தியோடு தொழுது பிறவித் துன்பத்தைப் போக் கிக்கொள்ள அருகனாய் விடுவேன். பிறப்பிறப்பைத்தரும் அனைவ ளதுவாகக் காணப்படும் பிரபஞ்சத் தோற்றம் தோன்றுமாறொழித் துப் பரத்துவ மென்கிற ஞானத்தை அடைந்த விவேகிகளாயிருந்த மகான்களாகிய மெய்யடியார்கள் மாத்திரம் சிவபிரான் திருவடியை யடைந்தார்களே யல்லது வேறில்லை. மனதுநிர்மலமில்லாவிடில் ஆத் மஞானம் உண்டாகாது.

விஞ—ஐயா! ஜீவன் மனதைக்கொண்டு உலக காரியமாகிய ங்களை நடத்திவருகிறதாயிருக்க அதைநீர் இழிவாகப் பாராட்டி அல ட்சியமாகப் பேசுகின்றீரே அதற்குக் காரணம் யாது? அது எப் படிப் பேசவேண்டும்.

அடைந்து சுத்தமனமென்று பேர்வகித்துக்கொண்டிலாவும். அப்போது பஞ்சமலமு நாசமாம். அப்படி சுத்தமனத்தை உடையவர்கள் சர்வசித்தியையும் நலத்தையும் அடைவார்கள்.

## மெய்ஞ்ஞான ரகசியம்.

ஆமெனு மஞ்செழுத்தை யனுதின நெஞ்சில் வைத்தே
யோமெனும் பிரணவத்து ளொடுங்கிய மனத்தோ னாகிற்
றாமதமில்லையே காய் சர்வமுஞ் சித்தியாகும்
நாமது சொன்னோஞ் சோதி நலந்தரும் விந்தை தானே.

யார்சுத்தமனத்தை அடையவிரும்புகிறார்களோ அப்படிப்பட்டவர்கள் ஆசையைப் பற்றாமல் விட்டுவிட வேண்டியது. ஆசையைக் கைப்பற்றுகிறவனுக்கு அது எல்லாத் தீங்குகளையும் செய்யும்.

## ஞானவாசிட்டம்.

ஆசைவன் பாசத் திரளினாற் கட்டுண்
டரும்பிணி யிக்கடிக் கனுங்கி
யேகறு போகக் கழைகளான் மொத்துண்
டிச்சைமுட் கோலினா லுலைந்து
காசறு கருமச் சேற்றிலே யழுந்திக்
கடுஞ்சகக் காட்டிலே சுழன்று
வீசுமா போகத் தளிர்நிழற் றுயிலும்
வீரனே சீவனா மெருது.

இ-ள். இச்சை யென்னும் வலிய கயிற்றி னிணங்களினால் கட்டுண்டு, அரிய வியாதி யென்னும் தடிகளா லடிபட்டு, இச்சை யென்னும்தாற்றுக்கோலினாற்குத்துண்டு, கருமமென்னும்சேற்றிலே யழுந்தி, கொடிய சமுசார மென்னும் காட்டிலே சுழன்று, சீவனா மெருதுதுயிலும். வஞ்ச மனமானது இச்சா வசத்திற்சென்று மோகத்தை உண்டாக்கிச் சிதாபாசர்களைக் கோரமுள்ளநாயானது பிணத்தைப் பிடுங்கித் தின்னுவதுபோலப் பிடுங்கித் தின்னும்.

## ஞானவாசிட்டம்.

காதலெனு மனைவியின்பின் செல்லுகின்ற மனமென்னுங் கொடிய ஞாளி, பேதமைமே வியவென்னைப் பிணந்தின்னு மாதுபோல

வினா.—ஐயா! இந்த மாசிலாப் பரம்பொருளை யார் கண்ணால் காணத்தக்கதா யிருக்கும்.

விடை.—அந்தக் களங்கமற்ற பிரம வஸ்துவாகிய பரம்பொருளை அற்பமாகிய அஞ்ஞானக் கண்ணுடையோர்கள் பார்க்கச் சாத்தியப்படாது. ஆனால் சிவசின்னங்களைதரித்துச் சந்நியாசிகளாயி விருந்து வேதாந்தின் கருமகாண்ட ஞானகாண்டத்தின் உண்மையி னையும் பிரணவப்பொருளையும் தெரிந்துகொண்டவர்களான மெய்ஞ் ஞானக் கண்ணுடையவர்கள் பார்க்கக்கூடுமென்று சிவஞான சித்தியார் முத லிய பெரிய நூல்கள் பேசுகின்றன.

சிவஞானசித்தியார்.

எங்குந்தா னிறைந்துசிவ னின்றாலு மெல்லாருங் காணவே வேண்டுந் தாமென்னின், இங்குந்தா னருந்திருந்து கிடக்கினு யிருளாகும் ஈசனருட் கண்ணிலோர்க் கொளியாகி யிருளாம், பங்கமா மெனை மூம்பதுமம் பக்குவத்தை யடையப் பரிதியலர்த்திவதுபோற் பரு ருவஞ்சேருயிர்க்குத், துங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளினாலே சோதிக்குட் சோதியாயத் தோன்றிடுவன் காணே.

சிவதருமோத்தரம்.

காணார் மலத்தார கண்ணிழந்தார் கலந்தே யெங்கு நிறைந்தானை
சேணாரிரவி தனைக்காணார் சிறந்த விழியை யிழந்தாருங்
கோணா நிலையும் பூணவே கொண்டா னடியைக் கண்டார்கள்
மாணார் மூல மலவலியை மாய்த்தா ரவன்றன் வலியாலே.

வினா.—ஐயா! பரம்பொருளை அஞ்ஞானக் கண்ணுடையோர்கள் பார்க்கவல்லவர்க ளல்லவென்றும் மெய்ஞ்ஞானக் கண்ணுள்ளவர்கள் மாத்திரம் பார்க்கவல்லவர்களென்றும் கூறுகின்றீரே அது எப்படி?

விடை.—அது எப்படி யென்னில் முலைமுதிர்ந்தபெண் அம்மு லையையும் அலகுலையும் பிறபுருடனுக்குக் காட்ட [illegible] சயபுருடனுக்குக் காட்டுதல்போ லறிவுமுதிர்ந்[illegible]

பெருமானும்,பாலசந்திரனைச்சூடிய பரமசிவனும்,இமோதபாவதவ ராசன்பெற்றபெண்ணாகிய உமாதேவி நாயகனும், யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளுக்கும், வள்ளிநாயகியாருக்கு மணவாளனாகிய முருகக் கடவுளுக்கும் பிதாவானவராயிருக்கின்ற ஸ்ரீகைலாசபதியைப்பிறப்பிறப்புகளையும்முத்தியையும் பருத்தரியாவண்ணம் மறைந்திருக்கும் ஆணவமலத்தை யொழித்து அவ்வினைபெருக்கால் திரிகரணசுத்தியாய்ப் போற்றித் தொழுது வந்தால் அந்தக்கடவுளின் திருவடியை அடைய பாசமுடாப ஆமை அவயவங்களைத் தனனுடலுக்குள இழுத்தலைப்போல, கிடைப்பதற்கரிய பிறப்பினைவாய்ந்த மானிடர்களில் யார் சிவபுண்ணியத்தால் மனத்தைப் பகிர்முகத்தில் விட்டுக் காமவெகுளி மயக்கத்தில் சுழலும்படிச்செய்யாமல் அதை அறிவாகிய கயிற்றால் கட்டி அவனதிருவடியில் நிலைநாட்டி அந்தர்முகத்தில் எவ்வனையாலாவது நிட்டைப் பெருமானை எவர்களாராதிக்கிறார்களோ அவர்களுக்குத்தீவிரபோத திருவருளுண்டாகும்,ஆணவச்சேட்டையும் அஞ்ஞானமும் ஒழிந்து சிவபெருமானுடைய அருளினால்ஞானநிஷ்டையும்மெய்ஞ்ஞானச்செல்வமும் விசேஷமாய உண்டாகி சிவசாயுச்சியபதவியை அடையும்பாக்கியவந்தர்களாவார்கள் விசுவனாதா!இதைத்தான் புராதனவாக்கியங்கள முடிவான பிரமஞானமென்றுகூறுகின்றது.பிரமஞானத்தையடைவதற்குப்பக்தியும ஞானநிஷ்டையுமேமுக்கிய ஆதாரமாயிருக்கும் பக்திக்குமிஞ்சினதுயாதொன்றுமில்லை. இந்தப்பக்தி புறப்பக்தியெனவும அகபக்தியெனவுமிரண்டு வகைப்படும். புறப்பக்தியாவது பிரபஞ்சமுகமாகவிருந்து மாயாகாரியமாகிய விஷயங்களில் ஆசைவைத்து அவற்றின் மயமாயிருப்பதாம். அகபக்தியோ வெனின் அந்தர்முகமாகவிருந்து மனத்தினையொருவழிப்படுத்தி அதிலதேர்ந்து தற்சுதந்தரமிழந்து சிவானுபூதியினைச் சுவானுபூதியாகக்கொண்டு சிவனமுகத்தராயிருந்து ஆனந்தானுபவ அத்துவித மனுபவித்தலாம்.இக்கருத்துபற்றியே, "பக்திவலையிற்படுவோன்காண்க" எனப்பெரியோருபவற்பு தத்திக்கூறினார்கள். ஆகையால,நீமனதைசசிவபிரானுடையதிருவடியிலநிலைநிறுத்தின்திடமாயிருக்கும்படி முயற்சிசெய். நீசெய்யும சகலகருமங்களையும் ஈசுவரார்ப்பணமாகவே செய். பாபிகளாயும், அவிவேகிகளாயும், மாயாசலத்தர்களாயு மிராநின்ற அஞ்ஞானிகளுக்கு [illegible]

வாக்கியத்தின் பொருளை எடுத்துக்கூறினால் அதைக்காது கொடுத்துக்கேளார்கள். அதற்சம்பந்தமான நல்லதங்கை கதைமுதலிய வைகளைப் படித்து அவற்றின் பொருளைச் சொன்னால் அவற்றை இன்பமாய்க் கேட்பார்கள். இவர்கள் லோகமாயாவசத்து விஷயகாமிகளா யிருப்பவர்களாயும், தேகம் இன்னது தேகி இன்னதென்று தெரியாதவர்களாயும் தேகத்தையே ஆத்மாவென்று நம்பியிருக்கிறவர்களாயும், சம்சாரபந்தமானதுக்குஅடிமைகளா யிருப்பவர்களாயும், விபரீதஞானிகளாயும், பிறவியென்கிறவேதனைக்கும் மரணத்துக்கும் காரணமாயும், பந்தத்தையே கொடுப்பதாகிய கருமசேட்டையை ஒழியவல்லவர்களாயும், சிவாலயதரிசனஞ்செய்யாதவர்களாயும், இருதயங்களிலெப்போதுமிருக்கின்றபரமாத்மாவாகிய சிவபெருமானை நினையாதவர்களாயும், ஜனனமரணக்கடலிலழுந்தியுழன்று துன்பங்களிற்சேர்ந்தவர்களாயும், எமலோகத்தில் கட்டுண்டு வதைப்பட்டிருக்கும் பாபிகளுடன் கூடப் போய்ச் சேருகிறவர்களாயும், ஜீவேஸ்வரபேதம் இன்னதென்றும் ஆன்மதத்துவ முதலிய பாசமான கருவிகள் முற்றும் சடமென்பதையும் பசுஞானமும் பாசஞானமும் மாகிய இவ்விரண்டுங்கடந்த இடத்தில பதியொன்றுமே காணப்படும் பொருளென்றும் கிஞ்சிஞ்ஞத்வாதி குணங்களுடன்கூடி யிருக்கிற சீவனுக்கும் சர்வஞ்ஞத்வாதி குணங்களுடன்கூடி யிருக்கிற ஈசுவரனுக்கும் ஐக்கியம் இன்னதென்பதையும் தெரிந்துகொண்டு பசுபாசத்தாலுண்டாகும் தீமைகளை யறுத்து சிவபிரான் திருவடியையடைய முயற்சிக்காதவர்களாயும், பிறந்தவனுக்கே மரணம் நிச்சயமென்றும், இறந்தவனுக்கே ஜனனம் நிச்சயமென்று முணராதவர்களாயுமிருப்பார்கள். பின்னிட்டு இப்படிப்பட்டவர்கள் சண்டாளன்வீட்டிலே கோவின்மாமிசத்தைத்தின்னும்மலையைக்காட்டிலும் மிழிவான சென்மத்தில் பிறப்பவர்களாவார்கள். புனபுனையாக்கையாகிய இந்த மானிடதேகத்தையடைந்தவர்களில் யார் பிரம ஞானத்தை அடைய அபேக்ஷிக்கிறார்களோ அப்படிப்பட்டவர்கள் விஷயங்களில் செல்லுங்காமப்பேய்பிடித்துப் பித்துப்பிடித்துக்கொண்டாட்டமிடும் குரங்காகியமனதைச் சுவாதீனப்படுத்திக்கொள்ள முயற்சிசெய்யவேண்டும். விட்டதெல்லாம்

மான விஷயங்களில் தாவி அவைகளையே விருத்தி செய்துகொண்டிருக்கும். அம்மனம் பக்குவத்திற் சென்றது அந்தர்முகநோக்கத்தில் நின்றால், அறிவானது பக்குவமாகத் தாவி ஞானசாதனங்களைச் செய்து வேறுபட்டுண்டான பக்குவத்தைநீக்கி இனி வேறுபோதம் தோன்றாமல் சிவசெலவைத்தை உண்டாக்கிப் பேரின்பத்தை நுகர்ந்து வாழ்ந்திருக்கும்படி செய்யும். இப்படிப்பட்ட பக்குவியை அடையவர்கள் ஒப்பில்லாத பேரின்பவெள்ளத்தில் புகுந்து விளையாடுவார்கள்.

சிவயோகத்தினிடத்தில் எவராவது மனவெழுச்சியுடையவர்களின் ஜீவனும் மனமும் பரிசுத்தநிலையினிருக்கும்.

இப்படிக்குப் பரிசுத்த நிலையையடைந்த மனமுடையவர்களுக்கு ஐம்பொறிகளாற் காணப்பட்ட சத்தாதிவிஷயக் காட்சிகளும், அவ்விஷயக் காட்சிகளாற் கரணத்தில் பதிந்திருந்த வாசனைகள் அனைத்தும் விட்டுநீங்கி, இவ்வாசனை புத்தியில்தோன்றுமறைப்பும் அற்று, அவர்கள் நித்தியசுத்த முத்தர்போல சாக்ஷாத்காரமான சொரூப நிலையில் விளங்குகிறார்கள். அப்போது முன்னம் பொருந்தியிருந்த பிறவித்துன்பத்திற்குப் பயந்து பயமனைத்தும் நீங்கப்பெற்றவர்களாய்ப் பரமபதத்தை யடையத்தக்கவர்களாயிருப்பார்கள்.

அஞ்ஞானத்தையகற்றிச் சிவஞானத்தை விளக்கும் மெய்ஞ்ஞான நூல்களை ஆராய்ச்சிபண்ணி அதின் அர்த்தசாரங்களைத் தெரிந்துகொள்ளாமலும் அதைப்பற்றி ஞானவான்கள் கூறுவதைக்கேட்டு அந்தப்படி நடவாமலும் மனத்தைக்கலக்கும் சேற்கண்ணையொத்த இரண்டுகண்களையுடைய பெண்களது வஞ்சகவலை மெய்யென்று நம்பி மனத்தைக்காமவெகுளி மயக்கங்களிற் சுழலவிடும் அஞ்ஞானிகளுக்கு நாம் மேற்கூறியதெல்லாம் யாதொரு பிரயோசனத்தையுந்தராது. ஆனால் யார் சொரூபவிசாரணைபண்ணிச் சிவபுண்ணியங்களைச் செய்து ஆசாரியன் உபதேசமொழிப்படி நடந்துகொள்ளுகிறார்களோ அப்படிப்பட்டவர்களுடைய மனோசங்கற்பம் நாசமடைந்து அதிதீவிர பக்குவமுண்டாகி வேதங்கடந்த துரியாதீதப்பொருளை அறிந்துகொள்ளும்படி செய்யும். அந்தத் துரியாதீதப்பொருளின் நிலைமை எப்படியென்னில் அதைச்சொல்கிறோம் கேள்.

## சிவவாக்கியர்.

என்னிலேயிருந்தவொன்றையானறிந்ததில்லையே
என்னிலேயிருந்தவொன்றையானறிந்துகொண்டபின்
என்னிலேயிருந்தவொன்றையாவர்காணவல்லரோ
என்னிலேயிருந்திருந்தயானுணர்ந்துகொண்டனே.

## திருமந்திரம்.

சிவனென்னைச் சிவனென்ன வேறில்லை
சிவனார் சிவனாரை யறிகிலார்
சிவனார் சிவனாரை யறிந்தபின்
சிவனார் சிவனாயிட் டிருப்பரே.

மனமாகிய நிலவறையில் அன்பென்னும் பொக்கிஷத்தை நிறைத்திருக்கு மெய்யடியார்கள் சித்தசுத்தியுடன் போற்றும் முக்கண்ணனாகிய நடேசப்பெருமான் ஆலமரத்தை யடக்கியவித்தைப் போல அண்டமெல்லாம் தமக்குள் அடக்கியளிப்பவனாகிய ஏகனாய் விளங்குகின்றனன்.

## சிவபுராணம்.

ஆல மரத்தை யடக்கிய வித்தென வண்டமெலா மெளிதிற்
சால வடக்கி யளிப்பவனே திகழ் சந்திர சேகரனே
மால யனுக்கு மனந்த மறைக்குமல வானவருக்கு மேலா
மூல மெனத்தகு காரண னேகம முக்கணனே நமவே.

## திருமழிசையாழ்வார்.

தன்னுளே திரைத்தெழுந் தரங்கவெண் டடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்திறந்து நிற்பவுஞ் சரிப்பவும்
நின்னுளே யடங்குகின்ற நீர்மை நின்க ணின்றதே.

இப்படியாகத் தங்களுக்குள் மறைபட்டிருந்த ஸ்வயம்பிரகாச சொரூபமாகிய பரம்பொருளை அறிந்துகொண்ட பாக்கியவந்தர்களுக்கு அந்தப்பரம்பொருள் எல்லையற்ற சோதிப்பிரகாசமயமாக [illegible]

யை மெய்த்தொண்டர்களிடத்தில் கிருபைபுரிந்து அவர்களை அன்ப வனாய் தற்போதமிழந்தவர்களுக்குப்பிறவித்துன்பம் அணுகாமலிருக் கும்படி செய்யுமய்யனாய், நிரந்தர சந்தோஷத்தையுடையவனாய், சச் சிதானந்த பிரமசொரூபனாய், தேசகாலவஸ்துபரிச்சேத ரஹிதனாய், சுசாதி விசாதி சுகதபேதரஹிதனாய், ஷட்பாவவிகார ரஹித னாய், சுத்தபுத்தமுத்த பரானந்த சொரூபனாய், சர்வபரிபூரண சாகரமாய், நிஷ்பிரயாச நிர்லேப நிராசங்க நிராவரண நிஷ்காம நிரூப நிரந்தர நிர்வய நிர்விசேஷணாத நிருபத்திரவ நிர்ப்பேத நிர்வேத்ய நிர் க்குண நிரஞ்சன நிச்சல நிஷ்பிரபஞ்ச சொரூபனாய், அச்சேத்ய அக் லேத்ய அசோஷிய அதாகிய அசல அவாச்சிய அநாமய அசேஷ்ட அப் பிரமேய அசிந்திய அநிர்வாச்சிய அக்குரோத அவிதர்க்கிய அதிரி சய அநாதிரிசய அநாதார அனந்த அகண்டாகார சொரூபமான சந்திரசேகரனாகிய சாம்பசிவனாய் விராட்டு இரணியகர்ப்ப அவ் வியாகிருதங்களை அறிகின்ற சர்வசாக்ஷியாய், மூலப்பிரகிருதி அக ண்டாகாரவிருத்தி ஆனந்தவிருத்தி அறிஞனாய், கிருதகிருத்தியனாய் விளங்குவதுமன்றிச் சமஸ்தலோக பரிபாலனாகிய பரனாய், காணப் பட்ட வடிவுகளெல்லாம் தானாக இருந்து அவையல்லவாகி நிற் கின்ற தெய்வமாய், சமஷ்டி வியஷ்டியாகப் பிரகாசிக்கும் ஈஸ்வர னும் தானாய், ஆங்காங்குத் தங்கியிருக்கும் ஜீவராசிகளும் தானாய், சொல்லுகின்ற சங்கற்பமும் தானாய், தோற்றப்படுகின்ற நாம ரூபங்களைச் சந்தேகிக்கும் மனமுந்தானாய், அப்பொருள்களை நிச்ச யிக்கும் புத்தியுந்தானாய், அபிமானிக்கின்ற அகங்காரமும் தானாயிருக் கும் சங்கரனாய், அநாதிசிவனாய், சதாசிவனாய், மகேசனாய், சந்தி ரசேகரனாய், உமாமகேசனாய், ரிஷபாரூடனாய், சபாபதியாய், கல் யாணசுந்தரனாய், பிக்ஷாடனனாய், காமாரியாய், அந்தகாரியாய், திரி புராரியாய், ஜலந்தராரியாய், நரசிங்கநிபாதகனாய், அர்த்தநாரீசனாய், கங்காளனாய், விக்கிராதனனாய், சண்டேசானுக்கிரகனாய், நீலகண்ட னாய், சோமாஸ்கந்தனாய், ஏகபாதனாய், அனந்தசுகனாய், தக்ஷிணா மூர்த்தியாய், லிங்கோற்பவனாய், ஞானமயமான பிரமானந்தனாய், ஞானகெம்பீரனாய், சொற்பதங்கடந்த இன்பச்சொரூபனாய், பரம பதியாகிய சிவபிரானாய் மாசற்றசோதியாய்ப் பரமானந்த பழங்க லாய்த் தேனாயமுதமாய்ச்சிந்தைக்குமறியாச்சிவமாய் [illegible]

குன்றுப் சமானமாயங்களைப் அநாதிமாயையில் தோன்றிய பிண்டா ண்டபாண்டங்களெல்லாம் ஜனகரோமம் ஒன்றிலே உண்டாக்கித் தான் சித்ரங்களைப்போலே நானாவிதமான அநேக பிம்பங்களாய்த் தோன்றும் பொருளைச்சுப புகபூரகும் எட்டாதவனும், எல்லாவுயிர் களையு நாசம்பண்ணுகின்ற காலனுக்கு காலனாயிருப்பவனும், மது ராபுரியில் எல்லாவல்ல சித்தராகிய திருக்கோலங்கொண்டு கல்லானை க்கு கருப்பந்தின்னச்செய்தும் மற்றுநானாவித திருவிளையாடலைச்செய்த வனும், அண்டசம் உற்பிசம் சுவேதசம் சராயுசம் என்னும் நாலுவ கைவகுப்புகளையுடைய யோனிபேதமான அம்யோனியிலும் ஆன்மாக் களைச் சிருஷ்டித்து; அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞா னமயம் ஆனந்தமயமென்னும் பஞ்சகோசங்களால் இச்சைபொருந் தபாந்தித்துப பரிசுத்தமாகிய சொர்க்கமத்திய பாதாளமென்னும் திரிலோகங்களிலுமேயந்தப பிராரத்துவ விதியினுகத்தில் அவை களின்வழியே நடக்கின்ற பசுபதியாயிருக்கின்ற பரமசிவனும், மறைபின்பின்சென்றவில்லையுடைய வேடனும், பாவையாருடைய உடலைத் தவிர்க்க அர்த்தராத்திரியில் தூதுசென்ற நம்பியாய், தேவர்களுக்கரசனாகிய தேவேந்திரனுடைய பிரமஹத்திதோஷத்தைத் தீர்த்த சோமசுந்தர கடவுளாய், வீணையையுடைய பாணபத் திரனுக்குத் தானடிமையென்பதாகத்தனது திருமுடியின்மேல்விறகு சுமந்த கடவுளாய், அடிமையாகிய மார்க்கண்டேயரைப் பற்றவந்த இயமனைத்தரையிலுருளும்படிகாலால்கொண்டுதைத்தவனும், கரும்பை வில்லாகவளைத்துச் சுரும்பை நாணாகப்பூட்டி முல்லை அசோகு நீலோற் பலம் மாம்பூ தாமரை யென்னும் ஐந்துவிதமலர்களைத் தொடுக்கும் அனங்கனாகிய மன்மதனை நெற்றிக்கண்ணினால் நீறாக்கின பெருமை யையுடையவனும், சோழனுக்கும் பாண்டியனுக்கும் நேர்ந்த யுத்தத்தில் தன்னடிமையாகிய பாண்டியன்சேனைகளுக்குத் தண்ணீர்ப் பந்தர்வைத்து அவர்களை ஆதரித்த கருணாசாகரனும், பாரோர் விண் ணோர் பரவிப்பேசுபவனும், அனேகமல பெத்தர்களாயுள்ள சகலர் என்னும் ஆன்மகோடிகள் வழிபட்டுய்வான் வேண்டி நெடியமுயலக னுடல் தெரியும்படி ஆனந்தநடனம்புரியும் அந்தமில்லாத உயர்வு பெற்ற ஞானகாச சொரூபமான திருச்சிற்றம்பலத்தில் நடஞ்செய் கிய நடேசப்பெருமானைப் போற்றித்தொழுது அவித்தை

யைப் போக்கடிக்கத் தக்கதாக வேதாகமவிதிகாச புராணங்களைநன்குதேர்ந்து ஆசிரியனை அடைந்து ஞானசாதகங்களை அநுஷ்டித்துவந்தால் அப்போது ஆசாரியன் உபதேசத்தால் மனோலயமாயிருந்த சீவன் ஞான சித்தியைப் பெற்று ஞானச்செல்வத்தை அடையும்படி யிருக்கும். அப்படிப்பட்ட குருவின் உபதேசமானது தேற்றாங் கொட்டையை அரைத்து சேற்றுச சலத்தில் கலந்துவைத்த சற்று நாழிகைக்குப் பிறகு அத்தேற்றாங் கொட்டையின் ரேணுக்கள் அச்சலத்திலுள்ள அழுக்கெல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து அடியிற்றங்கும்படி செய்து தானும் அந்தஅழுக்குகளுடன் சேர்ந்துவிடுவதினால் தாகத்துக்குரிய சுத்தமான ஜலம் மேலேநின்றுவிடுவதுபோல் அந்தக்காரணத்தின் சுத்தாம்சமானது அவிவேகத்தைப்போக்கி ஜீவனைப் பிரமத்தின்கண் லயிக்கச் செய்து தானும் நசித்துவிடும்.

இப்படிக்கிருந்தாலும் சிஷ்யன் குருவினிடமாக உபதேசம்பெற்றபின் அவன் ஏகாந்தஸ்தலத்திற்சென்று ஸ்திராசனத்தில் உட்கார்ந்துகொண்டு பாசத்தைநீக்கிப் பசுவைப்பதியில்விட்டு நிஷ்டையடைந்து ஸ்வாநுபூதிநிலையைப்பெற்றால் அப்போதப்படிப்பட்ட மகாபுருஷன் பிரமானந்தபோகத்தை யநுபவித்துப் பிரமஸ்வரூபமான ஸ்வாநுபவத்தை அடைவான்.

இப்படிப்பட்ட நிலையை யடைபவர்கள் மகாபுண்ணியவான்களாயிருப்பார்கள். மானிடதேகம் பெற்றவர்களில் புண்ணியாத்மாக்கள்மாத்திரம் சிவநேசர்களாவார்கள். மானிடஜனனத்தை யடைந்தும் சிவபிரானைத்தொழாமல் மனம்செய்யும் அட்டகாசத்தால் காமகடலில்விழுந்து பாபம்செய்யும் ஆத்மாக்கள் திரியக்காதி ஜன்மங்களை யடைந்து பாபாநுபவங்களை யநுபவிக்கும்படி நேரிடும். கிடைப்பதற்கருமையாகக் கிடைத்த இந்தமானிட ஜென்மத்திலேயே சிதாபாசன் நற்கெதியையடையும் பொருட்டுப் பிரயத்தினம் செய்யவேண்டியது அவசியமென்று அறிக. அப்படிக்குச் செய்யாதவரையில் ஜென்மபரம்பரையில் பிறந்திறந்து கொண்டு சம்சாரத்தினாலுண்டாகும் அநேகவித துக்கங்களை யநுபவிக்கவேண்டியதாய் நேரிடும்.

வினா—ஓ மடாதிபதியாகிய அண்ணலே! சிவானந்தப்பெருஞ் செல்வத்தை அடைய விரும்புபவர்களுக்கு உபநிடதமகாவாக்கியங்களும் குரு உபதேசமும் அறிவிக்கும் விஷயங்கள் யாது.

விடை—நீ கேட்கும் இரண்டு அம்சங்கள் எதைப்பற்றிப் பேசுமோ அதை நாமே எடுத்துக்கூறுகிறோம் கவனத்துடன்கேள்.

கிஞ்சிஞ்ஞனான ஜீவன் ஆணவபாசத்தால் பந்தமான தேகத்துடன்கூடி அதிலகப்பட்டுப்பசுத்துவமென்னும் பேரினையடைந்து வாணவபந்தம் மாயாபந்தம், மாயையினாலுண்டாகிய லோகாதிபிரபஞ்ச மோகமாகிய மயக்கத்திற்சிக்கிக்கொண்டு அவதிப்படுபவனாகையால் இந்தச் சிதாபாசனுக்குப்பசுத்தன்மையில்உண்டாயிருக்கும் நனவில் வரும்பொறியும், ஜீவசாக்கிரத்தில அமைந்த ஞானேந்திரியகன்மேந்திரியங்களும், கனவில்வரும் கரணங்களும், ஜீவசொப்பனத்தில வரும் மனம் புத்தி சித்தம் அகங்காரங்களும், ஜீவசுழுத்தியில் அவ்வியத்தமாய் நின்ற பிரகிருதியும், நலபுருடனில பகுதியும, பரசாக்கிரமாகிய புருடதத்துவத்தில வியத்தமாய் நின்ற மூலப்பிரகிருதியும், நவில் காலபரத்தில அசுத்தமாயையும், பரசொப்பனமாகிய காலபரத்துவ தத்துவத்தில் அதோமுகமாகிய சுத்தவித்தை முதலிய தத்துவங்களின் காரியப்பாடுகளும, மாயையுப்பந்தமுமாகிய தத்துவங்களை நீங்கச்செய்வதே உபசங்காரமென்றும், அவையொடுங்குவதற்கு ஜீவசாக்கிரம்-ஜீவசொப்பனம் - ஜீவசுழுத்தி,-பரசாக்கிரம், - பரசொப்பனம்-பரசுழுத்தி - சிவசாக்கிரம் - சிவசொப்பனம்-சிவசுழுத்தி—குருதுரியம் - சிவ்சொற்பனத்தில் உலகவாதனைக்கழியுமென்பனதப்பற்றியும், ஆதிசேடனுடலில அறிதுயில் கொள்ளும் பசியநிறத்தையுடையவனும போர்செய்யும பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கினை யேந்திய கையையுடையவனுமாகிய திருமாலுக்கு மைத்துனராகியும் தேவம் ஞானமூர்த்தியாகியும் தத்துவமசியாதி லக்ஷயமாகியும் சர்வசாட்சி பூதமாகியும் விளங்காநின்ற நடேசப்பெருமானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடியையடையும் மார்க்கத்தைப்பற்றியும் உபநிடதமகாவாக்கியம் கூறும்.

பிரமஞானத்தைப்பற்றி மேற்கண்டபடி ஞானநூல்கள் கூறினும் யுகம் கலியுகமாயிருப்பதில் சிவபக்தி குறைவுபட்டுப் பாவம்

மூன்றுபங்காயும் புண்ணியம் ஒருபங்காயும் மோகம் காமம் என னுமிவற்றினு லுண்டாகும் கர்மபாகைபெரிதாயும் இருப்பதால என்னுளிருந்தாலும் எமன்விடமாட்டானென்பதையும் இந்தக்கர்ம விட்டபிறகுஅஞ்ஞானத்தினுல் மூடப்பட்ட தேவாதிவராந்தவரை யிலிருக்கிற ஜன்மங்களில் அவரவர்கள் கர்மானுரூபமான ஜன்மங் களை அடைவதாயிருக்குமென்பதையும் அறியாதவர்களாகிய பாமரர்கள் இத்தேகமிருக்கும்போதே தங்களை வளர்த்துக்கொண் டிருக்கும் எழுவகைப்பிறவிகளையும் நீக்கிக்கொள்ளச் சதா காலம பசுபதியாகிய சாம்பவமூர்த்தியைப்போற்றிக் கொண்டாடாமலிருப்பார் கள். இவர்கள் அஞ்ஞானப்பிரஷ்டர்களாயிருப்பதினுலே இப்படி செய்வதுஅநுசிதமான காரியமென்பதை அவர்கள்தெரிந்துகொண் டவர்களல்ல ஆனுல் விவேகிகளாகிய புண்ணியபுருஷர்கள் தாங்கள கீழ்ப்போன அனந்த ஜென்மங்களில் செய்திருக்கின்ற தபோபலத் தால் அரிதாகக் கிடைத்த இந்ததேகமிருக்கும்போதே ஆத்மதத் துவங்களைத்தெரிந்துகொண்டு சம்சாரத்திலஉண்டாயிருக்கும்பாசத் தைத்தொலைத்துச்சிலருக்குச்சாஸ்திரஞானமுண்டாகியும் தாடிவளா த்துச் சடைவளர்த்து நல்லசந்நியாசிவேஷம்பூண்டு காடும லைதிருப்பதி காசிமுதலிய இடங்களுக்கோடி பிரமானுபவம் உண்டாகு வது அரிதாயிருக்கும் அது ஏனெனில் அவர்களுக்கு விபரீதபாவனை நீங்காமையால் பிரமானுபவம் உண்டாகாதென்றறிக. நற்கதியை யடைய முயற்சிசெய்வார்கள்.

இங்ஙனமிருப்பதால விவேகிகளாயிருப்பவர்கள் ஞானநூல்க ளில் கூறப்பட்டிருக்கும் வேதாந்தங்களையும், சாஸ்திரங்களைக்கற் றுணர்ந்த புண்ணியவான்களால எடுத்துரைக்கும் ஜீவாத்ம பரமாத் மாவின்லக்ஷணங்களுக்குரிய விஷயங்களையும், இந்நூலில பிரசங்கித் திருக்கும் அத்துவிதசித்தாந்த உண்மையினை யாராய்ந்தறிந்து அனு பவித்தற்கேதுவாக விளங்காநின்ற ஞானசம்பந்தமான பொருள்களை யும்கேட்டுச் சிந்தித்துத்தெளிந்து காமாந்தகாரவிஷயங்களிலழுந்தி த்தலையெடாதபடிச்செய்யும்அமிர்தசட துக்கரூபமானமனத்தைத்தெ ரியப்படுத்திக்கொண்டு ஆசாரியன்ஞானஉபதேசத்தால் [illegible] சாதகத்தை நாடி ஜனனமரணமென்னும்பிணியா [illegible]

ருங்கூச்ச விட்டுக்கொண்டும், சில சமயங்களில் ஊமையைப்போல் மவுனமா யிருந்தும், பாசபந்தங்களை விருத்தி செய்துகொண்டும், மாயாசம்பந்தமான பிரபஞ்ச வாழ்வை பரமபிரயோசனமாக மதித்து அதிலுண்டாகும் இன்பத்தில் சுகித்து வாழ்வார்கள். இப்படிக் கொத்த வேடம்பூண்ட மாக்கள், ஆகாசத்தை கையினால் சேர்த்துப் பிடித்து விழுங்குவேனென்று புத்தியற்ற மூடர்கள் மெச்சும்படி தம்மைத்தாமே பெருமையாகப்பேசிபாராட்டிக்கொண்டுகுருகூழிபாதை நிமித்தியம் கல்வியறிவு சிறிதுமில்லாத கயவர் பின்சென்று அவர் களைச் சிலாகித்துப் பேசியும், தெய்வபக்தி சிறிதுமில்லாத சிரடர் பாலடைந்து அவர்களைத் தோத்தரித்தும், ஊரூராய்த் திரிந்து கொண்டு வாணாட்களை வீணாட்களாகக் கழித்து ஆத்துமத் துரோகி களாகின்றமையால், கடைசியாக இவர்கள் நரகப்பிராப்திக்கு ஆளா வார்கள்.

அன்பனே! அரிதாகிய மானிட யாக்கையை யடைந்த சிதாபா சர்களில் யார் இந்தத் தேகம் நிலையிலலாத தென்றும், அதுசோற் றைத் தின்னும் காயச்சுமை யென்றும், இயமனுடைய தடிகொண்டு அடித்து உடைத்து விடப்படும் மட்கலமென்றும் எண்ணாமல், அந் தத் தேகம் நிலையானதென்று நம்பி அத்தேகாபிமானத்தால், மங் கையர் தம்யோனியிசையும் மற்றுங் காம விஷயங்களிலும் ஆசை வைத்து அம்மங்கையர்களோடு கூடிய போகிப்பதே பேரின்ப மென்று கருதி—உமையாள் பங்கனாகிய சங்கரனை நினையாமல் மறந்துபோகுறார்களோ அப்படிப்பட்டவர்கள் நரகப்பிராப்திக்கு ஆளாய்விடுகிறார்க ளென்பதாக மேற்கூறப்பட்டுள்ளது.

ஆத்தும கோடிகளை அவரவர்கள் கன்மத்திற்குக் தக்கபடி யுண்டாக்கி யவர்கட்கேற்ற தனுகரண புவன போகங்களைக் கொ டுத்து ஆதரித்துவரும் சங்கரனுக்கு சம்புவென்றும்; சிவனென்றும் பேருண்டு. மெய்யடியார்களுக்குச் சுகத்தை உண்டு பண்ணுவதால் சம்புவென்றும், மங்களத்தோடு கூடியிருப்பதால் சிவனென்றும் பெயர்வந்தது. இந்தக் கடவுள் உயிர்க்குயிராகிய [illegible] யொன்று மில்லாததுரியன். துரியமுங் காணாத [illegible]

பொருளாகிய சிவதத்துவத்தைத் தியானிக்கின்ற அடியார்க்கு வரும்இடையூற்றைப் போக்குகின்ற கனகசபை நடேசன். சாம்ப சதாசிவன். மஹாதேவன். பாவனாசன். சூலபாணியன். பரமன். நித்தியன். கூற்றன் றனக்கோர் கூற்றன். புரமெரிய வொருகண்ணைத் திறந்தவன். பாசாங்குச தரன். சாமவேத கீதப்பிரியன். பஞ்சாக்ஷரத்தையே திருமேனியாகக் கொண்டவன்.

இந்தச் சங்கரனாகிய மகாபுருஷன் ஒரு பற்று மில்லாது உண்மையறி வானந்த மோராந்து ஒரு முகமாவிருந்து உயர்ந்தவநிலை யிலாழ்ந்து வாழ்ந்துவருவர் யான முத்தர்களின் மனமாகிய இருதய ஆகாசத்தில் சுவாமை போல வலித்துக்கொண் டிருப்பவனாய், குற்றமில்லாத அநுபவத்தை யுடைய பராங்களா லறியப் படுபவனாய், ஆச்சரியத்தை விளைவிப்பவனாய், அரிய அமுர்தமயனாய், ஆனந்த நிருத்தப் பிரகாசித்தனாய், அறிவுங் கடிவான வனாய், அகண்டிதனாய் நின்ற பரிபூரண சிவனாய், சத்திரூப முள்ளவனாய், யாவராலும் போற்றிப் புகழ்ந்து துதிக்கப்படும் பொருளானவனுயு மிருப்பதாக புராதனமாகிய மகாவாக்கியங்கள் முதலானது கூறுகின்றது.

மேலும்—இந்தப் பரம்பொருள் நித்தியம் நித்தியாதீதம் நிராமயம், நிராமயாதீதம்-அநந்தபூதம். அநந்த பூதப்பிரளயம். நிர்க்குணம். அகோசரம். பராபரம். பராபராதீதம். பரப்பிரமம். சிவப்பிரமம். நிரூபம். நிரூபாநந்தம், நிரூபாதீதம். நிரஞ்சனம். நிரஞ்சனாதீதப பிரணவம். அநாதிப் பிரணவம். ஆதிப்பிரணவம். சிவபிரணவம் சக்திப்பிரணவம். சமஷ்டிப் பிரணவம. வியஷ்டப் பிரணவம். ஸ்தூலப் பிரணவம். சூக்குமப் பிரணவம். சுயப்பிரகாசம. இப்படியாகவும் விளங்கும் வஸ்துவாயு மிருக்கும்.

இன்னும் இந்தப் பரம்பொருள் சிதாகாச ரூபமாய் கருணைநிறைந்த அமிர்தவெள்ளமாய, முத்திநிலையாய், உயிரொளியாய். ஞானவொளியாய், அருள்வொளியாய், பிரமானந்த கடலாய், சிந்தைக்கும் [illegible] சிவமாய், [illegible]ராரி தங்கையாகிய உமைபாகனாய், அருள்வடி[illegible] உவமையற்ற மாணிக்கமாய், சச்சிதானந்த சொ

## மெய்ஞ்ஞான போதம்.

*வந்திடுமரணத்துன்பமறிந்துரைசெய்யப்போமோ*
*உந்திமேலலையும்பித்தமுண்ணாவொடுபொறிகலங்கி*
*நந்திடாவிருளேமூடிநாவுலர்ந்தலமந்தெனனே*
*இந்தபாவிறப்பிற்றுன்பம்பவத்துன்பகற்றென்மடநெஞ்சே.*

## குறுந்திரட்டு.

*பரமமாகியபெண்டிருஞ்சுற்றமும்பண்டுசெய்கைபிறந்த*
*விரணமானவைகொண்டிடவிவரைவிட்டியம்போதிவணேகு*
*மரணவேதனையாவராலறியலாமயங்கினைப் பயனொத்த*
*கரணயாவைபுகல்கிடவருந்துயர்கடவுளேயறிகிற்பார.*

*அடியேனுடைய ஜீவகணனைக் குருஞானத்திருவுளடாது, நினைப்பை மறப்பைத் தூக்கிப் பிடித்துக்கொண்டிருக்குமா மாயைக் கூட்டமிருக்கும் அடியேன் அந்த மாயச் சேட்டையிலிருந்து பிரிந்து போகும் பாக்கியத்தை அறியாதவனானதால் உன் திருவடியை எப்படி வந்து அடையப் போகின்றேன் இதைப்பற்றி எனக்கு ஒன்றும் தோன்றவில்லை.*

## சிவவாக்கியா பாடல்.

*நினைப்பதொன்று கண்டிலே னீயலாது வேறிலை*
*நினைப்புமாய மறப்புமாய நின்ற மாயை மாயையை*
*அனைத்துமா யகண்ட மாயனாதி முன்ன னாதியாய்*
*எனக்குணீ யுனக்குணா னிருக்குமாற தெங்ஙனே.*

உணவினிற் சுவைகள்போ லுரைகளிற் பொருள்கள்போ லுடல்களுக் குயிர்கள்போலு முயிரினுக் குயிருமா யுணர்வினுக் குணர்வுமா யொளியினுக் கொளியுமாய யினையறத்திகழு பரம்பொருளாகிய நடேசருடைய திருவடியை யடைய சிவனேசர்கள் நெருப்பில் வழி நடப்பவன் சலமாகிய புன்னமத் தேடுவது போலும் கருப்பில் ஒருவன் அன்னந் தேடுவதுபோலும் தேடியும் [illegible] யிருந்தால் உண்மையான பத்தியில்லாத [illegible] கா உன் திருவடி கிடைக்கப் போகிறது. [illegible]

